இவை போலி யிலக்கண இலக்கிய சாத்திர நூலுரைகளென்று தெளிய மாட்டாராய் மெய்யும் பொய்யு மயங்கக்கொண்டு அவம்படுவ ராகலின், அவர் அவம்படாமல் மற்றவற்றுள் மெய்ந்நூலுரைபோலத்தோற்றி மயக்குஞ் சிலவற்றின் பொய்ப் பெற்றியினையும், ஆண்டாண்டு இயைபு பற்றி இதன்க ணெடுத்துக் கூறி ஒழித்தல் செய்வேமாயினேம். இனித் தமிழிலக்கண இலக்கிய சாத்திரப் புலமை நிரப்புமாறும், அப்புலமைகளால் இகபர வீட்டின்ப உறுதிப்பயன்களை முயன்று சாதித்தடையுமாறும், ஒரொழிபாகக்கொண்டு இதனிறுதிக்கண் தந்துரைத்தாம். இவ்வாற்றானே, இந்நூல், தமிழின்தெய்வப்பழமை மரபியல், இலக்கணமரபியல், இலக்கியமரபியல், சாத்திரமரபியல், ஒழிபியலென ஐவகைப்பட்டதென்பது. அற்றே லஃதாக; இலக்கியத் தன்மையே இலக்கணமாகலின், இலக்கியமரபியல் இலக்கணமரபியலின் முன்வைத் தோதற்பாற்றெனின்,—அஃதொக்கு மன்னாயினும், தமிழ்நிலத்து அகத்தியமொன்றே முற்காலத்துத் தோன்றி மும்மைச் செந்தமிழ் இலக்கண முதனூலாயிற்று; அதுபற்றியே முச்சங்கத்துச் சான்றோரும் பிறரும் முத்தமிழ் இலக்கிய இலக்கணங்கள் செய்திட்டார்; அதனானே, இலக்கண மரபியல் ஈண்டு முன்வைத் தவ்வாறு ஓதுவே மாயிற்றென்க.

---

# தமிழின் தெய்வப்பழமை மரபியல்

## க. பாடையியல்பு

---

மலர்தலை யுலகத்துச் செவிப்புலனும் ஓசை எழுத்தோசையெனவும், இசையோசை யெனவும் இருவகைப்படும். இவற்றுள், எழுத்தோசை விந்து முதற்காரணமாக அதனின்றும் விருத்தியாய்த் தோன்றிச் செவிப்புலனுவது. இசையோசை ஆகாய முதற்காரணமாக அதன்கட் டோன்றிச் செவிப்புலனுவது. வடநூலார் எழுத்தோசையை வர்ணுத்மக சத்தமென்றும், இசையோசையைத் தொனியாத்மக சத்தமென்றுங் கூறுப. சத்த தன்மாத்திரையின் காரியமாகிய ஆகாயமே சத்தத்திற்கெல்லாங் காரணமாகலின், எழுத்தோசைக்கு வேறு காரணம் ஆமா றென்னையெனின்,—அற்றன்று ; ஆகாய மெழுத்தோசையைப் புலப்படுத்துவதாகிய இசையோசைக்குக் காரணமாவதன்றி அதனற் புலப்படுவதாகிய எழுத்தோசைக்குக் காரணமாகாதென்க. ஒளியும் உருவமும் போலப் புலப்படுப்பதும் புலப்படுவதுமாகிய இசையோசைக்கும் எழுத்தோசைக்குந் தம்முள் வேற்றுமை அனுபவத்தின் வெளிப்படத் தோன்றுதலானும், கடலோசை முதலாயின எழுத்தோசையின் வேருதல் எல்லார்க்கு மொப்ப முடிந்ததாகலானும், அவ்விரண்டன் காரணமும் வேறென்பது துணியப்படுமென்க. இன்னும், அங்காப்பு முதலிய அகமுயற்சியாற் புலப்படுவது எழுத்தோசையெனவும், அதனைப் புலப்படுப்பதாய் எடுத்தல் படுத்தல் முதலிய புறமுயற்சியாற் பிறப்பது இசையோசை யெனவும், தம்முள் வேறுபாடு தெரிந்துணர்ந்து கொள்க.

இன்னும், இவ்வயிந்தவவோசை பவுதிகவோசைகளின் இலக்கண வேறுபாடுகளும், எழுத்தோசைக்குக் காரணமான விந்து வென்னுஞ் சுத்தமாயையினது உண்மைக்குப் பிரமாணமும், ஆசிரியர் சிவஞான யோகிகள் சிவஞானமாபாடியத்துப் பிரமாணவியல் இரண்டாம்பாதத்து இரண்டாம் அதிகாணத்துத் தடைவிடைகளான் விளங்கக் கூறியருளுத

வின், ஆண்டுக் காண்க. உந்தியிற் சூக்குமமா யெழுந்த நாதம் நெஞ்சின் கட் பைசந்தியாய்க் கண்டத்தின்கண் மத்திமையாய்ப் பின்னர்த் தன் செவிக்குக் கேட்குஞ் சூக்குமவைகரியும் பிறர் செவிக்குக் கேட்குந் தூலவைகரியுமாய்ப் பல்வே றெழுத்துக்களாம். இவ்வெழுத்துக்கள் வடமொழி தென்மொழி முதலிய பாடைச் சொல்வடிவாய்ச் சவிகற்ப வுணர்ச்சி நிகழ்தற்கு ஏதுவாம்.

இனி, ஆசிரியர்கள் சொல்லிலக்கணம் பலவாறு கூறுப. சத்த நூலார் 'குடமறியாதானுக்கு இது குடமென்றால் இதுவென்னுஞ் சுட்டுப்பெயருங் குடமென்னும் பொருளும் பேதமின்றி அபேதமாய்த் தோன்றுதலின், 'சொல் நித்தியம்' என்றும், 'விபு' என்றும், 'திரவியம்' என்றுங் கூறுவர். சேனாவரையர் "மொழிப்பொருட் காரணம் விழிப்பத் தோன்றா" என்னும் உரியியற் சூத்திரத்து அவர் மதமே பற்றிப் "பொருளொடு சொற்கியைபு இயற்கை யாகலான், அவ்வியற்கையாகிய இயைபாற் சொற் பொருளுணர்த்து மென்ப" என்றுரைத்து, "ஒரு சாரார் பிறகாரணத்தானு முணர்த்து மென்ப" எனப் பிறர் மதங் கூறி ஒழிவர். உரையாசிரியரும் நச்சினார்க்கினிய ரும் "உயர்திணை யென்மனார் மக்கட் சுட்டே" என்னுஞ் சூத்திரத்து முறையே "சொல் எழுத்தினான் ஆக்கப்பட்டுத் திணையறி வுறுக்கு மோசை" என்றும், "ஒருவன் பொருட்டன்மையை யறிதற்குச் சொற் கருவியாய் நிற்கும்" என்றும், அவரோடு மாறுபட்டுரைப்பர். இனிச் "சொல்லும் பொருளும் பேதா பேதமாம்" எனக் கொண் டார் சூத்திரவிருத்திகாரர்.

சத்தப் பிரவஞ்சம் அர்த்தப் பிரவஞ்சமெனக் காரியம் இருவகைப் படும். இவை இரண்டுந் தம்முள் வேறுபாடுடையவாயினும், சுத்த மென்னுஞ் சாதியான் வேறுபாடின்மையானும், சத்தப் பிரவஞ்சம் அர்த்தப் பிரவஞ்சத்தைப் பற்றியன்றி நில்லாமையானும், சுத்தமாயை ஒன்றுதானே சத்தரூபமும் அர்த்தரூபமுமாகிய இரண்டு தன்மையு முடைத்தாய் அவ்விரண்டற்கும் முதற்காரண மாமெனக் கொள்ளப் படும். இனிச் சொற் பொருள் உணர்த்துதற் கனுகூலமாகும் ஞாபக சத் திகளும், பொருள் காரியப்படுதற்கு உபகாரமாகுங் காரகசத்திகளும் அவ்விரண்டன் கண்ணுந் தாதான்மியத்தால் உளவாதல் அருத்தாபத்தி அளவையாற் கொள்ளப்படும். அற்றேல், எழுத்தானியன்ற பதங்களா

தல், பதங்களானியன்று அவாய்நிலை தகுதி அண்மைகளான் எழுவாய் பயனிலை முதலியவாய்த் தொடர்ந்து நிற்கும் வாக்கியங்களாதல் அவ் வுப் பொருள்களை அறிவுறுக்குமெனவே கோடும்; அவ்வாறன்றி எழுத் தின் வேறாய்ப் பொருள்களை அறிவுறுக்குஞ் சத்திகளுண்டென்பதற் குப் பிரமாண மில்லையாலோவெனின்,—அற்றன்று; 'கால்' என்புழிக் ககர ஆகார லகர வெழுத்துக்களையன்றி அவற்றின் வேறாய்ப் பத மென்பதொன் றின்மையானும், அவ்வாறே 'கால் கிடந்தது' என்புழி அப்பதங்களின் வேறாய் வாக்கிய மொன்றின்மையானும், எழுத்தின் வேறாய்ப் பதவாக்கியங்கள் பொருளுணர்த்துவன அல்லவென்பது பெறப்படும். படவே, நையாயிகர் மதம்பற்றிக் ககர ஆகார லகர வெழுத்துக்களே அப்பொருளுணர்த்துமெனக் கோடல் வேண்டும். அங்ஙனங் கொள்வுழி, அவை ஒருங்குகூடிப் பொருளுணர்த் துமோ? ஒரோவொன்றே பொருளுணர்த்துமோ? எனக் கடா யினர்க்கு, ஓசை உணர்வு தொழில் மூன்றும் முக்கணப்பொழுதே நிலைபெறுமென்பது நையாயிகர் முதலியோர்க்கு உடம்பாடாகலின், முறையிற் பிறந்து நின்று கெடு மெழுத்துக்கள் ஒருங்கு கூடி நின்று பொருளுணர்த்துமென்பது கூடாமையின், ஒரோவொன்றே பொருளுணர்த்தும் எனல்வேண்டும். 'க' என்ற மாத்திரையானே 'கம்பலம்' என்னும் பொருளுணர்த்தாமையானும், உணர்த்துமெனி னுங் ககரம் ஒழிந்த எழுத்துக்களை உச்சரித்தல் பயனிலவாய் முடியுமாகலானும், ஒன்றொன்றே பொருளுணர்த்து மென்பது பொருந் தாமையின், எழுத்துப் பதவாக்கியங்களின் வேறாய்ப் பொருளறிவுறுப் பனவாகிய ஞாபகசக்திகளுண்டென்பது கண்டுகொள்க. சத்தியெனி னும் போடமெனினும் ஆற்றலெனினும் பொருந்தும். இவ்வாற்றாற் சொல்லாற் புலப்பட்டுப் பொருளறிவுறுக்குஞ் ஞாபகசக்திகள் சொற் றொறும் வெவ்வே றுண்டெனவே கோடும். ஆயினும், 'ஆ' 'ஆண்டு' என்றாற்போல்வன ஒன்றாய் நின்று வெவ்வேறு பொருளுணர்த்தக் காண்டலின், ஒரு சொற்சத்தியானே ஒரு பொருளன்றிப் பலபொருள் உணரப்படுதலும் உண்டாங்கொலெனின்,—அற்றன்று; ஆ ஆண்டு என்றாற்போல்வன வெவ்வேறு பொருளுணர்த்துதலின், ஒரு சொல் லெனப்படா, வெவ்வேறு சொற்களேயாம் என்க. இனி வெவ்வேறு சொற்களாயினும், எழுத்தொப்புமையானே பலபொரு ளொருசொல்

லென்று அங்ஙனம் வழங்கப்பட்டனவென்பது. இன்னும், ஆவென்பது பெற்றத்தினையு மரவிசேடத்தினையும் உணர்த்தும்வழிப் பெயர்ச்சொல்லெனவும், இரக்கக்குறிப்பினை உணர்த்தும்வழி இடைச்சொல்லெனவும், ஆதற்புடைபெயர்ச்சியை உணர்த்தும்வழி உரிச்சொல்லெனவுங் கொள்ளப்படுதலின், எழுத்தொப்புமைபற்றியே உபசாரத்தான் அவ்வாறு வழங்கப்பட்டன என்பது தெற்றனவுணர்க. இன்னும், இஞ்ஞாபக சத்தியது உண்மையைச் சிவஞானமாபாடியகாரர் சிவஞானமாபாடியத்துப் பிரமாண ஓத்தின் இரண்டாம் பாதத்து நான்காம் அதிகாரணத்திற் கடாவிடைகளான் மிக விரித்துரைத்தார். பொருடொறும் அவ்வக்காரியநிகழ்ச்சிக் கனுகூலமாகுங் காரகசத்திகள் உண்மைக்குப் பிரமாணமும் ஆண்டே மிக விரித்துரைத்தார். அவ்வாறெல்லாம் ஈண்டுக் கூறிடப் புகின் வாக்கியம் மிக விரியுமென்பது.

இனிச் சேனவரையருங் "கால முலக" மென்னுஞ் சூத்திரத்து, "உலகமென்பது இடத்தையும் ஆகுபெயரான் இடத்து நிகழ்பொருளாகிய மக்கட்டொகுதியையு முணர்த்துமாகலான், இருதிணைக்கண்ணுஞ் சென்றதன்றோவெனின்,—அற்றன்று; வடநூலுள் உலகமென்பது இருபொருட்குமுரித்தாக ஓதப்பட்டமையின், மக்கட்டொகுதியை யுணர்த்தும் வழியும் உரியபெயரேயாகலின், ஆகுபெயரன்று; அதனால் ஒரு சொல்லிருபொருட் கண்ணுஞ் சென்றதெனப்படாது இருபொருட்கு முரிமையான் இரண்டு சொல்லெனவே படுமென்பது. வேறு பொருளுணர்த்துதலின் வேறு சொல்லாதலே துணிவாயினும், பல பொருளொரு சொல்லென்புழி எழுத்தொப்புமைபற்றி ஒருசொல்லென்றார்" என்றிவ்வியல்பு தொகுத்துணர்த்தியது காண்க.

இனி எழுத்துச் சொல் வடிவான பாடை பேசுதற்குரியார் முப்பத்திரண்டு அவயவத்தான் அளவிற்பட்டு அறிவோடு புணர்ந்த ஆடூஉ மகடூஉ என்னும் பகுப்புடைய மக்களென்ப. "மக்க டாமே யாறறிவுயிரே - பிறவு முளவே யக்கிளைப் பிறப்பே" என்றார் ஆசிரியர் தொல்காப்பியனாரும். தேவருந் தானவரு முதலாயினர் மக்கட் கிளையென ஆண்டடங்குவ ரென்க. தேவர் தானவர் மக்களி னுயர்ந்தோராயினும், காணப்படும் உலக வழக்குக் கூறுகின்றாராகலின், ஆண்டு மக்களைச் சிறந்தெடுத்தோதிக் காணப்படாத தேவர் தானவர் முதலாயினரைக் கிளையென அவ்வாறு அடக்குவாராயிற் றென்றுணர்க.

இனி நன்னூலாரும் இலக்கண விள்க்கநூலாரும், "பேய்பூத மந்தி கிளி பூவை பேசுதலா - ருகுமே "தன்மை பொது" என்பதே பற்றி ஆசிரியர் தொல்காப்பியனுர் ஆணை கடந்து தன்மையை விரவுத் திணையெனச் சாதித்தாராலெனின்,—"பேய் பூதம் தெய்வச்சாதியாத லால், "தெய்வஞ் சுட்டிய பெயர்நிலைக் கிளவி" என்பதனு ளடங்கு மாகலானும், மந்தி பேசுதல் யாண்டு மின்மையின், "ஈங்குநீ யெம்மை நோக்கி" என்றாற்போல்வன புனைந்துரை வகையாற் கூறியதன்றி உண்மைபற்றிக் கூறியதன்றாகலானும், கிளி பூவை கூறியவாறு கூறுத லல்லது இச்சொல்லை இவ்வாறு கூறவேண்டுமெனச் சொல்லுண்மை அறிந்து கூறுதல் உலகத்தின்மையால், "பூவையுங் கிளியுங் கேட்டு" என்றாற் போல்வனவும் புனைந்துரைவகையாற் கூறியதேயாமாகலா னும், தன்மை விரவுத்திணை ஆகாதென மறுக்க. மாமுதலியன பேசு வனவாகச் சான்றோர் செய்யுட்கண் வருதலின், அவை புனைந்துரை யெனவே படுமாகலான், இவையும் அன்னவேயா மென்க. இனி மந்தி முதலிய உண்மையாற் பேசினவேயாமெனினும், "எறும்புகள் பேசின வற்றை ஒருவேந்தன் கேட்டு நகைத்துத் தன் மனைவிக்குக் கூறித் தலையிழந்தான்" எனப் புராணங்கள் கூறுதலின், எறும்புகள் பேசுதல் பெற்றாம்; அவை பேசுதல் குறிப்பாலுணர்த்துதலன்றி மொழியாற் பேசுதலன்றென்பது எல்லார்க்கும் ஒப்ப முடிந்தது; முடியவே, அஃ றிணைப் பெயர்களெல்லாம் இவ்வாறொன்றற் கொன்று குறிப்பான் உணர்த்துமென்பது பெறப்பட்டதாகலின், மந்தி முதலிய பேசுதலும் அவ்வியல்பிற்றே யாமென்க. இங்ஙன மன்றாயின், உயர்திணை யஃ றிணையென்னும் பகுப்பேலாமை யறிக. ஒரோவழி அஃறிணைப் பொருள்கள் மொழியாற் பேசுவன உளவாயின், அது தெய்வத்தன்மை முதலிய விசேடத்தா னன்றிப் பொருட்டன்மையான் அன்மையின், அமைத்துக்கொள்வதன்றி அதுபற்றி விரவுத்திணை யென்றல் சிறிதும் பொருந்தாதென்க. அற்றாகலி னன்றே ஆசிரியர் தன்மையை உயர் திணை யெனவே கூறியதூஉமென்க. இது கொள்ளாதார்க்குச் "சொல்லா மரபி னவற்றொடு கெழீஇச் - செய்யா மரபிற் றொழிற்படுத் தடக்கியும்" என்பதனைத் தழுவுதலும், "கேட்குந போலவுங் கிளக் குந போலவு - மஃறிணை மருங்கினு மறையப் படுமே" யென வழு வமைத்தலும் வேண்டா வென்க" என்று இலக்கண விளக்கச்சூறாவளி

யுள் ஆசிரியர் சிவஞானயோகிகள் அது பொருந்தாமை காட்டி மறுத்தா ரென்க.

## ௨. தமிழின் தெய்வமாட்சி

ஆரிய மொழியுந் தமிழ் மொழியும் ஆதிக்கட் பரமசிவனுல் தோற்றுவிக்கப்பட்டு நடைபெறுந் தெய்வ மொழிகளாம். ஆரியம் பரம சிவனல் தோற்றுவிக்கப்பட்டு நடக்குந் தெய்வமொழியென்பது வேதா கமம் முதலிய உரையளவைகளானே இனிது பெறுதும்; தமிழ் அன்ன தோர் மாட்சியுடைத்தென்பது எவற்றாற் பெறுதுமெனின்,—"தம்மல ரடியொன் றடியவர் பரவத் தமிழ்ச்சொலும் வடசொலுந் தாணிழற் சேர-அம்மலர்க் கொன்றை யணிந்தவெம் மடிகளச்சிறு பாக்கமதாட்சி கொண்டாரே" என்னுந் தமிழ் வேதத்தானும், "மாரியுங் கோடை யும் வான்பனி தூங்கநின் - றேரியு நின்றங் கிளைக்கின்ற காலத்தே - யாரியமுந் தமிழு முடனல்கிக் - காரிகை யார்க்குங் கருணைசெய் தானே" என்னுந் திருமந்திரத் திருமுறையானும் பெறுதுமென்பது. இன்னும், தென்மொழி யிலக்கணங் "குடமுனிக்கு வலியுறுத்தார் கொல்லேற்றுப் பாகர்" எனக் காந்தத்துக் காளிகா கண்டத்துக் காஞ் சிப்புராணத்தும், "திராவிடமெனப் பெயரிய மாபாடைக் கிலக்கணஞ் சிவபிரான் அகத்தியனுர்க்கு அருளிச்செய்தான்" எனக் காந்தத்து உப தேசகாண்டத்தும், "திரிபுரமெரித்த விரிசடைக்கடவுளுங் குன்ற மெறிந்த குமரவேளும் அகத்தியனுரோடு தலைச்சங்கமிருந்து தமிழா ராய்ந்தார்" என இறையனுர் களவியலுரையுள்ளும் வருதலானும், தமிழ் கடவுண்மாமொழியென்பது தெற்றென உணர்ந்துகொள்க.

## ௩. 'தமிழ்'ச்சொன் முடிபு

இனித் 'தமிழ்' என்னுஞ் சொல் இனிமைப் பண்புணர்த்தும். அது "தேனுறை தமிழுந் திருவுறை கூடலு - மணத்தலின் மதிக்குல மன்ன னகியும்" என்னுங் கல்லாடத்தினுனும், "தமிழ்தழிய சாயலவர் தங்குமலர்த் தூநீ - ருமிழ்கரக மேந்தவுர வோன்மர்ந்து பூசி" என்னுஞ் சிந்தாமணியினுனும், "தமிழ்மென் சாய லவளோடும்" என்னும் வாயவ்விய சங்கிதையினுனும், "வண்டு தமிழ்ப் பாட்

டிசைக்குந் தாமரையே" என்னும் இராமாயணத்தினுலும் தெளிக. "தமிழ் தழிய சாயலவர்" என்பதற்கு நச்சினார்க்கினியர் "இனிமை தழுவிய சாயலையுடையவர்" என்று பொருளுரைத்தார். தமிழ் என்னுந் தருமவாசகந் தருமிமேல் நின்றது; முருகு என்னும் பண்பு முருகனென்னும் பண்பிமேல் நின்றவாறுபோல. ஈண்டுத் தருமி மொழி. மொழியெனினும் பாடையெனினும் ஒக்கும். பிரயோக விவேக நூலார் "திரமிளமென்னும் ஆரியச்சொல் தமிழெனத் திரிந்தது" என்று கொண்டாராலெனின்,—முதன்மையுடைய இம்மொழியைத்தோற்றிய காலத்து இறைவன் தன்சொல்லால் இதனை வழங்க இதற்குக் குறியீடு தருதலன்றிப் பிற பாடைச்சொல்லால் இதற்கு அன்னதோர் பெயரினைத் திரித்து நிறுத்தினனென்றல் பொருந்தாமையின், அது செல்லாதென மறுக்க. இன்னும், இனிமைப் பொருளுணர்த்துந் தமிழென்னும் பண்புச்சொல் தன்சொல்லாய் இதன்கண் நிலைபெறுவதாகவும் அதனை விலக்கி அவ்வாறு கோடல் செல்லாமையுணர்க. இதனானே, "தமிழ் திராவிடமென்னும் வடமொழித் திரிபு" என்று கொண்டார் மதம் மறுக்கப்பட்டவாறும் அறிக. வடமொழிக் கடலுந் தென்மொழிக்கடலு நிலைகண்டுணர்ந்த ஆசிரியர் சிவஞானயோகிகள் "எவ்வினையு மோப்புதலிற் றிராவிடமென் றியல் பாடை" யென்று வடமொழியார் தன் மொழியால் தென்மொழியை ஆளுங் குறியீடு வேறு கூறிவைத்து, "மூன்றுறழ்ந்த பதிற்றெழுத்தான் முழுவதுமா யுனக்கினிதாய்த் - தோன்றிடுமத் தமிழ்ப்பாடை" யென்று தென்மொழியார் தன்மொழியால் தென்மொழியை ஆளுங் குறியீடு யாங் கூறியவாறே பொருள் தெரித்து வேறு நிறுத்துதலின், இச்சொன் முடிபே தொல்லாசிரியர் வழக்காறாய்ப் பயின்றுபோதரும் இயன் முடிபென்பது அப்பெரியார்க்குங் கருத்தாதல் பெற்றாம். இன்னும், அகத்தியந் தமிழ்ச் சுதந்திர இலக்கண முதனூலாகவும், அது வடமொழிப் "பாணினீய வியாகரணத்தின் வழித்தோன்றியதோர் நூலாம்" என்றும் அகத்தியத்தின் வழித் தோன்றியது தொல்காப்பிய இலக்கண நூலாகவும், அது வடமொழி "ஐந்திர வியாகரணத்தின் வழித் தோன்றியதோர் நூலாம்" என்றும், பிரயோக விவேக நூலார் முறைதிறம்பி உரைத்தார். அவையெல்லாம் ஆரியாபிமானங் காரண

மாக வரன்முறைதிறம்பிக் கூறினவேயாம். அவை வரன்முறை திறம்பிக் கூறியவாதன் முன்னர்க் காட்டுதும்.

இனித் தொல்லோராகிய தமிழ் நல்லாசிரியர் இருவகை வழக்கே பற்றித், தமிழ் இலக்கண இலக்கிய சாத்திர வரலாற்றின் உண்மைத் தன்மை துணிவு தோன்றச் சொல்லும் இதன்கண் அன்னரல்லராகிய இக்காலத்தார் சிலர் தமிழ் இலக்கண இலக்கிய வரலாறெனத் தாந்தாம் மனம் போந்தவாறெல்லாங் குழறுபாடாகக் கூறிய வசனங்களிற் படும் பொய்ப்பொருள்களை ஆசங்கித்தெடுத்து மறுத்துப்போதல் வேண்டற் பால தொன்றன்று மாயினும், தமிழின் தொல்லைவரம்பு சிதையாமே அதனைப் பெரிது வளர்த்து வரும் இக்காலைச் சங்கத்து நல்லாசிரியர்களை வழிபட்டு அது தன்னைக் கசடறக் கற்று உணரப் பெறுதார் மாட்டுப் பொதுவகையால் ஒருவாறு தமிழ் பயில் மாணுக்கர்களும், ஏனையோரும், அவர் பொய்த்திறம் மெய்த்திற மாங்கொலென்று கொண்டு புரைபடாமல் மற்றவற்றை மறுத்து உண்மை நிலையிடலும் ஒருதலையாக வேண்டிச் செயற்பால தொன்றாய் முந்துறுதலின், அதுவும் இதன்கண் ஆண்டாண்டுக் கடைப்பிடித்துச் செய்து போதர ஒருப்படுகின்றாம். இது பாயிரத்துக் கூறினுமேனும், ஈண்டு அனுவதித்து ஞாபகஞ் செய்தாம்.

வீரசோழியப் பதிப்புரைகாரர் தமிழ்ச்சொற்கு முடிபு துணிபு தோன்றக் கூறுவார் போன்று தொடங்கி, "இகழ், இமிழ், உமிழ், கமழ், கவிழ், குமிழ், சிமிழ் என ழகரப்பேறு பெற்ற பதங்கள்போலத் தமிழ் என்னுஞ் சொல் தனிமைப்பொருள் குறித்த தமியென்னும் வினையடியாற் பிறந்து, வினைமுதற்பொருளுணர்த்திய விகுதி குன்றி ழகரம் விரிந்து தனக்கிணையில்லாப் பாடை யென்னும் பொருள் பயக்கும்" என்று பெரிதும் வழுப்படப் போலி முடிபு சொல்லினர். அவர் அச்சொற்குக் கூறிய அம்முடிபு போலியாதல் சிறிது காட்டுதும்.

இனிமைப் பொருள் பயக்குந் தமிழ் என்னும் இயற்சொல் தென்மொழியாய், அம்மொழிக்குப் பெயராதற்கு உரிமையுடைத்தாய் நிற்க, அதனை விலக்கித், "தமியென்னும் வினையடி வினைமுதற்பொருள் விகுதி குன்றி இகழ் முதலியன போல ழகரம் விரிந்து தமிழ் என்றாயது" என்று இடர்ப்பட்டு அவ்வாறு போலி முடிபு கூறுதல் அவர்க்குப் பெரியதோர் இழுக்காதல் காண்க. இனிமைப் பண்புணர்த்துந்

தமிழ் தென்மொழிக்குப் பெயராதற்கு உரிமையுடைத்தாய் நிற்க, அதனை விலக்கி அங்ஙன முடிபு சொற்றது அவர் தமக்குப் பெரிய தோர் இழுக்காமென்பது யாவரும் ஒப்பற்பாலதொரு நியாயவுரையாம். அது கிடக்க; "தமியென்னும் வினையடி வினைமுதற்பொருளுணர்த் தும் விகுதி குன்றி இமிழ் முதலியனபோல ழகரம் விரிந்து தமிழ் என்றாயது" என்று அவர் கூறிய சொன்முடிபு போலியாதல் யாங்ஙன மெனின்—, கூறுதும்.

இக என்பது நீங்கென வினைப்பொருள்படும். இகழ் என்பதோ அவமதியென வேறு வினைப்பொருள்படும். இமியென்பது தமிழிற் பொருள் குறித்துவருஞ் சொல்லாதல் கண்டிலம். இமிழ் என்பதோ ஒலியென வினைப்பொருள் முதற் பலபொருள் படும். உமி என்பது பெயர்ப்பொருள்படும். உமிழ் என்பதோ கொப்புளியென வினைப் பொருள்படும். கமம் என்பது கமவென விதியீறாயின் நிறையென வினைப்பொருள்படும். கமழ் என்பதோ நாறு என வேறு வினைப் பொருள்படும். கவி என்பது மூடு என்னும் வினைப்பொருள் முதற் பல பொருள்படும். கவிழ் என்பதோ கிழக்கிடு என வினைப்பொருள் படும். கிழக்கிடுதல் மேல் கீழாகச்செய்தல். குமி என்பது தமிழிற் பொருள்குறித்து வருவதோர் சொல்லாதல் கண்டிலம். குமிழ் என்பதோ முகை என்னும் வினைப்பொருள் முதற் பலபொருள்படும். சிமி என்பது குடுமியெனப் பெயர்ப்பொருள்படும். சிமிழ் என்பதோ பிணியென வினைப்பொருள்படும். இனி இமி குமி யென்பன பொருள் குறித்து வரினும், அவர் கருத்து நிரம்பும் பொருள் குறித்து வரு மாறில்லை. இவ்வாறு பொருள் குறித்துங் குறியாதும் வரும் இக இமி உமி கம கவி குமி சிமி என்னும் ஈரெழுத்து மொழிகள், அங் ஙனம் பொருள் குறித்து வரும் இகழ் இமிழ் உமிழ் கமழ் கவிழ் குமிழ் சிமிழ் என்னு மூவெழுத்து மொழிகளாய என்றல் சிறிதும் ஏலாது. இதனால் அவர் காட்டு உவமைப் போலியேயாம். காட்டு உவமைப்போலியாகவே, அவைபோலத் தமி ழகரம் விரிந்து தமிழ் என நின்றதென அவர் சாதித்த முடிபு சிறிதும் உணர்வில்லார் உரையேயாய் வெறும் போலியாதல் காண்க. இன்னும், தனிச் சொல்லிறுதிக்கண் ஆன் மான் கோனெனச் சாரியை, பொருள் குறித்து வந்தியைந்து நிற்பதல்லது கொன்னே யெழுத்து விரிந்து நிற்றல்

வழக்கிரண்டினுங் காணுண்மையானும் அது போலி முடிபேயாமென்று மறுக்க.

## ச. "தென்மொழி" முடிபு

ஆரியம், 'சம்ஸ்கிருதம்' என இருமொழியினாற் பெயர் பெறுதல் போலத் தமிழுந் 'தென்மொழி' யென இருமொழியினாற் பெயர் பெறும். தென்மொழி அழகுடைய பாடை. ஈண்டு அழகு இயல் வரம்பு. இயலெனினும் இலக்கணமெனினும் பொருந்தும். இனித் தென்மொழி என்பதற்கு இசையுடைய மொழியென்று பொருள் கூறினும் பொருந்தும். ஈண்டு இசை என்றது காணத்தினாற் செயற் படுத்திக் காணும் இசையன்றி இயல்பாக இயைந்து மொழியோடு தோற்று மெல்லோசை இன்பமாம். இவ்வோசை யின்பம் இதற்குப் போல வனைப்பாடைகளுக்கு அத்தனை வாய்ப்பப் பொருந்தாமை செவிப்புல அனுபவத்தினாற் காண்க. இவ்வோசையின்பம் வட மொழிக்கின்றேவெனின்,--வடமொழிக்கண்ணும் இவ்வோசையின்பம் உண்டு. ஆயினும், அது உரப்பியும் எடுத்துங் கனைத்துங் கூறும் வல் லோசைகளோடு விரவித் திரிபெய்துதலின், வல்லோசையோடு விரவா மல் மெல்லோசையே பயின்ற இதற்கே அது சிறப்பாமென்றுணர்க. தமிழ்நூலாருங் 'கசடதபற' வென வல்லெழுத்துக்கள் கொள்வா லெனின்,—அவை 'ஙஞணநமன' 'யரலவழள' வென்னும் எழுத் தோசையை நோக்க வல்லோசையாக இசைத்தல் பற்றி அவ்வாறு கொள்பவாயினும், வடமொழிக்கண் வருக்க பஞ்சகத்தின் இடைப்பட்டு நடக்கும் அவ்வல்லெழுத்துக்களை நோக்க அவையும் மெல்லெழுத் தென்றே சொல்லப்படுமாதலால், அது கடாவன்றெனக. மொழி யோடு இயல்பாகப் பொருந்தியியலும் இவ்வின்னிசை இதற்குச் சிறத் தலினன்றே இறையனர் 'தமிழ்' எனப் பண்பால் விதந்து இதற்கு ஆதிக்கண் குறியீடு செய்வாராயினதூஉம் என்றுணர்க.

இவ்வாற்றால், தமிழ் தென்மொழி யென்பன ஒருமொழி தொடர் மொழியாய் வேறுபடினும் பொருளால் ஒற்றுமை உடையனவேயா மென்று கடைப்பிடிக்க.

தென்மொழி யென்பதன்கண் தென்னென்பது வடமொழி யென் பதன்கண் வடவென்பது போலத் திசை குறிக்குஞ் சொல்லேயாக

வின், அவ்வடமொழிக்கு அழகு இசையென அங்ஙனம் பொருளுரைத்தல் பொருந்தாதாம் பிறவெனின்,—ஆரியமொழி வடநாட்டின் கண்ணின்று தென்னாட்டின்கண் வந்து வழங்குதலின், தென்னாட்டாராகிய தமிழ்மாந்தர் அதனை வடமொழியென்று அங்ஙனந் திசையடுத்து விசேடித்தல் வழக்காறும்; தென்னாட்டினர் தமிழெல்லைக்குள் இருந்துகொண்டு அதனைத் தென்மொழியென்று திசையடுத்து அங்ஙனம் விசேடித்தல் வேண்டாமையின் அது வழக்காறுகாது; அதனால் தென்னென்பது திசைப்பொருள் குறித்துவந்த அடைமொழியன்று; அழகு இசையென்பன குறித்துவந்த அடைமொழியே யாம். இங்ஙனமாகலின், பொருந்தாமை யாண்டைய தென்க. இனித் தென்னாட்டினர் தமிழினை அங்ஙனம் விசேடித்தல் செல்லாதேனும், வடநாட்டினர் தென்னாட்டு வழங்குதல்பற்றித் தமிழ்மொழியினை அவ்வாறு திசையடுத்து விசேடித்தல் செல்லுமெனின்,—வடநாட்டார் அங்ஙனந் தமிழினைத் தம் மொழியால் அப்பொருள்படக் குறியீடு செய்து வழங்குதல் செல்லுமல்லது, அவர் தமிழினால் அதனைத் தென்மொழியென்று அங்ஙனந் திசையடுத்து விசேடித்து வழங்குவரென்றல் செல்லாமையின், அது தடையாகாதென்க. தடை - ஆசங்கை.

இனிப் பாரதகண்டத்தினை வடபுலந் தென்புலமென விரண்டுபடக்கொண்டு வழங்கு முறைபற்றித் தென்னாட்டினர் தந்நாட்டு மொழியாகிய தமிழினைத் தென்மொழி யென்று திசையடுத்து அங்ஙனம் விசேடித்தல் செல்லுமெனினும், அவ்வழக்கு அவ்விரு மொழிகளையும் வடமொழி தென்மொழியென ஒன்றோடு மற்றொன்றினை யெதிர்ந்து கூறும்வழிச் செல்லுதலன்றித் தென்மொழியென்று தனித்துக்கூறும் வழியுஞ் செல்லுமென்றல் நிரம்பாது; நிரம்பினும், தமிழை அழகு இசையென்னும் பொருள்கள் பற்றித் தென்மொழியென்று அவ்வாறு விசேடித்தலை அது தடுக்கும் வலியுடைத்தாதல் இல்லை. அதனால், 'தென்மொழி' 'தென்சொல்' 'தென்கலை' யெனப் பயின்று தனித்து வழங்குந் தொடர்மொழிகளின்கட் பட்டியலும் அவ்வடைமொழிக்கு யாங் கூறிய பொருள் சிறப்புடைப் பொருளாமென்று கடைப்பிடிக்க.

௫. தமிழ்ப் பொதுவெல்லை

ஆரியமொழி இப்புடவியிற் புண்ணிய பூமியெனச் சிறந்தெடுத்தோதப்படுங் குமரிகண்டத்தின் வடபாலைத் தனக்கு முக்கிய நிலைக்

களமாகக்கொண்டு பயில்வதாகத் தமிழ்மொழி அதன் தென்பாலைத் தனக்கு முக்கிய நிலைக்களமாக்கொண்டு பயில்வதாயிற்று. தென்பால் நிலத்து மற்றிதற்கெல்லை வடக்கண் வேங்கடமும், தெற்கட் குமரியும், கிழக்கு மேற்குங் கடலுமாம். அது "வடவேங்கடந் தென்குமரி - யாயிடைத் - தமிழ்கூறு நல்லுலகத்து" எனவருந் தொல்காப்பிய உபோற்காதச் சூத்திரத்தானும், "நெடியோன் குன்றமுந் தொடியோள் பௌவமுந் - தமிழ்வரம் பறுத்த தண்புன னாட்டு" எனவருஞ் சிலப்பதிகாரச் செய்யுளானு மறிக. "வடதிசை மருங்கின் வடுகுவரம் பாகத் - தென்றிசை யுள்ளிட் டெஞ்சிய மூன்றும் - வரைமருள் புணரியொடு பொருது கிடந்த - நாட்டியல் வழக்க நான்மையின் கடைக்கண்-யாப்பின திலக்கண மறைகுவன் முறையே" எனச் சிறுகாக்கைபாடினியார் தெற்குங் கடல் எல்லை கூறியது குமரியாறு கடல்கொண்ட பிற்காலத்துச் செய்ததென அறிக. தமிழ் வரம்பு இங்ஙனஞ் சிதைந்து வேறுபட்டுச் சுருங்கியதுபோல அகன்று விரிந்ததும் உண்டு. தமிழ் அவ்வாறு வளர்ந்து அகன்று விரிந்தன ஈழநாடு முதலியவாம்.

இனித் தென்னாடு 'தமிழ்நாடு'- என்பது அடிப்பட்டு வரும் வழக்காகலானும், மற்றதன்கண் தமிழ்மொழிக்கு முற்பட்டு வழங்கி வீழ்ந்ததோர் மொழியுண் டென்பதற்குப் பிரமாண மின்மையானும், தமிழ்மொழி தென்னாடு தோன்றுங் காலத்து உடன்றோன்றி அதன்கண் வாழும் நன்மக்கள் பயிலு மொழியாயிற்றென்பது தேற்றமாம்.

## சு. செந்தமிழ் நிலம்

இனிச் செந்தமிழ் நிலம் இப்பொது எல்லையுள் வைத்து வரைந்து கொள்ளப்படும். தொல்காப்பிய உரையாசிரியர்கள் செந்தமிழ் நிலம் "வைகையாற்றின் வடக்கு மருதயாற்றின் தெற்குங் கருவூரின் கிழக்கு மருவூரின் மேற்குமாம்" என்பர். இதனாற் செந்தமிழ்நிலஞ் சோணாடாயிற்று. திராவிடமாபாடியமுனிவர் "கீரசியி னின்றும் போந்து கம்பர்தா மருளப் பெற்று - மாசிலாக் கச்சிமூதூர் மன்னிவீற் றிருந்து பூமே - லாசிலாத் தமிழ் பரப்பி யருந்தமிழ்க் குரவு பூண்ட - தேசினன் மலைய வெற்பிற் குறுமுனி திருத்தாள் போற்றி" எனக் காஞ்சிப்புராணமுகத்து அகத்தியனாரை வாழ்த்து முகத்தானே செந்தமிழ் நிலந் தொண்டைநாட்டுக் காஞ்சிநகர் வரைப்பென் றுணர்த்துவர்.

நன்னூல் விருத்தியுரைகாரர் செந்தமிழ்நிலம் "சந்தனப் பொதியச் செந்தமிழ் முனியுஞ் - சௌந்தர பாண்டிய னெனுந்தமிழ் நாடனுஞ் - சங்கப் புலவருந் தழைத்தினி திருக்கு - மங்கலப் பாண்டி வளநா டென்ப" என்றுரைப்பர். சேர சோழ பாண்டிய மன்னர்களைத் "தமிழ்நாட்டு மூவேந்தர்" என யாண்டும் வழங்குதலானும், கடைச் சங்கப்புலவர் சீத்தலைச்சாத்தனார் திருக்குறள் உபோற்காதத்துள்,

"மும்மலையு முந்நாடு முந்நதியு முப்பதியு
மும்முரசு முத்தமிழு முக்கொடியு—மும்மாவுந்
தாமுடைய மன்னர் தடமுடிமேற் றான்றே
பாமுறைதேர் வள்ளுவர்முப் பால்"

என முத்தமிழையும் அம்மூவர்க்கும் உடைமையாக்கிச் செந்தமிழ் உத்தரவேதத்தினை அவர்தம் "முடிமேற்றூர்" எனப் பொதுவாக ஓதுதலானும், பத்துப்பாட்டு எட்டுத்தொகை முதலிய சங்க இலக்கியங்களுட் சில அம்மூவர் மேலவாகியும் சில ஒவ்வொருவர் மேலவாகியும் வருதலானும், ஆளுடையபிள்ளையார் முதலிய சமயாசாரியர் நால்வரும், சேரமான்பெருமாள் முதலிய மற்றை யுண்மை நாயன்மாரும் அருளிச்செய்த திருநெறிச் செந்தமிழ் வேதமுதலிய திருவருட் பாடல்கொண்ட திருத்தளிகள் தமிழ்நாட்டுள் ஒன்றன் பால தாதலின்றி, முந்நாட்டகத்து முண்மையானும், பிறவாற்றானும், செந்தமிழ்நிலந் தமிழ் முந்நாட்டகத்தும் ஒப்பக் கொள்ளப் படுமென்க. அஃதேல், திருநெறிச் செந்தமிழ் வேதத் திருப்பாடல் கொண்ட திருத்தளிகள் வடக்கண் திருக்கயிலாயங் கேதார முதற் சிலவும், தென்கீழ்த் திசைக்கண் திருக்கோணமாமலை திருக்கேதீச்சர மெனச் சிலவும் உள்ளனவன்றே; அவ்வாற்றால் அவையெல்லாஞ் செந்தமிழ் நிலமாவான் செல்லும் பிறவெனின்,—"வடவேங்கடந் தென் குமரி, யாயிடைத் - தமிழ்கூறு நல்லுலகத்" தின் கண்ணது இவ் வாராய்ச்சியாகலின், அது கடா அன்றென்றொழிக. மற்றெவ்விடனாயினுமாகுக, ஒருநிலத்தின்கண் முந்துநூல்பற்றி வழக்குஞ் செய்யுளுமாகிய செந்தமிழாராய வுறும் நன்மக்க ளுளராங்கால், அதுதன்னைச் செந்தமிழ் நிலன் அன்றென விலக்கல் கூடாது. என்னை? இலக்கண முள்வழி இலக்கியமாதல் ஒருதலை யாகலி னென்பது. மற்றுத் தமிழ் செவ்வனாராயு நன்மக்க ளுளராதல் பற்றிச் செந்தமிழ் நிலனென வழங்கப்பட்டது;

பிற்காலத்து அவ்வாராய்ச்சி வீழ்ந்து பிறிதொரு பயிற்சிக் கிடனுகுங் கால், அதுதான், முற்பொழுதானன்றி அப்பிற்பொழுதானுஞ் செந் தமிழ் நிலனென்று செல்லாது. என்னை? இலக்கணஞ் சிதைவுழி இலக்கியம் நிலைபெறுதல் கூடாமையி னென்பது.

இனிப் "பண்ணியற்றமிழ் பாண்டியற்காகவே" எனச் செந் தமிழ் வேதத்தும், "உயர்மதிற் கூடலி னய்ந்தவொண் டீந்தமிழின் - துறைவாய் நுழைந்தனையோ" என எட்டாந்திருமுறையான திருக் கோவையுள்ளும், "சென்றணைந்து மதுரையினிற் றிருந்தியநூற் சங் கத்து - என்றிருந்து தமிழாராய்ந் தருளியவங் கணர்கோயில்" "தேம் பொழில்சூழ் செந்தமிழ்நாட் டினிலெங்குஞ் சென்றிறைஞ்சி" "செய் வார் கன்னித் தமிழ்நாட்டுத் திருமா மதுரை முதலான" "பானல் வயற் றமிழ் நாடு" "நன்றியி னெறியி லழுந்திய நாடு பற்றமிழ் வேந் தனு முய்ந்து" என்றற் றொடக்கத்தாற் பன்னிரண்டாந் திருமுறை யான திருத்தொண்டர் புராணத்துள்ளும், "தமிழ்நிலை பெற்ற தாங் கரு மரபின் - மகிழ்நனை மறுகின் மதுரையும்" "தேனுறை தமிழுந் திருவுறை கூடலு - மனத்தலின் மதிக்குல மன்ன னுகியும்" "வண் டுறை வார்பொழில்சூழ்நறை யாற்றுமன் னேடவைவேல் - கொண் டுறை நீக்கிய தென்னவன் கூடற் கொழுந்தமிழின் - ஒண்டுறை மேலுள்ள மோடியதோ" "ஆமா றறிபவர் யாரே விதியையந் தீந் தமிழ்நர் - கோமான்" என்றற்றொடக்கத்தாற் சிறுபாணுற்றுப்படை கல்லாட முதலிய சங்கச்செய்யுளுள்ளும், இறையனர் களவியலுரை யுள்ளும் பெரும்பான்மையான் வருதலின், பாண்டிவளநாடு ஏனைச் சேர சோழ வளநாடுகளினும், செந்தமிழ் ஆராய்ச்சிக்குச் சிறப்புடைத் தாயிற்றென்பது கடைப்பிடித்து உணரப்படு மென்க.

### எ. செந்தமிழ்ச்சொல்

இனிச் செந்தமிழ்ச்சொல் 'இயற்சொல்' என்றும் 'திரிசொல்' என்றும் இருவகைப்படும். இயற்சொல்லாவன: "அவற்றுள், இயற் சொற்றாமே - செந்தமிழ் நிலத்து வழக்கொடு சிவணித் - தம்பொருள் வழாமை இசைக்குஞ் சொல்லே" என்னும் எச்சவியற் சூத்திரத்தா னுணர்க. அவை நிலம், நீர், தீ, வளி, வெளி, உயிர், உடம்பு என்னுந் தொடக்கத்தன. திரிசொல்லாவன: "ஒருபொருள் குறித்த வேறு

சொல் லாகியும் - வேறுபொருள் குறித்த் ஒருசொல் லாகியு - மிரு பாற் றென்ப திரிசொற் கிளவி'' என்னும் எச்சவியற் சூத்திரத்தா னறிக. வடநூலார் ஒருபொருள் குறித்துவரும் வேறு சொல்லைச் 'சமானார்த்தகபதம்' என்றும், வேறு பொருள் குறித்து வருமொரு சொல்லை 'நானார்த்தகபதம்' என்றுங் கூறுவர். வெற்பு, விண்டு, விலங்கல் என்பன ஒரு பொருள் குறித்த வேறு பெயர்க்கிளவி. எகினம் என்பது அன்னமுங் கவரிமாவும் புளிமாவு நாயு முணர்த்த லானும், ஆ என்பது பெற்றமும் ஒரு மாவிசேடமும் இரக்கக்குறிப் பும், ஆதற்புடைபெயர்ச்சியு முணர்த்தலானும், 'உந்தி' என்பது யாழ்ப்பத்தலுறுப்புங் கொப்பூழுந் தேர்த்தட்டுங் கான்யாறு முணர்த்த லானும், இவை வேறுபொருள் குறித்த ஒருசொல். இவை பெயர்த் திரிசொல். 'பாடித்தை' 'செப்பீமன்' 'ஈங்கு வந்தீத்தாய்' 'புகழ்ந் திகுமல்லரோ' 'பெறலருங்குரைத்து' இவை வினைத்திரிசொல். இடையு முரியுந் திரிசொல்லாய் வருமேனு முணர்க.

இனித் திசைச்சொற்களும் வடசொற்களுஞ் செந்தமிழ்ச் சொற் களோடு தலைப்பெய்து வழங்கப்படும். திசைச்சொற்களாவன: "செந் தமிழ் சேர்ந்த பன்னிரு நிலத்துந் - தங்குறிப் பினவே திசைச்சொற் கிளவி'' என்னு மெச்சவியற்சூத்திரத்தா னறிக. பன்னிருநிலமாவன: பொங்கர்நாடு, ஒளிநாடு, தென்பாண்டிநாடு, குட்டநாடு, குடநாடு, பன்றி நாடு, கற்காநாடு, சீதநாடு, பூழிநாடு, மலைநாடு, அருவாநாடு, அருவா வடதலை நாடு எனத் தென்கீழ்ப்பால் முதலாக வடகீழ்ப்பாலிறுக எண் ணிக் கொள்க.

இனி இப்பன்னிரண்டையும் புறஞ் சூழ்ந்து வேறு பன்னிரு நிலமு முள: அவை சிங்களமும், பழந்தீவும், கொல்லமும், கூபமும், கொங்கணமும், துளுவும், குடகமும், கருநடமும், குட்டமும், வடு கும், தெலுங்கும், கலிங்கமுமாமென்பர் நச்சினார்க்கினியர். இனி வட சொல்லாவன: "வடசொற் கிளவி வடவெழுத் தொரீஇ - யெழுத் தொடு புணர்ந்த சொல்லா கும்மே'' என்னு மெச்சவியற் சூத்திரத்தா னறிக. வடவெழுத்தொரீஇ எழுத்தொடு புணர்ந்தவெனவே, பொது வெழுத்தானியன்ற வடசொற்கள் செந்தமிழிற் பயின்று வருமென் பது தானே பெறப்படும். அவை 'வாரி, மேரு, குங்குமம், மணி' என்னுந் தொடக்கத்தன. வடசொற்கேயுரிய சிறப்பெழுத்தினீங்கி

இருசார்மொழிக்கும் பொதுவாகிய எழுத்தானியன்ற சொற்கள் 'விதி, உற்பலம், தற்பவம், அற்புதம்' என்னுந் தொடக்கத்தன. இன்னும், தொல்காப்பியனர் "சிதைந்தன வரினு மியைந்தன வரையார்" என்ருேதுதலின், பொதுவெழுத்தா னியன்றனவேயன்றி வடவெழுத்தானியன்ற வடசொற் சிதைந்து வரினும் பொருத்தமுடையன கொள்ளப்படும். அவை "அரமிய வியலகத் தியம்பும்" "தசநான் கெய்திய பணைமரு ளேனோன்ருள்" "கடுந்தே ரிராம னுடன்புணர் சீதையை" "பேதை யல்லை மேதையங் குறுமகள்" என்னுந் தொடக்கத்தன.

இனிப் பிரயோக விவேக நூலார் "உரிச்சொல்லென்பது பதினெண்டேசிகச்சொல் வடசொல்லெனத் தொகையாற் பத்தொன்பதாம்" என்றும், "தமிழுந் திசைச்சொல்லேயாம்" என்றுங் கூறினாராலோவெனின்,— தமிழ்ச்சொற்கள் பெயர் வினை யெனச் சிறப்புப்பற்றி இரண்டாமாறும், இடை உரி யென்னு மிரண்டும் அவற்றுவழி மருங்கிற்ருேன்றி அவற்ருெடு தலைப்பெய்யப்பட்டு நான்காமாறும், தொல்லாசிரியர் துணிபாம். அவர் அவ்வாறன்றி எல்லாச்சொல்லும் உரிச்சொல்லென்றது தொல்லாசிரியர் வழக்கு மாறுகோளாம். அதுகிடக்க: ஆரியமொழிக்குந் தமிழ்மொழிக்கும் முதற்குரவர் சிவபிரானென்பது மேற்கூறியவாற்ருல் நன்று பெறப்படுதலானும், அவை இரண்டற்கு மிலக்கணம் அவ்விறைவர் செவியறிவுறுத்தக் கொண்டு முறையே பாணினியார் அகத்தியனுரென்னும் முனிவேந்த ரிருவரானும் வழிப்படுத்துச் செய்யப்பட்டமையானும், இரண்டு மான்ருேராற் றழுவப்படுதலானும், ஆரியம் பிராகிருதம் முதலிய பாடைகளுக்கு மூலமாய் வடதிசைக்கண் நிற்கத் தமிழ் ஆந்திர முதலிய பாடைகளுக்கு மூலமாய்த் தென்திசைக்கண் நிற்றலானும், இரண்டும் வடமொழி தென்மொழியென ஒன்றற்கொன்று எதிர்தந்து வழங்கப்படும் பெருமையுடைமையானும், பிறவாற்ருனும், தம்முட் சமத்துவமுடைய தெய்வ முதன்மொழிகளென்பது இனிதறியப்படுவதாம். இச்சாமியமுடைய இவ்விரண்டனுள், ஒன்றனைத் தெய்வ முதன்மொழியென்று கொண்டு, மற்ருென்றனைப் பதினேழ்நிலத்து மொழிகளோடு ஒப்பதொரு திசைமொழி யென்றல், நடுவுநிலை யுரையாகாமையின், அவருரை உரையளவையொடும் ஆன்ருேர் வழக்கொடும் மாறுபாடுறு மயக்கவுரையே

யாமென்று மறுக்க. இனி இன்னோரன்ன மயக்குரைகள்புழ்றித் தமி ழுலகம் மயக்கமுறாது செந்தமிழின் தனிமுதற் றெய்வமெய்ம்மைத் தன்மை தேறி உறுதி கூடுதற்கன்றே, திராவிடமாபாடியமுனிவர்,

" வடமொழியைப் பாணினிக்கு வகுத்தருளி யதற்கிணையாத்
தொடர்புடைய தென்மொழியை யுலகமெலாந் தொழுதேத்துங்
குடமுனிக்கு வலியுறுத்தார் கொல்லேற்றுப் பாகரெனிற்
கடல்வரைப்பி லிதன்பெருமை யாவரே கணித்தறிவார் "

என்றும்,

" இருமொழிக்குங் கண்ணுதலார் முதற்குரவ ரியல்வாய்ப்ப
விருமொழியும் வழிப்படுத்தார் முனிவேந்த ரிசைபரப்பு
மிருமொழியு மான்றவரே தழீஇயினா ரென்றாலிவ்
விருமொழியு நிகரென்னு மிதற்கைய முளதேயோ "

என்றும், அத்தன்மையெல்லாங் காஞ்சிப்புராணத்துக் கிளந்தெடுத் தோதித் தமிழின் தெய்வத்தனிமுதன்மை நிறுத்துவாராயினதூஉ மென்றுணர்க. இன்னும், இக்கருத்துப்பற்றியன்றே, கடைச்சங்கப் புலவர் வண்ணக்கஞ்சாத்தனார்,

" ஆரியமுந் தமிழு மாராய்ந் திதனினிது
சீரிய தென்றொன்றைச் செப்பரிதால்—ஆரியம்
வேத முடைத்துத் தமிழ்திரு வள்ளுவனா
ரோது குறட்பா வுடைத்து "

எனத் திருக்குறள் உபோற்காதத்து எவ்வாறு சமன்செய்து எடுத் தோதியதூஉ மென்க.

இனி நன்னூலாரும் இலக்கண விளக்கநூலாருஞ் " செந்தமிழ் நிலஞ்சேர் பன்னிரு நிலத்தினும் - ஒன்பதிற் றிரண்டினிற் றமி ழொழி நிலத்தினுந் - தங்குறிப் பினவே திசைச்சொல் லென்ப " என்றுரைத்தாராலெனின்,—சிவஞானயோகிகள், " ஆசிரியர் தொல் காப்பியனார் அவ்வாறு கொள்ளாமையானும், உரையாசிரியர் சேனா வரையர் கூறாமையானும், வடசொற்போல ஏனைநிலத்துச் சொற் கள் சான்றோர் வழக்கினுள்ளுஞ் செய்யுளுள்ளும் வாராமையானும், சிலசொற்கள் இக்காலத்து வரினும் இலக்கணமுறை யன்மையானும், அவை தமிழ்க்குரிய திசைச்சொற்க ளாகாவென மறுக்க " என்று

(இலக்கண . விளக்கச் சூறாவளியுள்) ஆணை தருதலின், அவ்வுரை கொள்ளாமென்பது.

அ. சேந்தமிழ் வழக்கு

செந்தமிழ் வழக்கு, உலகியல் வழக்கும் புலனெறிவழக்குமென இரண்டுவகைப்படும். உலகியல் வழக்கெனினும், வழக்கெனினும், உரையெனினும், நடையெனினு மொக்கும். புலனெறிவழக்கெனினும், செய்யுளெனினும், பாவெனினும், பாட்டெனினும், யாப்பெனினுந் தூக்கெனினு மொக்கும். ஆசிரியர் தொல்காப்பியனார் " வழக்கெனப் படுவ துயர்ந்தோர் மேற்றே - நிகழ்ச்சி யவர்கட் டாக லான " என்று மரபியலுட் கூறுதலின், வழக்கென்பது இரண்டற்குமாம். ஆயினும், தலைமை தோன்றச் செய்யுளென வேறு பிரித்து அவ்வாறு வழங்குவர் ஆசிரியரென் றுணர்க.

இனி உலகியல் வழக்கு, நுண்மாணுழைபுலமுடையார் பொருள் கோடற்குரிய ஆன்றோர் உறுதிக்கட்டுரையும் ஏனோர் பொருள் கோடற்காம் மென்னடையுமென இரண்டாம். இவற்றுள், ஆன்றோர் உறுதிக்கட்டுரை செய்யுளோடொத்தலின், உரைச்செய்யு ளெனவும் படும். சிவஞானமாபாடியகாரரும், 'உரைச்செய்யுள்' 'பாச்செய்யுள்' என்றங்ஙனஞ் சிவஞானமா பாடியத்துள் உரைத்தார். வடநூலார் இன்னோரன்ன உலகியல் வழக்கினை லௌகிகப்பிரக்கிரியை என்பர். இனி வடமொழியார் உரையும் பாட்டுமென்னு மிரண்டும் லௌகிகப் பிரக்கிரியை யென்பர். தமிழ்மொழியார் உரைமாத்திரையே உலகியல் வழக்கென்பர். இது தம்முள் வேற்றுமையென் றுணர்க. இனிப் புல னெறி வழக்கு, உண்மை நாயன்மார் திருமுறைச் செய்யுளுஞ், சங்கத் துச் சான்றோர் செய்யுளு மற்றை, ஆன்றோர் செய்யுளுமென மூன்றும். இவற்றுள் திருமுறைச் செய்யுள், முற்றவ முதன்மையான் ஐந்தவித்து மனந்தூயராய் முக்குணங்களு முற்றக்கடந்து, துரிய முழுமுதல்வனான பரமசிவன் திருவருள் ஞானம்பெற்ற உண்மை நாயன்மார் மந்திர மறைமொழியாய் நிற்றலின் தமிழ் வேதமெனவும், திருமுறையென வும், அங்ஙனம் வேறாகக்கொண்டு அத்தியயன ஒத்தாகப் பெரியோ ராற் போற்றப்பட்டன வென்பது. இம்முறை உத்தரவேதமான திருக்குறளுக்கும் ஒக்குமேனு நீதி நூலாதல்பற்றித் திருமுறை களின் வேறுவைத்துப் போற்றப்படா நின்றதென்பது.

இனி, இக்காலத் தமிழ்க் காவியப்புலவர், திருமுறைச் செய்யுள் பத்தர்பாக்களாய் அத்தியயன ஒத்துக்களாயினும், சங்கத்தமிழ் மற்றைக் காவியத்தமிழ்போலச் சுவையுடையவாகாவென்று புறங் கூறுபவாலெனின்,—அவர் பருப்பொருட் காவியப் பயிற்சியினானும், மறைமொழியான திருமுறைச் செய்யுட்களின் சொற்பொருணுட்பம் அறிதரற்கேற்கும் இயலிசை மதிநுட்பம் வாய்ப்பப் பெருமையானும், இக்காலத்து அவ்வாறு பிதற்றினும், நல்லாசிரியர் வழிப்பெற்ற கல்வி யறிவுடையார், பரமாசிரியனான இறைவனும், ஆசிரியர் அகத்தியனார் உபமன்னியனார் முதலிய கடவுட் பெற்றியாளரும், நம்பியாண்டார் நம்பி முதலிய உயர்ந்தோரும், சங்கராசாரியர் முதலிய பெரியோரும், முறையே சிவரகசியத்தானும், பத்தவிலாசங்களானும், பதினோரந் திருமுறையானும், சௌந்தரியலகரி முதலிய பிரபந்தங்களானும், புகழ்ந்துபோற்றும் பெருமையுடைய சுருதிமொழியான திருமுறைச் செய்யுட்களின் மகிமை தேறவல்லராகலின், அவர் பழித்துரை அவர் வெள்ளறிவின் திறமாமென் றங்ஙனம் நகையாடி விடுப்பரென் றொழிக.

“என்று மடியவ ருள்ளத் திருப்பன விவ்வுலகோர்
நன்று மலர்கொடு தூவித் துதிப்பன நல்லசங்கத்
தொன்றும் புலவர்கள் யாப்புக் குரியன வொண்கவியைப்
பொன்றங் கவுணியன் சைவ சிகாமணி பொன்னடியே”

என்று நம்பியாண்டார்நம்பி பதினோரந் திருமுறையுள் எடுத்துத் துதித்தலின், திருமுறை யிலக்கியச்செய்யுட்கள் சங்கப்புலவர் செந் தமிழ்யாப்பிற்கு உயிர்ப்பொருளாமென்று கடைப்பிடித் துணர்ந்து கொள்க. ஆண்டு “நல்லசங்கத் தொன்றும் புலவர்கள் யாப்பு” என்றது—அகத்தியம், தொல்காப்பியம், களவியல் முதலியனவும் பிறவு மாம். இஃது உபலக்கணமாகலின், ஏனைத் திருமுறைகட்கும் கொள் ளப்படும்.

அற்றேலஃதங்ஙனமாக ; அகத்தியந் தொல்காப்பியம் களவியல் முதலிய சூத்திர நூல்கள் வழக்குச் செய்யுளென்னும் இரண்டினுள் யாதன்பாற் படுங்கொலெனின்—அவை வழக்கியலுஞ் செய்யுளிய லுந் தங்கட் பொருந்த நிற்றலின், இரண்டனு ளொன்றன் பாலதா மென்றற் கேலாமையின், நூல்யாப்பென அவற்றின் வேறுகக்கொண்டு போற்றப்படுமென்பது. நச்சினார்க்கினியரும், “பாட்டிடை வைத்த

குறிப்பி னுனும்" என்னுஞ் செய்யுளியற் சூத்திரத்து, "சூத்திரம் பாட்டெனப் படாவோவெனின்,—படா; பாட்டும் உரையும் நூலும் என வேறோதினமையின்" என்றோதினர். இனிச் சூத்திரம் பாட்டாகா வேனும், 'உரைச்செய்யுள்' என்றாற்போலச் 'சூத்திரச்செய்யுள்' என்றவ்வாறு வழங்கப்படுமென்க. நச்சினார்க்கினியரும் பொருளதிகாரத்துச் 'சூத்திரச்செய்யுள்' என்று அங்ஙனம் வழங்கினர். இனி ஆசிரியர் அகத்தியனார் தொல்காப்பியனார் முதலாயினர் தவத்தான் மனந்தூயராய் முக்குணங்களையுங் கடந்து இறைவனருள் பெற்றுடைய ராகலின், அவரருளிச்செய்த அகத்தியந் தொல்காப்பிய முதலாயின இறையனார் களவியலோடு ஒக்குந் தெய்வ ஓத்துக்களாமென்று உணர்ந்துகொள்க. "அறுவகைப்பட்ட பார்ப்பனப் பக்கமும்" என்னும் புறத்திணையியற் சூத்திரத்து, "இனித் தமிழ்ச்செய்யுட் கண் இறையனாரும் அகத்தியனாரும் மார்க்கண்டேயனாரும் வான்மீகனாருங் கவுதமனாரும் போல்வார் செய்தன தலையாயவோத்தும், இடைச்சங்கத்தார் செய்தன இடையாய வோத்தும், கடைச்சங்கத்தார் செய்தன கடையாயவோத்துமெனக் கொள்க" என்றார் நச்சினார்க்கினியர்.

இனி நூல் தான் முதனூலும் வழிநூலுமென இரண்டாம். அது "மரபுநிலை திரியா மாட்சிய வாகி - யுரைபடு நூறா மிருவகை யியல - முதலும் வழியுமென நுதலிய நெறியின" என்னு மரபியற் சூத்திரத்தானறிக. அவற்றதிலக்கணம் "வினையி னீங்கி விளங்கிய வறிவின் - முனைவன் கண்டது முதனூ லாகும்" "வழியெனப் படுவ ததன்வழித் தாகும்" என்னு மரபியற் சூத்திரங்களா னறிக. இவ்விரண்டுமன்றிச் சார்புநூலென வேறொன்று கூறுவதென்னையெனின்,—ஒன்றன் வழியாகச் செய்வனவெல்லாம் வழியேயாயினும் அவை முன்னோர் நூலின் முடிபொருங் கொத்தலுந் திரிபு வேறுடைத்தலுமென இரு வேறு வகைப்பட நிகழ்கின்றமையின், அதுபற்றிச் சார்புநூலென வேறு கோடலும் அமையுமென விடுக்க. அங்ஙனந் திரிபு வேறுடையதூஉம் பொருளா னொருங்கொத்தலின், மரபுநிலை திரியாமையின், வழிநூலென்றற்கு ஏற்புடைத்தாதலு மறிக.

இனி வடமொழியார், சூத்திரஞ் செய்யுளென்னு மிரண்டானுமன்றி உரையானும் நூலியற்றுப. அவை காதம்பரியந் தசகுமாரசரித்திரம் போல்வன. தமிழ்மொழியார் சூத்திரஞ் செய்யுளென்னு மிரண்

டாற்ருனே நூலியற்றுப; உரையானியன்ற தொல்லாசிரியர் தமிழ் நூல் அரிதென் றுணர்க. சூத்திர மோத்துப் படலமென் றிவற்றுட் சூத்திர முதலியவற்ருனே உண்ணின்றகன்ற உரையொடு பொருந்தி நடப்பது நூலென்பவாயினும், மற்றைப் பாக்களானு முறையானு நடப்பனவற்றையும் ஒப்புமையான் நூலென்று அவ்வா ருன்ருேர் வழங்குவ ரென்பது. இன்னும், வடநூலார் பத்தியத்தானியன்ற இலக்கிய நூலைக் 'காவிய' மென்றும், பத்தியங் கத்தியமென்னு மிரண்டானு மியன்ற விலக்கியநூலைச் 'சம்பு' வென்றும் பத்தியங்கத்தியம் பிராகிருதமென்னு மூன்ருனுமியன்ற இலக்கியநூலை 'நாடக' மென்றுங் கொள்வர். தமிழ்நூலாரும் உரைவிராய செய்யுளானும் பழைமைய வாகிய கதை பொருளாக நூல் செய்யப்படுமென்பர். அது "தொன்மை தானே—உரையொடு 'புணர்ந்த பழைமை மேற்றே" என்னுஞ் செய்யுளியற் சூத்திரத்தினு லுணர்க. அவைதாம் யாவையெனின்,— பெருந்தேவனாரற் செய்யப்பட்ட பாரதமுந் தகடூர் யாத்திரையும் போல்வன என்றுணர்க.

இனி நூலுரை, காண்டிகையுரையும் அகலவுரையுமென இரண்டாம். இனிக் காண்டிகையுரைதான்— "பழிப்பில் சூத்திரம் பட்ட பண்பிற் - கரப்பின்றி முடிவ" தூஉம், "விட்டகல் வின்றி விரிவொடு பொருந்திச் - சுட்டிய சூத்திர முடித்தற் பொருட்டா - வேது நடையினு மெடுத்துக் காட்டினு - மேவாங் கமைந்த மெய்ந்நெறித்து" ஆவ தூஉமென இரண்டாம். இவற்றுள், முன்னது பிண்டப்பொழிப்பெனவும், பின்னது வார்த்திகப்பொழிப்பெனவும் வழங்கப்படுமென் றுணர்க. இனி அகலவுரைதான்—"சூத்திரத் துட்பொரு ளன்றியும் யாப்புற - இன்றி யமையா தியைபவை யெல்லா - மொன்ற வுரை"த் தலும், "மறுதலைக் கடாஅ மாற்றமு முடைத்தாய்த் - தன்னூ லானு முடிந்த நூலானு - மையமு மருட்கையுஞ் செவ்விதி னீக்கித் - தெற்றென வொருபொரு ளொற்றுமை கொளீஇத் - துணிவொடு நிற்ற" லுமென்னும் இலக்கணத்ததாம். அகலவுரை யெனினும், விருத்தியுரையெனினும் ஒக்குமென் றுணர்க. ஆசிரியர் தொல்காப்பியனர் அகலவுரை யிலக்கணம் இங்ஙனம் இருசூத்திரமாக ஓதியது, சூத்திரத்துப் பொருளன்றியும் ஒருதலையாக அதற்கு இன்றியமையாது பொருந்துவனவெல்லாம் அதனொடு கூட்டிச் சொல்வதூஉம், அவ்

வளவினுெழியாது பூர்வபக்கம் பற்றி நிகழு மாசங்கையும் அதன் பரி காரவிடையும் உடைத்தாய்த் தன்னூற்சூத்திரத்தானு முடிந்த நூற் சூத்திரத்தானும் போலியும் பொய்யுஞ் செம்பொருளினல் நீக்கிக்கேட் போன் மெய்யுணர்ந்து தெளிய ஒற்றுமை கொளுத்தித் துணிவொருப் படுப்பதூஉமாகிய விருத்தியுரைவேறுபாடு அறிவுறுத்தற்கென்றுணர்க. எனவே, காண்டிகையுரைபோல விருத்தியுரையும் அங்ஙனம் இரு வகைத்தா மென்றவா ருயிற்று. இனி இதனுட் பின்னது பாடியமென் னும் விருத்தியுரையாமென் றுணர்க. இவ்விலக்கணம் பெற்ற அகல வுரை வடமொழியிற் பதஞ்சலியார் மாபாடியமும், தென்மொழியிற் சிவஞானயோகிகள் மாபாடியமும் போல்வன.

கடா - ஆசங்கை, மறுதலையெனினும் பூர்வபக்கமெனினும் ஒக் கும். மாற்றமெனினும் விடையெனினு மொக்கும். தன்னூலென்றது— தான் உரையியற்று நூலினை. முடிந்த நூலென்றது—அதன் முத னூலினை. இனி வினையினீங்கி விளங்கிய வறிவின் முனைவனல் அரு ளிச்செய்யப்பட்ட முதனூல் இவ்விலக்கணம் வேண்டாதென்பது கூறுமே விளங்கும்.

———

## உ. இலக்கண மரபியல்

### அகத்தியம்

---

தமிழ்மொழி இலக்கியம் இலக்கணமென இருதிறப்பட்டு நடக்கும். இவ்விரண்டனுள் இலக்கிய முந்திற்றோ, மற்று இலக்கண முந்திற்றோ, என்று ஆராய்ச்சி செய்யலுறுவார்க்கு, இலக்கணம் இலக்கியங்கண்டு அதன் தன்மையாகக் கூறப்படுவது ஒன்றுதலால் இலக்கியமே முற்பட்டதென்பர் ஒருசாரார்; இலக்கண அமைதியாய் நிலைபெறுவது இலக்கியமாதலால் இலக்கணமே முற்பட்டதென்பர் மற்றொரு சாரார். இவ்விருசாரார் உரைகளும் பொருட்பேறுடையன வாம். ஆயினும், இலக்கணமாவது இலக்கியத் தன்மையை வரைந்து கொள்வதனோடு நியதமாய் ஒப்ப நிற்பதொரு பண்பாதலால், அவை தம்மை வேறுபடுத்து இது முற்பட்டது இது பிற்பட்டது என்று பெரிதும் பேதம்பட அங்ஙனம் முற்பிற்பாடு கொள்ளுதல் ஏதமாம். இனிக் குணங்கள் திரண்டமயமே பொருளாமாயினுங் குணத்திற்குக் குணமுடைப்பொருளே பற்றுக்கோடாம். குணமுடைப் பொருளுக் குக் குணம் பற்றுக்கோடாகாது. ஆதலால், இலக்கியம்பற்றி நியத மாய் ஒப்பநிற்பது இலக்கணமென்று முடிபு கூறுதலே நியாய நெறி யாம். இனிப் பொருட்குப் பொருட்குணம் வியாப்பியமாமென்னு முறைபற்றி இலக்கியத்தின் பண்பாயுள்ள இலக்கணம் அதற்கு வியாப் பியமாய் அது பற்றுக்கோடாக நிலைபெறுவதென்பது தானே சித்திக் கும். "வடவேங்கடந் தென்குமரி - ஆயிடைத் - தமிழ்கூறு நல்லுல கத்து - வழக்குஞ் செய்யுளும் ஆயிரு முதலின் - எழுத்துஞ் சொல்லும் பொருளு நாடி" என்னும் பனம்பாரனார் கூற்றும் இதனை வலியுறுத்து மென்க. வேதாந்தத் தெளிவாஞ் சைவசித்தாந்த நூலாருஞ் சிவத்தின் குணமான சிற்சத்தி சிவத்திற்கு வியாப்பியமாமென்றும், அது சிவ பரம்பொருள்பற்றித் தாதான்மியமாய் விளக்கமுறுவதொரு பண்பா மென்றும், கூறுமாறு காண்க.

அகத்தியனார் செந்தமிழிலக்கணமுதனூல், பரமசிவனைக்குறித்து அருந்தவ மிருந்து அவரருளியவாறு கடைப்பிடித்து, இயற்றியருளினர்.

இது வடநூல் தென்னூல்கள் ஆண்டாண்டெடுத்து முறையிடும் பிரபல வுரையாம். அகத்தியனர் வடகாசி நீத்தகன்று காஞ்சிமாநகரத்தில் திருவேகம்பமுடைய சிவபிரானை வழிபட்டு அக்கடவுளருளினல் தமி ழிலக்கணஞ் செய்தமை காந்தத்துக் காளிகாகண்டத்துக் காஞ்சிப்புரா ணத்து விளங்க ஓதப்பட்டது. அது,

"அடியனேன் வடகாசி நீத்தகன்று நினக்கினிய
கடிமதில்சூழ் கொடிமாடக் காஞ்சியினைத் தலைப்பட்டுப்
பொடியணிந்த திருமேனிப் புண்ணியமே யிமயவரைப்
பிடிமணந்த மதகளிறே பெரும்பேறு பெற்றுய்ந்தேன்"

"இத்தகுபே றுடையேற்கு மற்றின்னு மொருகருத்து
மெய்த்தபெரு வேட்கையினு லொழியாது மேன்மேலுஞ்
சித்தமிசை மூண்டெழுமா லதுநிரம்பச் சிறியேன்பால்
வைத்தபெருங் கருணையினல் வழங்குவா யெனப்போற்றி"

"எவ்வினையு மோப்புதலாற் றிராவிடமென் றியல்பாடை
யெவ்வமறப் புதிதாக யான்வகுப்ப நல்கியது
வெவ்வருணத் துள்ளார்க்கு மெளிதாகப் புத்தேளி
ரெவ்வெவர்க்குஞ் சுவையமிழ்தி னினிதாகச் செய்தருளாய்"

"மூன்றுறழ்ந்த பதிற்றெழுத்தான் முழுவதுமா யுனக்கினிதாய்த்
தோன்றிமெத் தமிழ்ப்பாடைத் துதிகொண்டு மகிழ்ந்தருளி
யான்றவர மெல்லார்க்கு மிவ்வரைப்பி னளித்தருளா
யேன்றெடுத்து மொழிகல்வி யெவற்றினுக்கு மிறையோனே"

"மன்னியவித் தமிழ்க்கிளவி மந்திரங்கள் கணித்தடியேன்
செந்நெறியின் வழுவாவித் திருக்காஞ்சி நகர்வரைப்பி
னுன்னணுக்க னாகியினி துறைந்திடவும் பெறவேண்டு
மின்னவர மெனக்கருளா யெம்பெருமா னென்றிரந்தான்"

"கும்பியகைத் தலமுடைய குறுமுனிக்குப் பிஞ்ஞகனார்
தாம்பரிந்து தமிழ்விளக்கு மாசிரியத் தலைமையொடு
மேம்படுதென் றிசைக்கிறைமை நல்கிவேட் டனபிறவு
மாம்பரிசி னளித்தருளி யவ்விலிங்கத் திடைக்கரந்தார்"

"இவ்வண்ண மருள்பெற்ற விருந்தவனு மகலிடத்தின்
மெய்வண்ண வோத்தமுறைத் தீந்தமிழை விளக்குவித்துச்

செவ்வண்ணத் திருமேனிப் பெருமானார் திருவடிக
ளெவ்வண்ணந் தொழுதேத்தி நெடுங்கால மங்கிருந்தான் ''

என்னுஞ் செய்யுட்களா னறிக.

இனிப் பரமசிவனுனன்றி "அறுமுகக்கடவுளானும் அகத்தியனார்க்குச் செந்தமிழிலக்கணஞ் செவியறிவுறுத்தருளப்பட்டது" என்று தொல்லை நூலுரைகள் கூறும். இவ்வுபாக்கியானங்கள் காலவேறுபாட்டாற் சமாதான முறுமாறு முன்னர்க் கூறுதும்.

மற்றுத் தொல்காப்பியனார் "வினையின் நீங்கி விளங்கிய வறிவின், முனைவன் கண்டது முதனூல் ஆகும்" என்பராகலின், அகத்தியனாற் செய்யப்பட்ட அஃது முதனூலாமாறியாங்ஙனமெனின், தானே தலைவனுயினுனும், அவன் றன்னை வழிபட்டுத் தலைவராயினருமெனத் தலைவரிருவகையர். தானே தலைவனுன பரமசிவன் முற்காலத்துத் தமிழ் நூல் செய்திலனுகலின், அத்தலைவன் வழிநின்று அவனருளியவாறு தலைவரான அகத்தியனாற் செய்யப்பட்டது அங்ஙன முதனூலாயிற்றென்பது. அற்றாயினும், அகத்தியந் தமிழிலக்கணநூலாதலின், இலக்கியங்கண்டல்லது இலக்கணங் கூறலாகாமையின், அகத்தியத்தின் முற்பட்டுத் தோன்றி அதற்கு மூலமாய் நடைபெற்ற கடவுட் டமிழிலக்கிய நூலுண்டெனவே கோடுமெனின், தமிழ்ப்பாடையிலக்கிய முன்னுள்ளதெனக் கோடலன்றி அன்னதோர் கடவுட் டமிழிலக்கிய நூல் அதற்கு மூலமாயுண்டென்பதற்குப் பிரமாணமில்லாமையின், அவ்வாறு கொள்ளாமென்க.

அகத்தியனார் அங்ஙனந் தனிமுதற்கடவுளான பரமசிவனை வழிபட்டு முக்குணங்களுங் கடந்து அவ் விறைவனருள் பெற்றுத் தலைமையெய்தியது பற்றியன்றே மாங்குடி மருதனார், "தென்னவற் பெயரிய துன்னருந் துப்பிற் - றொன்முது கடவுட் பின்னர் மேய - வரைத்தாழருவிப் பொருப்பிற் பொருந" என்று அவ்வாறு மதுரைக்காஞ்சியுள் ஓதுவாராயிற்றென் றுணர்க். இத்தொடரினை—"வரைத்தா ழருவிப் பொருப்பிற் றென்னவற் பெயரிய துன்னருந் துப்பிற் - றொன்முது கடவுட் பின்னர்மேய, பொருந" என்று கொண்டு கூட்டுக. "தென்றிசையுயர்ந்த நொய்ம்மை போக இறைவனுக்குச் சீரொப்ப விருந்தான் என்பதுபற்றி அகத்தியனாரைத் "தொன்முது கடவுளென்றார்" என ஆண்டுரைத்தார் நச்சினார்க்கினியர். கலித்தொகையுள், "முத்தேர்

முறுவலாய் நாமமணம் புக்கக்கா - லிப்பொழுது பொழுதேன் றதுவாய்ப் பக் கூறிய - வெக்கடவுண் மற்றக் கடவுள்'' என இருடிகளைக் 'கடவுள்' என நல்லந்துவனாருங் கூறினரென்க.

அகத்தியத்துள் இயற்றமிழ் இசைத்தமிழ் நாடகத்தமிழென்னு முத்தமி ழிலக்கணங்களும் விரவிக் கூறப்பட்டன. இயற்றமிழெனி னுஞ் சத்தநூலெனினு மொக்கும். இசைத்தமிழெனினுங் கீத நூலெனினு மொக்கும். நாடகத்தமிழெனினுங் கூத்துநூலெனினு மொக்கும். இயற்றமிழுள், எழுத்தாமாறும், அவற்றாற் சொல்லாய்ப் பொருளுணர்த்துமாறும், அப்பொருள் அகம் புறமென்னும் பதி னாற்றிணைப் பகுதியவாமாறும், அச்சொற்பொருள்களாற் செய்யுள் யாக்குமாறும், அவை அணியுறுமாறுங் கூறப்படும். இசைத் தமிழுள், மாபூத முதலியவற்றாற் புற்கலமாய் இசைக்கு ஆதாரமா மாறும், அவ்வாதாரந் தொடங்கி எழுஞ் சூக்குமநாதஞ் ச ரி க ம ப த நி யென்னும் எழுத்திசை ஏழாய்ப் பிறக்குமாறும், அவ்வெழுத் திசைகளை மாத்திரைப்படுத்துத் தொழில் செய்தலாற் சட்சம், இட பம், காந்தாரம், மத்திமம், பஞ்சமம், தைவதம், நிடாதமென்னும் ஏழிசைகள் பிறக்குமாறும், இவற்றுள்ளே பண் பிறக்குமாறும், அப் பண்கள் நூற்றுமூன்று பேதமாமாறும், அவற்றினை இன்பம்பட மிடற் றுக்கருவியானே நரப்புக்கருவி முதலிய பற்றிப் பாடுமாறும், நரப்புக் கருவி முதலியன செய்யுமாறும், பிறவுங் கூறப்படும். நாடகத்தமிழுள், கூத்து விகற்பமும், அவினய விகற்பமும், தோரியமகளிர் முதலிய கூத்தியர் இலக்கணமும், தலைக்கோலியல்பும், ஆடலாசிரியர் இலக்கண மும், குழலோன் யாழோன் இசையோன் கவிஞனென்பார் இலக்கண மும், ஆடரங்கிலக்கணமும், ஆட்டிலக்கணமும், பிறவுங் கூறப்படும். இன்னுமிக்கூத்துநூற் பொருள்தான், சாந்திக் கூத்து விநோதக்கூத்து என்று இருதிறத்தாற் பலவகைப்பட்டு, அறுவகை நிலையும், ஐவகைப் பதமும், பதினாறங்கக் கிரியையும், நான்கு வருத்தனையும், முப்பான் நிருத்தக்கையு முடைத்தாய்ப் பொருள், யோனி, விருத்தி, சந்தி, சுவை, சாதி, குறிப்பு, சத்துவம், அவினயம், சொல், சொல்வகை, வண்ணம், வரி, சேதமென்னும் பதினான்கு விலக்குறுப்போடும் புணர் வுற்று நடப்பதாம்.

இனி ஈண்டுக் கூறிய இலக்கண மரபிற்கு மாறுகச் சிற்சிலர் ஆண்டாண்டு உரைத்தார். அவை தமிழ் வான்முறை அறியாப் போலியாதல் தெரிக்கு முகத்தானே மேலது வலியுறுத்துதும். வீரசோழியப் பதிப்புரைகாரர், "சிவஞான முனிவரர், அகத்தியரால் தமிழ் பூமியில் உற்பத்தியாயினதெனக் கொண்டு, அகத்தியம் 'அச்செந்தமிழ் நிலத்து மொழியோடு முற்பட்டுத் தோன்று நூல்' எனவும், 'செந்தமிழ் நிலத்து மொழி தோன்றுங்காலத் துடன்தோன்றிய நூல்' எனவும் மயங்குவாராயினர்." "முந்து நூல்" "முந்தை நூல்" என்பன முதனூற்குப் பெயர்களாகவும், இளம்பூரணரும் நச்சினர்க்கினியரும் அவ்வாறே பொருள் கூறி 'நிலத்தொடு' என்பதற்குச் செந்தமிழ்நிலத்து வழக்கொடு எனப் பொருளுரைத்திருப்பது கண்டாராகவும், 'நிலத்தொடு முந்துநூல் கண்டு' என்பதற்கு எண்ணுப்பொருளில் நிலத்தையும் அதாவது நிலத்தின்கணுள்ள இயற்றமிழ் வழக்கையும் முதனூலையுங் கண்டு எனச் செம்பாகமாகப் பொருள் வெட்டவெளிபோலக் கிடப்பதாகவும், இவர் உடனிகழ்ச்சிப் பொருள் கொடுத்து, முந்து என்பதை வினைத்தொகையாக்கி, அறுகம்புல்லிற் றடக்கிய யானைபோல, இவ்வாறு இடர்ப்பட்டது காலகதியோ; அன்றேல், பிற ஆசிரியர் மதங்களை மறுத்தலும், ஆங்காங்குத் தமது நூதன மதத்தை நாட்டுதலுந் தமக்கு என்றும் இயல்பாயினமை பற்றியோ? அறியேம்" என்று சிறிதும் உணர்வின்றிப் போலியுரை பலவாறு பிதற்றினர். அவர் அங்ஙனம் பிதற்றுதற்குக் காரணந் தெய்வப் புலவராகிய சிவஞான யோகிகள் பொய்யாவுரை நுட்பம் அறிதாற்கேற்கும் மதிநுட்பம் வாய்ப்பப் பொருந்தாமையே யாம். சிவஞானயோகிகள் கருத்து அதுவன்றென்பதூஉம், அவர் அம்முனிவர் உரைநுட்பம் அறிதாற் கேற்கும் மதிநுட்பம் வாய்ப்பப் பொருந்தாக் குறையினல் அங்ஙனமெல்லாம் பிதற்றின ரென்பதூஉம் தெரிப்பாம்.

"இருமொழிக்குங் கண்ணுதலார் முதற்குரவ ரியல்வாய்ப்ப - விருமொழியும் வழிப்படுத்தார் முனிவேந்தர்" எனக் காஞ்சிப்புராணத்துட் கூறு முறையினல் வடமொழி தென்மொழி இரண்டும் ஆதிக்கண்ணே பரமாசாரியனுகிய கண்ணுதற்பிரானல் தோற்றமுற்று நிலைபெறுந் தொன்மொழிகளென்பதூஉம், பாணினி முனிவரும் அகத்திய முனிவரும் பிற்காலத்து அருந்தவமிருந்து, அவ்விறைவன் உபதேச

வருள்பெற்று, அவ்விருமொழிக்கு முறையே பாணினீயம் அகத்திய மென்னும் இலக்கண நூல்கள் செய்தருளிய ஆசிரியர்க ளென்பதூஉம், மாதவச் சிவஞான யோகிகளுக்குக் கருத்தாதல் தெள்ளிதிற் புலப்படும். இனிச் சிவபிரான் 'தென்மலைக்கட் போய் உறைக' என்று தந் தருளிய ஆணை தலைக்கொண்டு அகத்தியமுனிவர் ஆண்டுப் போதரற் கொருப்பட்டனராயபின், "எம்பெருமானே, அடியேன் சென்றுறைய நிற்குந் தேயந் தமிழ்நாடாம்; ஆண்டுள்ளார் தமிழ் நன்காராய்ந்து வல்லராய் வாழ்வர்; அவரெல்லாந் தமிழ் இயல்புபற்றி நிகழ்த்தும் ஆசங்கைகள் போக்கி அவர்க்குத் துணிபு ஒருப்படுத்தல் வேண்டி னேன்; தமிழ் இலக்கணஞ் செவியறிவுறுத்தியருளுவாய்" என்று வரமிரந்திட, இறைவன் அவர்க்குத் தமிழிலக்கணஞ் செவியறி வுறுத்தியருளினமை கூறும் ஆலவாய்மான்மிய உரையும், அகத்தி யனர் தமிழிற்கு இயல்வரம்பு கண்டு நிறுத்திய ஆசிரியரென்னும் இக் காஞ்சி மான்மிய உரையோ டொன்றுபட்டுச் சிவஞானயோகிகள் கருத்துறு பொருளாய் இதனை நிறுத்துமென்க. அஃதேல்,

"வடமொழியைப் பாணினிக்கு வகுத்தருளி யதற்கிணையாத்
தொடர்புடைய தென்மொழியை யுலகமெலாந் தொழுதேத்துங்
குடமுனிக்கு வலியுறுத்தார் கொல்லேற்றுப் பாகரெனிற்
கடல்வரைப்பி னிதன்பெருமை யாவரே கணித்தறிவார்"

என்று அவர் முற்படக் கூறிய செய்யுளோடு இது மாறுபடும் போலு மெனின்,—அறியாது கடாயினாய், அதனோடு இது மாறுபடுமா றில்லை; அச்செய்யுளில் தென்மொழி யென்றது இலக்கணத்தினையே; அன்றி, இலக்கண அமைதியுடைய இலக்கியமென்னும் பாடையை அன்று: அது "வடமொழியைப் பாணினிக்கு வகுத்தருளி யதற்கிணையாத் தொடர்புடைய தென்மொழியை யுலகமெலாந் தொழுதேத்துங் - குட முனிக்கு வலியுறுத்தார்" என்று சிவபிரான் பாணினி முனிவர்க்கு வட மொழி இலக்கணம் வகுத்தருளிய தொடர்புபற்றிக் கூறியதனாற்றானே இனிது புலப்படுமென்க. சிவபிரான் பாணினி முனிவர்க்கு ஆரிய இலக்கிய மென்னும் பாடையை வகுத்தருளினனென்று அதற்குப் பொருள் கூறலாகாதோவெனின்,—வேதாகம முதனூல்கள் ஆரிய பாடை வடிவாய்ச் "சிருட்டியாரம்பந் தொட்டு நிலைபெறு" மென்று யாண்டும், "இருமொழிக்குங் கண்ணுதலார் முதற்குரவர் இயல்வாய்ப்ப-

விருமொழியும் வழிப்படுத்தார் முனிவேந்தர்" என்று ஈண்டும், "சிவபிரான் சிருட்டியாரம்பத்தில் அம்பிகைக்கு ஆரியமுந் தமிழும் ஒருங்கு நல்கி அறிவுறுத்தருளினன்" எனப் பிறண்டும் ஆத்தவுரையாய் மெய் பெற்று வரும் வேதவழக்கொடு முழு மாறுகோளுறுதலின், அங்ஙனம் அதற்குப் பொருள் கூறுதல் ஆகாதென்க.

இன்னும்,

"எவ்வினையு மோப்புதலாற் றிராவிடமென் றியல்பாடை
எவ்வமறப் புதிதாக யான் வகுப்ப நல்கியது
வெவ்வருணத் துள்ளார்க்கு மெளிதாகப் புத்தேளி
ரெவ்வெவர்க்குஞ் சுவையமிழ்தி னினிதாகச் செய்தருளாய்"

"மூன்றுறழ்ந்த பதிற்றெழுத்தான் முழுவதுமா யுனக்கினிதாய்த்
தோன்றிடுமத் தமிழ்ப்பாடைத் துதிகொண்டு மகிழ்ந்தருளி
யான்றவர மெல்லார்க்கு மிவ்வரைப்பி னளித்தருளா
யேன்றெடுத்து மொழிகல்வி யெவற்றினுக்கு மிறையோனே"

"கூம்பியகைத் தலமுடைய குறுமுனிக்குப் பிஞ்ஞகனுர்
தாம்பரிந்து தமிழ்விளக்கு மாசிரியத் தலைமையொடு
மேம்படுதென் றிசைக்கிறைமை நல்கிவேட் டனபிறவு
மாம்பரிசி னளித்தருளி யவ்விலிங்கத் திடைக்கரந்தார்"

என்றும், அதன் முற்படக் கூறிய செய்யுட்களும் இதனை வலியுறுத்தும்; யாங்ஙனமெனின்,—பூர்வானுபவம் உள்ளிட்டு "எவ்வினையு மோப்புதலிற் றிராவிடமென் றியல்பாடை", "மூன்றுறழ்ந்த பதிற்றெழுத்தான் முழுவதுமாய்" என்றும், தொன்று கலந்த எவ்வமற இன்று இலக்கண வரம்பினுற் புதிதுபடுமாறு யான் உரைக்கவருளென்னும் பொருள் உள்ளிட்டு, "எவ்வமறப் புதிதாக யான் வகுப்ப நல்கி" என்றும் ஓதுதலானும், பின் இதன்கண் ஐயநீங்கித் துணிபெய்த எல்லா மொழிகட்கும் எல்லாச் சமயவித்தைகளுக்குஞ் சிவபிரானே முதல்வனென்னும் பொருள் உள்ளிட்டு "என்றெடுத்து மொழிகல்வி யெவற்றினுக்கு மிறையோனே" என்றும், தமிழ்மொழி தன்கட் கலந்த வழுவினீங்கிச் செம்மையுறுமாறு இலக்கண விளக்கஞ் செய்யும் ஆசிரிய முதன்மையே சிவபிரான் அகத்தியனுர்க்கு அன்னுழி வழங்கினனென்னும் பொருள் உள்ளிட்டுக்

"கும்பியகைத் தலம்டைய குறுமுனிக்குப் பிஞ்ஞகனார்
தாம்பரிந்து தமிழ்விளக்கு மாசிரியத் தலைமையொடு
மேம்படுதென் றிசைக்கிறைமை நல்கி"

என்றும், ஓதுதலானு மென்க.

அற்றாக; அருகந்தருட்பட்ட புத்தமித்திர னென்பான், வீர சோழியப் பாயிரத்தில்,

"ஆயுங் குணத்தவ லோகிதன் பக்க லகத்தியன்கேட்
டேயும் புவனிக் கியம்பிய தண்டமி ழீங்குரைக்க"

என்று கூறி ஈண்டுரைத்த வரலாற்றினொடு மாறுகோளுற்ற தென்னெனின்,—வேதவழக்கொடு மாறுபட வுரைத்தலே தேறுபொருளாகக் கொள்வர் புறப்புறச்சமணர். அவர் பொய்யுரைபற்றி ஈண்டு வரக்கடவதோ ரிழுக்கின்று; ஆதலின், அதுவோர் தடையென்று கொண்டு பரிகரித்தல் வேண்டாமென்க.

ஈண்டுக் கூறியவாற்றால், தென்மொழி ஆதிக்கண் சிவபிரானால் அருளிச்செய்யப்பட்டு நடைபெறுந் தொன்மொழியென்பதூஉம், அகத்தியனார் அருந்தவமிருந்து சிவபிரான் உபதேசித்தருளியவாறு கடைப்பிடித்து அதற்கு இலக்கணந் தெளிவுற வகுத்தவாசிரிய ரென்பதூஉம், சிவஞானயோகிகளுக்குக் கருத்தாமாறு வச்சிரலேபமாக நாட்டப்பட்டது. இதனானே, "சிவஞானமுனிவரர், அகத்தியாற் றமிழ் பூமியிலே உற்பத்தியாயினதெனக் கொண்டார்" என்று வீரசோழியப் பதிப்புரைகாரர் கூறியது அறிவு புறம்போய பிதற்றுரையேயாதல் சிறுமகார்க்கும் இனிது விளங்குமென்க.

இனிச் "சிவஞானயோகிகள், அகத்தியஞ் 'செந்தமிழ் நிலத்து மொழியோடு முற்பட்டுத் தோன்றுநூல்' எனவுஞ் 'செந்தமிழ் நிலத்துமொழி தோன்றுங்காலத்து உடன் தோன்றிய நூல்' எனவு மயங்குவராயினர்" என்று, அம்மயக்கவறிவுடையார் அஞ்சாதுரைத்தவை வெறும் பிதற்றுதல் தெரித்தும்.

மேற் கூறியவாற்றானே தமிழ்மொழி அகத்தியனார்க்கு முற்பட்டுத் தோன்றி நடைபெறுந் தொன்மொழியென்பது சிவஞானயோகிகளுக் குடம்பாடாதல் இனிது துணிய நிற்றலின், தோலா நாவினையுடைய மேலோராகிய அம்முனிவர், தொல்காப்பியப் பாயிரவிருத்தியில், "செந்தமிழ் நிலத்து மொழியோடு முற்பட்டுத் தோன்று

நூலினை நோக்கி'', "செந்தமிழ் நிலத்து மொழி தோன்றுங்காலத் துடன்றோன்றிய நூல்; அகத்திய மொன்றே'' என்னும் வாக்கியத் தொடர்களை, அகத்தியனுரால் தமிழ் முதற்கட் பூமியில் உற்பத்தியா யின தென்னுங் கருத்துட் கொண்டு, நிறுத்தினுரென்பது சிறிதும் ஏலாது. ஆகலின், அவ்வாக்கியத் தொடர்களுக்கு அது பொரு ளன்று; மெய்ப்பொருள் வேறுண்டென்றே தேறுக. இனி அவர் சிறி தும் விசாரமின்றி, அவ்வாக்கியத்தொடர்களுக்கு, அகத்தியனுரால் தமிழ் பூமியில் உற்பத்தியாயினதென்பதே முனிவர் குறித்த பொரு ளென்று விபரீதம்பட விரையக்கொண்டு, அப்பெரியார்க்கு மயக்கமேற் றிப் பழிப்பட்டது அறிவன் றென்க.

அவர், அப்பெரியார்க்கு அறியாமை யேற்றிப் பழிப்படுதலைப் பயனுக வேண்டினுரல்லர். செந்தமிழ் இலக்கண முதனூலாகிய அகத் தியம், சிவஞானமுனிவர் கூறியவாறு செந்தமிழ் நிலத்து மொழியோடு முற்பட்டுத் தோன்றுவதாயின், அதனேடு சார்த்தப்பட்ட தமிழ் மொழி தொன்று தொடங்கி நிலவரைப்பில் நிலைபெறுவ தொன்றன்று; அவ்வகத்தியந் தோன்றும்பொழுதே தோன்றிப் பயில்வுற்று வருவ தொன்றும் என்று பொருள்படும். இனி அது பொருளாயின், தென் மொழி அகத்தியனுர்க்கு முற்பட்டுத் தொன்று தொடங்கி நிலவரைப் பில் நின்று நடைபெறும் மொழியென்று மேதாவியர் போற்றும் வேத வழக்கு யாதாகுங்கொல்! இனி வேதவழக்கு எக்காலத்தும் ஏதமுறுது மெய்யாகி நிலைபெற்று வருவ தொன்றுகலின், அப்பெற்றித்தாம் வேத வழக்கொடு மாறுபடுதலின், அவ்வாக்கியத்தொடர்கள் ஏதமுடையன வாம். ஆதலின், அவை கொள்ளற்பாலவாந் தெளிவுரையாகா; தள் ளற்பாலவாம் வழுவுரையேயாம் என்று அவர் புந்தியிற்கொண்டு அங் ஙன முரைத்தாரெனின்,—அவர் அச்செய்தி விழுமிய கல்வி நுழை புல முடையார் ஏ! ஏ!! இஃதோ இவர் அறிவின் பெற்றியென் றெள்ளிக் கழிபெருநகையாடற்கே யேதுவாம்!!! யாதினுலெனின்,—ஓதநீர்வேலி யுலகின்கண்ணே வேதவழக்கொடு மாறுகொள்வார் மதங்களை மறுத்து இருவகைத் தமிழ்வழக்கையும் நிறுத்தி யோம்புதல் சிவஞானயோகிகள் ஒழுகலாறும். அப்பெற்றியுடைய முனிவர் வேதவழக்கொடு மாறுபடக் கூறமாட்டார். அதனுல் அவ்வாக்கியத் தொடர்களுக்கு அது பொரு ளன்று; மெய்ப்பொருள் வேறுளதாதல் வேண்டும்; அதுதன்னை அறி

வுடையார்பால் உசாவித் தெளிகுவன் என்றுட்கொண்டு மதிநுட்ப நூலோடுடையராகப் பெற்றுச் சிறக்கும் நல்லாசிரியரை யடுத்து உசாவி, அவற்றினுண்மை காண்டலே அவர் விரும்பாது, சடுதியில் வேதவழக்கொடு மாறுபட முனிவர் அங்ஙனங் கூறினரென்று திரியக்கொண்டு, அஞ்சாது அவர்க்கறியாமை யேற்றி, வழி வழி நிற்கும் பழிபெரிதுமாக்கிப்

"பொய்படு மொன்றோ புனைபூணுங் கையறியாப்
பேதை வினைமேற் கொளின்"

என்னும் பொய்யாமொழிப் பொருட்குத் தாம் பெரிதும் இலக்கிய மாகலி னென்க.

அவர் பெற்றி அங்ஙனங் கிடக்க. அவ்வாக்கியத் தொடர்களின் மெய்ப்பொருள்தான் யாது? அறியல் வேண்டினேனெனின்,—கூறுதும்:

"வடவேங்கடந் தென்குமரி
ஆயிடைத்
தமிழ்கூறு நல்லுலகத்து
வழக்குஞ் செய்யுளும் ஆயிரு முதலின்
எழுத்துஞ் சொல்லும் பொருளும் நாடிச்
செந்தமிழ் இயற்கை சிவணிய நிலத்தொடு
முந்துநூல் கண்டு முறைப்பட எண்ணிப்
புலந்தொகுத் தோன்......"

என்றெழுந்த தொல்காப்பியப் பாயிரச் சூத்திரயாப்பிற்கு ஆசிரியர் சிவஞான யோகிகள் கண்ட மெய்ப்பொருள் : "வடக்கண் வேங்கடமுந் தெற்கட் குமரியும் எல்லையாகவுடைய அவ்விடமாகிய தமிழ்மொழியைக் கூறும் நல்ல வுலகத்தின்கண் வழங்கும், வழக்கினையுஞ் செய்யுளினையும் ஆராய்ந்த பெரிய காரணத்தானே, அவற்றின்கண்ணவாகிய எழுத்திலக்கணமுஞ் சொல்லிலக்கணமும் பொருளிலக்கணமும் ஆராய்ந்து செந்தமிழின் உண்மையைப் பொருந்தி யுணரும் பொருட்டு, அச்செந்தமிழ் நிலத்து மொழியோடு முற்பட்டுத் தோன்றும் நூலினை நோக்கி, அந்நூலிற் கிடந்த இலக்கணம் பிற்காலத்தார் உணரு முறைமைப்படக்கருதி நூலைத் தொகுத்துச் செய்தான்" என்பதன்றே! அப்பாயிரச் சூத்திரயாப்பிற்கு மாபாடியகாரர் இங்ஙனம் விரித்த பொருள் இளம்பூரணர் நச்சினார்க்கினியர் உரைத்த பொருள்கள்போல இடர்ப்பாடும் மலைவு மின்றி நெறிபட்டுத் தெளிவு பெரிதுடைத்தாம்.

இனி ஆசிரியர் பனம்பாரனர், "வடவேங்கடந் தென்குமரி - யாயிடைத் - தமிழ்கூறு நல்லுலகத்து" என்று முன்னர்ப் பொதுவெல்லே கூறித் தமிழ்நாட்டினே வரைசெய்துணர்த்திச், "செந்தமிழியற்கை சிவணிய நிலத்தொடு" என்று பின்னர் விதந்தோதுதலின், ஆண்டுரைத்த நிலஞ் செந்தமிழ் நிலமேயாதல் இனிது பெறப்படும். இனி வடக்கண் வேங்கடமுந் தெற்கட் குமரியுமேல் கீழ்ப்பால்களிற் கடலும் பேரெல்லேயாகவுடைய தமிழ்நாட்டுள் வைத்து ஒரு நிலத்தினே இது செந்தமிழ் நிலமென ஆசிரியர் வழங்குதற்கு ஏது, அந்நிலந் தன்கண் தமிழ் செம்மையுற்று நடைபெறப்படுதலல்லது பிறிதன்ரும். இனித் தமிழ் செந்தமிழென ஆசிரியரால் அங்ஙனம் பிறிதினியைபு நீக்கி விசேடிக்கப்படுதற்குக் காரணந்தான் யாது என்று ஒருங்கி ஆராயலுறின், அக்காரணம் அது வழுவினீங்கி இயல்வரம்புற்று ஒழுகும் நீர்மையுடைத்தாதலே என்று தெளிவாம். இனித் தமிழ்தான் வழுவினீங்கி இயல்வரம்புற்றுச் செந்தமிழ் என அவ்வாறு சிறப்பிக்கப்பட்டு நடைபெறுதலுடைத்தாயதுதான் யாதுபற்றியென்ருராயலுறின், அருந்தவக்கொள்கை அகத்தியமுனிவர் பெருந்தவமிருந்து சிவபிரான் உபதேசித்தருளியவாறுபற்றி இயற்றிய முத்தமிழிலக்கணமாய அகத்திய முதனூல் பற்றியே யென்று புலனும். ஆதலின், அச்செந்தமிழும், அது தனக்கு வரம்பாகிய அவ்வகத்தியமென்னு மிலக்கண முதனூலும், வடவேங்கடந் தென்குமரி எல்லேயாகவுடைய அத்தமிழ் நாட்டகத்துட்படும் ஒருநிலத்து ஒருங்கு நிலவியனவேயாம். மாபாடியகாரர் இக்கருத்துப்பற்றியே "அகத்தியஞ் செந்தமிழ் நிலத்து மொழியோடு முற்பட்டுத் தோன்றுநூல்" என்றும், "செந்தமிழ் நிலத்து மொழி தோன்றுங்காலத் துடன்ருேன்றிய நூல்" என்றும், பாயிரவிருத்தியில் அங்ஙனம் உரைத்தனர்; ஆகலின், அவ்வாக்கியத்தொடர்களின் மெய்ப்பொருள் அதுவேயாமென்று கடைப்பிடிக்க. இதனனே, அகத்தியனர் முதற்கண் தென்மொழி யிலக்கண முதனூல் வகுத்துச் செந்தமிழ் வழிப்படுத்திய பேராசிரியரென்னும் பொருளே போதருமன்றி "அகத்தியாற் றமிழ் பூமியிலுற்பத்தியாயினது", "அகத்தியர்க்குமுன் தமிழ் நிலவரைப்பிலிருந்திலது" என்னும் பொருள்கள் போதருமாறில்லே. இல்லேயாகவே, "தமிழ்மொழி அகத்திய முனிவர்க்கு முன் சிருட்டி முதலிற் சிவபிரானல் தோற்றமுற்று நிலேபெற்று

நடக்குந் தொன்மொழி" யென்று கூறும் வேதவழக்கோடு அவ்வாக்கியத் தொடர்கள் ஒத்தொழுகக் காண்கின்ருமன்றி மாறுபட்டு ஏதமுறக் காண்கின்றிலம். அவர் இங்ஙனம் நுணுகிப் புடைபட வொற்றி ஆராய்ந்து, இம்மெய்ப்பொருள் காணமாட்டாது அப்பேரறிவாளர்ப் பழித்து உய்தியில் குற்றமுற்றன ரென்க. இவ்வாற்ருற் "புன்ருெழிற் கயவர் தமதறி யாமை புலமையாய்ப் பரிணமித் ததுவே" என்னு மூதுரையை அவர் புதுக்குமா றுணர்க.

அற்றே லஃதங்ஙனமாக, வழக்குஞ் செய்யுளுமாகிய செந்தமிழிலக்கியம் முன்னுள்ளதாம். அகத்தியம் அவ்விலக்கியப் பண்பாய இலக்கணநூலாய்ப் பிற்ருேன்றிற்ரும். ஆகலின், அகத்தியம் ஒரு நிலத்திடைச் செந்தமிழ் மொழியோடு முற்பட் டொருங்கு தோன்று மென்றல் அமையாதாலோவெனின்,—அறியாது வினுயினுய். செந்தமிழ் முன்னுள்ளதே யென்பது எமக்கும் உடம்பாடாயதே. அது பற்றி ஈண்டு ஆசங்கை யெழுமாறில்லை. அத்தமிழின் செம்மை அம் முற்பொழுதில் வழுவிரவி இழுக்கமுற்றது. அகத்தியமென்னும் இலக்கணநூல் அதனை வழுவினீக்கிச் செம்மையுறுவித்து நெறிப்படுத்தி உடன்ருேன்றிற்று. அதனுல் அது "செந்தமிழ்நிலத்து மொழியோடு முற்பட்டுத் தோன்று நூல்" என்று அங்ஙனம் ஓதப்பட்டது. இங்ஙனம் நெறியுறுதலின், அஃது அமைவுடைத்தேயாம்; மற்று அமையாமை யாண்டைய தென்க. இனி யாமெடுத் தோதிய இப்பொருளே அவ்வாக்கியத் தொடர்களுக்குரிய மெய்ப்பொருளா மென்பது,

> "காசியி னின்றும் போந்து கம்பர்தா மருளப் பெற்று
> மாசிலாக் கச்சிமூதூர் மன்னிவீற் றிருந்து பூமே
> லாசிலாத் தமிழ்ப ரப்பி யருந்தமிழ்க் குரவு பூண்ட
> தேசினுன் மலைய வெற்பிற் குறுமுனி திருத்தாள் போற்றி"

என அம்முனிவர் திருவரிக்காகி விளங்குங் காஞ்சிப்புராணச்செய்யுள் கரிபோக்கு மாற்ருனும் இனிது தெளிக. 'ஆசிலாத்தமிழ் - செந்தமிழென்க. எனவே, கம்பர்தா மருளப் பெற்று அகத்தியனுராற் பரப்பப் படுதற்குமுன் அது ஆசுவிரவி யுளதாயதென்பதூஉம், அஃது குற்ற நீங்கிச் செம்மையுற்றது அகத்தியம் பற்றியே யென்பதூஉம், இதன் கருத்தாதல் காண்க. இனி "அகத்தியன் பயந்த செஞ்சொல்", "அகத்தியன் தமிழ்" என்றற்ருெடக்கத்து ஆன்ருேர் வழக்குக்களும் இக்

கருத்துப்பற்றி யெழுந்தனவே யாம். அவர் அக்கருத்தறியாது "அவ் வழக்குக்கள் உபசாரமாம்" என்று வீரசோழியப் பதிப்புரையி லுரைத்துப் புரையுற்ருர். அதுமட்டோ, "முந்துநூல்" என்பது "முத னூற்பெய" ரென்றும், "உடனிகழ்ச்சிப் பொருள்கொண்டு அதனை வினைத்தொகையாக்கியது இடர்ப்பாடாம்" என்றுஞ் சொற்ருர். உட னிகழ்ச்சிப்பொருள் ஆண்டுச் சிறப்புடைத்தாதல் மேற் சொல்லிய வாறு பற்றி இனிது துணியப்படும். இனித் தமக்குடம்பாடாகிய முதனூலென்னும் பொருள்தான் அத்தொகை வினைத்தொகையாய் நின்று பயக்கும் பொருளேயென்பது தெரியமாட்டாமையின், "முந்து நூல்" என்பதை "வினைத்தொகையாக்குதல் இடர்ப்பாடா" மென்று அவர் பிதற்றினர். இனி முந்து என்பது முதனிலை மாத்திரையாய் நின்ற தொழிற்பெயரென்றும், அது ஆகுபெயரால் இறந்த காலத் தினை யுணர்த்துமென்றுங் கொண்டு, முற்காலத்தி லுளதாகிய நூலென்று ஏழாம்வேற்றுமைத் தொகைப்பொருள் அதற்கு அவர் கொள்வரெனின், அவர் இடர்ப்பட்டு அங்ஙனங்கொள்ளும் அவ்வேற் றுமைத் தொகைப்பொருளும், இடர்ப்பாடின்றி முனிவர் கூறும் வினைத்தொகைப்பொருளும், முதனூலென்றே முடிதலின், அவர் அக் கூற்று, சுற்றிப்போயுஞ் சுங்கத் துறைசேர்ந்த நியாயத்துக்கு இலக் கியமாய்ப் பழிக்கப்படுமென் றொழிக.

இன்னும், சிவஞானயோகிகளைப் "பிற ஆசிரியர் மதங்களை மறுத்து நூதனமதநாட்டுங் குணமுடையர்" என்று அவர் அஞ்சாது பழித்தனர். அதனல், தீயூழ் வசத்தாற் றம்மத மறுத்துப் பரமதந் தழுவிப் பழிபூண்ட தம் வரலாறு வாய்சோர்ந்து புலம்பி, "யானு மறியே னவளும் பொய்சொல்லாள்" என்பதை விளக்கி யிட்டனரென் றுணர்க.

இனிப் பிரயோக விவேக நூலார், அகத்தியத்திற்கு வடமொழிப் பாணினீய வியாகரண முதனூலாமென்றது பொருந்தாமை தெரிப்பாம்.

"எழியன் முறைய தெதிர்முக வேற்றுமை
வேறென விளம்பான் பெயரது விகாரமென்
றோதிய புலவனு முளனொரு வகையா,
னிந்திர னெட்டாம் வேற்றுமை யென்றனன்"

என அகத்தியத்தின்கண் வருதலின், "அகத்தியனார் தந்நூற்கு முதலாகக்கொண்டநூல் பாணினீயம்" என்று பிரயோகவிவேக நூலார் சொற்றார். அச்சூத்திரத்திற்கு மெய்ப்பொரு ளுரைக்குமுகத்தானே அஃதிசையாமை தேற்றுவாம் (இ - ள்.) பெயர், ஐ, ஒடு, கு, இன், அது, கண் என்னும் ஏழுவேற்றுமையும் இயனெறிப்பட்டனவா மென்றுகொண்டு, எதிர்முகமென்னும் விளிவேற்றுமை எட்டாவதென நின்று வேறொரு வேற்றுமையாமென் றுடம்படானாய் அஃது பெயர் வேற்றுமை யென்னு முதலாவதன் விகாரமென்று உரைத்த பாணினி யென்னும் அறிஞனும் உளனும். அது நிற்க; இந்திரனென்பான் ஐந்திரத்துள் விளியும் ஒரு வேற்றுமையாதலான் அதனைப் பெயருள் அடக்காது எட்டாம் வேற்றுமையென்று நேர்ந்தான்; மற் றிதுதனையே நாம் இந்நூலுள் நந்துணிபாகக்கொண்டு கூறுகின்றாம் என்றவாறு.

பிரிநிலைக்குந் தேற்றத்திற்கும் பொதுவாகும் ஏழே என்னும் ஏகாரமும், முற்றும்மையும், விகாரத்தாற் றொக்கன. ஏழியன் முறைய தென்பது ஒருமைப்பன்மை மயக்கம். விளம்பான்: எச்சமுற்று. விளியும் என்பதும் அதனை யென்பதும் அவாய்நிலையான் வந்தன. ஆதல் சொல்லெச்சம். என்றுகொண்டென்பதூஉம், அதுநிற்க வென்பதூஉம், பெயருள் அடக்காது என்பதூஉம், இசையெச்சம். மற் றிதுதனையே நாம் இந்நூலுள் நந்துணிபாகக்கொண்டு கூறுகின்றாமென்பது குறிப்பெச்சம். எதிர்முகவேற்றுமை யெனினும் விளிவேற்றுமை யெனினும் ஒக்கும். ஒரு வகையாதல்—அது பெயர்வேற்றுமையு ளடங்காது விளிப்பொருட்டாய் வேறுபட நிற்றல். வகை: ஈண்டு வேற்றுமையென்னுந் துணையாய் நின்றது.

"பாணினீய முதலிய வியாகரணங்களுமுளவாக ஐந்திரநிறைந்த தொல்காப்பியனென்றார், 'பெயரது விகாரமென் றோதிய புலவனுமுளன்' எனப் பிறர்மதங்கூறி, 'இந்திரனெட்டாம் வேற்றுமை யென்றனன்' என இந்திர னோதியதனைத் தந்துணிபாகக் கொண்ட அகத்தியனார்க்கு ஐந்திரமே உடம்பாடென்பது பெறப்படுதலின், அதுவே தொல்காப்பியனார்க்கும் உடம்பாடென்பது பற்றிப் போலுமென்க" என்று பாயிர விருத்தியுள் ஓதுதலின், ஆசிரியர் சிவஞானயோகிகள் அச்சூத்திரத்திற்குக் கொண்ட பொருளும் இதுவேயாதலறிக. இனிச்

சேனாவரையர் வேற்றுமை யோத்துள் "அதனினியறல்" என்னுஞ் சூத்திரவுரையில் இச்சூத்திரத்தை எடுத்துரைத்து "ஐந்திரநூலார் விளிவேற்றுமையை எட்டாம் வேற்றுமையாக நேர்ந்தார்" என்றும், "ஆசிரியர் அவர் மதம்பற்றிக் கூறினர்" என்றும், "இக்கருத்து விளக்கியவன்றே பாயிரத்துள் 'ஐந்திர நிறைந்த தொல்காப்பியன்' எனக் கூறிற்று" என்றும் கரிபோக்கினராகலின், அவர்தமக்கும் இதுவே உடம்பாடாயிற் றென்க. இவ்வாற்றான் அச்சூத்திரத்திற்கு இதுவே மெய்ப்பொருளாதல் இனிது பெறப்படுதலின், அகத்தியனார்க்கு அப் பாணினியார் மதம் உடன்பாடன்றென்பது தெள்ளிதிற் பெறப்பட்டது. படவே, பிரயோகவிவேகநூலார் அகத்தியனார் பிறர் மதமாகக் கொண்ட அது தன்னை உடன்பட்டனரென்று திரியக்கொண்டு அவர்க்கு முதனூல் பாணினீயமென்று சாதித்தது, வெறும்போலியுரை யாய்ப் பொருந்தாமை காண்க. அற்றாக; அகத்தியனார் ஐந்திர நூன் முடிபைத் தந்துணிபாகக்கோடலின், அகத்தியத்திற்கு ஐந்திரமுதனூ லென்றல் தழுவப்படும் போலுமெனின்,—அற்றன்று; அவ்வைந்திர முடிபு தந்துணிபென்றன் மாத்திரையானே அகத்தியத்திற்கு ஐந்திரம் முதனூலாதல் செல்லுமாறில்லை. இது 'மறுதலை சிதைத்துத் தன் துணிபுரைத்தல்' என்னும் உத்திநெறி யாகலினென்க. அன்றியும், அதுவேபற்றி அதற்கு ஐந்திரமுதனூலாமெனின், அகத்தியனார், "வேற்றுமைப் பொருள்கோண் முறையில் அப்பாணினியார் மதம் உடம்பாடன்று, அவ்வைந்திர மதமே நந்துணிபாம்' என்று கூறியாங்கு, மற்றை இயன்முறைக்கண்ணும் ஏனை இசை நாடக முறைகளின்கண்ணும் அகத்தியத்துள் அங்ஙனம் மறுதலை சிதைத்துத் தந்துணிபு கூறற்பாலராவரன்றே; இனி அவைபற்றி அவ்வந்நூல்களும் அகத்தியத்திற்கு முதல் நூலாவான் செல்லும். செல்லவே, முதனூல்பல்கி வரையறை பெறாதாமென்க. அல்லதூஉம், தமிழ்மொழி ஆரியமொழி போலத் தெய்வமொழியாய் நிலவன்ரப்பில் ஆதிக்கண் தோன்றி நடைபெறுந் தொன்மொழி யென்பது மேலே நிறுத்திப் போந்தா மாதலின், அதற்குரிய விலக்கணம் ஒவ்வோர் துறையில் வடமொழியோடொத்து ஒழுகினுந் தன்மொழிக்கட் படுஞ் செய்கைகளும், குறியீடுகளும், வினைக் குறிப்பு, வினைத்தொகை முதலிய சில சொல்விலக்கணங்களும், உயர்திணை, அஃறிணை முதலிய சொற்பாகுபாடுகளும், அகம்,

புறம் என்னும் பொருட்பாகு பாடுகளும், குறிஞ்சி, வெட்சி முதலிய திணைப்பாகுபாடுகளும், அவற்றின் பகுதிகளும், வெண்பா முதலிய செய்யுளிலக்கணமும் இன்னோரன்ன பிறவும், வேறு தன்னியல்களாகக் கொண்டே ஒழுகும் நீர்மைத்தாகலானும், இவையெல்லாம் பாணினீயத்துள்ளும் ஐந்திரத்துள்ளும் பிற வடநூலுள்ளும் பெறப்படா வாகலானும், அது பொருந்தாமை ஒருதலையாகவுணர்க. இங்ஙனமாகலின், தாவருஞ் சித்தியினு மேவரு ஞானத்தினுந் தேவரினு முனிவர் யாவரினு மேம்பட்டு உலகமெலாந் தொழுதேத்த நிற்குந் தெய்வப் பெற்றியாளராகிய அகத்தியனார், இறையனார் கருணை கூர்ந்தருளியவாறு பற்றியே தமிழிலக்கண முதனூல் தனியியற்றி நடாத்தினரென்று தெற்றென வுணர்க. வேதவழக்கும் இதுவேயா மென்க. திராவிடமாபாடியகாரர் கருத்தும் இதுவேயாதல் பாயிரவிருத்தியுட் காண்க. அகத்தியனார் ஞான சித்திகளில் தேவரினும் முனிவர் யாவரினு மேம்பட்டவாறு, நிலைபிறழ் மாநிலஞ் சமமுறக் காண்டல், குடங்கையில் நெடுங்கடனீர் முழுதும் அடக்கிக்கோடன் முதலிய பிறர் செயற்கரிய அவர் தெய்வச் செய்திகள்பற்றி இனிதறிக. இஃது உணர்த்துதற்கென்றே பாயிரவிருத்தியுள் "முனிவர் வந்தார். அகத்தியனும் வந்தான் என்புழிப்போல" என்றும், காஞ்சிப்புராணத்துள் "உலகமெலாந் தொழுதேத்துங் குடமுனி" யென்றும் சிவஞான யோகிகள் அவர் தலைமை விதந்தெடுத்து அவ்வாறு ஓதுவாராயினதூஉ மென்க. இனிப் பிரயோகவிவேகநூலரர் அக்கூற்று மேற்கூறியவாறு உத்தியோடு மாறுபடுதன்மேலும் வேதவழக்கொடும் ஆன்றோர் வழக்கொடும் மாறுபடுதலு முடைத்தென் றறிக.

இன்னும், அகத்தியந் தமிழ் வழக்கிற்கு முதனூலாய் எழுந்த தொன்றாகலின், அது, முத்தமிழ் வழக்கிலக்கணம் அம்முறைபற்றியே எடுத்தோதுவதாம். அன்றி வடமொழிக்கணுள்ள அச்சந்தநூல், கீதநூல், நாடகநூற் பொருள்களை மொழிபெயர்த் தெடுத்துக் கூறுவ தன்றென்றுணர்க. இனி அகத்தியத்துட் கூறும் முத்தமிழ் மரபுகள் சில வடமொழிக்கும் பிற பாடைகட்கும் பொதுவாய் நேர்வன உளவாயினும், அவையுந் தமிழ் வழக்கு நோக்கியே அதன்கண் இலக்கணஞ் செய்யப்பட்டனவாகு மென்றறிக. இதனானே முத்தமிழ் வழக்கு முதனூலாகிய அகத்தியத்துண் மொழிபெயர்த்துக் கூறிய இலக்க

ணம் யாது மின்றென் றுணர்க. இனி "எதிர்முக வேற்றுமை வேறென விளம்பான் பெயரது விகாரமென் றோதிய புலவனு முளன், இந்திர னெட்டாம் வேற்றுமை யென்றனன்" என்பனவாக அகத்தியனார் அகத்தியத்துள் ஓதியனவும் பிறவும், 'மறுதலை சிதைத்துத் தன் றுணி புரைத்தல்' பிறனுடம்பட்டது தானுடம்படுதல்' 'பிறன்கோட் கூறன்' முதலிய உத்திவகையாகத் தூக்கி யுணரப்படு மென்க. இனி அப்பாணினியார் மத மறுதலையாய்ச் சிதைக்கப்படுவதாயின், அது வட மொழி மெய்ந்நிலை வழக்குநூலன்றாம். பிறவெனின்,—அற்றன்று; ஆண்டு அது மறுதலையாய்ச் சிதைக்கப்படுமென்ற கருத்து, அகத்திய னார் தந்துணிபாகக்கொண்ட வேற்றுமை யெட்டென்னும் அக்கொள் கைக்குமாறாய் அவர் தம்மின் வேண்டப்படுவ தன்றாயது என்பதே யாகலின், அதுகொண்டு அஃது மெய்ந்நிலை வழக்குநூ லன்றென்பது பெறப்படுமாறு இல்லை யென்க.

இனி வீரசோழியப் பதிப்புரைகாரர் "அகத்தியனார் தமிழ்த் தனி யிலக்கணமுத னூன் முறை பொருந்த இயற்றமாட்டா ராயினர்" என்று ஓதியின்றிப் பேசியது பிதற்றுரையாதல் அறிவுறுப்பாம்.

அவர், அகத்தியனார்க்கு அறியாமை யேற்றிய பிதற்றுரை வரு மாறு :—"அகத்தியர் மகாரிஷீசுரர். அன்னோர் அவற்றைக் கற்பித் தல் எளிதன்றேயெனின்,—ஐந்திர பாணினீய வியாகரணங்களை நன் குணர்ந்தும், அவற்றுள்ள அதிகாரமுறை ஒத்துமுறை சூத்திரமுறை களின் சிறப்பினைச் சீரிதிற்கண்டும், யாதொரு கிரமமு முன்பின் சம்பந்த சார்பு மின்றித், தமிழுள் இயல் இசை நாடகஇலக்கணவிதிகளும் இயற் றமிழுள்ளும் எழுத்துச் சொற் பொருள் யாப்பு அணி விதிகளு நெறி முறை பிறழக் கண்டபடி விரவத் தமது இலக்கணநூலில் இயற்றியமை யானே அஃது எத்துணை வல்லராயினும் ஒருவர்க் கரியதென்றுணர்க" என்பதாம். ஈண்டு அகத்தியத்துள் முத்தமிழிலக்கணங்களும் அவற் றின் பகுதிகளும் முறைபிறழ இயற்றப்பட்டன வென்று அவர் அகத் தியம் பெரிதாராய்ந்து உண்மை கண்டு கூறுவார்போல அபினயித்து உரையாடினர். என்னை? முத்தமி ழிலக்கண முதனூலாகிய அகத்தி யங் கடைச்சங்கம் ஒடுங்கிய பிற்றைஞான்றே நிலவரைப்பில் வழங்கற் பாடின்றி இறந்துபட்டதென்பது எல்லார்க்கும் ஒப்ப முடிந்த பட்டாங்

காதலினென்க. பட்டாங்கு - உண்மை. இனி அகத்தியம் அக்காலத்து இறந்துபட்டதென்ப தூண்மையே ; அவர் அதுகண்டு கூறினாரல்லர் ; தொல்காப்பிய உபோற்காதத்துள் "முந்துநூல் கண்டு முறைப்பட எண்ணி" என்றும், "மயங்கா மரபின் எழுத்து முறை காட்டி" என்றும், போந்த வாக்கியக் கூறுகட்கு, இளம்பூரணர், நச்சினார்க்கினியர், சிவஞானமுனிவரர் அகத்தியம் அப்பெற்றித்தாக இயற்றப்பட்டதென்று உரைத்த உரைகள் கொண்டே அங்ஙனங் கூறப்பெற்றாரெனின், அவ்வாக்கியக் கூறுகட்கு அகத்தியம் அப்பெற்றித்தாயதென்பதுபட அவ்வுரையாசிரியர்கள் யாண்டுரைத்தனர் ? இளம்பூரணர் "முந்துநூல் கண்டு முறைப்பட எண்ணி" என்பதற்கு "முதனூல்களிற் சொன்னவற்றினைக்கண்டு அவ்விலக்கணங்கள் முறைப்பட ஆராய்ந்து" என்று உரைத்தனர். நச்சினார்க்கினியர் "முன்னை யிலக்கணங்கள் இயைந்தபடியை முற்றக்கண்டு, அவ்விலக்கணங்களெல்லாஞ் சில்வாழ்நாட் பல்பிணிச் சிற்றறிவினோர்க்கு அறியலாகாமையின் யான் இத்துணை வரையறுத்து உணர்த்துவலென்று அந்நூல்களிற் கிடந்தவாறன்றி அதிகார முறையான் முறைமைப்படச் செய்தலை யெண்ணி" என்று உரைத்தனர். சிவஞானமுனிவர் "முற்பட்டுத் தோன்று நூலினை நோக்கி, அந்நூலிற்கிடந்த இலக்கணம் பிற்காலத்தார் உணரு முறைமைப்படக் கருதி" என்று உரைத்தனர். இனி "மயங்கா மரபின் எழுத்து முறைகாட்டி" என்பதற்கு இளம்பூரணர் "முன்னை நூல்போல எழுத்திலக்கணஞ் சொல்லுட்சென்று மயங்காத முறைமையானே எழுத்திலக்கணத்தினை வேறு தெரிவித்து" என்று உரைத்தனர். நச்சினார்க்கினியர் "அம்மூவகை யிலக்கணமும் மயங்கா முறைமையாற் செய்கின்றமையின் எழுத்திலக்கணத்தினை முன்னர்க் காட்டி" என்று உரைத்தனர். சிவஞானமுனிவர் "இயற்றமிழும் இசைத்தமிழும் நாடகத்தமிழும் முன்னூலுட்போல விரவாத தன்மையானே இயற்றமிழைவேறு பிரித்து முறையானே உலகிற் கறிவித்து" என்று உரைத்தனர். இன்னுஞ் சிவஞானமுனிவர் "முறைமைப்பட வெண்ணிப் புலந்தொகுத்தலாவது, முதனூல் பரந்து கிடத்தலின் இக்காலத்துச் சில்வாழ்நாட் பல்பிணிச் சிற்றறிவினோர்க் கறியலாகாமையின் அவர் அறியுமுறைமைப்பட வெண்ணி அதற்கேற்பத் தொகுத்துச் செய்தல்" என்றும், "அகத்தியத்துள் முத்தமிழும் விரவிக் கூறப்

பட்டன" என்றும், "இயற்றமிழுள்ளும் எழுத்துச் சொற் பொருண் மூன்றனையு முன்னூலுட்போல விரவக் கூறாது முன்னர் எழுத் துணர்த்திப் பின்னர்ச் சொல்லுணர்த்தி அதன் பின்னர்ப் பொரு ளுணர்த்தின னென்பார் 'காட்டி' யென்றொழியாது 'முறைகாட்டி' என்றார்" என்றும், அவற்றின் பொருள் நுட்பம் ஆண்டு இனிது விரித் தனர். அகத்தியனார் பிணிதபு நோன்பும் பெருகுறு வாழ்நாளு முழு துணர் வலியுமுடைய முற்காலத்தார் அறியு முறைமைப்பட முத்தமிழ் இலக்கண முழுதும் விரவிய னெறியினால் அகத்தியத்துட் கூறினா ரென்பதூஉம், தொல்காப்பியனார் தம் ஆசிரியர் அங்ஙனம் அகத்தியத் துட் கூறிய முத்தமிழ் இலக்கணப்பரப்புள் இயற்றமிழ் ஒன்றனையும் வேறு பிரித்துச் சில்வாழ்நாளும் பல்பிணியுஞ் சிற்றறிவுமுடைய பிற் காலத்தார் உணருமுறைமைப்படத் தொகுத்தல் யாப்பான் முறைகாட் டித் தொல்காப்பியத்துள் ஓதினாரென்பதூஉம், இவ்வுரைகளாற் போத ரும் பொருள்களாம். மற்று அகத்தியம் "முத்தமிழ் இலக்கண நெறி முறை பிறழக் கண்டபடிவிரவ உரைக்குங் குற்றமுடைய நூலாம்; தொல்காப்பியம் அவ்வாறன்றி இயற்றமிழ் இலக்கண முறைமைப்பட உரைக்குங் குற்றமி னூலாம்" என்று அவர் குறித்த பொருள் அவற் றாற் போதருமாறில்லையாம். ஆகவே, அவர் அவ்வுபோற்காத வாக்கி யக் கூறுகளின் உரைகள் கொண்டு அங்ஙனங் கூறப்பெற்றா ரென் றல் சழக்கேயாதலன்றி வழக்காதல் இல்லையென்க. உபோற்காதம் - சிறப்புப் பாயிரம்.

இனி "அகத்தியத்துண் முத்தமிழிலக்கணங்கள் விரவிக் கூறப் பட்டன" என்றது கொண்டே அதனுள் அவ்விலக்கணங்கள் முறை யின்றி ஓதப்பட்டமை தானே பெறப்படும் என்று அவர் அங்ஙனங் கொண்டு கூறினாரெனின்,—அறியாது கூறினாய். என்னை? ஆண்டு இலக்கணம் விரவுதலென்றது ஒருபொருட் கிலக்கணங் கூறும்வழி அதன் திறன் புலப்படுதற்கு உபகாரமுடையன பிற ஆண்டு இடைப் பெய்து சொல்லுதல். அது திராவிடமாபாடியகாரர் சூத்திர விருத்தி யுள் இடைச்சொற்கு இலக்கணம் விளங்கத் தெரிக்கலுற்றுழி அதன் இயல்பு உளங்கொளற் பொருட்டுப் பாலைத்திணை யென்னும் நடுவுநிலைத் திணை யிலக்கணமும் அதனோ டியைபுடைய ஏனைப் பொருளிலக்கணங் களும் ஆண்டு இயைபுபற்றி இடையிட்டு எடுத்து விரித்துக் கூறியது

போல்வனவும் பிறவுமாம். ஆசிரியர் தொல்காப்பியனார் இந்நூற் புணர்ப்பினைப் 'பொருள் இடையிடுதல்' என்னுமோர் தந்திரவுத்தி யென்பர். இனி அகத்தியத்துள்ள இயற்றமிழை வேறு பிரித்துத் தொகுத்துணர்த்த வெழுந்த தொல்காப்பியத்துள்ளும் இவ் விரவியற் பிரயோகம் அருகிவந்தன ஆண்டாண்டுச் சிலவுள்ளன. சேனாவரையர் முதலியோர் "இஃது இவ்வோத்துட் கூறுதற்கியைபில்லது" என்று தடையாக்கியும், "மற்றிவ்வுபகார இயைபு நோக்கி இவ்வோத்துள் மற்றிது கூறுதற்கு இயைபுடைத்தாயிற்று" என்று விடை போக்கியும் ஆண்டாண்டுக் கூறுமாறுபற்றி, அது கடைப்பிடிக்க. இன்னும், இவ்விரவியற் பிரயோகம் நூல்கடோறும் அருகியும் பெருகியும் பலவாறு வருவனவேயாம். அவையெல்லாம் ஈண்டுக் காட்டப் புகின் மிக விரியுமென்க.

இனி வடமொழி இலக்கண நூலாகிய பாணினீயமும் பிணிதபு நோன்பும் பெருகும் ஆயுளுமுடைய அக்காலத்துப் பேரறிவுடையார் அறியு முறைமைப்பட இவ்விரவிய னெறியால் இயற்றப்பட்ட தொன்றென்றும், சத்தகௌத்துபநூலார் முதலியோர் பிற்காலத்தார் உணரு முறைப்பட அதன் சூத்திரங்களைப்பிரித்து முறைகாட்டிச் சித்தாந்த கௌமுதி முதலியன விளங்கச் செய்தனரென்று முணர்க. இனி இறைவனூல்களாகிய வேதாகம ஒத்துக்களும் இவ்விரவியனெறி மருவியனவேயாதல் அவை வல்லார்வாய்க் கேட்டுணர்க.

அல்லதூஉம், பாயிரஞ்செய்த பனம்பாரனார்க்குத் தொல்காப்பியம் முந்து நூலென்றெடுத்தோதிய அகத்தியம் விழுமிய முதனூலென்பதே கருத்தாதலன்றி முறைபிறழ்ந்து கிடக்கும் ஒரு விழுப்பமினூலாமென்றல் கருத்தாதலில்லை. அது பிறழ்ச்சியுடைய விழுப்பமில் நூலென்றல் அவர்க்குக் கருத்தாயின்,

"வழியெனப் படுவ ததன்வழித் தாகும்"

என்பது பற்றித் தொல்காப்பியத்திற்கு வழியாகக் காட்டற் கெடுத்தோதிய முதனூலாகிய அவ்வகத்தியம் வழுவுடையதென்றாய் அதன் வழிவந்த தொல்காப்பியமும் இயல்வழக்கு நூலாதற் சிறப்புடைத் தன்றெனப்பட்டுப் பாயிரப்பொருள் புரையுற் றொழியுமென்க.

இதனால், உரைகாரர்களும் அகத்தியத்தின் மகிமை புலப்படுத்தல் கருதியே பாயிரவுரையுள் அது முத்தமிழ்விரவிக் கூறப்பட்டதென்று அங்ஙனம் ஓதுவாராயினரென்று துணிக. இனி இவ்வாறு செம்பொருள் பயக்கும் விரவியற் பிரயோகத்தினை அவர் முறைபிறழ்வாகத் திரியக்கொண்டு அந்நற்றவ வேந்தர்க்குக் குற்றம் பெரிதேற்றிய துருகமுதிர்ச்சி, "ஆனை யெருத்தம் பொலிய" என்புழிப் 'பொலிய' என்பதற்குப் பொருளறியாது தமக்குத் தெரிந்த பொருளைப் பற்றிப் 'பாடம் பிழை' யெனத் தள்ளி வேறு வேறு பாடங்கொண்டார் முறைமையோ டொப்பது என் றங்ஙனம் நகையாடி விடுக்கற்பாலதென்பது கற்றுணர்வுடையார்க் கினிது புலப்படுமென்க. இப்பெரியார் பிழைப்பு, கழுவாயில் பெருங் குற்றமாம். கழுவாய் - பிராயச்சித்தம். அஃது அப்பெற்றித்தாதல் நோக்கியன்றே,

"எரியாற் சுடப்படினு முய்வுண்டா முய்யார்
பெரியார்ப் பிழைத்தொழுகு வார்"

என்று அருளிச்செய்தார் தெய்வப்புலமைத் திருவள்ளுவ நாயனாருமென் றுணர்க. இனி இன்னோரன்ன பெரியார்ப் பிழைப்பினை வைதிக நெறிவருஞ் சீரியர் செய்யார்; அவர் அன்னரல்லாதலின், அவ்வாறு குற்றங்கூறிச் சிறுமைக் கிலக்காயினரென் றொழிக.

## தலைச்சங்கம்

தமிழ்மொழி, தலைச்சங்கம் இடைச்சங்கம் கடைச்சங்கமென்னும் மூன்று சங்கங்களினும் நன்று ஆராயப்பட்டது. இச்சங்க மூன்றினையும் இரீஇயினர் பாண்டியர்கள்.

இனித் தலைச்சங்கமிருந்து தமிழ் ஆராய்ந்தார் அகத்தியனாரும், திரிபுரமெரித்த விரிசடைக்கடவுளும், குன்றமெறிந்த முருகவேளும், முரிஞ்சியூர் முடிநாகராயரும், நிதியின் கிழவனுமென இத்தொடக்கத்தார் ஐந்நூற்று நாற்பத்தொன்பதின்மர். அவருள்ளிட்டுநாலாயிரத்து நானூற்று நாற்பத்தொன்பதின்மர் பாடினர். அவர்களாற் பாடப்பட்டன வேத்துணையோர் பரிபாடலும், முதுநாரையும், முதுகுருகுங் களரியாவிரையுமென இத்தொடக்கத்தன. அவர் நாலாயிரத்து நானூற்று நாற்பதிற்றியாண்டு சங்கமிருந்தார். அவர்களைச் சங்கமிரீஇயினர்

காய்சின்வழுதி முதலாகக் கடுங்கோனீறாக எண்பத் தொன்பதின்மர். அவருட் கவியரங்கேறினார் எழுவர் பாண்டியர். அவர் சங்கமிருந்து தமிழாராய்ந்தது கடல்கொள்ளப்பட்ட மதுரை. அவர்க்கு நூல் அகத்தியம்.

ஆசிரியர் அகத்தியனார் தாம் இயற்றிய முத்தமிழ் முதனூலாகிய அகத்தியத்தினைத் தொல்காப்பியனார் முதலிய பன்னிருமாணாக்கர்களுக்கும் கற்பித்தருளினர். இன்னும், அகத்தியனார், தொல்காப்பியனார் முதலாயினார்க்கு ஐந்திரமுதலிய வடநூல் பலவுஞ்செவியறிவுறுத்தருளினர். தொல்காப்பியனார் திரணதூமாக்கினியென்றும் வழங்கப்படுவர். தொல்காப்பியர் முதலிய பன்னிருவராவார்:--தொல்காப்பியனார், அதங்கோட்டாசிரியர், துராலிங்கர், செம்பூட்சேயார், வையாபிகர், வாய்ப்பியர், பனம்பாரனார், கழாரம்பர், அவினயர், காக்கைபாடினியார், நற்றத்தர், வாமனர் என்பவரென்க.

இப்பன்னிருவரும் அகத்தியனார்பால், அவரியற்றிய முத்தமிழ் முழுமுதனூலாகிய அகத்தியமும் மற்றை ஐந்திரமுதலிய வடநூல்கள் பலவும் நன்கு கற்று வல்லராயினரேனும், அவர் தம்முள் தொல்காப்பியனார், தென்கலை வடகலை நன்கு முழுதுணர் அறிவின் மதுகையினும், அருந்தவ ஒழுக்கத்தினுங், கறைவளர் மிடற்றவ் விறைவனருட் பேற்றினு மிக்காராய் அவர்க்குத் தலைவராயினா ரென்க. இவ்வரலாறு பன்னிரு படலப் பாயிரச் சூத்திரம் முதலிய பற்றித்தெளிக.

இனித் தொல்காப்பியனார் முதலாயினார் அகத்தியத்தின்கணுள்ள இயற்றமிழை வேறுபிரித்து வழிப்படுத்தார்; பெருநாரை பெருங்குருகு முதலிய நூலுடையார் இசைத்தமிழை வேறுபிரித்து வழிப்படுத்தார்; முறுவல் சயந்தங் குணநூல் செயிற்றிய முதலிய நூலுடையார் நாடகத்தமிழை வேறுபிரித்து வழிப்படுத்தாரென வுணர்க. தொல்காப்பியர் முதலிய பன்னிருவரும் அகத்தியத்தின்வழித் தனித்தனி இலக்கண நூல்கள் பல செய்ததூஉமன்றிப் புறப்பொருட் பன்னிருபடல மென ஒருநூல் ஒருங்குகூடி இயற்றினர்.

இனி அப்பன்னிருவரும் அகத்தியத்தின்வழி இயற்றமிழ் நூல்கள் பலசெய்தனரேனும், தொல்காப்பியனார் இயற்றிய இயற்றமிழ் நூலாகிய தொல்காப்பியம் ஏனையோர் இயற்றிய நூல்களினும் மாட்சி மிகவுடைத்தாய் அவ்வகத்தியத்திற்குச் சிறந்ததோர் இயற்றமிழ் வழி நூலாயிற்று.

## இடைச்சங்கம்

இனி இடைச்சங்கமிருந்து தமிழ் ஆராய்ந்தார் அகத்தியனாரும், தொல்காப்பியனாரும், இருந்தையூர்க் கருங்கோழி மோசியும், வெள்ளூர்க் காப்பியனும், சிறு பாண்டரங்கனும், திரையன்மாறனும், துவரைக்கோமானும், கீரந்தையும் என இத்தொடக்கத்தார் ஐம்பத் தொன்பதின்மர். அவருள்ளிட்டு மூவாயிரத் தெழுநூற்றுவர் பாடினார். அவர்களாற் பாடப்பட்டன கலியும், குருவும், வெண்டாளியும், வியாழமாலையகவலுமென இத்தொடக்கத்தன. அவர்க்கு நூல் அகத்தியமும், தொல்காப்பியமும், மாபுராணமும், இசைநுணுக்கமும், பூதபுராணமுமென இவை. அவர் மூவாயிரத்தெழுநூற்றியாண்டு சங்கமிருந்தார். அவரைச் சங்கம் இரீஇயினார் வெண்டேர்ச்செழியன் முதலாக முடத்திருமாறனீறாக ஐம்பத்தொன்பதின்மர். அவருட் கவியரங்கேறினார் ஐவர் பாண்டியர். அவர் சங்கமிருந்து தமிழ் ஆராய்ந்தது கபாடபுரத்து. அக்காலத்துப்போலும் பாண்டிய னாட்டைக் கடல் கொண்டது.

## தொல்காப்பியம்

இது தொல்காப்பியமுனிவரால் இயற்றப்பட்டமையின், அப் பெயர்த்தாயிற்று. "தொல்காப்பியம் இடைச்சங்கத்துச் சான்றோர்க்குங் கடைச்சங்கத்துச் சான்றோர்க்கும் இயற்றமிழாராய்ச்சிக்கு நூலாயது" என்று கணக்காயனார் மகனார் நக்கீரனார் களவியலுரை முகத்துக் கிளந்தெடுத் தோதினார். இன்னும், இத்தொல்காப்பியம் இடைச்சங்க நாண்முதல் இன்றுகாறும் இயற்றமிழாராய்ச்சிக்குச் சிறந்த ஆரிட இலக்கணநூலாய் நிலவுவ தாயிற்று. மற்றிந்நூல், எழுத்ததிகாரம், சொல்லதிகாரம், பொருளதிகாரமென மூன்றதிகாரங்க ளுடைத்து. இனி நூல்தான் ஒருபொரு ளுதலிய சூத்திரமும், இனமொழிகிளந்த ஓத்தும், பொதுமொழி கிளந்த படலமு மென்னு மூன்றுறுப்படக்கிய பிண்டமாம். அவற்றுள், தொல்காப்பியம் ஒருபொருளுதலிய சூத்திரங்களும், இனமொழிகலந்த ஒத்துக்களும், பொதுமொழிகிளந்த படலங்களு மென்னு மூன்றுறுப்புந் தன்கண் அடங்கக்கொண்டு நிற்குமோர் பிண்டநூலாம். இனி அகத்தியம் இயற்றமிழ் இசைத்தமிழ் நாடகத்தமிழென்னு மூன்றுறுப்பினையு மடக்கி நிற்றலின், அஃது

பிண்டத்தினை யடக்கிய வேறோர் பிண்டமென்றார் நச்சினார்க்கினியர். பொதுமொழிகிளந்த படலமாதல்—ஒருநெறிப்பொருட்டாய் மொழி யப்படுதலன்றித் தன்னுள் விரவிய பொருட்கெல்லாம் பொதுவாய் மொழியப்படுதல். இவ்வுறுப்புக்கள் இன்னோரன்ன நூற்கேயுரிய வுறுப்புக்களென்று தேறமாட்டாத நன்னூல் விருத்திகாரர் "பாட் டுடைத் தலைவன் சரிதையே யன்றி மலை கடல் நாடு முதலிய பலபொருட் டிறங்களும் விரவி வருதலும் பலபொருளையுணர்த்தும் பொதுச்சொற் கள் ஒரோவழி யன்றித் தொடர்ந்து வருதலும் படலம்" எனத் தமக்கு வேண்டியவாறு ஓதினர். பாட்டுடைத்தலைவன் சரிதையொடு மலை கடல் நாடு முதலிய பலபொருட்டிறங்கள் விரவிவரும் படலங் காவிய வுறுப்பாகலின், ஈண்டாராய்ச்சி யில்லையென்ப துணர்க.

இத்தொல்காப்பிய விலக்கணநூல் முத்தமிழ் முதனூலான அகத் தியத்தின் வழிப்பிறந்தநூல்களுள் இயற்றமிழ்ப் பெற்றியெல்லாம் இனிதுவிளங்க எடுத்துணர்த்துமாட்சியிற்றானே தனக்கு நிகராய் ஏனோர் இயற்றமிழ் நூல்கட்கெல்லாம் பெரிய ஆணைவரம்பாய் நிலை பெறுவதாகலின், முற்காலத்தாரும் பிற்காலத்தாரும் இதனிலக்கண நெறி கடைப்பிடித்தே எழுத்துச் சொல்லிலக்கணநூல்களும் யாப் பிலக்கண நூல்களும் பொருளிலக்கண நூல்களுந் தனித்தனி தொகுத் தும் விரித்தும் பல இயற்றினர். இஃது அகத்தியத்திற்கு வழிநூலாயி னுந் தன்வழித்தோன்றிய பல்காப்பியம் முதலிய இயற்றமிழ் நூல் களுக்கு முதனூலுமாமென்க.

இதன் **எழுத்ததிகாரம்** நூன்மரபு, மொழிமரபு, பிறப்பியல், புண ரியல், தொகைமரபு, உருபியல், உயிர்மயங்கியல், புள்ளிமயங்கியல், குற்றியலுகரப்புணரியல் என ஒன்பஃது ஓத்துக்களுடைத்து. ஓத் தெனினும் இயலெனினும் ஒக்கும். **சொல்லதிகாரம்** கிளவியாக்கம், வேற்றுமையியல், வேற்றுமைமயங்கியல், விளிமரபு, பெயரியல், வினை யியல், இடையியல், உரியியல், எச்சவியலென ஒன்பஃது ஓத்துக் களுடைத்து. **பொருளதிகாரம்** அகத்திணையியல், புறத்திணையியல், களவியல், கற்பியல், பொருளியல், மெய்ப்பாட்டியல், உவமவியல், செய்யுளியல், மரபியலென ஒன்பஃது ஓத்துக்களுடைத்து. இனி எழுத்ததிகாரம் நானூற்றெண்பத்துமூன்று சூத்திரங்களும், சொல்

லதிகாரம் நானூற்றறுபத்துமூன்று சூத்திரங்களும், பொருளதிகாரம் அறுநூற்றறுபத்தாறு சூத்திரங்களும் உடையனவாம்.

## எழுத்ததிகாரம்

எழுத்ததிகாரமென்பது எழுத்தினது அதிகாரத்தையுடையதென அன்மொழித்தொகையாய்ப் படலத்திற்குக் காரணக் குறியாயிற்று.

எழுத்தென்றது—அகரமுதல் னகர விறுவாய்க் கிடந்த முதலெழுத்து முப்பதும் குற்றியலிகரம் குற்றியலுகரம் ஆய்தம் என்னுஞ் சார்பெழுத்து மூன்றுமாம். அவற்றிற்கு எழுத்தென்னுங்குறி முன்னர் "எழுத்தெனப்படுப" என்னுஞ் சூத்திரத்தால் ஓதுபவாகலின் ஈண்டெதிரது போற்றியாளப்பட்டது.

அதிகாரம்—அதிகரித்தல். அதிகாரமெனினும் படலமெனினு மொக்கும். அஃது யதோத்தேசபக்கங் காரியகாலபக்கமென இருவகைப்படும். அவற்றுள், ஈண்டதிகாரமென்றது முன்னையது. அதனையுடையதெனவே எழுத்தை நுதலி வரும் பலவோத்தினது தொகுதி எழுத்ததிகார மென்றவாறாயிற்று. எழுத்தினது அதிகாரத்தை யுடையதென்புழி ஆறுவது வினைமுதற் பொருண்மையின்கண் வந்த காரகம். வடநூலார் வினைமுதற்பொருளின்கண் வரும் ஆறுவதனைக் கர்த்திருசட்டியெனவுங் கிரியாசட்டியெனவுங் கூறுவர். இப்படலத்துள் விதிக்கப்படுவனவெல்லாங் கருவியுஞ் செய்கையுமென இருவகைப்படும். அவற்றுட்கருவி, நூன்மரபு முதலிய நான்கோத்தானும், செய்கை தொகைமரபு முதலிய ஐந்தோத்தானுங் கூறப்படும். கருவி பொதுவுஞ் சிறப்புமென இருவகைத்து. புணரியலிட் கூறப்படுவன செய்கையொன்றற்கேயுரிய கருவியாகலிற் சிறப்புக்கருவி; ஏனை மூன்றோத்தினுங் கூறப்படுவன பொதுக்கருவி.

நூன்மரபாவது— நூலினது மரபுபற்றிய பெயர் கூறுதல். எனவே, இதுவு மிவ்வோத்துட்கூறுஞ் சூத்திரங்களுக்கெல்லாம் அதிகாரமென்பது பெறப்பட்டது. மலை, கடல், யாறு, குளம் என்றற்றொடக்கத்து உலக மரபுபற்றிய பெயர் போலாது, ஈண்டுக் கூறப்படும் எழுத்து, குறில், நெடில், உயிர், மெய் என்றற்றொடக்கத்துப் பெயர்கள் நூலின்கண் ஆளுதற்பொருட்டு முதனூலாசிரியனாற் செய்துகொள்ளப் பட்டமையின், இவை நூன்மரபு பற்றிய பெயராயினவென வறிக. ஏனை

யோத்துக்களின் விதிக்கப்படும் பெயர்களும் நூன்மரபுபற்றி வரும் பெயராதல் உய்த்துணர்ந்துகோடற்கு இது முதற்கண்வைக்கப்பட்டது.

“ எழுத்தெனப் படுப
அகரமுத
னகர விறுவாய் முப்பஃ தென்ப
சார்ந்துவரன் மரபின் மூன்றலங் கடையே. ”

இதன்பொருள் : நெடுங்கணக்கினுள் அகரமுதல் னகரமீறாகக் கிடந்த முப்பதும் எழுத்தென்று சொல்லப்படுவனவென்று கூறுவர் நூலோர், தனித்தானுங் ககரமுதலியனபோல அகரமொடு சிவணி யானும் இயங்கும் இயல்பின்றி ஒருமொழியைச் சார்ந்துவருதலே தமக்கிலக்கணமாக வுடைய மூன்றல்லர்தவிடத்து என்றவாறு. அகரமுதல் னகரவிறுவாய் முப்பஃதாவன : அ, ஆ, இ, ஈ, உ, ஊ, எ, ஏ, ஐ, ஒ, ஓ, ஔவென்னும் பன்னிரண்டும், க், ங், ச், ஞ், ட், ண், த், ந், ப், ம், ய், ர், ல், வ், ழ், ள், ற், ன் என்னும் பதினெட்டுமாம். மொழியைச் சார்ந்து வருதலே தமக்கிலக்கணமாகவுடைய மூன்றாவன : குற்றிய லிகரம் குற்றியலுகரம் ஆய்தம் என்பன. நாகியாது—குற்றியலிகரம் ; வீடு—குற்றியலுகரம் ; எஃகு— ஆய்தம். இவை மொழியைச்சார்ந்து தோன்றினமை காண்க. இம்மூன்றுமேயன்றி உயிர்மெய் முதலியவற் றையுஞ் சார்பெழுத்தென்பாரு முளராலோவெனின்,—ஆசிரியர்

“ சார்ந்துவரன் மரபின் மூன்றலங் கடையே ”

என்றாணை தருதலின், அது மரபுநிலை திரிபாமென்க. அஃதவ்வாறா தல் சூத்திர விருத்தியுட் காண்க. இவ்வியலுள் எழுத்துக்களது மரபு பற்றிய பெயரும் அவற்றி னெலியளவும், உயிர்மெய்ப் புணர்ச்சியும், தனிமெய் தன்மெய்யோடும் பிறமெய்யோடும் மயங்கு மயக்கமும், உயிர் மெய் உயிர்மெய்யோடுந் தனிமெய்யோடும் மயங்கு மயக்கமும், உயிர் முன் உயிர்மெய் மயங்கும் மயக்கமும், உயிர்முன் தனிமெய் மயங்கு மயக்கமும், பிறவுங் கூறப்படும். மயக்கமெனினுஞ் சையுத்தமெனினுஞ் சையோகமெனினு மொக்கும். இச்சையோகம் ஒருமொழியினும் புணர் மொழியினுங் கொள்ளச் சூத்திரஞ் செய்தாராசிரியர். வடநூலாரும் அவ்வாறு கொள்ப. அக்கருத்தறியாத நச்சினார்க்கினியர் சையோகம் ஒருமொழியிற்கொண்டு, இருமொழியிற் கொள்ளாது, உதாரணம் இறந்தவென்றார்.

மொழிமரபாவது—எழுத்தான் ஆம் மூவகை மொழியது மரபு கூறுதல். மூவகை மொழியாவன—ஓரெழுத்தொருமொழி, ஈரெழுத்தொருமொழி, தொடர்மொழி யென்பன.

பிறப்பியலாவது—எழுத்துக்களினது பிறப்பிலக்கணம் உணர்த்துதல். சார்பிற்றோற்றத்து எழுத்துந் தனிமெய்யும் மொழிக்கணன்றி யுணர்த்தலாகாமையின், அவை புலப்படு மொழியை மரபியலி னுணர்த்திப் பிறப்புணர்த்தவேண்டுதலின், இதனை நூன்மரபின்பின் வையாது மொழிமரபின்பின்னர் வைத்தார்.

புணரியலாவது—மூவகைமொழிகளும் செய்கை யோத்துக்களுட் புணர்தற்குரிய கருவியியல்பு கூறுதல். அக்கருவியாவன—மூன்று திரிபும், ஓரியல்பும், வேற்றுமை அல்வழியும், எழுத்தும், சாரியையுமென்று இத்திறத்தன. மூன்று திரிபாவன—நிறுத்தசொல்லுங் குறித்துவரு கிளவியும் தம்மிற் புணர்வுழி, ஆண்டு இல்லாதவெழுத்துத் தோன்றுதலும் உள்ளவெழுத்து மற்றொன்றாக மாறுதலுங் கெடுதலுமாம். வடநூலார் இம்மூன்றனையு முறையே ஆகமம், ஆதேசம், லோபமென வழங்குப. வடநூலார் நின்றவெழுத்து நீங்க அதனிலைக் களத்து மற்றொன்று வந்தியைதல் ஆதேசமென்று கொள்வர்.

தொகைமரபாவது—மேல் அகத்தோத்தினுள் இருபத்துநான் கிற்றினும் விரித்துப் புணர்த்து முடிப்பனவற்றை யெல்லாந் தொகுத்துப் புணர்க்கும்முடிபு கூறுதல்.

உருபியலாவது—உருபுகளோடு பெயர்புணரும் இயல்பு கூறுதல்.

உயிர்மயங்கியலாவது—உயிரீறுநின்று பெரும்பான்மையும் வன்கணத்தோடுஞ் சிறுபான்மை மென்கணம் இடைக்கணம் உயிர்க்கணங்களோடும் மயங்கிப் புணருமாறு கூறுதல். வடநூலார் இப்புணர்ச்சியை அச்சு சந்தியென்பர். மயங்கிப்புணர்தல்—ஒன்றுபட்டுக் கூடுதல்.

புள்ளிமயங்கியலாவது—புள்ளியீறு பெரும்பான்மையும் வன்கணத்தோடுஞ் சிறுபான்மை பிறகணத்தோடும் புணருமாறு கூறுதல். வடநூலார் இப்புணர்ச்சியை அல்சந்தி யென்பர். அச்சு அல்லென்பன பிரத்தியாகாரஞ் செய்தபெயர். வடநூலார் உள்ளது தொகுத்து முதலுமீறுங் கூட்டிக்கூறுதலைப் பிரத்தியாகாரமென்றும், இல்லது வருவித்துரைத்தலை அத்தியாகாரமென்றுங் கூறுவர்.

குற்றியலுகரப்புணரியலாவது— குற்றியலுகரவீறு வருமொழியோடு புணரும் இயல்பு கூறுதல்.

## சொல்லதிகாரம்

சொல்லதிகாரமென்பது சொல்லினது அதிகாரத்தை யுடையதென அன்மொழித் தொகையாய்ப் படலத்திற்குக் காரணப்பெயராயிற்று. ஈண்டதிகாரமென்றது சொல்லை நுதலிவரும் பலவோத்தினது தொகுதியை. சொற்றான் தனிமொழியுந் தொடர்மொழியுமென இரண்டு வகைப்படும். தனிமொழியாவது சமயவாற்றலாற் பொருள்விளக்குவது. அது பெயர்ச்சொல்லும் வினைச்சொல்லும் இடைச்சொல்லும் உரிச்சொல்லுமென நான்கு வகைப்படும். அவற்றிற்கு உதாரணம்— மரம், உண்டான், மற்று, நனியென முறையேகாண்க. தொடர்மொழியாவது பயனிலை வகையானுந் தொகைநிலை வகையானும் எண்ணுநிலை வகையானும் இயைந்து பொருள் விளக்குந் தனிமொழி யீட்டம். தொடர்மொழி இருமொழித்தொடரும், பன்மொழித்தொடருமென இருவகைப்படும். சாத்தன் வந்தான்—இது பயனிலைத்தொடர். யானைக்கோடு—இது தொகைநிலைத்தொடர். நிலம் நீர், இஃதெண்ணுநிலைத்தொடர். இவை இருமொழித்தொடர். அறம் வேண்டி யரசனுலகம் புரந்தான்—இது பன்மொழித்தொடர். இனி வடநூலார் கூறியவாறே அவாய்நிலையானும், தகுதியானும், அண்மையானுந் தொடரு மென்றலுமாம். அவாய்நிலை—ஒருபதந் தன்னை முடிப்பதொருபதம் இல்லாதவழி முடிபு பெறாது நிற்றல். 'வந்தான்' என்பது, 'சாத்தன்' என்னு முடிக்குஞ்சொல்லை அவாய் நின்றல்லது முடியாமையின், அவாய் நிலைத்தொடராம். 'ஆ குதிரை ஆண் மகன் யானை' என்பது அவாய்நிலை யின்மையான் மொழித்தொடராகாது. தகுதி—பொருட்கு வாதையின்மை. அது 'நீரா னனை' 'தீயாற் சுடு' என்பன போல்வன. 'நீராற் சுடு' 'தீயா னனை' யென்பன தகுதியின்மையான் மொழித்தொடராகா. அண்மை—பதங்களை ஒரு தொடராக விரையக் கூறுதல். அது "அறம் வேண்டி யரசனுலகம் புரந்தான்" எனப் பதங்களை விரையக்கூறிக் குறித்த பொருள் புலப்படச் செய்தல். இவ்வாறன்றி, 'அறம்'—'வேண்டி'—'அரசன்'—'உலகம்'—'புரந்தான்' என யாமத்துக்கு ஒன்றொன்றாகக்கூறின், அண்

மையின்றாய்க் குறித்த பொருள் புலப்படாமையான், மொழித்தொட ராகாது. மொழித்தொடரெனினும் வாக்கியமெனினும் பொருந்தும்.

கிளவியாக்கம்— வழுக்களைந்து சொற்களை யாக்கிக்கொண்டமை யால் இவ்வோத்துக் கிளவியாக்கமென்னும் பெயர்த்தாயிற்று. ஆக் கம்—அமைத்துக்கோடல். அது நொய்யுநொறுங்குங் களைந்து அரிசி யமைத்தாரை அரிசி யாக்கினாரென்னும் வழக்கானுமறிக. பொது வகையாற் 'கிளவி' யென்றமையால் தனிமொழியுந் தொடர்மொழி யுங்கொள்ளப்படும். கிளவி, சொல், மொழி என்னுந் தொடக்கத்தன ஒருபொருட்கிளவி. இனிச்சொற்கள் பொருள்கண் மேலாமாறு உணர்த் தினமையாற் 'கிளவியாக்கம்' ஆயிற்றெனினுமமையும், ஒருவன் மேலாமாறிது, ஒருத்திமேலாமாறிது, பலர்மேலாமாறிது, ஒன்றன் மேலாமாறிது, பலவற்றின்மேலாமாறிது, வழுவாமாறிது, வழுவமையு மாறிது எனப் பொருள்கண்மேலாமாறு உணர்த்தினமையின்.

"உயர்திணை யென்மனார் மக்கட் சுட்டே
யஃறிணை யென்மனா ரவரல பிறவே
ஆயிரு திணையி னிசைக்குமன சொல்லே."

மக்களாகிய நன்குமதிக்கப்படும் பொருளை உயர்திணையென்றும், அம்மக்களல்லாத பிறபொருளை அஃறிணையென்றும் ஆசிரியர் கூறுவர். அவ்விருதிணைப் பொருளையுஞ் சொற்க ளுணர்த்தும். எனவே, இரு திணையும்பற்றிவரும் ஐந்துபாலும், எழுவகை வழுவும், எட்டுவேற் றுமையும், ஆறெட்டும், மூன்றிடமும், மூன்றுகாலமும், வழக்குஞ் செய்யுளுமாகிய இரண்டிடமுமென்னும் பொருட்பகுதிகளையும் இன்னோரன்னவற்றினையுஞ் சொல்லுணர்த்தும் என்றவாறாயிற்று.

வேற்றுமையியல்— இவ்வோத்துச் செயப்படுபொருண் முத லாயினவாகப் பெயர்ப்பொருளை வேறுபடுத்து உணர்த்தலின், வேற் றுமையியலெனக் காரணக்குறி பெற்றது. கிளவியாக்கத்து நான்கு சொற்கும் பொதுவிலக்கணம் உணர்த்திய அதிகாரத்தானே பொது விலக்கணமாத லொப்புமையானும், உருபேற்றல் பெயர்க்கிலக்கண மாகலின் வேற்றுமை யுணர்த்திப் பெயருணர்த்தன் முறையாகலானும், கிளவியாக்கத்திற்கும் பெயரியற்கும் இடை வேற்றுமை யிலக்கண முணர்த்திய வெடுத்துக் கொண்டார். வேற்றுமையாவன பெயரும்

ஓரிடைச் சொல்லுமாகலின், அவற்றதிலக்கணமும் பொதுவிலக்கண மேயாம். வேற்றுமை யிலக்கணம் ஒன்றாயினும், சிறப்புடைய எழு வகை வேற்றுமையும் அவற்றது மயக்கமும் விளிவேற்றுமையுந் தனித் தனி யுணர்த்தத்தகும் வேறுபாடு யாப்புடைமையான், மூன்றோத்தா னுணர்த்தப்பட்டது.

"வேற்றுமை தாமே யேழெ மொழிப."

"விளிகொள் வதன்கண் விளியோ டெட்டே."

வேற்றுமைதாம் பெயர், ஐ, ஒடு, கு, இன், அது, கண்ணென எழா மென்பர்; விளி கொள்வதன்கண்ணதாகிய விளியோடு தலைப்பெய்ய வேற்றுமை யெட்டாம். செயப்படுபொருண் முதலாயினவற்றின் வேறு படுத்துப் பொருண்மாத்திரம் உணர்த்தலின் எழுவாயும், செயப்படு பொருண் முதலியவாகப் பெயர்ப்பொருளை வேறுபடுத்துணர்த்தலின் ஐ, ஒடு, கு, இன், அது, கண்ணென்பனவும், விளிப்பொருட்டாய்த் திரிந்தும் இயல்பாயு நிற்றலின் விளியும், வேற்றுமையாயின.

"அவற்றுள்— எழுவாய் வேற்றுமை பெயர்தோன்று நிலையே." எனவே, உருபும் விளியும் ஏலாது பிறிதொன்றனோடு தொகாது வினை முதலாய் நின்று பயனிலைகோடல் எழுவாய்க்கு இலக்கண மென்றவாறா யிற்று. ஆவுண்டு எனப் பொருண்மை சுட்டியும், ஆ செல்க என வியங் கொண்டும், ஆ கிடந்தது என வினைநிலையுரைத்தும், ஆ யாது? என வினாவேற்றும், ஆ கரிது எனப் பண்புகுறித்தும், ஆ பல எனப் பெயர் கொண்டும், எழுவாய் வினைமுதலாய் நின்று பயனிலை கொள்ளுமாறு காண்க. இனி வடநூலார் எழுவாய்க்கு ரூப பேதங் காட்டும் வேற் றுமையுருபு கொள்வர். வடநூலார் எழுவாய் வேற்றுமையினைக் கர்த் திருகாரகமென்பர்.

"இரண்டாகுவதே
ஐயெனப் பெயரிய வேற்றுமைக் கிளவி
எவ்வழி வரினும் வினையே வினைக்குறிப்
பவ்விரு முதலிற் றோன்றும் அதுவே"

குடத்தை வனைந்தான், குழையையுடையன் என, இரண்டாவது தெரிநிலைவினை குறிப்புவினை யென்னும் அவ்விரண்டு முதற்கண்ணுந் தோன்றுமாறு காண்க. அவ்விருமுதலென்றது — அவ்விரண்டன்

செயப்படுபொருளே. கருத்தாவேயன்றிச் செயப்படுபொருண் முதலா யினவுந் தொழிற்காரக மாமென்பது,

“வினையே செய்வது செயப்படு பொருளே
நிலனே காலம் கருவி என்றா
இன்னதற் கிதுபய னாக வென்னும்
அன்ன மரபின் இரண்டொடுந் தொகைஇ
ஆயெட் டென்ப தொழின்முதல் நிலையே”

என வேற்றுமை மயங்கியலுட் கூறுமாற்றானுணர்க. இது அரிசி தானே யட்டது எனக் கருமகருத்தனாயும் வரும். எனவே, தன்னை யேற்ற பெயர்ப்பொருளைச் செயப்படுபொருளாக வேற்றுமை செய்தல் ஐயெனப்பெயரிய வேற்றுமைக்கிளவிக்கு இலக்கணம் என்றவா றாயிற்று. வடநூலார் ஐயெனப்பெயரிய வேற்றுமைக்கிளவியைக் கருமகாரகம் என்பர்.

“மூன்றாகுவதே
ஒடுவெனப் பெயரிய வேற்றுமைக் கிளவி
வினைமுதல் கருவி அனைமுதற் றதுவே”

‘சிறப்புடைப் பொருளைத் தானினிது கிளத்தல்’ என்பதனால் ஒடுவென்றாரேனும், ஆனுருபுந் தழுவப்படும். வினைமுதல் கருவிக்கண் ஆனுருபு பெருவரவிற்றாம். ஒடுவுருபு இக்காலத்து அருகியல்லது வாராது. கொடியொடு துவக்குண்டான்; அகத்தியனாற் றமிழுரைக்கப் பட்டது; ஊசியொடு குயின்ற தூசும் பட்டும்; வேலானெறிந்தான் என, மூன்றாவது முறையே வினைமுதலுங் கருவியுமாகிய அவ்விரு முதலிற் றோன்றியவாறு காண்க. வினைமுதல் கருவியென்றாரேனும், உடனிகழ்வுங் கொள்ளப்படும். உடனிகழ்வின்வரும் மூன்றாவதனை வட நூலார் சகார்த்தத் திருதியை யென்பர். மாணவகனோடு ஆசிரியன் வந்தான்; ஈண்டு, ஒடு உடனிகழ்ச்சிப் பொருட்டாயிற்று. வினைமுதலா வது கருவி முதலாய காரணங்களைத் தொழிற்படுத்துவது. கருவியா வது வினைமுதற்றொழிற் பயனைச் செயப்படுபொருட்கண் உய்ப்பது. வடநூலார் ஒடுவெனப் பெயரிய வேற்றுமைக் கிளவியைக் காரணகாரக மென்பர்.

“நான்காகுவதே
குவ்வெனப் பெயரிய வேற்றுமைக் கிளவி
எப்பொரு ளாயினுங் கொள்ளு மதுவே”

அந்தணர்க்கு ஆவைக் கொடுத்தான் எனக் குவ்வெனப்பெயரிய வேற்றுமைக்கிளவி கொளற்பொருட்டாயவாறு காண்க. வடநூலார் குவ்வெனப்பெயரிய வேற்றுமைக் கிளவியைச் சம்பிரதானகாரகம் என்பர்.

"ஐந்தாகுவதே
இன்னெனப் பெயரிய வேற்றுமைக் கிளவி
இதனின் இற்றிது என்னும் அதுவே"

ஐந்தாவது பொருவும் ஏதுவும் எல்லையும் நீக்கமுமென நான்கு பொருளுடைத்து. இனிப் பொரு உறழ்பொருவும் ஒப்புப்பொருவு மென இருவகைப்படும். காக்கையிற் கரிது களம்பழம், உறழ்பொரு; வேயின் மென்றோள், உவமப்பொரு. ஞாபகவேது காரகவேது என ஏதுவும் இருவகைப்படும். முயற்சியிற்பிறத்தலின் ஒலி நிலையாது; ஞாபகவேது. வாணிகத்தினாயினான்; காரகவேது. கருவூரின் கிழக்கு; எல்லைப்பொருள். ஊரிற் றீர்ந்தான், காமத்திற் பற்றுவிட்டான்; நீக்கப் பொருள். வடநூலார் இன்னெனப் பெயரிய வேற்றுமைக் கிளவியை அபாதான காரகமென்பர். இனி ஐந்தாவது எல்லைப்பொருட்டாகுங் கால் காரகவேற்றுமை யாகாதென்று உணர்க.

"ஆறாகுவதே
அதுவெனப் பெயரிய வேற்றுமைக் கிளவி
தன்னினும் பிறிதினு மிதன திதுவெனு
மன்ன கிளவிக் கிழமைத் ததுவே."

சிறப்புப்பற்றி அதுவெனப் பெயரிய வேற்றுமைக் கிளவியென் றாரேனும், அகரவுருபுங் கொள்ளப்படும். தன்னென்றது— தன்னோ டொற்றுமையுடைய பொருளை; பிறிதென்றது—தன்னின் வேறாகிய பொருளை. எனவே, ஆறாவது கிழமைப்பொருட்டெனவும், அக் கிழமை தன்னான் வந்த தற்கிழமையும் பிறிதான் வந்த பிறிதின்கிழ மையுமென விருவகைப்படும் எனவும் கூறியவாறாயிற்று. இத்தற் கிழமை, எள்ளது குப்பை என ஒன்றுபல குழீஇய தற்கிழமையும், படையது குழாம் என வேறுபல குழீஇய தற்கிழமையும், சாத்தன தியற்கை என ஒன்றியற்கிழமையும், புலிய துகிர் என உறுப்பின் கிழமையும், அரசனது முதுமை, சாத்தனது தொழில் என மெய்திரிந் தாய தற்கிழமையும் என ஐவகைப்படும். பொருளின்கிழமையும் நிலத்

தின்கிழமையும் காலத்தின்கிழமையும் என்ப் பிறிதின்கிழமை மூவகைப்படும். சாத்தன துடைமை, சம்பந்தன் தமிழ், கபிலரது பாட்டு, பரணரது பாட்டு, இவை பொருட்பிறிதின்கிழமை. இவற்றுட் பின்னைய மூன்றுஞ் செய்யுட் பொருட்கிழமையாம், தெரிந்து மொழியாற் செய்யப்படுதலின். முருகனது குறிஞ்சி, யானையது காடு, நிலப்பிறிதின்கிழமை. வெள்ளியதாட்சி, காலப்பிறிதின்கிழமை. வடநூலார் அதுவெனப்பெயரிய வேற்றுமைக்கிளவியைச் சம்பந்தசட்டியென்பர். இவ் வாறுவது காரக வேற்றுமையாகாது, வினைகொண்டு முடிவதன்றாகலின். மற்று ஆறுவது கடவுளர் உண்டி அமிர்தவுண்டியென முறையே வினைமுதற்பொருளிலுஞ் செயப்படுபொருளிலும் வருங்கால், காரக வேற்றுமையுமாம். வடநூலார் வினைமுதற்பொருளில்வரும் ஆறுவதைக் கர்த்திருசட்டியெனவுஞ் செயப்படுபொருளில்வரும் ஆறுவதைக் கர்மணிசட்டியெனவுங் கூறுப.

“ஏழாகுவதே
கண்ணெனப் பெயரிய வேற்றுமைக் கிளவி
வினைசெய் யிடத்தி னிலத்தின் காலத்தின்
அனைவகைக் குறிப்பின் தோன்றும் அதுவே”

தட்டுப்புடைக்கண் வந்தான் என வினைசெய்யிடத்தும், மாடத்தின்கண் இருந்தான் என நிலத்தின்கண்ணும், கூதிர்க்கண் வந்தான் எனக் காலத்தின்கண்ணும் ஏழாவது வந்தவாறு காண்க. எனவே, ஏழாவது இடப்பொருண்மைத் தென்றவாறாயிற்று. வடநூலார் கண்ணெனப் பெயரிய வேற்றுமைக் கிளவியை அதிகரணகாரகம் என்பர்.

வேற்றுமை மயங்கியல்— இது தன்பொருளிற்றீராது பிறிதொன்றன் பொருட்கட்செல்லும் பொருண்மயக்கமும், தன்பொருளிற் றீர்ந்து செல்லும் உருபுமயக்கமும் என்னும் இருவகை மயக்கமுமாகிய வேற்றுமை மயக்கம் உணர்த்துதலின், அப்பெயர்த்தாயிற்று.

“யாத னுருபிற் கூறிற் றாயினும்
பொருள்சென் மருங்கின் வேற்றுமை சாரும்”

என்பதனானே உருபுமயக்கமும் அல்லனவற்றானெல்லாம் பொருண்மயக்கமும் உணர்த்தப்பட்டன.

விளிமரபு— இது விளிவேற்றுமையினது இலக்கணம் உணர்த்துதலின், விளிமரபென்னும் பெயர்த்தாயிற்று.

"விளியெனப் படுப கொள்ளும் பெயரொடு
தெளியத் தோன்று மியற்கைய வென்ப"

விளிவேற்றுமை எதிர்முகமாக்குதற் பொருட்டாம். ஈறுதிரிதலும், ஈற்றயனீடலும், பிறிது வந்தடைதலும், இயல்பாதலும் என விளி வேறுபாடு பலவாம்.

பெயரியல்— இனிப் பெயர், வினை, இடை, உரியென்னும் நான்கு சொற்குஞ் சிறப்பிலக்கணம் உணர்த்துவா னெடுத்துக்கொண்டு முதற் கண்ணதாகிய பெயரிலக்கணம் உணர்த்துதலின், இது பெயரியல் என்னும் பெயர்த்தாயிற்று.

"எல்லாச் சொல்லும் பொருள்குறித் தனவே"

பெயர், வினை, இடை, உரியென்னும் நால்வகைச்சொல்லும் பொருள் குறித்தனவே; பொருள் குறியாது நில்லா. முயற்கோடு, யாமை மயிர்க்கம்பலம் என்பன பொருளுணர்த்தாவாலெனின்,— அவை, முயல், கோடு, யாமை, மயிர், கம்பலம் எனத் தனிமொழியாய்நின்ற வழிப் பொருளுண்மையும், அங்ஙனந் தொடர்மொழியாய் நின்றவழிப் பொருளின்மையுங் குறித்தலின், அவையும் பொருளுணர்த்துவனவே யாமென்பது. பெயர், பொருள் என்பன ஒருபொருட் கிளவியாகலின், பொருளை யுணர்த்துஞ்சொற் பெயர்ச்சொல்லெனப்படும். பொருட்குப் பண்பு உரிமை பூண்டு நிற்றலின், அதனை யுணர்த்துஞ்சொல் உரிச் சொல்லெனப்படும். வினையென்பது பல பொருளொருசொல்லாய்த் தொழிற்பண்பினையும் அதன் காரியமாகிய வினைநிகழ்ச்சியையும் உணர்த்தும். அவற்றுள் தொழிற் பண்பை யுணர்த்துஞ்சொல் உரிச்சொல் லென வடங்கினமையின், ஏனைக்காரியமாகிய புடைபெயர்ச்சி வினையை யுணர்த்துஞ்சொல் வினைச்சொல்லெனப்படும். பொருளையும் பொருளது புடைபெயர்ச்சியையும் தம்மானன்றித் தத்தங் குறிப்பானுணர்த்துஞ் சொற்கள் பெயர்ச்சொல் வினைச்சொற்களுமாகாது அவற்றின் வேறுமாகாது இடை நிகரனவாய் நிற்றலின், இடைச்சொல்லெனப் படும். பொருட் புடைபெயர்ச்சியாவது பொருட் பண்பின் புடை பெயர்ச்சியெனவே கொள்க. புடைபெயர்ச்சி யெனினும் வினை நிகழ்ச்சியெனினும் ஒக்கும்.

"பொருண்மை தெரிதலுஞ் சொன்மை தெரிதலுஞ்
சொல்லி னாகு மென்மனார் புலவர்"

தன்னின் வேருகிய பொருண்மை தெரிதலும், தன்றன்மை தானே தெரிதலும் என்று இரண்டுஞ் சொல்லானும். சாத்தன் வந்தான், பண்டு காடுமன், உறுகால் என்பனவற்ருனே பொருளுணரப்பட்டவாறும், 'நீ யென்கிளவி' 'செய்தெனெச்சம்' 'தஞ்சக்கிளவி' 'கடியென்கிளவி' என்பனவற்ருற் பொருளுணரப்படாது அச்சொற் ருமே யுணரப் பட்டவாறுங் கண்டுகொள்க. இனி

"தெரிபுவேறு நிலையலுங் குறிப்பிற் ருேன்றலு
மிருபாற் றென்ப பொருண்மை நிலையே"

பொருண்மை தெரிதல்—சொன்மாத்திரத்தான் விளங்கி வேறு நிற்றலும், சொன் மாத்திரத்தாற் ருேன்ருது சொல்லொடுகூடிய குறிப் பாற் ருேன்றலும் என இரண்டு பகுதித்தாம். அவன், இவன், உவன், வந்தான், சென்ருன், இவை பொருள் தெரிபு வேறு நின்றன. ஒருவர் வந்தார் என்ருற்போல்வனவும், ஆகுபெயராய் வருவனவும், இன்னோ ரன்ன பிறவும், குறிப்பிற்ருேன்றலாம்.

வினையியல்—வினைச்சொல் லிலக்கணம் உணர்த்துதலின், இவ் வோத்து வினையியல் என்னும் பெயர்த்தாயிற்று.

"வினையெனப் படுவது வேற்றுமை கொள்ளாது
நினையுங் காலைக் காலமொடு தோன்றும்"

வினையென்று சொல்லப்படுவது உருபேலாது காலத்தொடு புலப் படும். வேற்றுமைகொள்ளாது என்னுது, காலமொடு தோன்று மெனின், தொழினிலையொட்டின் கண்ணுந் தொழிற்பெயர்க்கண்ணும் அதிவியாத்தியாய் இலக்கண வழுவாம். காலமொடு தோன்றும் என் னுது, வேற்றுமை கொள்ளாதெனின், இடைச்சொற் கண்ணும் உரிச் சொற்கண்ணும் அதிவியாத்தியாய் இலக்கண வழுவாம். தொழினிலை யொட்டெனினும் தொழிற் பெயரெனினும் ஒக்கும். வினைப்பெய ரெனினும் வினையாலணையும் பெயரெனினும் ஒக்கும்.

"காலந் தாமே மூன்றென மொழிப"

இனித் தொழிலது கழிவுணர்த்தும் இறப்பும், தொழில் தொடங் கப்பட்டு முற்றுப் பெருத நிலைமை யுணர்த்தும் நிகழ்வும், தொழில் பிறவாமை யுணர்த்தும் எதிர்வும் எனக் காலம் மூன்ரும்.

"குறிப்பினும் வினையினு நெறிப்படத் தோன்றிக்
காலமொடு வரூஉம் வினைச்சொல் லெல்லா
முயர்திணைக் குரிமையு மஃறிணைக் குரிமையு
மாயிரு திணைக்குமோ ரன்ன வுரிமையு
மம்மூ வுருபின தோன்ற லாறே."

வினைச்சொற்கள் வெளிப்படையாற் காலங் காட்டுவனவும் குறிப்பாற் காலங்காட்டுவனவும் என இரண்டாய், உயர்திணைக் குரியனவும் அஃறிணைக்குரியனவும் இரண்டு திணைக்கும் ஒப்ப வுரியனவும் என மூன்று கூற்றனவாம். உண்டான், உண்ணாநின்றான், உண்பான் என்பன முறையே இறந்தகால முதலிய மூன்றும் வெளிப்படநின்ற வினைச் சொற்கள். கரியன் செய்யன் என்பன காலங் குறிப்பிற்கொள்ள நின்ற வினைச்சொற்கள். வினையும், வினைமுதலும், செயப்படுபொருளும், நிலமும், காலமும், கருவியும், நிமித்தமும், பயனும் எனத் தொழிற்காரகங்கள் எட்டாம். காரகமெனினுங் காரணமெனினு மொக்கும். 'வனைந்தான்' என்றவழி வனைதற்றொழிலும், வனைந்த கருத்தாவும், வனையப்பட்ட குடமும், வனைதற்கிடமாகிய நிலமும், அத்தொழினிகழுங் காலமும், அதற்குக் கருவியாகிய திகிரி முதலாயினவும், வனையப்பட்ட குடத்தைக் கொள்வானும், வனைந்ததனுைய பயனும் ஆகிய எட்டும்பற்றி அத்தொழில் நிகழ்ந்தவாறு கண்டுகொள்க. அஃதேல், தொழிலின் வேறுயது காரகமாகலின், வனைதற் றொழிலுக்கு அத்தொழில்தான் காரகம் ஆமா றென்னையெனின்,—வனைந்தான் என்பது வனைதலைச் செய்தானென்னும் பொருட்டாகலின், செய்தற்கு வனைதல் செயப்படுபொரு ளீர்மைத்தாய்க் காரகமாமென்பது.

இடையியல்—இடைச்சொல் இலக்கணம் உணர்த்துதலின், இவ் வோத்து இடையியல் என்னும் பெயர்த்தாயிற்று.

"இடையெனப் படுப பெயரொடும் வினையொடும்
நடைபெற் றியலுந் தமக்கியல் பிலவே"

இடைச்சொற்கள் தமக்கென வேறோர் பொருளுணர்த்தும் இலக்கண முடையனவல்ல; பெயரொடும் வினையொடும் வழக்குப்பெற் றியல்வனவாம். "அதுகொ றோழி காம நோயே" என்புழிக் கொல் லென்னும் இடைச்சொல் பெயரொடு வழக்குப்பெற்று இயன்றது.

"வருகதில் லம்மவெஞ் சேரி சேர" என்புழித் தில் அம்மஎன்னும் இடைச்சொற்கள் வினையொடு வழக்குப்பெற்று இயன்றன.

உரியியல்— உரிச்சொல்லிலக்கண முணர்த்துதலின், இவ்வோத்து உரியியல் என்னும் பெயர்த்தாயிற்று.

"உரிச்சொற் கிளவி விரிக்குங் காலை
இசையினுங் குறிப்பினும் பண்பினும் தோன்றிப்
பெயரினும் வினையினு மெய்தடு மாறி
ஒருசொற் பலபொருட் குரிமை தோன்றினும்
பலசொல் லொருபொருட் குரிமை தோன்றினும்
பயிலா தவற்றைப் பயின்றவை சார்த்தித்
தத்த மரபிற் சென்றுநிலை மருங்கின்
எச்சொல் லாயினும் பொருள்வேறு கிளத்தல்."

தமக்கியல்பில்லாத இடைச்சொற்போலாது இசை குறிப்புப் பண்பென்னும் பொருட்குத் தாமே யுரியவாதலின், உரிச்சொல்லா யிற்று. பெரும்பான்மையுஞ் செய்யுட்குரியவாய் வருதலின், உரிச் சொல்லாயிற்றென்பாருமுளர். இசைகுறிப்புப் பண்பென்னும் பொருள வாய்ப் பெயர்வினைபோன்றும் அவற்றிற்கு முதனிலையாயுந் தடுமாறி ஒருசொற் பலபொருட்கும் பலசொல் ஒருபொருட்கும் உரியவாய் வருவன உரிச்சொல்லென்றும், அவை பெயரும் வினையும்போல ஈறு பற்றிப் பொருளுணர்த்தலாகாமையின், வெளிப்படாதவற்றை வெளிப் பட்டவற்றோடு சார்த்தித் தம்மை யெடுத்தோதியே அப்பொரு ளுணர்த்துமென்றும் உணர்ந்துகொள்க. குறிப்பு - மனத்தாற் குறித் துணரப்படுவது. பண்பு - பொறியான் அறியப்படுங்குணம். கறுப்பு - பெயர்ப்போலி. தவ - வினைப்போலி. துவைத்தல் - பெயர்க்கு முத னிலை. தாவாத - வினைக்குறிப்பு முதனிலை. பலவுமோதினும், இசை குறிப்புப் பண்பென்னும் மூவகைப்பொருளும் பற்றிவருதலே உரிச் சொற்கு இலக்கணமாம்.

எச்சவியல்—கிளவியாக்கமுதல் உரியியல் ஈறுகக்கிடந்த ஒத்துக்க ளுள் உணர்த்துதற்கு இடமின்மையான் உணர்த்தப்படாது எஞ்சிநின்ற சொல்லிலக்கணமெல்லாந் தொகுத்துணர்த்துதலின், இவ்வோத்து எச்சவியலென்னும் பெயர்த்தாயிற்று. செய்யுட்குரிய சொல்லும், அவற்றிலக்கணமும், அவற்றாற் செய்யுள் செய்வுழிப் படும் விகார

மும், செய்யுட்பொருள்கோளும், அறுவகைத்தொகைச் சொல்லுமுதலாயின இவ்வியலாற் கூறப்படுவனவாம். வடநூலார் தொகைச்சொல்லைச் சமாசமென்பர்.

## பொருளதிகாரம்

பொருளதிகாரமென்பது பொருளினது அதிகாரத்தை யுடையது என அன்மொழித் தொகையாய்ப் படலத்திற்குக் காரணக்குறியாயிற்று. ஈண்டு அதிகார மென்றது பொருளை நுதலிவரும் பலவோத்தினது தொகுதியை. இஃது நாண்மீனின்பெயர் நாளிற்குப் பெயராயினாற்போல்வதோர் ஆகுபெயர். இவ்வதிகாரத்து எழுத்துச்சொற் கருவியாக வுணரப்படும் பொருளிலக்கணம் உணர்த்தப்படும். பொருளாவன: அறம், பொருள், இன்பம், வீடு என நான்காம். அறம், பொருள், இன்பம், வீடு என்பனவற்றை வடநூலார் முறையே தருமம், அருத்தம், காமம், மோக்கம் என்பர். பொருளெனப் பொதுப்படக் கூறுதலின், காட்சி, அனுமானம், உரையென்னும் அளவை மூன்றானும் அளந்தறியப்படும் பொருளெல்லாம் இந்நான்கு பொருளின் அடக்கிக் கொள்ளப்படும். எழுத்துஞ் சொல்லும் ஆராய்வதெல்லாம் பொருட்பெற்றிதேறி உறுதிப்பயன் தலைக் கூடுதற்காகலின், எழுத்துஞ்சொல்லும் ஆராய்ந்தார் அவ்வுணர்ச்சி கருவியாகக்கொண்டு பொருளிலக்கணம் ஒருதலையான் ஆராய்ந்தும் உறுதி தலைக்கூடக் கடவராவரென்க.

“எண்ணென்ப வேனை யெழுத்தென்ப விவ்விரண்டுங்
கண்ணென்ப வாழு முயிர்க்கு”

எனத் தெய்வப்புலமைத் திருவள்ளுவ நாயனார் ஓதியருளிய தூஉம் இது நோக்கியென்று தெளிக. ஈண்டு, எண்—தருக்கம், எழுத்து—இயற்றமிழ். எனவே, முகத்துக் கண்ணுடையராயினர் அது கருவியாக உருவப்பொருணாடிக் காண்டலைப் பயனாகக் கொள்ளுதல்போல, எண்ணுமெழுத்தும் என்னும் அறிவுக்கண்ணுடையராயினர் அவ்வுணர்ச்சி கருவியாகப் பொருளிலக்கணம் ஆராய்ந்து கண்டு உறுதி தலைக்கூடு தலைப்பயனாகக் கொள்ளவேண்டும் என்பதாயிற்று. இனி அவ்வாறு முயலாது அக்கருவி நூல் உணர்ச்சிமாத்திரையே அமையுமென்றிருப்பரேல், அக்கல்வி அவர்க்கு வீண்உழப்பாவதல்லது பயப்பாடுடைத்தாமாறு இன்றென்பார்,

"சத்தமுஞ் சோதிடமு மென்றுங் கவைபிதற்றும்
பித்தரிற் பேதையா ரில்"

என்றார் நீதிநூலோரென்க. எழுத்துஞ் சொல்லும் பொருளும் என்னும் இயற்றமிழாராய்ந்தார் முதனூற்பொருளுணர்ந்து வீடுபேறு ஒரு தலையாற் றலைக்கூடுவரென்பது,

"எழுத்தறியத் தீரு மிழிதகைமை தீர்ந்தான்
மொழித்திறத்தின் முட்டறுப்பா னாகு
மொழித்திறத்தின் முட்டறுத்த நல்லோன்
முதனூற் பொருளுணர்ந்து கட்டறுத்து வீடுபெறும்"

என்பதனான் உணர்க.

இனி எழுத்துஞ் சொல்லும் ஆராய்ந்து வல்லராக முயல்வார் இக்காலத்துப் பலருளர். அவ்வாராய்ச்சி கருவியாகப் பொருளாராய்ந்து உறுதி தலைக்கூட முயல்வார் அரியர். இங்ஙனம் பொருளதிகாரமாராய்ந்து வல்லராக முயல்வார் அரியராயிற்று. இந்நிகழ்காலத்து மாத்திரமன்று; அச்செல்காலத்தும் உண்டென்பது. அது "அரசன் இனிநாடு நாடாயிற்று ; நூல் வல்லாரைக் கொணர்கவென்று எல்லாப் பக்கமும் போக்க, எழுத்ததிகாரமுஞ் சொல்லதிகாரமும் யாப்பதிகாரமும் வல்லாரைத் தலைப்பட்டுக் கொணர்ந்து,பொருளதிகாரம் வல்லாரைத் தலைப்பட்டிலேமென்று வந்தார் ; வர அரசனும் புடைபடக் கவன்று, என்னை ? எழுத்துஞ் சொல்லும் யாப்பும் ஆராய்வது பொருளதிகாரத்தின் பொருட்டன்றே! பொருளதிகாரம் பெறேமேயெனின்,— இவை பெற்றும் பெற்றிலேம் என்று சொல்லிக் கவன்றிட்டான்" என நக்கீரனார் இறையனார் களவியல் உரைமுகத்து உரைக்குமாற்றானறிக.

எழுத்துஞ் சொல்லும் ஆராய்ந்தார் அவ்வுணர்ச்சி கருவியாகப் பொருளாராய்ந்து வீடுபேற்றுறுதிப்பயன் தலைக்கூடற்பாலரென்ப தொக்குமன்! அவ்விழுப்பமுடைய பொருணூல் தாம் இறைவனருளிச் செய்த முதனூல்களும் அவைபோல்வனவாம் மெய்ந்நூல்களுமேயாம். அவற்றின்கணன்றே தத்துவம் ஆராயுமாறும், பொய்ப்பொருள்களின் வேறாக மெய்ப்பொருள் காணுமாறும், வீடு தலைக்கூடுமாறும், வீடு பேற்றிலக்கணமும் கூறப்பட்டன. தொல்காப்பியப் பொருளதிகாரம் உலகியல் வழக்குரைப்ப தொன்றாகலின், அதனாராய்ச்சியானே வீடு

பேற்றுறுதிப்பயன் தலைக்கூடுமாறு யாங்ஙனமெனின்,—நன்று வினு யினுய்! வீடுபேறடைவிக்கும் விழுப்பொருணூல் இறைமுதற்கடவுள் அருளிச்செய்த முதனூல்களும் அவ்வியல்புடைய மெய்ந்நூல்களு மென்பது நன்மக்க ளெல்லார்க்கும் ஒப்ப முடிந்ததேயாம். அற்றுயி னும், அவ்விறைவன் அன்னதோர் முதனூல் தமிழின்கட் செய்திலனுக லின், அவ்விறைவனியல்பு உள்ளவாறுணர்ந்த அருந்தவக்கொள்கை அகத்தியனாரும் அவர் மாணுக்கரான தொல்காப்பியனுர் முதலியோ ரும் அவ்விறைவனருளால் தமிழுலகம் உணர்ந்து உறுதி தலைக்கூடற் பொருட்டுத் தாமியற்றியருளிய தமிழியல்வழக்கு நூல்களின்கண் அம் முதனூல்கள் கூறும் நுண்பொரு ளியல்களைத் தூலாவருந்ததி நியாய முறைபற்றி அகப்பொருள் புறப்பொருளென்று இருதிறத்தாற் பதினேற் றிணைப் பகுதியவாய்ச் செய்யுளாற் புனைந்து பாடுதற்குரிய இன்பமுதலிய உலகியல் வழக்கின்மேல்வைத்து இயற்றமிழ் ஒழிபாகக்கொண்டு அங் ஙனம் ஓதியருளினுராகலின், அவரியற்றிய அகத்தியந் தொல்காப்பிய முதலியன தமிழியல் வழக்கு நூலாதலே யன்றி, அவ்விறைவன் அரு ளிய முதனூல் நுண்பொருள் உணர்தற்காம் அறிவின் மதுகையை யொருதலையாகப் பயக்கும் விழுப்பொருள் நூலுமாமென்று உணர்ந்து கொள்க. இம்முறை இறையனுர் களவியலுக்கும் ஒக்கும். இறைமுதற் கடவுள், உயிர்கள் சோபானமுறையானே அங்ஙனம் பொருள்களின் மெய்ம்மை தேறி வீடுபேற்றுறுதிப்பயன் தலைக்கூடுதற்கன்றே வேதா கமமென முதனூல்கள் முறையே சூத்திரமும் பாடியமும்போலப் பொதுவுஞ் சிறப்புமாக அவ்வாறு இருவேறு வகைப்பட அருளிச்செய் ததூஉமென அறிக. வாதவூரடிகள், திருக்கோவை திருவாசகமென உண்மைச் செந்தமிழ்த் திருமுறைகண் முறையே உலகியலும் வீட்டி யலும் நுதலி அவ்வாறிருவகையால் திருவாய்மலர்ந்தருளியதூஉம், இக்கருத்து நோக்கியேயென்று துணிக. அற்றேல் அஃதங்ஙனமாக; தொல்காப்பியப் பொருளதிகாரம் அகத்திணை, புறத்திணை, களவு, கற்பென்று இன்னோரன்ன இயல்களானே இல்லறமும் பொருளும் இன்பமும் உணர்த்துதலின், அம்முத்திறத் துறுதிப்பொருள் நூலாவ தல்லது, நிலையாமை, துறவு, மெய்புணர்வு, அவாவறுத்தல் என்றற் ருெடக்கத்து வீட்டியல் தெரிக்கும் ஓத்துக்களுடைத்தாகாமையின், வீடுபேற் றுறுதிப்பொருள் நூலுமாமென்றல் சாலாதெனின்,—அஃது

உலகியல் வழக்குநூலாதலின், பெரும்பான்மையான் நால்வகை வருணத்தார்க்கும் உரிய இல்லறம் பொருள் இன்பம் உணர்த்துவதாயிற்று. ஆயினும், அகத்திணையியலுட் பிரிதல் நிமித்தங் கூறுதலானும், புறத்திணையியலுள் வெட்சி முதலாக வாகையீறாக அறனும் பொருளும் பயக்கும் அரசியல்கூறி, அவற்றது நிலையாமை காஞ்சியுட் கூறுதலானும், "அறுவகைப் பட்ட பார்ப்பனப் பக்கமும்" என்னும் புறத்திணையியற் சூத்திரத்துங் "காமஞ் சான்ற" என்னுங் கற்பியற் சூத்திரத்துந் துறவும் மெய்யுணர்வும் அவாவறுத்தலுங் கூறுதலானும், வீட்டியலுறுதிப் பெரும்பயனுங் கூறிற்றேயாம். ஆகலின், சாலாமை யாண்டையது என்க.

அகத்திணையியல்—ஒத்த அன்பான் ஒருவனும் ஒருத்தியுங் கூடுகின்ற காலத்திற் பிறந்த இன்பம் அக்கூட்டத்தின் பின்னர் ஒருவர்க்கொருவர் இவ்வாறிருந்ததெனப் புலப்படக் கூறப்படாததாய் யாண்டும் உள்ளத்துணர்ச்சி நுகர்வதாவதோர் பொருளாகலின், அது அகமெனப்படும். எனவே, அகத்தே நிகழ்கின்ற இன்பத்திற்கு அகமென்றது ஓர் ஆகுபெயராம். இஃதொழிந்தன ஒத்த அன்புடையர் தாமேயன்றி எல்லாரானுந் துய்த்துணரப்படுதலானும், இவை யிவ்வாறிருந்தவெனப் பிறர்க்குக் கூறப்படுதலானும், புறமெனப்படும். இன்பமேயன்றித் துன்பமும் அகத்து நிகழுமாலெனின்,—அது புறத்தார்க்குப் புலனாதல் மறைக்கப்படாமையின் புறத்திணைப்பாலதாம். மற்றுக் காமநிலையின்மையான் வருந் துன்பம் யாண்டடங்குமெனின்,—அதுவுந் தாபதநிலை தபுதாரநிலையென வேறுய்ப் புறத்திணைக்கட்டானேயடங்குமென்பது. திணை—ஒழுக்கம். இயல்—இலக்கணம். எனவே, அகத்திணையியலென்றது—இன்பமாகிய வொழுக்கத்தினது இலக்கணமென்றவாறாயிற்று. இனி ஒழுக்கம் நிகழுதற்கு இடனாகலின், குறிஞ்சி முதலியவுந் திணையெனப்படும்.

> "கைக்கிளை முதலாப் பெருந்திணை யிறுவாய்
> முற்படக் கிளந்த வெழுதிணை யென்ப"

எண்வகை மணனும் எதிர்சென்று கூறப்படுதலானும், காமஞ் சாலா விளமைப்பருவம் அதன்கண்ணதாகலானும், கைக்கிளையை முன் வைத்தார். காமஞ் சால்வுழி நிகழும் அன்புடைக் காமவொழுக்கமாக

லின், ஐந்திணையை அதன்பின் வைத்தார். பொருந்தாக் காமவொழுக்க மாகலின், பெருந்திணையை இறுதிக்கண் வைத்தார். இவ்வின்ப வொழுக்கம், கைக்கிளைத்திணை, முல்லைத்திணை, குறிஞ்சித்திணை, மருதத்திணை, நெய்தற்றிணை, நடுவுநிலைத்திணை, பெருந்திணையென எழு பெற்றித்தாம். கற்பொடு பொருந்திக் கணவன் சொற்பிழையாது இல் லிருந்து அறஞ்செய்தல் மகளிர்க்கு மரபாதலானும், அவ்வில்லறம் புணர்ச்சிபற்றியல்லது நிகழாமையானும், புணர்ச்சிப்பின் ஆராமை பற்றி ஊடல் நிகழ்தலானும், ஊடற்கண் பிரிந்திரங்குதல் உண்மையா னும், அப்பிரிவு ஓதல் பகை தூதென்று இவை காரணமாகப் பலவாய் நீட்டித்து நிகழ்தலுண்மையானும், முல்லை, குறிஞ்சி, மருதம், நெய்தல், பாலையென்று அவ்வாறு கோத்திட்டாரென்று உணர்க.

கைக்கிளை - ஒரு மருங்கு பற்றிய கேண்மை; முல்லை - கற்பு; குறிஞ்சி - புணர்ச்சி; மருதம் - ஊடியுங் கூடியும் போகநுகர்தல்; நெய்தல் - இரங்குதல் என்றார் நச்சினார்க்கினியர்: பிறர் முல்லை முதலிய பூக்களானே அவற்றிற்கிடனாகிய காடுறை யுலகம் முதலிய நான்கும் அவ்வாறு வழங்கப்பட்டன என்பர். எல்லாவற்றினும் பெரிதாகிய திணையாதலின், பெருந்திணையாயிற்று. என்னை? கைக்கிளைமுதல் ஆறுதிணையு நான்கு மணம்பெறத் தானொன்று நான்கு மணம்பெற்று நடத்தலினென்க. "நடுவுநிலைத்திணை

"நடுவுநிலைத் திணையே நண்பகல் வேனிலொடு
முடிவுநிலை மருங்கின் முன்னிய நெறித்தே"

என்றோதுதலின், அது நடுவுநிற்றல் காரணத்தாற் பெற்ற பெயர். ஏனை நாற்றிணையும் முறையானே கூறி, இறுதிக்கண் ஓதுதலான், இஃது அவற்றின் வேறென்பது விளங்குதலானும், எஞ்சி நின்றது பாலையேயாகலானும், புறப்பொருள் கூறுங்கால்,

"வாகை தானே பாலையது புறனே"

என நடுவுநிலைத்திணை கூறுந் தானத்திற் பாலையெனக் குறியிட்டாளுதலானும், பாலைத்திணை நடுவுநிலைத்திணை யென்பன ஒரு பொருட்கிளவி. அஃதெவற்றின் நடுவுநிற்பது என்றவாவுங்கால்,

"நடுவ ணைந்திணை நடுவண தொழியப்
படுதிரை வையம் பாத்திய பண்பே"

என நிலம்பகுத்தோதுங்கால், நடுவணதெனக் குறியிட்டாராகலின், அங்ஙனம் பகுக்கப்படும் நிலங்களுமாகாது அவற்றின் வேறுமாகாது தனக்குரிய நிலம் நடுநிகர்த்ததாய் நிற்றல்பற்றி அவ்வாறு குறியிட்டு ஆளப்பட்டது" என்றார் சூத்திரவிருத்திகாரர். அங்ஙனமாதல்,

"முல்லையுங் குறிஞ்சியு முறைமையிற் றிரிந்து
நல்லியல் பழிந்து நடுங்குதுய ருறுத்துப்
பாலை யென்பதோர் படிவங் கொள்ளும்"

என்னுஞ் சிலப்பதிகாரத்தானு முணர்க. இவ்வுண்மையுணராதார் பாலை சான்ற சுரம் நானிலத்துள் அடங்காதென வேறுவைத் தெண்ணி ஆசிரியர் தொல்காப்பியனாரோடு மாறுகொண்டு நிலம் ஐந்தெனத் தமக்கு வேண்டியவாறு கூறுப.

இனி நடுவணைந்திணை முதல், கரு, உரியென மூன்றும். இவை அகத்திணைக் கன்றிப் புறத்திணைக்கும் உரியவாம். இனி முதலிற் கருவும் கருவி லுரியுஞ் சிறந்து வரும். இம்மூன்றும் பாடலுட் பயின்று வரும். வழக்கினுள் வேறு வேறு வருவதன்றி ஒருங்கு நிகழா. இன்னும், இவை புலனெறிவழக்கிற் பயின்றவாற்றான் வரையறுத்துக் கூறப்படுவதன்றி வழக்கு நோக்கி இலக்கணங் கூறப்படா.

முதற்பொருள்--நிலமுங் காலமும்என முதல் இருவகைப்படும். மேற்பகுத்த முல்லை முதலாய நான்குநிலம் முதற்பொருளாம். அந்நான்கும் முறையானே காடு உறையுலகம், மை வரையுலகம், தீம்புனல் உலகம், பெருமணல்உலகமென்று அவ்வாறுவழங்கப்படும். கார்,கூதிர்,முன்பனி, பின்பனி, இளவேனில், முதுவேனில் என்னும் பெரும்பொழுதாறும், காலை, நண்பகல், மாலை, வைக்றையாமம், விடியல் என்னுஞ் சிறுபொழுதைந்தும், கால முதற்பொருளாம். விடியலெனினும் எற்பாடெனினும் ஞாயிற்றின் உதயமெனினும் ஒக்கும். படுதல்—உண்டாதலென்னும் பொருட்டு. இப்பொருள் காணாதார் எற்பாடு பின்பகலென்றும், வைகுறுவிடியலென்னும் வினைத்தொகையை வைகுறுவும் விடியலுமென உம்மைத்தொகை யாக்கி, வைகறையை வைகுறுவெனவும் நாள் வெயிற்காலையை விடியலெனவும் கொண்டு, பெரும்பொழுது போலச் சிறுபொழுதும் அறுவகைப்படுமென்பர். அது பொருந்தாமை சூத்திரவிருத்தியுட் காண்க.

முல்லைக்குக் காடும் காடுசார்ந்த இடமும் நிலம்; பொழுது காரும் மாலையும். குறிஞ்சிக்கு மலையும் மலைசார்ந்த இடமும் நிலம்; பொழுது கூதிரும் யாமமும் முன்பனியும். மருதத்திற்குப் பழனமும் பழனஞ் சார்ந்த இடமும் நிலம்; பொழுது வைகறையாமம். நெய்தற்குக் கடலுங் கடல்சார்ந்த இடமும் நிலம்; பொழுது எற்பாடு. பாலைக்கு நிலமின்று; பொழுது நண்பகலும் வேனிலும் பின்பனியும்.

உரிப்பொருள்—புணர்தலும் புணர்தல் நிமித்தமும், பிரிதலும் பிரிதல் நிமித்தமும், இருத்தலும் இருத்தல் நிமித்தமும், இரங்கலும் இரங்கல் நிமித்தமும், ஊடலும் ஊடல் நிமித்தமும் என்பன உரிப்பொருளாம். இவை முறையானே குறிஞ்சி, பாலை, முல்லை, நெய்தல், மருதம் என்பனவற்றிற்கு உரியபொருளாம். அகப்பொருளாவது புணர்ச்சியாகலானும் அஃதிருவர்க்கும் ஒப்ப நிகழ்தலானும் முன்னர்ப் புணர்ச்சியும், புணர்ந்துழியல்லது பிரிவின்மையானும் அது தலைவன் கண்ணதாகிய சிறப்பானும் அதன் பின்னர்ப் பிரிவும், பிரிந்துழிக் கற்பாற் றலைவி யாற்றியிருத்தன் முறையாகலின் அதன்பின்னர் இருத்தலும், அங்ஙனம் ஆற்றியிராது பிரிவு நீட்டித்துழிக் காமங் கைமிக்கு அழுங்கல் இயல்பாகலின் அதன்பின்னர் இரங்கலும், பிரிவின் திறனுகிய பரத்தையிற் பிரிந்துழித் தலைவன் தவறு நோக்கித் தலைவி கலாய்த்தல் இயல்பாகலானுங் காமத்திற்குச் சிறத்தலானும் அதன் பின்னர் ஊடலும் வைக்கப்பட்டன என்று உணர்க.

கருப்பொருள்—தெய்வம், உணா, விலங்கு, மரம், புள், பறை, செய்தி, யாழென்பனவும் பிறவும் ஐந்திணைக் கருப்பொருள்களாம்.

முல்லைக்குத் தெய்வம் - மாயோன். உணா-வரகுஞ் சாமையும். மா-முயலுஞ் சிறுமானும். மரம் - கொன்றையுங் குருந்தும். புள் - கானங்கோழியும் மயிலும் சிவலும். பறை - ஏறுகோட்பறையும் முரசும். செய்தி - வரகு களைகட்டலும் வையறுத்தலுங் கடாவிடுதலும் நிரைமேய்த்தலும். பண் - முல்லை. தலைமகன் - குறும்பொறைநாடன். தலைமகள் - கிழத்தி, மனைவி. பூ - முல்லையுந் தோன்றியும் பிடவுந் தளவும். நீர் - கான்யாறு. ஊர் - பாடியுஞ் சேரியும். மக்கள் - இடையர், இடைச்சியர், ஆயர், ஆய்ச்சியர்.

குறிஞ்சிக்குத் தெய்வம் - முருகவேள். உணா - ஐவனநெல்லுந் தினையும் மூங்கிலரிசியும். மா - புலியும் பன்றியும் யானையும். மரம் - அகிலும் ஆரமும் திமிசும் தேக்கும் வேங்கையும். புள்-கிளியும் மயிலும். பறை - வெறியாட்டுப் பறையும் தொண்டகப்பறையும் குரவைப்பறையும். செய்தி-தேன் அழித்தலுங் கிழங்கு அகழ்தலுந் தினைவிளைத்தலுந் தினைக்கிளிகடிதலும். யாழ் - குறிஞ்சியாழ். தலைமகன் - சிலம்பன், வெற்பன், பொருப்பன். தலைமகள் - கொடிச்சி, குறத்தி. நீர் - அருவி நீருஞ் சுனைநீரும். ஊர் - சிறுகுடியும் குறிச்சியும். பூ - குறிஞ்சியும் வேங்கையுஞ் சுனைக்குவளையுங் காந்தளும். மக்கள் - குறவர், இறவுளர், குன்றவர்.

மருதத்திற்குத் தெய்வம் - இந்திரன். உணா - செந்நெல்லும் வெண்ணெல்லும். மா - எருமையும் நீர்நாயும். மரம் - வஞ்சியுங் காஞ்சியும் மருதும். புள் - நீர்க்கோழியுந் தாராவும். பறை-மணமுழவும் நெல்லரிகிணையும். செய்தி - நெல்நடுதலுங் களைகட்டலும் அரிதலுங் கடாவிடுதலும். யாழ் - மருதயாழ். தலைமகன் - ஊரன், மகிணன். தலைமகள் - கிழத்தி, மனைவி. பூ - தாமரைப்பூவுஞ் செங்கழுநீர்ப்பூவும். நீர் - மனைக்கிணறும் பொய்கையும். மக்கள் - கடையர், கடைசியர், உழவர், உழத்தியர். ஊர் - பேரூர்.

நெய்தற்குத் தெய்வம் - வருணன். உணா - மீன்விலையும் உப்பு விலையும். மா - சுறாவும் முதலையும். முதலையுஞ் சுறாவும் மீனாதலின் மாவென்றல் மரபன்றென்றும், உமண் பகடுபோல்வன ஆண்டு மா வெனப்படுமென்றுங் கூறினர் நச்சினார்க்கினியர். ஆசிரியர் தொல்காப்பியனார் விதந்து சுட்டாது,

> "மாவு மாக்களு மையறி வினவே"

எனப் பொதுப்பட வோதுதலானும், 'இடங்கர்மா' வென்னும் இலக்கிய வழக்குண்மையானும், நக்கீரனார் நெய்தற் கருப்பொருள் தெரிப்புழி, 'மா - சுறாவும் முதலையும்' என்றாராகலானும், பகடு ஏனைநிலக் கருப்பொருளாகலின்,

> "எந்நில மருங்கிற் பூவும் புள்ளும்
> அந்நிலம் பொழுதொடு வாரா வாயினும்
> வந்த நிலத்தின் பயத்த வாகும்"

என்னும் அகத்திணையியற் சூத்திரத்தொன்றென முடித்தலானே நெய்தற்கண்வந்து அந்நிலக் கருப்பொருளெனப்பட்டு அவ்வாறு வழங்கப் பட்டதல்லது நெய்தற்குரிய கருப்பொருளாகாமையானும், அவ்வுரை கொள்ளற்க. மரம் - புன்னையும் ஞாழலுங் கண்டலும். புள் - அன்னமும் அன்றிலும் அகன்றிலும். பறை - மீன்கோட்பறையும் நாவாய்ப்பறையும். செய்தி - மீன்படுத்தலும் உப்புவிளைத்தலும் அவை விற்றலும். யாழ் - விளரியாழ். தலைமகன் - கொண்கன், சேர்ப்பன், துறைவன். தலைமகள் - நுளைச்சி, பரத்தி. நீர் - மணற்கிணறும் உவர்க்குழியும். பூ - வெள்ளிதழ்க்கைதையும் நெய்தலும். ஊர் - பட்டினமும் பாக்கமும். மக்கள் - பரதர், பரத்தியர், நுளையர், நுளைச்சியர்.

தொல்காப்பியனர் பாலைக்கு நிலம் வேண்டிற்றிலர், வேண்டாமையின் தெய்வமும் வேண்டிற்றிலர் ; பிறர் பகவதியையும் ஆதித்தனையுந் தெய்வமென்று வேண்டுவர். உணா - ஆறலைத்தனவும் ஊரெறிந்தனவும். மா - வலியழிந்த யானையும் புலியுஞ் செந்நாயும். மரம் - இருப்பையும் ஓமையும். புள் - கழுகும் பருந்தும் புறவும். பறை - பூசற்பறையும் ஊரெறிபறையும் நிரைகோட்பறையும். செய்தி-சூறையாடலுஞ் சுரத்தெறிதலும். யாழ் - பாலையாழ். தலைமகன் - மீளி, காளை, விடலை. தலைமகள் - எயிற்றி, பேதை. பூ - மராவுங் குராவும் பாதிரியும். நீர் - அறுநீர்க்கூவலும் அறுநீர்ச்சுனையும். மக்கள் - எயினர், எயிற்றியர், மறவர், மறத்தியர். ஊர் - பறந்தலை, கொல்குறும்பு.

இக்கூறப்பட்ட கரு மயங்கியும் வரப்பெறும் ; என்னை ?

“ எந்நில மருங்கிற் பூவும் புள்ளும்
அந்நிலம் பொழுதொடு வாரா வாயினும்
வந்த நிலத்தின் பயத்த வாகும் ”

என்று ஆசிரியர் ஓதுதலின்.

புறத்திணையியல்—அகத்திணைக்கண் மாலை, யாமம், வைகறை, காலை, நண்பகல் என்னுங் கால முதற்பொருள் ஐந்தும்பற்றி முல்லை, குறிஞ்சி, மருதம், நெய்தல், பாலையென்று அங்ஙனம் முறைதெரித்தோதிய ஆசிரியர், தமக்கென நிலமுடைய குறிஞ்சி முல்லை மருதம் நெய்தல் என்னும் நான்கும்பெற்ற இலக்கணங்களோடு ஒருபுடையொப்புமையாற் சார்புடைய வாதலும், நிலமில்லாத பாலை பெருந்திணை கைக்கிளை

யென்பன பெற்ற இலக்கணங்களோடு ஒருபுடை யொப்புமையாற் சார்புடையவாதலும்பற்றி, முறையே வெட்சி, வஞ்சி, உழிஞை, தும்பை, வாகை, காஞ்சி, பாடாண்டிணை யென்பனவற்றை அவற்றிற்குப் புறனாக நிறுத்தி அவற்றதிலக்கணங் கூறுதலின், இது புறத்திணை யியலென்னும் பெயர்த்தாயிற்று. அகத்திணைப் பொருளான இல்லறத்திற்கு முல்லை சிறத்தலின் ஆண்டு அதனை முதலாகவைத் தெண்ணினர்; புறத்திணையான அரசியற்குப் பொருள் இன்றியமையாமையின், அப்பொருள் முடித்தற்குக் களவொழுக்கமுங் கங்குற்காலமுங் காவலர் கடுகினுந் தான் கருதிய பொருளை இரவின்கண் முடித்து மீள்தலும் போலும் இலக்கணங்களுடைய குறிஞ்சி சிறத்தலின், ஈண்டு அதனை முதலாகவைத்து எண்ணினர் ஆசிரியரென்றுணர்க.

வெட்சித்திணை—

"அகத்திணை மருங்கின் அரில்தப வுணர்ந்தோர்
புறத்திணை யிலக்கணந் திறப்படக் கிளப்பின்
வெட்சி தானே குறிஞ்சியது புறனே
உட்குவரத் தோன்றும் ஈரேழ் துறைத்தே"

களவொழுக்கமுங் கங்குற்காலமுங் காவலர் கடுகினுந் தான் கருதியபொருளை இரவின்கண் முடித்து மீள்தலும் போல்வன ஒத்தலின், வெட்சித்திணை குறிஞ்சிக்குப் புறனாயிற்று. வெட்சித்திணையாவது— களவின்கண் நிரைகொள்ளும் ஒழுக்கம். இதற்கு அப்பூச்சூடுதலு முரித்து. இஃது ஏனைத் திணைக்கண்ணும் பொருந்துவன கொள்க.

"வேந்துவிடு முனைஞர் வேற்றுப்புலக் களவின்
ஆதந் தோம்பல் மேவற் றாகும்"

களவு நிகழ்கின்ற குறிஞ்சிப் பொருளாகிய கந்தருவமணம் வேதவிதியானே இல்லறமாயினாற்போல, இருபெருவேந்தர் பொருவது கருதியக்கால் ஒருவர் ஒருவர் நாட்டுவாழும் அந்தணரும் ஆவுமுதலியன தீங்குசெய்யத் தகாத சாதிகளை ஆண்டு நின்றும் அகற்றல் வேண்டிப் 'போதருக' எனப் புகறலும், அங்ஙனம் போதருதற்கு அறிவில்லாத ஆவினைக் களவினால் தாமே கொண்டு வந்து பாதுகாத்தலும், தீதெனப்படாது அறமேயாயிற்று. ஆ கோடல் - அடித்துக்கோடலு மீட்டுக்கோடலுமென இரண்டாம். இவ்விரண்டும் வெட்சித்திணை

எனவேகொண்டார் ஆசிரியர். இவ்வெட்சித்திணை படைஇயங்கு அரவம் முதலிய பதினான்கு துறைகளையுடைத்து. இத்துறைகள் கொள்வோர்க்கும் மீட்போர்க்கும் உரியவாகலின், அவ்வாற்றான் இருபத்தெட்டுத் துறைகளாம். வேத்தியலின் வழீஇத் தன்னுறுதொழிலாய்வரும் இத் திணைவழு, "வெறியறி சிறப்பின் வெவ்வாய் வேலன், வெறியாட் டயர்ந்த காந்தள்" முதல் இருபத்தொன்றாம்.

வஞ்சித்திணை—

"வஞ்சி தானே முல்லையது புறனே"

முதலெனப்பட்ட காடுறை யுலகமும் அந்நிலத்திற்கேற்ற கருப்பொருளும் பாசறைக்கண் தலைவியைப் பிரிந்திருத்தலுந் தலைவி தலைவற் பிரிந்து மனைவயினிருத்தலுமாகிய உரிப்பொருளும் ஒப்பச் சேறலின், வஞ்சி முல்லைக்குப் புறனாயிற்று.

"எஞ்சா மண்ணசை வேந்தனை வேந்தன்
அஞ்சுதகத் தலைச்சென் றடல்குறித் தன்றே"

வஞ்சித்திணையாவது—ஒரு வேந்தன் மண்நசையானே மற்றொரு வேந்தனைக் கொற்றங்கோடல் குறித்து மேற்சேறலாம். ஒருவன் மண்ணசையான் மேற்சென்றால் அங்ஙனம் மேற்செல்லப்படுவானும் அம்மண் அழியாமற் காத்தற்கு எதிரே வருதலின், மேற்சேறல் இருவர்க்கும் பொதுவாம். இனி ஒருவன் அங்ஙனம் மேற்சென்றுழி, ஏனோன் எதிர்செல்லாது தன்மதிற்புறத்து வருந்துணையும் இருப்பின், அஃது உழிஞையின் அடங்குமென்க. இவ்வாற்றானே இருவரும் வஞ்சிவேந்தராதலும் ஈண்டுக்கூறுந் துறையெல்லாம் இருவர்க்கும் பொதுவாதலுங் கொள்க. இவ்வஞ்சித்திணைத் துறை இயங்கு படையரவமுதற் பதின்மூன்றாம்.

உழிஞைத்திணை—

"உழிஞை தானே மருதத்துப் புறனே"

இருபெருவேந்தர் தம்முள் மாறுகொண்டவழி எதிர்செலற்கு ஆற்றாது போய் மதிலகத்திருந்த வேந்தன் மதில் பெரும்பான்மையும் மருதத்திடத்ததாகலானும், அம்மதிலை முற்றுவோனும், அந்நிலத்திருத்தலானும், ஒருவன் வாயில்வேண்டத் திறவாது அடைத்திருந்த ஒப்புமையானும், உள்ளிருந்தோனும் புறப்பட விரும்புதலானும், மருதம்

போல இதற்கும் பெரும்பொழுது வரைவின்மையானும், புலரிக் காலமே போர்செயத் தொடங்குங் காலமாகலானும், உழிஞைத்திணை மருதத்திற்குப் புறனாயிற்று.

"முழுமுதல் அரணம் முற்றலுங் கோடலும்
*அனைநெறி மரபிற் றாகு மென்ப"

உழிஞையாவது—போர்மேற்சென்ற வேந்தன் வேற்று வேந்தன் அரணினை முற்றுதலும், இருந்தவேந்தன் கைக்கொண்டு காத்தலு மாகிய மரபிற்றும். இது மதின்முற்றிய புறத்தோன் கூறும் நான்கும் மதில் காத்திருந்த அகத்தோன் கூறும் நான்குமென எட்டுவகையினை யுடைத்து. அவைதாம்: "கொள்ளார் தேஎங் குறித்த கொற்றங்" கூறல் முதலியவும், அகத்தோன் செல்வங் கூறுதல் முதலியவுமாம். இனி இவ்விருவர்க்கும் ஒன்றாய்ச் சேறற்குரியவாகுந் துறை நாட் கோடல் முதற் பன்னிரண்டாம்.

தும்பைத்திணை—

"தும்பை தானே நெய்தலது புறனே"

தும்பையென்பது சூடும்பூவினாற்பெற்ற பெயர். நெய்தற்குரிய பெருமணலுலகம் பொருகளமாக வேண்டுதலானும் பெரும்பொழுது வரைவின்மையானும், தலைவர்ப்பிரிந்தார் இராக்காலமுழுதுந் துயில வத்தையாற் கழிய உணர்வுகூடி எழுந்திரங்குங்காலம் உதயமாதலா னும், பிற காரணங்களானும், தும்பைத்திணை நெய்தற்குப் புற னாயிற்று.

"மைந்து பொருளாக வந்த வேந்தனைச்
சென்றுதலை யழிக்குஞ் சிறப்பிற் றென்ப"

தும்பைத்திணையாவது—ஒருவேந்தன் தன்வலியினை உலகமீக் கூறல் வேண்டி மேற்சென்றானை, அங்ஙனம் மேற்செல்லப்பட்ட வேந் தனும் அவன் கருதிய மைந்தே தான்பெறும் பொருளாகவேண்டி எதிர் சென்று அவன் தலைமை தீர்க்குஞ் சிறப்பிற்று. நெய்தற்புறனான இத் தும்பைத்திணை வெட்சிப்புறத்துத் தும்பை, வஞ்சிப்புறத்துத் தும்பை, உழிஞைப்புறத்துத் தும்பைகளுமாம். இத்தும்பைத்திணைத் துறை, "தானை, யானை, குதிரை யென்ற நோனாருட்கும் மூவகை நிலை" முதற் பன்னிரண்டாம்.

---

*பன்னெறி என்றும் பாடம்.

வாகைத்திணை—

"வாகை தானே பாலையது புறனே"

பாலைக்குப் புணர்ச்சியின் நீங்கி இல்லற நிகழ்த்திப் புகழெய்துதற்குப் பிரியுமாறுபோலச் சுற்றத்தொடர்ச்சியினீங்கி அறப்போர் செய்து துறக்கம் பெறுங் கருத்தினுற் சேறலானும், பாலை தனக்கென ஓர் நிலனின்றி நால்வகை நிலனும்பற்றி நிகழுமாறுபோல முற்கூறிய புறத்திணை நான்கும்பற்றி நிகழ்தலானும், வாகைத்திணை பாலைக்குப் புறனுயிற்று.

"தாவில் கொள்கைத் தத்தம் கூற்றைப்
பாற்பட மிகுதிப் படுத்த லென்ப"

வாகைத்திணையாவது— இயல்பாகிய ஒழுக்கத்தானே நான்கு வருணத்தோரும் அறிவருந் தாபதர் முதலியோருந் தம்முடைய கூறுபாடுகளை இருவகைப்பட மிகுதிப்படுத்து உரைத்தலாம். இருவகையாவன—தானே தன்னை மிகுதிப்படுத்தலும், பிறர் மீக்கூறுபடுத்தலுமாம். இனி உலகமுழுதும் அறியும் உயர்ச்சியுடைமையும் வாகைத்திணையாம். எனவே, வலியானும் வருத்தத்தானுங் கூறுவித்துக்கோடல் வாகையன்றும். இவ்வாகைத்திணை அறுவகைப் பார்ப்பியன் முதலாக எழுவகையாற் றொகைநிலைபெற்ற துறைகளையுடைத்து. இன்னும், இதன்துறைகள் மறத்திற்கு ஒன்பதும், அறத்திற்கு ஒன்பதும் எனப் பதினெட்டாம்.

காஞ்சித்திணை—

"காஞ்சி தானே பெருந்திணைப் புறனே"

எண்வகை மணத்தினும் நான்குமணம் பெற்ற பெருந்திணைபோல அறமுதலாகிய மும்முதற்பொருளும் அவற்றது நிலையின்மையுமாகிய ஆறனுள்ளும் நிலையின்மை மூன்றற்கும் உரித்தாய் எல்லாத்திணைகளுக்கும் ஒத்த மரபிற்றுகலானும்,

"பின்னர் நான்கும் பெருந்திணை பெறுமே"

என்ற நான்குஞ் சான்றோர் இகழ்ந்தாற்போல அறம் முதலியவற்றது நிலையின்மை யுணர்ந்து அவற்றை அவர் இகழ்தலானும், "ஏறிய மடற்றிறம்" முதலிய நான்கும், தீய காமம் ஆயினவாறுபோல நிலையாமையும் உலகியனேக்கி நற்பொருளன்றுகலானும், உரிப்பொருள் இடம் மயங்கி

வருதலன்றித் தனக்கு நிலமில்லாத பெருந்திணைபோல அறம் பொருள் இன்பம் பற்றியன்றி வேறு வேறு நிலையாமை யென்பதோர் பொருளின்றாகலானும், காஞ்சி பெருந்திணைக்குப் புறனாயிற்று. பின்னர் நான்கென்றன பிரமம், பிரசாபத்தியம், ஆரிடம், தெய்வமென்பன. இஃது இடம்பற்றிய பின். ஏறிய மடற்றிறம் முதலிய நான்காவன—




“ஏறிய மடற்றிறம் இளமை தீர்திறம்
தேறுத லொழிந்த காமத்து மிகுதிறம்
மிக்க காமத்து மிடல்...”

என்பன.

“பாங்கருஞ் சிறப்பிற் பல்லாற் றானு
நில்லா வுலகம் புல்லிய நெறித்தே”

காஞ்சித்திணையாவது — வீடுபேற்றின்பம் ஏதுவாக யாக்கை இளமை செல்வம் முதலிய உலக நிலையாமை கூறுவதாம். இது கூற்றம் வருமென்றல் முதலாகப் பலதுறைகளை யுடைத்தாம். இத்துறைகள் ஆண்பாற்றுறையும் பெண்பாற்றுறையுமாய் இருவகைப்பட்டு நடக்கும்.

பாடாண்டிணை—

“பாடாண் பகுதி கைக்கிளைப் புறனே
நாடுங் காலை நாலிரண் டுடைத்தே”

ஒரு தலைவன் பரவலும் புகழ்ச்சியும் வேண்ட ஒரு புலவன் வீடுபேறு முதலிய பரிசில் வேண்டலின், அவை தம்மின் வேறாகிய ஒருதலைக் காமமாகியு கைக்கிளையோடொத்தலின், பாடாண்டிணை கைக்கிளைப் புறனாயிற்று. பாடாண் என்பது — பாடுதல் வினையையும் பாடும் ஆண்மகனையு நோக்காது, அவனது ஒழுகலாறாகிய திணையுணர்த்தினமையின் வினைத்தொகை நிலைக்களத்துப் பிறந்த அன்மொழித்தொகை. இதன் துறை நாலிரண்டாம். நாலிரண்டாவன— இப்பாடாண்டிணைக்குக் கூறுகின்ற பொருட்பகுதி பலவுங் கூட்டி ஒன்றும், இருவகை வெட்சியும், பொதுவியலும், வஞ்சியும், உழிஞையும், தும்பையும், வாகையும், காஞ்சியுமாகிய பொருள்கள் ஏழுமாம். இவ்வேழும் பாடாண்டிணைப் பொருளாங்கால், எல்லாமொத்தவேனும், அவை பெரும்பான்மை சிறுபான்மையாய் வருதலும், இரண்டும் பலவு

மாய் ஒருங்கு வருதலும், பாடாண்டிணைக்குக் கூறும் பொருள்கள் விராய் வருதலும் உளவென்றுணர்க. இப்பாடாண்டிணைக்கே யுரிய பகுதிகள், தேவர் பகுதியும் மக்கட்பகுதியுமென இரண்டாம். தேவர் பகுதி—அறுமுறை வாழ்த்தாகியும் அவர்பால் உயர்வில்லாத பொருள் வேண்டுங் குறிப்பாகியும் வரும். மற்றை மக்கட்பகுதி—ஒரு தலைவன் தன்னைப் பிறர் பரவலும் புகழ்தலுங் கருதிய பகுதி முதலியவாம். இவற்றுள், மக்கட்பகுதி "கொடுப்போ ரேத்திக் கொடாஅர்ப் பழித்தல்" முதலாகப் பத்தாயும், "சூதரேத்திய துயிலெடை நிலை" முதற் பலவாயும் வரும்.

களவியல்—இன்பத்தின் பொதுவிலக்கணம் அகத்திணையியலிலும், அதற்குத் துணையான பொருளும் அரசுநீதியும் புறத்திணையியலிலுங் கூறிய ஆசிரியர் அவ்வின்பத்தினது சிறப்பிலக்கணம் ஈண்டுக் கூறுகின்றார். களவு கற்பென்னுங் கைகோளிரண்டனுள் களவு உணர்த்துதலின், இவ்வோத்துக் களவியல் என்னும் பெயர்த்தாயிற்று.

"இன்பமும் பொருளும் அறனும் என்றாங்
கன்பொடு புணர்ந்த ஐந்திணை மருங்கிற்
காமக் கூட்டங் காணுங் காலை
மறையோர் தேஎத்து மன்றல் எட்டனுள்
துறையமை நல்யாழ்த் துணைமையோர் இயல்பே"

மன்றலெட்டாவன—பிரமம், பிராசாபத்தியம், ஆரிடம், தெய்வம், காந்தருவம், ஆசுரம், இராக்கதம், பைசாசம் என்பன. பிரமமாவது—ஒத்தகோத்திரத்தானாய் நாற்பத்தெட்டியாண்டு பிரமசரியங் காத்தவனுக்குப் பன்னீராட்டைப் பருவத்தாளாய்ப் பூப்பு எய்தியவளை அணிகலன் அணிந்து தானமாகக் கொடுப்பது. பிராசா பத்தியமாவது—மகட்கோடற்குரிய கோத்திரத்தான் கொடுத்த பரிசத்து இரட்டி தம்மகட்கு ஈந்து கொடுப்பது. ஆரிடமாவது—தக்கானொருவனுக்கு ஆவும் ஆனேறும் பொற்கோட்டுப் பொற்குளம்பினவாகச் செய்து அவற்றிடை நிறீஇப் பொன் அணிந்து நீரும் இவைபோற் பொலிந்து வாழ்வீரென நீரிற்கொடுப்பது. தெய்வமாவது—பெருவேள்வி வேட்பிக்கின்றார் பலருள் ஒருவற்கு அவ்வேள்வித் தீ முன்னர் ஒரு மகளைப் பூண் அணிந்து கொடுப்பது. ஆசுரமாவது—கொல்லேறு கோடல், திரி

பன்றி எய்தல், வில்லேற்றுதன் முதலியன செய்து மகட்கோடல். இராக்கதமாவது—தலைமகள் தன்னிலுந் தமரிலும் பெறுது வலிதிற் கொள்வது. பைசாசமாவது—மூத்தோர் களித்தோர் துயின்றோர் புணர்ச்சியும், இழிந்தோளை மணஞ்செய்தலும், பிறவுமாம்.

இவ்வியலிற் கூறப்படுங் கந்தருவமாவது—கந்தருவ குமாரருங் கன்னியருந் தம்முள் எதிர்ப்பட்டுக் கண்டு இயைதல்போலத் தலைவனுந் தலைவியும் எதிர்ப்பட்டுப் புணர்வது.

"முன்னைய மூன்றுங் கைக்கிளைக் குறிப்பே
பின்னர் நான்கும் பெருந்திணை பெறுமே"

என்றலின், இடைநின்ற கந்தருவத்தின் பாற்படும் இக்களவொழுக்கம், முல்லை, குறிஞ்சி, பாலை, மருதம் நெய்தலென்னும் ஐந்திணைப் பாலதாம் அன்புடைக் காமமென்பது தெளியப்படும். அது

"முதலொடு புணர்ந்த யாழோர் மேன
தவலருஞ் சிறப்பின் ஐந்நிலம் பெறுமே"

என்னும் இவ்வியற்சூத்திரத்தான் அறிக. இஃது இப்பெற்றித்தாமென்பது விளக்கியவன்றே,

"திருவளர் தாமரை சீர்வளர் காவிக ளீசர்தில்லைக்
குருவளர் பூங்குமிழ் கோங்குபைங் காந்தள்கொண் டோங்குதெய்வ
மருவளர் மாலையொர் வல்லியி னொல்கி யனநடைவாய்ந்
துருவளர் காமன்றன் வென்றிக் கொடிபோன் றொளிர்கின்றதே"

என்று அகத்தமிழ்த் திருக்கோவை அவ்வாறு அகனைந்திணையும்பற்றி வாதவூரடிகள் முதற்கண் எடுத்துக்கொண்டு அருளிச்செய்தது என்றுணர்க.

இக்களவு பொதுவாகலின் நான்கு வருணத்தார்க்கும் உரித்து.

"ஒன்றே வேறே என்றிரு பால்வயின்
ஒன்றி யுயர்ந்த பால தாணையின்
ஒத்த கிழவனும் கிழத்தியும் காண்ப
மிக்கோன் ஆயினும் கடிவரை யின்றே"

ஒத்த கிழவனும் கிழத்தியும் உம்மைக் காலத்துப் பிறப்பனைத்தினும் ஒருவரை யொருவர் இன்றியமையாராய்ச் செய்த நல்வினை

காரணமாக அன்பான் ஒருபொழில்வயின் தமியராய்க் கூடுங் கூட்டம், ஈண்டுக் களவெனப்படும். ஆதலின், இது பிறர்க்குரிய பொருளை மறையிற் கொள்ளுங் களவன்றாய்ச் சிறப்பதோர் அறனாயிற்று. கிழவோற்கு மிகுதி குலங் கல்வி பிராயம் முதலியவற்றாற் கொள்க. கொள்ளவே, அந்தணர் அரசர் முதலிய வருணத்துப் பெண்கோடற்கண் உயர்தலும், அரசர் முதலியோரும் அம்முறையே உயர்தலுந் தழுவப்படும். படவே, அனுலோமர் அறுவர்க்கும் இவ்வொழுக்கம் உரித்தென்றாராயிற்று. கிழவனுங் கிழத்தியுமென்றார், பலபிறப்பினும் ஒருவர்க்கொருவர் உரிமையெய்திச் செல்கின்றாரென்பது அறிவித்தற்கு. ஒத்தல்— பிறப்பு முதலிய பத்தானும் ஒப்புடையராதல். பிறப்பு முதலிய பத்தாவன :

" பிறப்பே குடிமை ஆண்மை ஆண்டோ
டுருவு நிறுத்த காம வாயில்
நிறையே அருளே உணர்வொடு திருவென்
முறையுறக் கிளந்த ஒப்பினது வகையே "

என்னும் மெய்ப்பாட்டியற் சூத்திரத்தான் உணர்க. ஈண்டுப் பிறப்பு— உயர்குடித் தோற்றம். குடிமை குடிப்பிறப்பிற்கேற்ற ஒழுக்கம். குடிமையொடு பிறப்பிடை வேற்றுமை யென்னையெனின்,—பிறப்பென்பது—குடிப்பிறத்தல் : அதற்குத் தக்கவொழுக்கங் குடிமை. குடிப்பிறந்தாரது தன்மை குடிமையெனப்படும். இதனை ஊராண்மை யெனவுஞ் சொல்லுப. இவை தம்முள் வேற்றுமையென்க. ஆண்மை— ஆளுந்தன்மை. அஃது இருபாற்கும் ஆம் ;

" ஆயிடை யிருபெய ராண்மை செய்த பூசல் "

என்றும்,

" ஊராண்மைக் கொத்தபடி றுடைத்து "

என்றும்,

" வேளாண்மை செய்து விருந்தோம்பி "

என்றும், இருபாற்கும் ஒப்பக்கூறுதலின். இனி ஆள்வினையெனப்படும் ஆண்மை புருடர்க்காம் ; அஃதன்றிது. இனி ஆண்மை - கட்புலனாகும் ஆள்வினைத்தன்மை ; பெண்மை - கட்புலனாகும் அமைதித்தன்மை யென்பர் நச்சினார்க்கினியர். ஆண்டு ஒப்பு - தலைவிக்குப் பன்னீராண்

டுந் தலைவற்குப் பதினாறுண்டுமாம் ; அப்பருவத்திற்றானே பெண்மை யும் ஆண்மையும் பிறக்குமென்பது வேதமுடிபாகலின், அதுவும் ஒப் பெனவேபடும். உருவு - ஆண்மைக்கும் பெண்மைக்கும் வேறுவேறாக ஓதிய இலக்கணமெல்லாம் நிரம்பிய வனப்பு மாட்சியான் மனத்தின் கட் பிறப்பதோர் தருக்கு.

> " பெருமையு முரனு மாடூஉ மேன "
> " அச்சமு நாணு மடனுமுந் துறுத்த
> நிச்சமும் பெண்பாற் குரிய வென்ப "

என ஆசிரியர் கூறுதலான் அவைதாம் அவ்விருபாற்கும் இலக்கண மென்று உணர்க. பெருமையாவது - அறிவும் ஆற்றலும் புகழும் கொடையும் ஆராய்ச்சியும் பண்பும் நண்பும் பழிபாவம் அஞ்சுதலும் முதலியவாய் மேம்பட்டு நிகழுந் தலைமைக்குணம். உரன் - இப் பெருமை காரணமாகப் பிறக்கும் அறிவுத் திட்பம். அது,

> " உரனென்னுந் தோட்டியா னோரைந்துங் காப்பான் "

என்பதனானும் அறிக. அச்சம் - அன்புகாரணமாகத் தோன்றும் உட்கு. நாண் - காமக்குறிப்பு நிகழ்வுழிப் படுவதோர் உள்ளவொடுக்கம். மடம்- செவிலியர் கொளுத்தக் கொண்டது விடாமை. " முந்துறுத்த " என் றதனானே கண்டறியாத கண்டுழி மனங்கொள்ளாத பயிர்ப்பும், செயத் தகுவதறியாத பேதைமையும் கொள்ளப்படும். காமவாயில் - புணர்ச் சிக்கு வாயிலாகிய இயற்கையன்பு. நிறை - மறை பிறரறியாமல் நெஞ் சினை நிறுத்தல். அருள் - தொடர்பு பற்றாது இயல்பாக எல்லா வுயிர் கண்மேலுஞ் செல்வதாகிய கருணை. அதுவுங் காமத்திற்கு இன்றியமை யாததோர் குறிப்பாம். உணர்வு - அறிவுடைமை : அஃதாவது உலகிய லாற் செயத்தக்கது அறிதல். திருவென்பது - பொருளுந் துய்ப்பு மன்றி எஞ்ஞான்றுஞ் செல்வத் தகவிற்றாயதோர் உள்ளநிறைவு.

இக்களவென்னுங் கைகோட் பாகுபாடு :

> " காமப் புணர்ச்சியும் இடந்தலைப் படலும்
> பாங்கொடு தழாஅலுந் தோழியிற் புணர்வுமென்
> றாங்கநால் வகையினும் அடைந்த சார்பொடு
> மறையென மொழிதல் மறையோர் ஆறே"

என்னுஞ் செய்யுளியற் சூத்திரத்தா னுணர்க.

இங்ஙனம் கந்தருவப்பாற்பட்டு நால்வகைத்தாய களவொழுக்கின னாய தலைமகன், களவு வெளிப்படுவதன் முன்னுதல் களவு வெளிப் பட்ட பின்னுதல் வரைந்து கற்புமேற்கொண்டு இல்லறஞ்செய்து இன் பந் துய்ப்பானும். வரைவு இவ்வாறு இருவகைத்தாமாறு—

"வெளிப்பட வரைதல் படாமை வரைதலென்
றாயிரண் டென்ப வரைதல் ஆறே"

என்னு மிவ்வியற்சூத்திரத்தானும்,

"களவு வெளிப்படா முன்னுற வரைதல்
களவு வெளிப்பட்ட பின்றை வரைதலென்
றாயிரண் டென்ப வரைதலாறே"

என்னும் இறையனார் களவியற் சூத்திரத்தானு மறிக. இங்ஙனங் கள வாற் காமந்துய்த்தாரே கற்பொழுக்கத்தினுக்கு உரியவராவரென்பது—

"முற்ப டப்புண ராதசொல் லின்மையிற்
கற்பெனப் படுவது களவின் வழித்தே"

என்னும் இறையனார் களவியற் சூத்திரத்தினு னுணர்க.

**கற்பியல்**—இவ்வோத்துக் கற்பென்னுங் கைகோள் உணர்த்து தலின் அப்பெயர்த்தாயிற்று.

"கற்பெனப் படுவது கரணமொடு புணரக்
கொளற்குரி மரபிற் கிழவன் கிழத்தியைக்
கொடைக்குரி மரபினோர் கொடுப்பக்கொள் வதுவே"

கற்பொழுக்கமாவது கொண்டானிற் சிறந்த தெய்வம் இன்றெனவும் அவனை இன்னவாறே வழிபடுகவெனவும் இருமுதுகுரவரும், அந் தணர் திறத்துஞ் சான்றோர் தேஎத்தும் ஐயர் பாங்கினும் அமரர்ச் சுட்டியும் இன்னவாறு ஒழுகுகவெனத் தலைமகனுங் கற்பித்தபடி, தலை மகள் இல்லறம் போற்றும் முறையாம். வதுவைச் சடங்கு நிகழ்வுழி இவளை இன்னவாறு பாதுகாக்கவெனத் தலைமகற்கும், இவற்கின்ன வாறு குற்றேவல் செய்தொழுகுகவெனத் தலைமகட்கும், ஆங்கியங் கடவுள் அறிகுறியாக மந்திரவகையாற் பெரியர் கற்பிக்கப்படுதலின், அது கற்பெனப்பட்டது. கற்புக் கல்வியென்பன ஒருபொருட் கிளவி.

கற்பென்னுங் கைகோட் பாகுபாடு,

"மறைவெளிப் படுதலுந் தமரிற் பெறுதலு
மிவைமுத லாகிய வியனெறி திரியாது
மலிவும் புலவியு மூடலு முணர்வும்
பிரிவொடு புணர்ந்தது கற்பெனப் படுமே"

என்னுஞ் செய்யுளியற் சூத்திரத்தா னுணர்க. மலிதல் - இல்லொழுக்கமும் புணர்ச்சியும் முதலாயவற்றான் மகிழ்தல். புலவியென்பது - புணர்ச்சியாற் பிறந்த மகிழ்ச்சி குறைபடாமற் காலங் கருதிக்கொண்டு உய்ப்பதோர் உள்ளநிகழ்ச்சி. ஊடலென்பது - உள்ளத்து நிகழ்ந்த தனைக் குறிப்பா னன்றிக் கூற்றானுரைப்பது. உணர்வென்பது - அங்ஙனம் நிகழ்ந்த வூடல் தீர் திறனறிந் தெருட்டுதல். புலவிக்காயின் உணர்த்தல் வேண்டா; அது குளிர்ப்பக் கூடலுந் தளிர்ப்ப முயங்கலும் முதலாயவற்றான் நீங்குதலின்.

இவ்வாற்றாற் கற்பொழுக்கம் மேற்கொண்டு இல்லறவின்பந் துய்க்காநின்ற தலைவனுந் தலைவியும் பின்னர்த் துறவறம் நிகழ்த்தி வீடுபேறு கூடுபவராவரென்பது,

"காமஞ் சான்ற கடைக்கோட் காலை
ஏமஞ் சான்ற மக்களொடு துவன்றி
அறம்புரி சுற்றமொடு கிழவனுங் கிழத்தியுஞ்
சிறந்தது பயிற்றல் இறந்ததன் பயனே"

என்னு மிவ்வியற் சூத்திரத்தா னுணர்க. நுகர்ச்சியெல்லாம் முடிந்தமை தோன்றக் காமஞ்சான்ற வென்றார். அநாதியாய அவிச்சையானே அகங்காரமுளதாம்; அதனானே எனக்கிது வேண்டுமென்னும் அவா வுளதாம்; அதனானே அப்பொருட்கட் செல்லும் விருப்புளதாம்; அவ் விருப்புக் கைகூடாதவழிக் கோபமுளதாம்;

"காமம் வெகுளி மயக்க மிவை மூன்ற
னாமங் கெடக்கெடு நோய்"

என்றிவ்வாறு அறிந்தார் கூறக்கேட்ட துணையானே, தலையாயினார் அதன்கணின்று நீங்குவர். இடையாயினார், பெண்ணென்பது எற்புச் சட்டகம்; அருந்துயர்க் குரம்பை; பைம்மறியா நோக்கப் பருந்

தார்க்குந் தகைமைத்து என்று இத்திறத்தான் அதன் தன்மை தெருட்டக்கேட்டு நீங்குவர். கடையாயினர் எத்திறத்தாவது நீங்காராகலின், அவர் நிற்குநிலை யிதுவென் றுணர்த்துவார் காமஞ்சான்ற கடைக்கோட் காலையென்றார். ஏமஞ்சான்ற என்றன வானப்பிரத்தமுஞ் சன்னியாசமும். இல்லறத்தின் பின்னர் இவற்றின்கணின்று வீடுபேறு கூடுபவென்பார் ஏமஞ்சான்ற என்றிவ்வாறு கூறினர். இல்லறத்திற்கு முக்கியப்பயன் வீடுபேறென்பது உணர்த்துவார் சிறந்தது பயிற்றல் இறந்ததன் பயனே என்றார். எல்லாப்பொருளினும் வீடுபேறு சிறந்ததென்பார் சிறந்தது பயிற்றலென்றார்.

பொருளியல்—இவ்வோத்துப் பொருளிலக்கணம் உணர்த்தினமையிற் பொருளியலென்னும் பெயர்த்தாயிற்று.

"இசைதிரிந் திசைப்பினு மியையுமன் பொருளே
யசைதிரிந் தியலா வென்மனார் புலவர்"

ஏனையோத்துக்களும் பொருளினது இலக்கணமன்றே யுணர்த்தியது; இதற்கு இது பெயராயவாறென்னையெனின்,—நன்று வினாயினாய்; சொல்லதிகாரத்திற் கூறிய இலக்கணமுடைய சொற்களை மரபியலில்,

"நிலந்தீ நீர்வளி விசும்போ டைந்துங்
கலந்த மயக்க முலக மாதலின்
இருதிணை யைம்பா லியனெறி வழாஅமைத்
திரிவில் சொல்லொடு தழாஅல் வேண்டும்"

என்பாராதலின், அவைதாம் ஈண்டுத் தம்பொருளை வேறுபட்டிசைப்பினும் பொருளாமெனவும், இப்பொருளதிகாரத்து முன்னர்க்கூறிய பொருள்களிற் பிறழ்ந்திசைப்பனவும் பொருளாமெனவும் அமைத்து, சொல்லுணர்த்தும் பொருளுந் தொடர்மொழி யுணர்த்தும் பொருளும் ஒருங்கு பொருட்படுத்துக் கூறுதலின், பொருளிய லெனப்பட்டதென்றுணர்க. எனவே, சொற்பொருளியல் ஒவ்வோர் காரணமேலிட்டுத் திறம்பிவரினும், பொருளுடையனவேயாமெனப் பொருள் வழுவமைத்தல் இவ்வியற் பயனுமென்பது. "நோயு மின்பமும்" என்பதனுள், "இருபெயர் மூன்று முரியவாக" என்பதனாற் றிணைமயங்குமென்றும்,

"உண்டற் குரிய வல்லாப் பொருளை
யுண்டன போலக் கூறலு மரபே"

என்றும், சொல் வேறுபட்டுப் பொருளுணர்த்துதலும், இறைச்சிப் பொருண் முதலிய நாடகவழக்கின் வழீஇயவாறும், "தேரும் யானை யும்" "அறக்கழி வுடையன" "தாயத்தி னடையா" என்னுஞ் சூத்திரமுதலியன உலகியல் வழக்கின் வழீஇயவாறுங்கூறி, சொற்பொருள் வழுவமைக்கின்றவாறு மேலே காண்க. இறைச்சியாவது - உள்ள பொருள் ஒன்றனுள்ளே கொள்ளக்கிடக்குங் கருப்பொருள் நோச்சி. அது "இறைச்சி தானே பொருட்புறத் ததுவே" என்னும் இவ்வியற் சூத்திரத்தா னுணர்க. ஈண்டுக் கூறும் வழுவமைதி யெல்லாம் அகப் பொருட்கே யுரியவென்ப துணர்க.

மெய்ப்பாட்டியல்—இவ்வோத்து மெய்ப்பாடென்பன சில பொரு ளுணர்த்தினமையின், அப்பெயர்த்தாயிற்று. மெய்ப்பாடென்பது - பொருட்பாடு. அஃதாவது உலகத்தார் உள்ள நிகழ்ச்சி ஆண்டுநிகழ்ந்த வாறே புறத்தார்க்குப் புலப்படுவதோராற்றான் வெளிப்படுதல். மேலை யோத்துக்களுட் கூறப்படும் பொருள்கட்கும் பொருளோத்துள்,

"ஒப்பும் உருவும் வெறுப்பு மென்றா
கற்பும் ஏரும் எழிலு மென்றா
சாயலு நாணு மடனு மென்றா
நோயும் வேட்கையும் நுகர்வு மென்றாங்
காவயின் வரூஉங் கிளவி யெல்லா
நாட்டிய மரபி னெஞ்சுகொளி னல்லது
காட்ட லாகாப் பொருள வென்ப"

எனக் கூறியவற்றிற்கும் எல்லாம் பொதுவாகிய மனக்குறிப்பு இவை யாகலான் இவை தம்மை வேறுகொண்டு ஓரினமாக்கி மெய்ப்பாட்டிய லென வைத்தமையால், எல்லாவற்றினோடும் இவ்வியல் இயைபுடைத் தென்ப தறிக.

இம்மெய்ப்பாடு நாடகநூலாசிரியர்க்கு விரியான் முப்பானிரண்டா யும், வகையான் பதினாறும், தொகையான் எட்டாயும் நடக்கும். ஒன்பது சுவையுள் உருத்திரம் ஒழிந்த வீரம், அச்சம், வியப்பு, இழிபு, காமம், அவலம், நகை, நடுவுநிலையென்னு மெட்டனையுஞ் சுவைக்கப் படும் பொருளும், அதனை நுகர்தற் கருவியாகிய பொறியுணர்வும், அது மனத்துட்பட்டவழி ஆண்டு நிகழுங் குறிப்புப் பிறத்தற்கிட

னை உள்ளத்தின் வேறுபாடாகிய கண்ணீரரும்புதல் மெய்ம்மயிர் சிலிர்த்தல் முதலாக உடம்பின்கட் படுஞ் சத்துவங்களுமென நான்காக்கி, அவ்வெட்டனோடு உறழ மெய்ப்பாடு முப்பத்திரண்டாம். சத்துவமெனினும் விறலெனினு மொக்கும். வேம்பு முதலிய சுவைக்கப்படும் பொருளும் நா முதலாயின பொறியும் வேறு வேறு நின்ற வழிச் சுவை பிறவாமையானும், இவ்விரண்டுங் கூடியவழிச் சுவை பிறத்தலானும் அவை பதினாறும் அவ்வொருமைப்பாட்டானே எட்டெனப்படும். இனிக் குறிப்புஞ் சத்துவமும் முறையே உள்ளநிகழ்ச்சியும் உடம்பின் வேறுபாடும் எனப் படுமாகலானும், உள்ள நிகழ்ச்சி சத்துவத்தானன்றி வெளிப்படாமையானும், அவ்வொருமைப்பாட்டானே அவை பதினாறு மெட்டெனப்படும். ஆகலின் அவை ஈரெட்டுப் பதினாறு மென்பது. ஆசிரியர், இவை நாடகமகளிர் ஆடலும் பாடலுங் கண்டுங் கேட்டுங் காமநுகரும் இன்பவிளையாட்டினுட் படுவனவாகலான், இவ்வழக்கு நூலில் ஆராயப்படாவெனப் பிறன்கோண் முற்கூறி,

> " நகையே யழுகை யிளிவரல் மருட்கை
> அச்சம் பெருமிதம் வெகுளி உவகையென்
> றப்பா லெட்டே மெய்ப்பா டென்ப "

எனத் தம்மதம் பிற்கூறினர். நகை - சிரிப்பு. அது முறுவலித்து நகுதலும், அளவாற் சிரித்தலும், பெருகச் சிரித்தலுமென மூன்றும். அழுகை - அவலம். தானே யவலித்தலும் பிறரவலங்கண்டு அவலித்தலுமென அஃதிரண்டாம். இவற்றுள் ஒன்று கருணையெனவும், ஒன்று அவலமெனவும்பட்டு, சுவை ஒன்பதாகலு முடைய. இளிவரல் - இழிபு. மருட்கை - வியப்பு. அற்புதமெனினும் அமையும். அச்சம் - பயம். பெருமிதம் - வீரம். வெகுளி - உருத்திரம். உவகை - மகிழ்ச்சி. இவை சுவையெனவும் வழங்கப்படும். இவ்வெட்டும் எள்ளல் இளமை முதலிய முப்பானிரண்டாயும், உடைமையின் புறன்முதலாக வேறு முப்பத்திரண்டாயும் வரும். இவையெல்லாம் அகத்திணைக்குப் பொதுவாகும் மெய்ப்பாடுகளாம். இனிப் புகுமுகம்புரிதல் பொறிநுதல் வியர்த்தல் முதலிய மெய்ப்பாடுகள் பலவுள ; அவையெல்லாங் களவியற்குச் சிறப்பாய் நிகழ்வனவாம். இம்மெய்ப்பாட்டுப் பொருள்கோளாராய்ச்சி உணர்வுடையோர்க்கல்லது ஏனோர்க்குக் கூடாதென்பார்,

"கண்ணினுஞ் செவியினுந் திண்ணிதி னுணரும்
உணர்வுடை மாந்தர்க் கல்லது தெரியின்
நன்னயப் பொருள்கோள் எண்ணருங் குரைத்தே"

என்றோதினர். மற்று மனத்து நிகழ்ந்த மெய்ப்பாட்டினைக் கண்ணானுஞ் செவியானும் உணரவேண்டுவது எற்றிற்கெனின், மன நிகழ்ச்சிபற்றி மெய்ப்பாடு பிறந்தவழி, அதுபற்றி முகம் வேறுபடுதலும் உரைவேறு படுதலும் உடைமையின், அவற்றினைக் கண்ணானுஞ் செவியானும் உணர்ந்துகோடலே அவ்வத் துறைபோயினார்க் காற்றலாகலின், அங்ஙனங் கூறின கருத்தென் றுணர்க.

உவமவியல்—உவமமுணர்த்துதலின், இவ்வோத்து உவமவியலென்னும் பெயர்த்தாயிற்று. உவமம் என்பது—ஒரு பொருளோடு ஒருபொருளை ஒப்பித்துரைத்தல். மற்று அகம் புறமென்பனவற்றுள் இஃது யாதாகுங்கொலெனின்,—அவ்விரண்டுமாம், மெய்ப்பாடு போல. என்னை ?

"உவமப் பொருளி னுற்ற துணருந்
தெளிமருங் குளவே திறத்திய லான"

என்றாராகலின். இன் ஆனின்பொருளில் வந்தது. என்றது - உவமத்தினானே உவமிக்கப்படும் பொருட்கு உற்றதெல்லாம் அறிந்து தெளியும்.பகுதியுள ; அத்துணியப்படும் பொருட்டிறம் பலவகை யிலக்கணமுடைய வாதலானென்றவாறு. அப்பகுதிகள், தாம் - உவமான அடைக்கு உவமேயவடை குறைந்து வருவனவும், யாதும் அடையின்றி வருவனவுமாம். அங்ஙனம் வருங்கால், அவற்றிற்கும் உவமைப் பொருளே தெளிமருங்காமெனவும், வாளாதே உவமஞ்செய்து உற்றதுணர்த்தாதவழியும் அதுவே தெளிமருங்காமெனவும், இன்னோரன்ன கொள்க. உதாரணம்—

"களவுடம் படுநரிற் கவிழ்ந்து நிலங் கிளையா"

என்றவழிக் கண்டோர்க்கெல்லாம் பெருநகையாகக் களவுசெய்தாரிற் கவிழ்ந்து நிலங் கிளையாவென உற்றதுணரக் கூறிற்றிலனாயினும், கையொடுபட்ட களவுடையார்போல நின்றாள் என்னும் உவமைப் பொருளானே எள்ளுதற் பொருள்தோன்றி நகை புலப்படுவதாயிற்று. ஈண்டுக்கப்பொருள் உவமம்பற்றித் தெளிமருங்கு உளதாயிற்றென்பது.

"சாறுதலைக் கொண்டெனப் பெண்ணீற் றுற்றென"

என்னும் புறப்பாட்டினுள், உவமப் பொருளாகிய போழ்தூண் தூசிக்குப் பலஅடை கூறி அதனோடு உவமிக்கப்படும் போர்த்தொழிலினை யாதுமோர் அடையின்றி வாளா கூறினாரயினும், உவமைப்பொருளானே போர்த்தொழிற்கு உற்றதும் உணரக் கூறினாரும். என்னை? உண்டாட்டும் கொடையும் உரனொடு நோக்கி மறுத்தலும் முதலிய உள்ளக் கருத்தினானே ஒருகணத்தினுள்ளே பலவேந்தரை ஒருங்கு வேறற்கு விரைகின்றது போர்த்தொழிலென்பது தெளிமருங்குளதாமாதலினென்க. ஈண்டுப் புறப்பொருள் உவமம்பற்றித் தெளிமருங்குளதாயிற்றென்பது. இத்திறன் நோக்கியே, நியாய நூலார், அளவை காண்டல் கருதல் உரை அபாவம் பொருள் ஒப்பாறென்று அங்ஙனம் உவமையும் அளவையுளடக்கி ஓதுவாராயிற்றென் றுணர்க. பொருள் - அருத்தாபத்தி. உவமம், உவமானம், உவமை, ஒப்பென்பன ஒரு பொருட்கிளவி. இவ்வாறு புலனெறி வழக்குப்பற்றியன்றி மற்றிவ்விருதிணைப் பொருளும் உவமம்பற்றி வழக்கினுள் அறியப்படுதலானும் உவமம் பற்றியும் பொருள் கூறுகின்றா ராசிரியரெனக் கொள்க. இங்ஙனம் உவமத்தானும் புலப்பாடே கூறுதலின், மேற் பொருள் புலப்பாடு கூறிய மெய்ப்பாட்டியலின் பின்னர் இது வைக்கப்பட்டது. உவமத்தாற் பொருள் புலப்பட அறிதலாவது "ஆபோலும் ஆமா" என்றக்கால், ஆமா கண்டறியாதான் காட்டுட் போவுழி எதிர்ப்பட்டது கண்டுழி, "ஆபோலும் ஆமா" என்னும் உவமைபற்றி இது ஆமா என்றுணர்தலாம்.

"வினைபயன் மெய்யுரு வென்ற நான்கே
வகைபெற வந்த உவமத் தோற்றம்"

இவ்வுவமம் வினையுவ்மம், பயனுவமம், மெய்யுவமம், உருவுவமமென நால்வகைப்படும். மெய் - பிழம்பு. உரு-நிறம். புலியன்னமறவன் என்பது வினையுவமம், அது பாயுமாறே பாயுமென்னுந் தொழில்பற்றியொப்பித்தமையின். மாரியன்ன வண்கை யென்பது பயனுவமம். மாரியான் விளைக்கும் பொருளும் வண்கையாற் பெறும் பொருளும் ஒத்தலின். துடியிடை யென்பது மெய்யுவமம், அல்குலும் ஆகமும்

அகன்றுகாட்ட அஃகித்தோன்றும் மருங்குல் துடியோடு ·ஒத்தலின். பொன்மேனி யென்பது உருவுவமம், பொன்னின்கட் கிடந்த மஞ்சள் நிறத்தோடு மேனியின்கட் கிடந்த நிறமொத்தலின். இவை நான்கும் இங்ஙனம் ஒரோ வொன்றே யன்றி விரவியும் வரும். இந்நான்குஞ் சிறப்பு நலன் காதல் வலி யென்னும் நான்கு நிலைக்களமாகவும், கிழக்கிடு பொருள் நிலைக் களமாகவும் பிறக்கும். கிழக்கிடு பொருளென்பது - கீழ்ப்படுக்கப்படும் பொருள். இங்ஙனம் உவமஞ்செய்யுங்கால், முதலொடு முதலுஞ் சினையொடு சினையும் முதலொடு சினையுஞ் சினையொடு முதலும் உவமஞ் செய்யப்படும். இவை விரியுவமமுந் தொகையுவமமு மாம். பவளம்போற் செந்துவர் வாய்: இது சுட்டிக்கூறலின் விரியுவம மாம். பவளவாய் : இது சுட்டிக் கூறுமையிற் றொகையுவமாம். இன்னும் இதன் திறன் பலவாம்.

உவமத்தினையும் உவமிக்கப்படும் பொருளையும் ஒப்பிக்குங்கால் இடைவரும் உவமவுருபு பலவாம்.

"அவைதாம், அன்ன வய்ப்ப உறழ ஒப்ப
என்ன மான என்றவை எனாஅ
ஒன்ற ஒடுங்க ஒட்ட ஆங்க
என்ற வியப்ப என்றவை எனாஅ
எள்ள விழைய இறப்ப நிகர்ப்பக்
கள்ளக் கடுப்ப ஆங்கவை எனாஅக்
காய்ப்ப மதிப்பத் தகைய மருள
மாற்ற மறுப்ப ஆங்கவை எனாஅப்
புல்லப் பொருவப் பொற்பப் போல
வெல்ல வீழ ஆங்கவை எனாஅ
நாட நளிய நடுங்க நந்த
ஓடப் புரைய என்றவை எனாஅ
ஆறு றவையும் அன்ன பிறவும்
கூறுங் காலைப் பல்குறிப் பினவே"

என்னும் இவ்வியற் சூத்திரத்தான் அவை யறிக. பிறவு மென்பதனானே நேர, நோக்க, துணைப்ப, மலைய, ஆர, அமர, அனைய, எர, எற்ப, செத்து, அற்று, கெழுவ என்றற்றொடக்கத்தன கொள்க. இன்னும்,

"தோளுற்றொர் தெய்வம்" என்றற்றொடக்கத்தான் ஆண்டாண்டு உவமவுருபின் பொருள்பட வருவனவெல்லாங் கொள்க.

இவ்வுவமம் உள்ளுறையுவமமும் ஏனையுவமமுமென இரண்டாம். அது,

"உள்ளுறை யுவம மேனை யுவமமெனத்
தள்ளா தாகுந் திணையுணர் வகையே"

மென்னும் அகத்திணையியற் சூத்திரத்தா னுணர்க. உள்ளுறை யுவமமாவது

"உள்ளுறுத் திதனோ டொத்துப்பொருண் முடிகென
வுள்ளுறுத் துரைப்ப துள்ளுறை யுவமம்"

என்னும் அகத்திணையியற் சூத்திரத்தா னுணர்க. இதனானே புலவன் தான் கருதியது வெளிப்படக் கூறாதவழியுங் கேட்டோர் இவன் கருதியபொருள் ஈதென்று ஆராய்ந்து கோடற்குக் கருவியாகிய சில சொற் கிடப்பச் செய்யுள் செய்தல் வேண்டுமென்பது கருத்தாயிற்று. அது,

"வீங்குநீர் வீழ்நீலம் பகர்பவர் வயற்கொண்ட
ஞாங்கர் மலர்சூழ்தந் தூர்புகுந்த வரிவண்
டோங்குய ரெழில்யானைக் கனைகடாங் கமழ்நாற்ற
மாங்கவை விருந்தாற்றப் பகலல்கிக் கங்குலான்
வீங்கிறை வடுக்கொள வீழுநர்ப் புணர்ந்தவர்
தேங்கமழ் கதுப்பினு ளரும்பவிழ் நறுமுல்லை
பாய்ந்தூதிப் படர்தீர்ந்து பண்டுதா மரீஇய
பூம்பொய்கை மறந்துள்ளாப் புனலணி நல்லூர"

என்னும் மருதக்கலியுள், வீங்குநீர் பரத்தையர் சேரியாகவும், அதன்கண் வீழ்ந்த நீலப்பூக் காமச்செவ்வி நிகழும் பரத்தையாகவும், பகர்பவர் பரத்தையரைத் தேரேற்றிக்கொண்டுவரும் பாணர் முதலிய வாயில்களாகவும், அம்மலரைச் சூழ்ந்த வண்டு தலைவனாகவும், யானைக் கடாத்தினை ஆண்டுறைந்த வண்டுகள் வந்தவண்டுக்கு விருந்தாற்றுதல் பகற்பொழுது புணர்கின்ற சேரிப்பரத்தையர் தந்நலத்தினைத் தலைவனை நுகர்வித்தலாகவும், கங்குலின் வண்டு முல்லையை ஊதுதல் பரத்தையருடன் இரவு துயிலுதலாகவும், பண்டு மருவிய பொய்கையை மறத்தல் தலைவியை மறத்தலாகவும், பொருள்தந்து ஆண்டுப்புலப்படக் கூறிய

கருப்பொருள்கள் புலப்படக்கூறுத மருதத்திணைப் பொருட்கு உவம மாய்க் கேட்டோனுள்ளத்தே விளங்கி நின்றவாறு காண்க. இனிப்பவள வாய் முதலியவாக ஈண்டுக் கூறுவனவெல்லாம் ஏனை யுவமமாம். அகத் திணைப் பொருளுணர்ச்சிக்கு உபகாரம் நோக்கி அகத்திணை யியலுள் இவை யிரண்டும் வாங்கிக் கூறப்பட்டன. ஆயினும், இவ்வியற்பொரு ளாகவே கொண்டுரைக்கப்படுமென் றுணர்க.

செய்யுளியல்—செய்யுளிலக்கணம் உணர்த்தினமையால், இது அப் பெயர்த்தாயிற்று. செய்யுள் - செய்கை. உள் - தொழிற்பெயர் விகுதி. கடவுள் விக்குளென்புழிப்போல. மற்றிது அவ்விலக்கணத்திற்குத் தொழிலாகுபெயராயிற்று. வழக்குஞ் செய்கை பெறுமெனினும் அசையுஞ் சீரும் அடியும்முதலிய செய்கை விகற்பத்தால் அணிபெறப் பொருட்கிடனாக இயற்றப்படுதற் சிறப்புநோக்கிச் செய்யுளெனப்பட் டது. எழுத்ததிகாரத்துஞ் சொல்லதிகாரத்தும் வழக்கிற்குஞ் செய் யுட்கும் வேண்டுவன விராய்க்கூறிப், பொருளதிகாரத்துள்ளும் இத் துணையும் பெரும்பான்மையும் வழக்கிற்குஞ் சிறுபான்மை செய்யுட் கும் வேண்டுவன கூறிவந்த ஆசிரியர், அப்பகுதிச் செய்யுளிலக்கண மெல்லாம் இவ்வோத்தின்கண் தொகுத்துக் கூறுகின்றார். ஆகலின் மேற்கூறிப்போந்த ஒத்துக்களோடு இதற்கியைபுளதாமாறு தெளிக.

“மாத்திரை எழுத்தியல் அசைவகை எனாஅ
யாத்த சீரே அடியாப் பெனாஅ
மரபே தூக்கே தொடைவகை எனாஅ
நோக்கே பாவே அளவிய லெனாஅத்
திணையே கைகோள் கூற்றுவகை எனாஅக்
கேட்போர் களனே காலவகை எனாஅப்
பயனே மெய்ப்பா டெச்சவகை எனாஅ
முன்னம் பொருளே துறைவகை எனாஅ
மாட்டே வண்ணமோ டியாப்பியல் வகையின்
ஆறுதலை யிட்ட அந்நா லைந்தும்
அம்மை அழகு தொன்மை தோலே
விருந்தே இயைபே புலனே இழைபெனாஅப்
பொருந்தக் கூறிய எட்டொடுந் தொகைஇ
நல்லிசைப் புலவர் செய்யு ளுறுப்பென
வல்லிதிற் கூறி வகுத்துரைத் தனரே”

செய்யுள்தான் - மாத்திரையும், எழுத்தியல்வகையும், அசை வகையும், யாத்தசீரும், அடியும், யாப்பும், மரபும், தூக்கும், தொடையும், நோக்கும், பாவும், அளவும், திணையும், கைகோளும், கூற்றுவகையும், கேட்போரும், களனும், காலவகையும், பயனும், மெய்ப்பாடும், எச்சவகையும், முன்னமும், பொருளும், துறைவகையும், மாட்டும், வண்ணமு மென்னும் இருபத்தாறு உறுப்புக்களும், மற்று அம்மை, அழகு, தொன்மை, தோல், விருந்து, இயைபு, புலன், இழைபென்னும் எண்வகை வனப்புறுப்பும், உடைத்தாய் நடப்பதாம்.

மாத்திரையென்பது—எழுத்திற்கோதிய மாத்திரைகளை விராய்ச் செய்யுள் செய்யுமளவு. அது "மாத்திரை யளவும்" என மேற் கிளந் தோதுமாறுபற்றி யுணரப்படும். எழுத்தியல்வகையென்பது—மேற்கூறிய எழுத்துக்களைச் செய்யுட்கேற்ப இயற்றிக்கொள்ளுங் கூறுபாடு. அசைவகையென்பது—அவ்வெழுத்தியல்வகையால் இயற்றப்படும் அசைக்கூறுபாடு. அவை இயலசையும் உரியசையுமென இரண்டாம். இயற்கையா லியறலின் இயலசையெனவும், அவை செய்யுந் தொழில் செய்தற்குரியவாகலான் உரியசை யெனவும், காரணப் பெயராயின. யாத்தசீரென்றது— பொருள் பலபடத் தொடர்ந்து நிற்குஞ் சீரென்றவாறு. எனவே, அசை பலதொடர்ந்து சீராங்கால் அவ்வசையுந் தத்தம் வகையாற் பொருள்பெற்று நிற்றலும் அவ்வாறன்றிச் சீர்முழுதும் ஒருசொல்லாங்கால் அசை பொருள்பெறாது நிற்றலும் அடங்கின. தே மாவென்று அசை வேறுபொருள் பெற்றன. சாத்தனென்று பொருள் வேறுபடாது நின்ற அசையாற் சீர் யாத்து நின்றது. அடியென்பது— அச்சீரிரண்டும் பலவுந் தொடர்ந்தாவதோர் உறுப்பு. யாப்பென்பது— அவ்வடிதொறும் பொருள்பெறச் செய்வதோர் செய்கை. மரபென்பது— காலமும் இடனும்பற்றி வழக்குத் திரிந்தக்காலுந் திரிந்தவற்றிற்கேற்ப வழுப்படாமைச் செய்வதோர் முறைமை. மற்றுச் சொல்லோத்தினுட் கூறிய மரபிற்கும் மரபியலுள் உரைப்பனவற்றிற்கும் இதற்கும் வேற்றுமை யென்னையெனின்,— இது செய்யுட்கே யுரித்து; அவை வழக்கிற்குஞ் செய்யுட்கும் பொது வென்பது. தூக்கென்பது— பாக்களைத் துணித்து நிறுத்தல். தொடைவகையென்பது— தொடைப்பகுதி பலவும் என்றவாறு. அவை வரையறையுடையனவும் வரையறையில்லனவுமென இருவகைய. இப்பகுதி

யெல்லாம் அடியாற் கோடலின், அடிக்கும் இஃதொக்கும். நோக்கென்பது— மாத்திரை முதலாகிய உறுப்புக்களைக் கேட்போர்க்கு நோக்குப்படச் செய்தல். பாவென்பது— சேட்புலத்திருந்தக்காலும் ஒருவன் எழுத்துஞ் சொல்லுந் தெரியாமற் பாடமோதுங்கால் அவன் சொல்கின்ற செய்யுளை விகற்பித்து இன்னசெய்யுளென்று உணர்தற் கேதுவாகிப் பரந்துபட்டுச் செல்வதோர் ஓசை. அளவியலென்பது—அப்பாவரையறை. திணையென்பது—அகம்புறமென்று அறியச்செய்தல். கைகோளென்பது— அவ்வத்திணையொழுக்க விகற்பம் அறியச்செய்தல். அது களவுங் கற்புமென்று இரண்டாம். கூற்றுவகையென்பது—அச்செய்யுள் கேட்டாரை இது சொல்கின்றார் இன்னாரென உணர்வித்தல். கேட்போரென்றது— இன்னார்க்குச் சொல்கின்றது இதுவெனத் தெரித்தல். களனென்பது— முல்லை குறிஞ்சி முதலாயினவும் இரவுக்குறி பகற்குறி முதலாயினவும் உணரச்செய்தல். மற்றுத் தன்மை முன்னிலை படர்க்கையுமாம். காலவகை யென்பது—பெரும்பொழுது சிறுபொழுதென்னுங் காலப்பகுதி முதலாயின. பயனென்பது— சொல்லிய பொருளாற் பிறிதொன்று பயப்பச்செய்தல். மெய்ப்பாடென்பது— சொற் கேட்டோர்க்குப் பொருள் கண்கூடாதல். எச்சவகையென்பது— சொல்லப்படா மொழிகளைக் குறித்துக்கொள்ளச் செய்தல். அது கூற்றினுங் குறிப்பினும் வருதலின், வகையென்றார். முன்னமென்பது— உயர்ந்தோரும் இழிந்தோரும் ஒத்தோருந் தத்தம் வகையான் ஒப்பச் சொல்லுதற்குக் கருத்துப்படச் செய்தல். பொருளென்பது— புலவன் தான் தோற்றிக்கொண்டு செய்வதோர் பொருண்மை. துறைவகையென்பது—முதலுங் கருவும் முறைபிறழ வந்தாலும் இஃது இதன்பாற்படுமென்று ஒரு துறைப்படுத்தற் கேதுவாகியதோர் கருவி அச்செய்யுட்கு உளதாகச் செய்தல். அவையும் பலவாதலின் வகையென்றார். மாட்டென்பது— பல்வேறு பரப்பிற்றாயினும் அன்றாயினும் நின்றதனொடு வந்ததனை ஒரு தொடர்கொளீஇ முடித்துக்கொளச் செய்தல். வண்ணமென்பது— ஒரு பாவின்கண் நிகழும் ஓசை விகற்பம். இவை யாப்பிற்கு இன்றியமையாத இலக்கணப் பகுதிகளாகலான் வேறு விதந்தோதினர்.

அம்மையென்பது - குணப்பெயர். அமைதிப்பட்டு நிற்றலின் அம்மையென்றாயிற்று. அழகு - திரிசொற் பயிலாது செய்யுளிற்

பயின்றுவரு மொழிகளாற் சீரறுத்துப் பொலிவுபட யாக்கும் பொருள் வனப்பு. அவையாவன:— நெடுந் தொகை முதலாகிய தொகையெட்டு மென்றவாறு. தொன்மை யிலக்கணந் தமிழின் தெய்வப்பழமை மர பியலுள் உரைத்தாம்; கடைப்பிடிக்க. தோல் - இழுமென் மொழியான் அறம் பொருள் இன்பம் வீடென்னும் விழுமிய பொருள் பயப்பச் செய் யுஞ் செய்யுளும் ஆசிரியப்பாட்டான் ஒருகதைமேற் றொடுக்கப்படுஞ் செய்யுளுமாம். அவை செய்தகாலத்துள்ளன காணப்பட்டில. பிற் காலத்து அவ்வாறு வந்தன சிந்தாமணி முதலியன. விருந்து - புதிதாகத் தொடுக்கப்படுந் தொடர்நிலைச் செய்யுள். இயைபு - ஞணநமனயரல வழள என்னும் பதினொரு புள்ளியீற்றினு ளொன்றனை யிறுதியாகக் கொண்டு பொருட்டொடராகவுஞ் சொற்றொடராகவுஞ் செய்யுஞ் செய்யுள். அவை சீத்தலைச்சாத்தனாராற் செய்யப்பட்ட மணிமேகலை யுங் கொங்கவேளாராற் செய்யப்பட்ட சிலப்பதிகாரமும் போல்வன. அவை னகாரவீற்றான் இற்றன. புலன் - சேரிமொழியாற் செவ்வி தாகக் கூறி யாராய்ந்து காணாமைப் பொருட்டொடரானே தொடுத்துச் செய்யுஞ் செய்யுள். அவை விளக்கத்தார் கூத்துமுதலாகிய நாடகச் செய்யுளாகிய வெண்டுறைச் செய்யுள் போல்வன. இழைபு - வல்லெ ழுத்துப் பயிலாது இருசீரடிமுதலாக எழுசீரடியளவும் வந்த அடி யைந் தனையும் ஒப்பித்து நெட்டெழுத்தும் அந்நெட்டெழுத்துப்போல் ஓசையெழும் மெல்லெழுத்தும் லகார ளகாரங்களுமுடைய சொல் லானே சேரிமொழியாற் செவ்விதிற் கிளந்து தேர்தல் வேண்டாது பொருள்பட்டுச் செல்லச் செய்யுஞ் செய்யுள். அவையாவன—கலியும் பரிபாடலும் போலும் இசைப்பாட்டாகிய செந்துறை மார்க்கத்தன என்பது.

மரபியல்—" மாற்றருஞ் சிறப்பின் மரபியல் கிளப்பின்
பார்ப்பும் பறழும் குட்டியும் குருளையும்
கன்றும் பிள்ளையும் மகவும் மறியுமென்
றென்பதுங் குழவியோ டிளமைப் பெயரே "

மரபென்ற பொருண்மை யென்னையெனின், — கிளவியாக் கத்து மரபென்று வரையறுத்து ஓதப்பட்டனவுஞ் செய்யுளிய லுள் மரபென்று வரையறுத்து ஓதப்பட்டனவு மன்றி, இருதிணைப்

பொருட்குணனுகிய இளமையும் ஆண்மையும் பெண்மையும் பற்றிய வரலாற்று முறைமையும், உயர்திணை நான்குசாதியும் பற்றிய மரபும், அஃறிணைப் புல்லும் மரனும் பற்றிய மரபும், அவை பற்றிவரும் உலகியன்மரபும், நூன்மரபுமென இவையெல்லாம் மரபெனப் படுமென்பது. மற்றுப் பொருள்களின் இளமை பற்றிவரும் மரபுகூறினுர் மூப்புப் பற்றிவரும் மரபு கூருரோவெனின், அது வரையறை யின்மையிற் கூருரென்பது. மற்றும் மேலையோத்திேனாடு இவ்வோத்திடை இயைபென்னையெனின்,—முன்னர் வழக்கிலக்கணங் கூறி அதன்பின் செய்யுளிலக்கணஞ் செய்யுளியலுட் கூறினுர், அவ்விரண்டற்கும் பொதுவாகிய மரபு ஈண்டுக் கூறினமையின் இது செய்யுளியலோடு இயைபுடைத்தாயிற்று. மற்று வழக்கிலக்கணஞ் செய்யுட்கும் பொதுவாகலின், இங்ஙனம் இரண்டற்கும் பொதுவாகிய மரபினையுஞ் செய்யுளியலின் முன் வைக்கவெனின், — அவ்வாறு வழக்குஞ் செய்யுளுமென்னும் இரண்டுமல்லாத நூலிற்கும் ஈண்டு மரபு கூறினமையின், இது செய்யுளியலின்பின் வைக்கப்பட்டது. இவற்றையெல்லாம் மேல் வரையறுத்து இன்னபொருட்கு இன்னபெயர் உரித்தென்பது சொல்லுவர். மிற்றருஞ் சிறப்பி னென்றதனுனே இவை ஒருதலையாகத் தத்தமரபிற் பிறழாமற் செய்யுள் செய்யப்படுமென்பதூஉம், ஈண்டுக் கூருதன வாயின வழக்கொடுபட்ட மரபு பிறழினுஞ் செய்யுளின்பம் படின் அவ்வாறு செய்கவென்பதூஉம் கூறியவாருயிற்று.

பன்னிருபடலம் முதலியன

பன்னிருபடலம் அருந்தவக்கொள்கை அகத்தியமுனிவர் மாணுக்கரான தொல்காப்பியமுனிவர் முதலிய பன்னிருவரானும் இயற்றப் பட்டதொரு புறப்பொருளிலக்கணநூல். இந்நூல் புறப்பொருளிலக்கணத்தினை வெட்சிப்படலம் முதலிய பன்னிருபடலங்களாகப் பகுத்தோதுதலின் அப்பெயர்த்தாயிற்று: இந்நூல் அகத்தியந் தொல்காப்பியங்களில் அகம் புறமெனப் பகுத்த பொருளிலக்கணங்களைத் தம்முள் வேறுபாடு நோக்கி, அகம், அகப்புறம், புறம், புறப்புறமென நான்காகப் பகுத்துப் புறப்பொருளினை மிகவிரித்தோதும். இயற்கை நிலமான குறிஞ்சி முல்லை மருதம் நெய்தலும், செயற்கைநிலமான பாலையுமென்னும் ஐந்தும் அகமாம். கைக்கிளை பெருந்திணையென்னும் இரண்டும் அவற்றின் புறமா யியைந்து நிகழ்தலின் அகப்புறமாம்.

"மக்கள் நுதலிய அகனைந் திணையுஞ்
சுட்டி ஒருவர்ப் பெயர்கொளப் பெறுஅர்"

என்று அகத்திணையியலுள் ஓதுதலின், அவ்வாறு பாகுபாடு செய்தல் ஆசிரியர் தொல்காப்பியனார்க்கும் உடம்பாடேயாயிற்று. என்னை? ஐந்திணையினையும் அகமெனவே யொழிந்த கைக்கிளையும் பெருந்திணையும் அவற்றின் புறமாய் அகப்புறமாமென்பதுதானேபோதருதலினென்க. இனி அகத்திணைக்கண் முதல் கரு உரிப்பொருள் கூறிய குறிஞ்சி முல்லை மருதம் நெய்த லென்பனவற்றிற்கு வெட்சி வஞ்சி உழிஞை தும்பை யென்பன அவ்விலக்கணங்களோடு ஒருபுடை யொப்புமைபற்றிச் சார்புடையனவாய்ப் புறமாய் நிகழ்தலிற் புறமாம். இனித் தமக்கென நிலனுடையவாகிய குறிஞ்சி முல்லை மருதம் நெய்தல்களைச் சார்ந்து நிகழும் நிலனில்லாப் பாலை பெருந்திணை கைக்கிளை யென்பனவற்றிற்கு வாகையும் காஞ்சியும் பாடாண்டிணையும் பெற்ற இலக்கணத்தோடு ஒருபுடை யொப்புமைபற்றிச் சார்புடையவாய் நிகழ்தலின், புறப்புறமாம். ஆசிரியர் சிவஞானயோகிகள், சித்தாந்தசைவாசாரியர் "அகச்சமயம் புறச்சமயம்" என இரண்டாகப் பகுத்தனவற்றைத் தம்முள் வேறுபாடு நோக்கி, "அகச்சமயம், அகப்புறச்சமயம், புறச்சமயம், புறப்புறச்சமயம்" என நான்காகப் பகுத்து, அவ்வாறு பகுத்தல் மரபாதற்குப் பன்னிருபடலத்திற் பொருளியல்பினை, அகம், அகப்புறம், புறம், புறப்புறமென்று இங்ஙனம் நான்காகப் பகுத்தோதியவாற்றினையே தமக்கு அடிப்படாகக் காட்டியருளினர்.

இனி நச்சினார்க்கினியர்,

"கைக்கிளை முதலாப் பெருந்திணை யிறுவாய்
முற்படக் கிளந்த எழுதிணை யென்ப"

என்னும் அகத்திணையியற் சூத்திரத்து 'முற்படக்கிளந்த' என எடுத்தலோசையாற் கூறவே பிற்படக் கிளந்த எழுதிணை யுளவாயின: அவை வெட்சி, வஞ்சி, உழிஞை, தும்பை, வாகை, காஞ்சி, பாடாண்டிணை யென வரும். ஒழிந்தோர் பன்னிரண் டென்றாராதலின் புறத்திணை எழென்ற தென்னையெனின்,— அகங்கை யிரண்டுடையார்க்குப் புறங்கை நான்காகாது இரண்டாயவாறுபோல அகத்திணை எழற்குப் புறத்திணை எழென்றலே பொருத்த முடைத்தாயிற்று. எனவே,

அகத்திணைக்குப் புறத்திணை அவ்வந்நிலத்து மக்கள் வகையாற் பிறந்த செய்கை வேற்றுமையாதலின், ஒன்று ஒன்றற்கு இன்றியமையாதன வாறாயிற்று. "காந்தை அவ்வேழற்கும் பொதுவாகிய திணைவழுவாத லின் வேறு திணையாகாது" என்றும்,

"வேந்துவிடு முனைஞர் வேற்றுப்புலக் களவின்
ஆதந் தோம்பல் மேவற் றாகும்"

என்னும் புறத்திணையியற் சூத்திரத்து "அடித்துக்கோடலு மீட்டுக்கோடலும் வெட்சியாயின; "மீட்டல் கரந்தை" என்பாராலெ னின், அதனையும் இச்சூத்திரத்தானும் வருகின்ற சூத்திரத்தானும் வெட்சியென்றே ஆசிரியன் கொண்டான். மீட்டலை வெட்சிக்கரந்தை யென்பாரு முளர்; மீட்டலைக் கரந்தையென்பார்க்கு அது திணையாயிற் குறிஞ்சிக்குப் புறனாகாமை யுணர்க" என்றும்,

"காஞ்சி தானே பெருந்திணைப் புறனே"

என்னும் புறத்திணையியற் சூத்திரத்துக் "கைக்கிளை முதற் பெருந் திணையிறுவாய் எழனையும் அகமென்றலின் அவ்வகத்திற்கு இது புற னாவதன்றிப் புறப்புறமென்றல் ஆகாமையுணர்க" என்றும், கூறுமுகத் தானே, அங்ஙனம் பகுத்தோதுதல் மரபுநிலை திரிபாமென்பர். ஆசி ரியர் சிவஞான யோகிகள் "அகம் புறமெனப் பகுத்தனவற்றைத் தம் முள் வேறுபாடு நோக்கி அகம், அகப்புறம், புறம், புறப்புறமென நான் காகப்பகுத்தலும், வெட்சித்திணை உழிஞைத்திணைகளின் மறுதலை வினையை வீற்று வினையாதலும் வேற்றுப்பூச் சூடுதலுமாகிய வேறு பாடுபற்றி வேறு திணையாகவைத்தெண்ணுதலும், இன்னோரன்ன பிற வும் பொருண்முடிபு வேறுபடாமையின் மரபுநிலை திரியாவாயின" என் றும், இஃதறியாதார் "தொல்காப்பியமும் பன்னிருபடலமுந் தம்முள் முரணுவனவாகக் கருதி அவற்றுள் ஒருநூலையேபற்றி மற்றொன் றனை யிகழ்வர்" என்றும், பாயிர விருத்தியினுஞ் சிவஞான மாபாடியத் தும் யாப்புறுத்தோதினர்.

இனிப் பல்காப்பியம் பல்காயம் காக்கைபாடினியமென்பன பல் காப்பியனார் முதலியோராற் செய்யப்பட்ட யாப்பிலக்கண நூல்கள். அற்றேல், தொல்காப்பியங் கிடப்பப் பல்காப்பியனார் முதலியோர் நூல் செய்தது எற்றுக்கெனின்,—அவரும் அவர் செய்த எழுத்துஞ் சொல்

னும் பொருளும் எல்லாஞ் செய்திலர்; செய்யுளிலக்கணம் அகத்தியத்துப் பரந்துகிடந்ததனைத் தொல்காப்பியனூர் சுருங்கச் செய்தலின், அறிதற்கருமை நோக்கிப் பகுத்துக் கூறினுரென்க.

இனிப் பெருநாரை, பெருங்குருகு, இசைநுணுக்கம் முதலிய இசைத்தமிழிலக்கண நூல்களும், முறுவல், சயந்தம், குணநூல், செயிற்றியம் முதலிய நாடகத்தமிழிலக்கண நூல்களும், மாபுராணம் பூதபுராண மென்பனவும் மேலே இயற்றமிழ் நூல்கள் தோன்றிய காலத்துத் தோன்றியன. இவற்றுட் பல இக்காலத்து வழங்கக் காணுமையின் இறந்தன போலும். இனிப் பஞ்சபாரதீயம், இந்திரகாளீயம், பஞ்சமரபு முதலிய இசைத்தமிழ் நூல்களும், கூத்துநூல், பாதம், தாளவகையோத்து, பரதசேனுபதீயம், மதிவாணர் நாடகத்தமிழ்நூல் முதலிய நாடகத் தமிழ்நூல்களுங் கடைச்சங்கத்தின் பிற்றைஞான்று தோன்றியன என்றறிக.

பிரயோக விவேக நூலார் "ஐந்திரநிறைந்த தொல்காப்பியன்" எனத் தொல்காப்பியப் பாயிரத்தின்கண் வருதலின் "தொல்காப்பியத்திற்கு ஐந்திர வியாகரணம் முதனூலாம்" என்றூர். இன்னும், அவர் 'அகத்திய நிறைந்த தொல்காப்பியன்' என்னுமையானும், "கடிநிலையின்றே ஆசிரியற்க" எனப் பொதுப்பட ஓதியதல்லது பெயரெடுத் தோதாமையானும், அதற்கு அதுவே பொருளென்க" என்றுங் கூறினர் ஆசிரியர் சிவஞானயோகிகள் பாயிரவிருத்தியுள் "நூலெனப் பொதுப்படக் கூறாது நிலத்தொடு முந்துநூலென விசேடித்தலின், செந்தமிழ் தோன்றுங்காலத்து உடன்தோன்றிய நூல் அகத்திய மொன்றேயாகலானும், ஏனை நூல்களெல்லாம் அகத்தியத்தின் வழித் தோன்றினவேயாமாகலானும், ஐந்திரம் நோக்கித் தொகுத்தாரெனின், தமிழ்மொழிப் புணர்ச்சிக்கட்படுஞ் செய்கைகளும், குறியீடுகளும், வினைக்குறிப்பு, வினைத்தொகை முதலிய சில சொல்லிலக்கணங்களும், உயர்திணை அஃறிணை முதலிய சொற்பாகுபாடுகளும், அகம் புறமென்னும் பொருட்பாகுபாடுகளும், குறிஞ்சி வெட்சி முதலிய திணைப்பாகுபாடுகளும், அவற்றின் பகுதிகளும், வெண்பாமுதலிய செய்யுளிலக்கணமும், இன்னோரன்ன பிறவும், வடமொழியிற் பெறப்படாமையானும், இவையெல்லாந் தாமே படைத்துக்கொண்டு செய்தாரெனின், முந்துநூல் கண்டென்பதனோடு முரணுதலானும்,

முற்காலத்து முதனூல் அகத்தியமென்பதூஉம் அதன்வழித்தாகிய தொல்காப்பியம் அதன் வழிநூலென்பதூஉந் துணியப்படும்" என்று நிறுத்தியும், "தொல்காப்பியனார் அகத்தியனாரோடு மாறுகோடலின் அகத்தியத்தொடு பிறழவும் பிற்காலத்து வீழ்ந்தன சில முந்துநூல் கண்டு அவற்றின் வழி நூல் செய்தாரெனக் கொள்ளாமோவெனின்" என்று ஆசங்கித்து, "அஃது ஆன்றோர் வழக்கொடு மாறுகொள்வார் இக்காலத்துச் சொல்லினும் அடிப்பட்ட சான்றோர் சொல்லாராகலிற் கொள்ளாம்" என்றும், "அல்லதூஉங் கடைச்சங்கத்தாருட் களவியற் பொருள்கண்ட கணக்காயனார் மகனார் நக்கீரர் இடைச்சங்கத்தார்க்குங் கடைச்சங்கத்தார்க்கும் நூலாயிற்றுத் தொல்காப்பியமென்று உரைசெய்தாராகலின், இடைச்சங்கநாள்முதல் இன்றுகாறும் வழங்கி வருதலானும், அருந்தவக்கொள்கை அகத்தியனாரோடு மாறுகொண்டு நூல்செய்தாராயின் இவ்வாறு நிலைபெற்று வழங்காதாகலானும்,

"கூறிய குன்றினு முதனூல் கூட்டித்
தோமின் றுணர்த றொல்காப் பியன்றன்
ஆணை யின்தமி ழறிந்தோர்க்குக் கடனே"

எனவும்,

"வீங்குகட லுடுத்த வியன்கண் ஞாலத்துத்
தாங்கா நல்லிசைத் தமிழ்க்கு விளக்காகென
வானோ ரேத்தும் வாய்மொழிப் பல்புகழ்
ஆனாப் புலமை யகத்திய னென்னும்
அருந்தவ முனிவ னாக்கிய முதனூல்
பொருந்தக் கற்றுப் புரைதப வுணர்ந்தோர்
நல்லிசை நிறுத்த தொல்காப்பியன்"

எனவும்,

"மன்னிய சிறப்பின் வானோர் வேண்டத்
தென்மலை யிருந்த சீர்சால் முனிவரன்
தன்பாற் றென்றமிழ் தாவின் றுணர்ந்த
துன்னருஞ் சீர்த்தித் தொல்காப் பியன்முதற்
பன்னிரு புலவரும்"

எனவும், எல்லா ஆசிரியரும் அகத்தியனார்க்கு முதன் மாணாக்கராயினாரென்பதுபற்றியே தொல்காப்பியனார்க்குப் பெருமைகூறி அகத்தியமே

தொல்காப்பியத்திற்கு முதனூலெனக் கூறினாராகலானும், அகத்தியனாரோடு முரணிச் சபித்தாராயின், அதுபற்றியே பெருமை கூறத் தகும். அவ்வாறு ஓராசிரியருங் கூறாமையானும், அது வேதவழக்கொடும் ஆன்றோர் வழக்கொடும் மாறுகொள்வர் கூற்றேயாம்'' என்றும், ''அற்றேல் அகத்தியம் நிறைந்த தொல்காப்பியனென்னாது ஐந்திரம் நிறைந்த தொல்காப்பியனென்ற தென்னையெனின்'' என்று ஆசங்கித்து, ''அகத்தியம் நிறைந்தமை எல்லாராலுந் தெளியப்பட்டமையின் வடமொழியிலும் வல்லனாயினானென்பது விளக்கிய அங்ஙனங்கூறினார்'' என்றும், ''இவ்வாறன்றி ஐந்திரத்தின் வழித்தோன்றிய நூலென்பது விளக்கிய 'ஐந்திர நிறைந்த தொல்காப்பியன்' என்றாரென்பாரை ஐந்திரம் நிறைந்த தொல்காப்பியனெனவே ஐந்திரம் முதனூலென்பது அமைந்திருப்பவும், முந்துநூல் கண்டெனக் கூறிய தெற்றுக்கு'' என்றும், மறுத்துப் போந்தார். அதனால், பிரயோக விவேகநூலார் அக்கொள்கை வெறும் போலியேயாமென்பது துணிக. நச்சினார்க்கினியர்க்கும் இதுவே துணிபாதல் மரபியலில்,

> ''வினையி னீங்கி விளங்கிய வறிவின்
> முனைவன் கண்டது முதனூ லாகும்''

என்னுஞ் சூத்திரத்திற்கு இங்ஙனங் கடாவிடைகளான் அவர் விளங்க விரித்துரைக்குமாறுபற்றி யுணர்க.

அற்றேல், நச்சினார்க்கினியர் தொல்காப்பியப் பாயிரவுரையில் தொல்காப்பியனார் தம்மாசிரியர் அகத்தியனாரோடு மாறுகொண்டு அவர் தம்மைச் சபித்தாரென்று கூறியதென்னையெனின்—அவர், தொல்காப்பியனார், தம்மாசிரியராகிய அகத்தியனார்பால் முதலாயஅன்புவழிபாட்டிற் றலைநின்று கலைகள் நிரம்பக்கற்றுப் பன்னிருவருள் தலைவராயினாரென்றும், தம்மாசிரியர் செய்த தமிழ் முதனூலாகிய அகத்தியத்தின் வழித்தாகத் தொல்காப்பியமென்னும் இலக்கணநூல் செய்தாரென்றும், பின்னர் மரபியலகத்து உரைவகுத்தாராகலின், பிறர்மதங் காட்டிக் களைதல்வேண்டி அங்ஙனங் கூறினாரென்று கொள்க.

இனி அது வேதவழக்கொடும் ஆன்றோர் வழக்கொடும் மாறுகோளுறச் சிலர் அங்ஙனங் கட்டி நடத்திய போலியுரையென்று சிவஞானயோகிகள் நியாயவலியுரையாற் களைந்து ஒதுக்கினராகவும், பதிப்

புரைகாரர் அப்பொய்யுரை தம்பதிப்புரைக்குப் பொருந்தும் புரையென்றுபோலும் அதனுள் எடுத்துப்போற்றி அதுகொண்டு அகத்தியத்திற்குச் சிறுமையுந் தொல்காப்பியத்திற்குப் பெருமையும் பேசிப் புரையாட்டயர்ந்தார். அவர் அப்பதிப்புரை, அகத்தியம் எல்லா நலமும் ஒருங்கெய்திச் சிறக்கும் இறை நூலொக்கும் முத்தமிழ் முதனூலெனவும், தொல்காப்பியம் அதன் வழித்தாகத் தோன்றி நடைபெறும் வழி நூலெனவும், அது வேதவழக்கொடும் ஆன்றோர் வழக்கொடும் பொருந்தி இயலும் பட்டாங்கு வரலாறெனவும், மேலே நிறுத்திப்போந்த வலியுரைகளின் முன்னர் ஒருசிறுவரையேனும் நிற்றலாற்றாது தூர ஒதுங்கி மாயுமென்பது கற்றாரெல்லாந் தெற்றென வுணர்வர். அதுகிடக்க. அவர் "தொல்காப்பியர் இட்ட சாபத்தின் வலியினால் அகத்தியம் இறந்துபட்டது" என்று புதுவதாகவும் ஒன்று கற்பித்துப் புரையாட்டயர்ந்தார். அது புதுவதாதல் எதனாலெனின், தொல்காப்பியனார் அகத்தியனாரைச் "சுவர்க்கம் புகாப்பிர்" என எதிர் சபித்தனரென வேதவழக்கொடு மாறுகோளுறுவார் ஆண்டுக் கூறினாராக, அவர் அதனை ஒளித்துத் தொல்காப்பியர் அகத்தியம் இறந்துபடக் கோபமிக்குச் சாபமொன்றிட்டனரென்று ஒன்று கட்டியுரைத்தார்; அதனாலென்க. அவர் தாம் அங்ஙனம் புதுவதாகக் கட்டிக் கூறிய பதிப்புரைக்கண் குற்றம் வருதல்கண்டு அது பரிகரிக்க எண்ணி, "ஆசாரியர் வழிபாட்டிற் குறைவில்லாத திரணதூமாக்கினி அவ்வாறு சபிக்கற்பாலரோ" என்று வினாநிகழ்த்தி, "அதுவன்றே அவர் ஆசிரியரைச் சபிக்காது அவர்செய்த நூலைச் சபித்ததென்க" என்றும், "சிஷ்யரது சாபத்தினை ஆசாரியர் தடுக்கும் வன்மையிலரோ" என்று தடை நிகழ்த்திக், "கடவுளர் இருடிகள் சாபத்தினைத் தடுக்கும் வன்மையிலரெனின்,—இது கடாவன்றென்று மறுக்க" என்றும், சில போலியாகவிடுத்துக், சாலவுந் தம் புல்லறிவு நிலையிட்டனர். ஆசிரியர் வழிபாட்டிற் றலைநின்ற தொல்காப்பியனார் குரவர்ப்பேணாமை நன்றிகோறலென்னும் உய்தியில் குற்றங்கள் தமக்கு எய்துமென்றஞ்சி அகத்தியனாரைச் சபித்தல் செய்யாராயினாரென்று அறிவுதோன்றி அறங்கரைந்தார், பின்னர்த் துரபிமானம் மீதூர்ந்து அறிவுகொன்று "அதுவன்றே அவர் ஆசிரியரைச் சபிக்காது அவர் செய்த நூலைச் சபித்தனர்" என்று மறங்கரைந்தது, சிறுமகார்க்கும்

நகையினை நிறுத்துமென்க. இது தானெடுத்துக்கொண்ட மேற்கோளைச் சாதிக்கமாட்டாமல் அதற்குக் கேடுவரப் பேசுதலென்னும் நிக்கிரகத்தானமென்க. இனி அகத்தியத்தினைச் சபித்தலும் அகத்தியனாரைச் சபித்தலொப்பத் தொல்காப்பியனார்க்குக் குரவர்ப்பேணாமையும் நன்றிகோறலுமாம். என்னை? "ஈசுரவாக்கியமாகிய வேதசிவாகம நிந்தை, ஈசுரநிந்தை யொப்பதோர் அதிபாதகமாகும்" என்றும், "அரசனீதி நூல் நிந்தை அரசனிந்தை யொப்பதோர் குற்றமாம்" என்றும், உண்மை நூல்கள் ஓதுதலினென்பது.

அவர் மாணாக்கராகிய தொல்காப்பியனார் இட்ட சாபத்தினை ஆசிரியராகிய அகத்தியனார் தடுக்கும் ஆற்றலாளராகாதது என்கொலோவென்று கடாநிகழ்த்தி, இருடிகள் சாபத்தினைக் கடவுளர் தடுக்கும் ஆற்றலுடையராகாமை கேட்டலின், அது கடாவன்றென்றார். அது மேற்கொண்டதனைச் சாதிக்கும் வியாத்தியுடைத்தாகாமையின் ஏதுப்போலியாம்; இருடிகள் சாபத்தினைக் கடவுளர் தடுக்கும் ஆற்றலுடையர் அல்லராதல் யாண்டும் பிறழாது ஒருதலையாதல் செல்லாமையினென்க. அவர் அறவரும் மாணாக்கருமாகிய தொல்காப்பியனார் அறவர்க்கு இறைவரும் ஆசிரியருமாகிய அகத்தியனாரைச் சபிக்கஅஞ்சி அவர் நூலைச் சபித்தாரென்று மேற்கொண்டார்; அதனைச் சாதிக்க அவர் ஆசிரிய வழிபாடாகும் அறஞ்சிதைத்தற்கு அஞ்சுதலை ஏதுவாக்கினார்; ஆசிரியர் நூலைச்சபித்தலும் ஆசிரியர்ச் சபித்தலொப்ப அவருக்குக் கேடுபயப்பதோர் மறமேயாமென்று அவ்வேதுவுக்குக் குற்றம்வந்துழி, அதனைவிட்டு, ஆசிரியர் மாணாக்கர் சாபத்தினைக் கடக்கமாட்டாராயினமை பொருந்துமென்று முன்னதற்கு மாறுறப் பின்னொரு மேற்கோள் கூறினார். அதனைச் சாதிக்க இருடிகள் சாபத்தினைக் கடவுளர் கடக்கும் ஆற்றலுடையராகாமையென்னும் இயைபில் பிறிதோர் ஏதுக் கூறினார். அவை மேற்கோளுக்கு மறுதலைப்படப்பேசுதல், மேற்கோளை விட்டுவிடுதல், பிறிதொரு மேற்கோளைக் கூறுதல், தான் கூறிய ஏதுவுக்குக் குற்றம்வந்துழி வேறோராற்றான் ஏதுக்கூறுதலென்னுந் தோல்வித்தானங்களாதல் அறிக. இனி அகத்தியனார் முனிவருந் தேவரும் வணங்கியேத்துந் தெய்வவாற்றல் பெரிதுடையராய் அவர்க்கெல்லாந் தலைவராய் விளங்கும் பெருமையுடையராகலின், அவர் அருளியும் வெகுண்டுங் கூறும் மறைமொழிகள் இறைவன் அங்ஙனங்கூறும்

அருட்சாப மறைமொழிக ளொப்பத் தேவர் அசுரர் முனிவர் முத லாயினோர்க்கெல்லாம் ஆக்கக்கேடுகளைத் தப்பாது பயக்கும் ஆற்ற லுடையனவாம். தேவர் முனிவர் முதலியோர் அவர்தம்மை வெகுண்டு கூறுஞ் சாபவுரைகள் காமன் ஐங்கணை கண்ணுதலிறைவனெதிர் வெந்து பொடியாய் அழிந்தமைபோல அவரெதிர் சத்திகெட்டழியும். அது வேயுமன்றிக் காமன் அவ்வவிர்சடைக்கடவுள் அழல்விழிக்கு இலக்காய் வெந்து பொடியாயினதுபோல அவரும் அகத்தியனார் சாபமறை மொழிக்கு இலக்காய் ஆற்றல் சிதைந்து உய்திபெறாது கெடுவரென்றுந் துணிக. இவையெல்லாம் ஆய்ந்து துணிந்தன்றே சிவஞானயோகிகள் "அது வேதவழக்கோடும் ஆன்றோர் வழக்கோடும் மாறுகொள்வார் கூற்றே யாமென்று மறுக்க" என்று பாயிரவிருத்தியில் அங்ஙனம் ஆணைகூறுவராயினதூஉமென்று கடைப்பிடிக்க. மறைமுதற்பொரு ளான கறைமிடற்றிறைவன் நிறுத்திய வைதிகசைவ மெய்ந்நெறிவந்த தெய்வப் பெற்றியாளர் தாரதம்மிய வரலாறு நல்லாசிரியரை வழி பட்டு நன்றுணரப்பெறாமையால் அவர் இவ்வாறெல்லாம் படைத்துக் கொண்டு கூறிப் பழிமலைந்தாரென்றொழிக.

இனித் தொல்காப்பியனார் இயற்றமிழ் வழக்குநூல் போல அவ ரோடு ஒருசாலை மாணாக்கர்களாகிய மற்றைப் பதினொருவர் நூல்கள் இடைச்சங்கத்தார் தமிழாராய்ச்சிக்கு நூல்களாகாத வாறென்னை யெனில்,—அவை இடைச்சங்கத்தார் தமிழாராய்ச்சிக்கு நூலாகா வாயினவல்ல; நூலாயினவே. அஃதேல், அவ்வரலாறு நக்கீரனார் கள வியலுரையுட் சொல்லாததென்னையெனின்,—தொல்காப்பியஞ்சொல் லவே அவையுங்கொள்ளப்படும் என்பதுபற்றி அவர் ஆண்டு அவை கிளந்து ஓதாராயினரென்க. மற்றவைதம்முள் ஒன்றான இசை நுணுக்கம் ஆண்டுக் கிளந்தோதியதூஉங் காண்க. தொல்காப்பியம் இடைச்சங்கத்தாருக்கு நூலாயினமை சொல்லப்படுதலால், அதுவும் அதுபோல வழிநூலாயின பிறவும், அக்காலத்தாக அதற்குச் சிறிது முன்னாகத் தோன்றி நடைபெறுவவாயின என்றே துணிக. மற்றுப் பதிப்புரைகாரர் தொல்காப்பியம் முதலியன தலைச்சங்கத்தார் காலத் துக்கு முற்பட்டுத் தோன்றித் தலைச்சங்க அரங்கேறிப் பின்னர் இடைச் சங்கத்தாருக்கு நூலாயினவென்றும், தலைச்சங்கத்தில் தொல்காப்பியம் விளங்காமைக்குக்காரணம் அகத்தியனார் மாறுகோளென்றும், மொழிந்

தார். தொல்காப்பியம் முதலியன தலைச்சங்கமேறி நிலவினவேல், நக்கீரர் அவ்வரலாறு கிளந்து கூறுவராவர்; அவர் அவ்வாறு கூறுதொழிந்தமையானும், முக்குணங்கடந்து மிக்க தெய்வப் பெற்றியுடையராகிய அகத்தியனார் மாறுகொண்டாரென்று அவருக்கு விருப்பு வெறுப்புச் சீவகுணங்கூறுதல் குற்றமாய் முடிதலானும், அது பொருந்தாமை யுணர்க. இன்னும், அவர் கூற்றுப் பொருளாயின், அகத்தியனார் மாறு கொண்டு தொல்காப்பியத்தினைத் தலைச்சங்கத்தில் விளங்கவொட்டாது விலக்குதற்கு உடம்பட்டிருந்தாரென்று அவிர்சடைக்கடவுள் முருகவேள் என்பார்க்குப் பெரியதோர் இழுக்குமாமென்க. இன்னும், அவர் கூற்றுப் பொருளாங்கால், தொல்காப்பியம் இடைச்சங்கத்திலும் விளங்குமாறின்றி ஒதுங்கிற்றென்றுமாம். என்னை? இடைச்சங்கத்திலும் அகத்தியனார் வீற்றிருந்தாராகலின், ஆண்டும் அது அவர் மாறுகோளுற்று விளக்கம் பெறுதாதல் வேண்டுதலினென்க. இவ்வாற்றால் அவர் கூற்று வேதவழக்கோடும் ஆன்றோர் வழக்கோடும் மாறுபடும் பழியுரையேயாமன்றி நியாயவுரையாகாமை தெற்றெனவுணர்க.

அற்றேலஃதாக; செந்தமிழ்மொழி தோன்றுங்காலத்து உடன் தோன்றிற்றாய் அதற்குப் பேராதாரமாய் முச்சங்கத்தும் நிலவிய முதனூலாகிய அகத்தியங் கடைச்சங்கம் ஒடுங்கிய பிற்றைஞான்று வழங்கற்பாடின்றி மறைதற்குக் காரணந்தான் யாதெனின்,—கூறுதும். அகத்தியம் பல்வாழ்நாளுஞ் சில்பிணியும் பேரறிவு முடைய அக்காலத்தார் கற்றுப் பிறருடன் பயின்று அறிவு நிரப்புதற்பொருட்டுச் செய்யப்பட்டதொரு பெருநூலாதலின், சின்னாளும், அவற்றுள்ளும் பல்பிணியும், சிற்றறிவும் உடையராகிய இக்காலத்தார், தாம் அதனைக் கற்றலும் பலருடன் பயிறலுஞ்செய்து கல்வி நிரப்புதல் முடியாதென்று கைவிட்டு அதன்வழிச் சுருங்கித்தோன்றிய தொல்காப்பியம் முதலிய இலக்கணநூல்களையே கைக்கொண்டு போற்றிப் பயில்வாராயினமையின், அது எடுத்தெழுதிப் படித்துப் பயில்வாரின்றி வைகரி வடிவிற்றீர்ந்து மத்திமைவடிவுநேர்ந்து பைசந்திவடிவிற்றாகிப் பரமயோகிகட்கே புலனாதற்குரிய சுத்தசூக்கும நாதமாய் ஒடுங்கிற்றென்க. அவ்வாறு பாதுகாத்துப் பயில்வார் கைவிட்டமையால், வடமொழியின் மாமறையாகமச் சுருதிகளுள்ளும் அவற்றின் வழிநூல்களுள்ளுங்

காலந்தோறும் ஒடுங்கின பல. இன்னும், அவ்வாறு பாதுகாத்துப் பயில்வார் கைவிடுதலாற் றென்மொழியில் தேவாரச்சுருதிகளுள்ளுந் தெய்வச் சங்கமரீஇய நூல்களுள்ளுங் காலந்தோறும் ஒடுங்கின பல. இவையெல்லாஞ் சாபத்தாலழிந்து மறைந்தனவல்ல. இச்செந்நெறி தேர்ந்துகொள்ளமாட்டாது, அகத்தியம் தொல்காப்பியனார் சாபத்தினால் அழிவுபட்டதென்று படைத்து மொழிந்தாரை அவையெல்லாம் அழிவுபடுதற்கு ஏதுவாய்நின்ற சாபந்தாம் யாவையென்று கடாயினார்க்கு, விடை யாதோவென்க. இன்னும், அவர் தம்பதிப்புரையில் அகத்தியம் தொல்காப்பியத்தின்முன் விளங்கமாட்டாது தாழ்வுற்றதென்று சழக்கொன்றுரைத்தார். அம்முதனூலும் வழிநூலும் முறையே அரனும் அரன்மகனும் போல வாமுறுவனவேயாமன்றி முரணுறுவனவல்ல. இனி முதனூலான அகத்தியம் வழிநூலாகிய தொல்காப்பியத்தின் முன்னர் விளங்கமாட்டாது தாழ்வுற்றதென்றல் அரன்மகன்முன் அரன் விளங்கமாட்டாது தாழ்வுற்றனன் என்பதனோடொத்துச் சிறுமகார்க்கும் நகையினை நிகழ்த்துவதோர் சழக்குரையேயாமன்றி வழக்குரையாகாதென்க.

## கடைச்சங்கம்

இனிக் கடைச்சங்கமிருந்து தமிழாராய்ந்தார் சிறுமேதாவியரும், சேந்தம்பூதனாரும், அறிவுடையரனாரும், பெருங்குன்றூர்க்கிழாரும், இளந்திருமாறனும், மதுரையாசிரியர் நல்லந்துவனாரும், மருதனிளநாகனாரும், கணக்காயனார்மகனார் நக்கீரனாருமென இத்தொடக்கத்தார் நாற்பத்தொன்பதின்மர். அவருள்ளிட்டு நானூற்று நாற்பத்தொன்பதின்மர் பாடினர். அவர்களாற் பாடப்பட்டன நெடுந்தொகை நானூறும், குறுந்தொகை நானூறும், நற்றிணை நானூறும், ஐங்குறுநூறும், பதிற்றுப்பத்தும், நூற்றைம்பதுகலியும், எழுபது பரிபாடலும், கூத்தும், வரியும், பேரிசையும், சிற்றிசையுமென்று இத்தொடக்கத்தன. அவர்க்குநூல் அகத்தியமும், தொல்காப்பியமும். அவர் சங்கமிருந்து தமிழாராய்ந்தது ஆயிரத் தெண்ணூற் றைம்பதிற்றியாண்டு. அவர்களைச் சங்கம் இரீஇயினர் கடல்கொள்ளப்பட்டுப் போந்திருந்த முடத்திருமாறன் முதலாக உக்கிரப் பெருவழுதி யீறாக நாற்பத்தொன்பதின்மர். அவர் சங்கமிருந்து தமிழாராய்ந்தது உத்தரமதுரை. அவருட் கவியரங்கேறினர் மூவர் பாண்டியர்.

அற்றே லஃதங்ஙனமாக ; இடைச்சங்கத்தார் தமிழாராய்ச்சிக்கு நூல்களாகி நிலவிய தொல்காப்பியம் மாபுராணம் பூதபுராணம் இசை நுணுக்க மென்பனவற்றுள் தொல்காப்பியம் இடைச்சங்கமுதல் இன்று காறும் உளதாய் நிலைபெற, மாபுராணம் பூதபுராணம் இசைநுணுக்க மென்பன மறைதற்குக் காரணமென்னையெனின்,— அவையும் பரந்து பட்ட பொருண்மையவாய்ச் சில்வாழ்நாட் பல்பிணிச் சிற்றறிவின் மக்கட்கு உபகாரப்படாமையின் அவர் தம்மாற் கைவிடப்பட்டு மறைந் தன வென்க.

இனி "எண்ணென்ப வேனை யெழுத்தென்ப" எனவும், "சத் தமுஞ் சோதிடமும்" எனவும், இயற்றமிழோடு சிறந்தெடுத்தெண் ணப்படுஞ் சோதிடம் முதலிய பிறகலைகளுமுளவாக மும்மைச் சங்கத் தமிழாசிரியர்களும் பிறரும் இயலிசை நாடகமென்னும் இம்மூன்றனை யுமே விதந்து ஆராய்ந்துகொண்ட தென்னையோவெனின்,—சோதிடம் முதலிய பிறகலைகளெல்லாம் ஆரியத்தினுந் தமிழினும் ஏனைமொழி களினும் வேறுபாடின்றி ஒப்பநிகழ்தலின் அவற்றை வேறு விதிக்க வேண்டாமையானும், இயலிசைநாடக மென்னும் மூன்றுந் தமிழ்நிலத் துச் சில வேறுபாடுடைமையின் அவற்றை வேறு விதிக்கவேண்டுத லானும், அதுபற்றி அகத்தியனார் முதலிய முத்தமிழ்ச்சங்கவாசிரியர் களும் பிறரும் இம்மூன்றுமே விதந்தெடுத்து ஆராய்வாராயினர். அத னால் அஃது ஒக்கு முறைமைத் தென்றுணர்க.

அற்றேலஃதாக ; தலைச்சங்கம் இடைச்சங்கங் கடைச்சங்க மென்னு முச்சங்கத்தாரும் முறையே நாலாயிரத்து நானூற்று நாற் பதிற்றியாண்டும், மூவாயிரத் தெழுநூற்றி யாண்டும், ஆயிரத் தெண் ணூற்றியாண்டுஞ் சங்கமிருந்து தமிழாராய்ந்தார் என்றும், அகத்தியம் அம்முச்சங்கத்தார்க்கும் நூலாயிற்றென்றும், தமிழாசிரியர் கூறு முறைகள் மலைவுடையவாம். என்னை ? பாணினீயம் மாபாரதத்துட் போந்த உதிட்டிரன் பீமன் அருச்சுனன் வாசுதேவன் முதலிய பெயர் கட்கு இயல்முடிபு கூறி அம்மாபாரதத்தின் பின்னதாதல் அறியப் படுதலின்,

"வடமொழியைப் பாணினிக்கு வகுத்தருளி யதற்கிணையாத்
தொடர்புடைய தென்மொழியை யுலகமெலாந் தொழுதேத்துங்
குடமுனிக்கு வலியுறுத்தார் கொல்லேற்றுப் பாகர்....."

எனக் காஞ்சிப்புராணத்துட் கூறுமுறையானே அகத்தியம் அப்பாணி னீயத்தின் பிற்றோன்றிய தென்பது இனிது பெறப்படுதலின், எனின்— சிவபிரான் ஆதிக்கண் தம்பாற் றோற்றமுற்று நடைபெறுந் தெய்வத் தொன்மொழியான தமிழிலக்கணம் ஆசிரியர் அகத்தியனுர்க்குச் செவி யறிவுறுத்தருளிய வரலாறு காந்தபுராணத்து உபதேசகாண்டத்தினும், காந்தபுராணத்துக் காளிகாகண்டத்துக் காஞ்சிமான்மியத்தினும், காந்தபுராணத்து அகத்தியகாண்டமென்னும் ஆலவாய்மான்மியத்தி லும், வேறு வேறு ஓதப்படும். சிவபிரானேயன்றி அறுமுகக்கடவுளும் அகத்தியனுர்க்குத் தமிழிலக்கணஞ் செவியறிவுறுத்தருளினுரென்று ஆண்டாண்டுக் கேட்கப்படும். அவைகள் ஒரு காலத்தன வாதலன்றிப் பலகாலத்தனவாதல் தெள்ளிதிற் றுணியப்படும். படவே, அகத்தி யத் தோற்றம் பாணினீயத்தின் முற்பட்டதுமாம்; மற்றதன் பிற் பட்டதுமாம். இஃதென் சொல்லியவாறோ வெனின்,— பலவாறகப் போதரும் அகத்தியத் தோற்ற வரலாற்றுள்,

> "வடமொழியைப் பாணினிக்கு வகுத்தருளி யதற்கிணையாத்
> தொடர்புடைய தென்மொழியை யுலகமெலாந் தொழுதேத்துங்
> குடமுனிக்கு வலியுறுத்தார் கொல்லேற்றுப் பாகர்......"

என்று காஞ்சி மான்மியத் தோதப்பட்ட அகத்திய வரலாறு இறுதிக் கண்ணதாகலின், அதுபற்றி அகத்திய முதனூல் அக்காலத்திற்றானே யுதித்ததென்று கொண்டு அவ்வகத்திய முத்தமிழ் முதனூலின் தொன்மை வரலாறு பிரமாணமாதல் யாங்ஙனமென்றெடுத்து ஆசங்கித் தில் பொருந்தாதென்ற வாறுமென்க.

அற்றே லஃதங்ஙனமாக; சிவபிரான் அறுமுகக்கடவுள் முற்றறி வுடைய ஒரு தனி முதல்வர். அகத்தியனுரோ தவத்தான் மனந் தூயராய் முக்குணங்களையுங் கடந்து அவ்விறைவரருள் பெற்றுடைய மாமுனிவர். அப்பெற்றியுடைய இறைவர் இப்பெற்றியுடைய அகத் தியனுர்க்குத் தமிழிலக்கணம் ஓர்காலத்து ஒருமுறையானன்றிப் பல காலத்துப் பன்முறையாற் செவியறிவுறுத்த அமர்ந்தவாறு என்னை யெனின்,— தமிழ் வழக்குக் காலந்தோறும் வேறுபடுதலின், முற் காலத்து வழங்கி வீழ்ந்த தமிழ் வழக்கைக் களைந்து, பிற்காலத்து வேறுப்படப் பிறந்த தமிழ் வழக்கைத் தழுவி வழக்கு நெறிப்படுத்தல்

வேண்டி, அவ்விறைவர் அகத்தியனார்க்குத் தமிழியல் அங்ஙனங் கால வேறுபாட்டாற் பலமுறை செவியறிவுறுத்தியருள அமர்ந்தா ராகலின், அது குற்றமாகா தென்க. ஆசிரியரெல்லாம் "இறந்தது விலக்கல் எதிரது போற்றல்" என்னும் உத்தியும்,

"பழையன கழிதலும் புதியன புகுதலும்
வழுவல கால வகையி னானே"

என்னும் நூற்புறனடையும், நூன்மரபாகக் கொண்டு ஓதுமாறும் இதற்கு உறு சான்றாதலறிக. இனி நந்தியெம்பெருமான் முதலிய கணநாதர்களும், அயன் முதலிய தேவர்களும், சனற்குமாரன் முதலிய முனிவர்களும், சிவபிரான்பால் தத்துவபோதம் ஒருமுறையானன்றிப் பன்முறையானுஞ் செவி யறிவுறுத்தப்பட்டு ஐயம் நீங்கி மெய்யுணர்ந்தா ரென்று புராணங்களில் ஆண்டாண்டுக் கேட்கப்படுதலின், கால வேறுபாடு பற்றி வீழ்ந்தும் பிறழ்ந்தும் வருந் தமிழ் வழக்குக்களை, ஆய்ந்து களைந்து தழுவி வழக்குவழிப் படுத்தல் வேண்டி, அவ்விறைவர்பால் அகத்தியனார் தமிழிலக்கணம் அவ்வாறு பன்முறை கொண்டிடல் தக்கவாறேயாமென்பது.

இதனை மற்றோராற்றானும் நெறிப்படுத்துரைத்தும். பல்வாழ்நாளும் பிணிதபுநோன்பும் அறிவுவலியுமுடைய முற்காலத்தார் நீடிருந்து ஆராய்ந்து தமிழ் வழக்குத் தேறி யுறுதிகூடுதற்பொருட்டு, அகத்தியனார் அருந்தவமிருந்து, இறையனாருளிய ஆறு கடைப்பிடித்துத் தம்பெயரான் முந்தமிழிலக்கண முதனூல் முதற்கண் விரித்தியற்றி யுபகரித்தருளினர். இது முதற்சங்கத்தின் முற்பட்டுப் போந்த அகத்திய வரலாறு. இடைக்காலத்தார் அம்முற்காலத்தாரிற் குறைந்த வாழ்நாளும், குறைந்த நோன்பும், சிற்றறிவு முடையராயினமையின், அவர் பொருட்டு, அகத்தியனார் மறித்தும் அருந்தவமிருந்து இறையனாருளிய ஆறு கடைப்பிடித்துத், தம்பெயரான் இயற்றி வழங்குவித்த அம்முத்தமிழிலக்கண முதனூலைப் பின்னர்ச் சுருங்க யாத்து இயற்றி யுபகரித்தருளினர். இஃது இடைச்சங்க ஞான்று போந்த அகத்திய வரலாறு. பிற்காலத்தினர் அவ்விடைக் காலத்தாரிற் குறைந்த வாழ்நாளும் நோன்பும் அறிவும் உடையராயினமையின், அவர் பொருட்டு அகத்தியனார் மறித்தும் அருந்தவ மிருந்து

இறையனர் அருளிய ஆறு கடைப்பிடித்துத், தம் பெயரான் வழங்குவித்த அம்முத்தமிழிலக்கண முதனூலைப் பின்னுஞ் சுருங்க யாத்தியற்றி யுபகரித்தருளினர். இஃது கடைச்சங்க ஞான்று போந்த அகத்திய வரலாறு. இவற்றுள், இறுதிக்கண்ணது பாணினீயத்தின் பிற்பட அங்ஙனம் நிகழ்ந்த வரலாறும்.

"ஏழியன் முறைய தெதிர்முக வேற்றுமை
வேறெனு விளம்பான் பெயரது விகாரமென்
றோதிய புலவனு முளனொரு வகையா
னிந்திர னெட்டாம் வேற்றுமை யென்றனன்"

என மொழிதரும் அகத்திய முதனூல் இவ்விறுதியதாம். வடநூலாரும், "முற்காலத்தில் தைவவியாகரணங்களும் ஆரிடவியாகரணங்களும் பல வழங்கின. கலி காலத்தின் மக்கட்கு ஆயுளும் அறிவுங் குன்றுதலின், அவற்றினை யெல்லாங் கற்று அறிவு நிரப்பமாட்டாது வடமொழியை வழுமலைதர வழங்குவாராயினர். அது கண்ட பாணினி முனிவர் அருந்தவமிருந்து சிவபிரான் திருவருள் பெற்று அத்தைவ ஆரிட வியாகரணங்களைச் சுருக்கி 'அட்டாத்தியாயி' என ஓரிலக்கண நூல் செய்தருளினர்" என்றுரைப்பாராதலின், யாம் காலபேதத்தொடு படுத்தோதும் இவ்வரலாறு மற்றவராலும் ஒப்பற்பாலதேயாமென்பது. 'வடமொழிவியாகரணம் பலராற் காலத்திற் கேற்ப விரிந்துஞ் சுருங்கியும் நடந்தது. தென்மொழி யிலக்கணம் உலகமெலாந் தொழுதேத்துங் குடமுனிவரான அகத்தியனொருவர் ஆணை வழியிற்றானே காலங்கட்கேற்ப விரிந்துஞ் சுருங்கியும் நடந்தது. இது தம்முள் வேறுபாடு. அகத்தியம் இங்ஙனங் காலத்திற்கேற்ப விரிந்துஞ் சுருங்கியும் மாறி நடந்தமையாற் போலும் மற்றது "பேரகத்தியம்" "சிற்றகத்தியம்" என அங்ஙனம் வழங்கப்படுவதாய தென்பது. அகத்தியங் காலபேதம்பற்றி இவ்வாறு விரிந்துஞ் சுருங்கியும் மாறி நடந்த முறையானே அவ்வாறு வழங்கப்பட்டமை தேறமாட்டாதார், பேரகத்தியஞ் சிற்றகத்தியம் வெவ்வேறு ஒருகாலத்து ஒருங்கு நிலவினவென்று தமக்கு வேண்டியவா றோதி, வரலாற்றுமுறை திறம்பிடுவர். இன்னும் விரிப்பிற் பெருகு மென்க.

## களவியல்

கடைச்சங்கத்தார் காலத்துப் பாண்டியனாடு பன்னிருயாண்டு வற்கடஞ் சென்றது. செல்லவே, பசிகடுகுதலும் பாண்டியன் சங்கப் புலவரெல்லாரையுங்கூவி, "வம்மின்! யான் உங்களைப் புறந்தரற்பால னல்லேன்; என் தேயம் பெரிதும் வருந்துகின்றது; நீயிர் நுமக்கறிந்த வாறு புக்கு நாடு நாடாயினஞான்று என்னையுள்ளி வம்மின்" என்றான். என, அரசனை விடுத்து அவரெல்லாரும் போயினர். போயபின்னர்க் கணக்கின்றிப் பன்னீரியாண்டு கழிந்தது. கழிந்தபின்னர் நாடு மலிய மழை பெய்தது. பெய்தபின், பாண்டியன் இனி நாடு நாடாயிற்றாக லின் நூல் வல்லாரைக் கொணர்கவென்று கிங்கரரை எல்லாப்பக்கமும் போக்கினான். போயகிங்கரர் எழுத்ததிகாரமுஞ் சொல்லதிகாரமும் யாப்பதிகாரமும் வல்லாரைத் தலைப்பட்டுக் கொணர்ந்தனர். பொருளதி காரம் வல்லாரை எங்குந் தலைப்பட்டிலேமென்று வந்தார். வர அரச னும் புடைபடக் கவன்று என்னை! எழுத்துஞ் சொல்லும் யாப்பும் ஆராய்வது பொருளதிகாரத்தின் பொருட்டன்றே! பொருளதிகாரம் பெறேமேயெனின், இவைபெற்றும் பெற்றிலேமெனச் சொல்லா நிற்ப, மதுரை ஆலவாயில் அழனிறக்கடவுள் சிந்திப்பான்: என்னை பாவம்! அரசற்குக் கவற்சி பெரிதாயிற்று; அது தானும் ஞானத் திடையதாகலான் யாமதனைத் தீர்க்கற்பாலம்" என்று இவ்வறுபது சூத்திரத்தையுஞ் செய்து மூன்று செப்பிதழகத்தெழுதிப் பீடத்தின் கீழிட்டான். இட்ட பிற்றைஞான்று, தேவர்குலம் வழிபடுவான் தேவர்கோட்டத்தை எங்குந்துடைத்து, நீர் தெளித்துப், பூவிட்டுப், பீடத்தின்கீழ் என்றும் அலகிடான் அன்று தெய்வக்குறிப்பினான் அல கிடுவனென்று உள்ளங்குளிர அலகிட்டான். இட்டாற்கு அலகினோடும் இதழ்போந்தன. போதரக்கொண்டுபோந்து நோக்கினாற்கு, வாய்ப் புடைத்தாயிற்றோர் பொருளதிகாரமாய்க் காட்டிற்று. காட்டப், பிரா மணன் சிந்திப்பான்: "அரசன் பொருளதிகாரம் இன்மையிற் கவல் கின்றானென்பது கேட்டுச் செல்லாநின்றது உணர்ந்து நம்பெருமான் அருளிச்செய்தா னாகும்" என்று அவன் தன்னகம்புகுதாதே கோயிற் றலைக்கடைச்சென்று நின்று கடைகாப்பார்க்கு உணர்த்தினான்; கடை காப்பார் பாண்டியற்குணர்த்தினார்; பாண்டியன் புகுதுக என்று பிராமணனைக் கூவினான். கூவப், பிராமணன் சென்று புக்குக் காட்டி

னன். பாண்டியன் ஏற்றுக்கொண்டு நோக்கிப் "பொருளதிகாரம் இது; நம்பெருமான் நமதிடுக்கண் கண்டு அருளிச்செய்தான் ஆகற்பாலது" என்று, அத்திசை நோக்கித் தொழுதுகொண்டு நின்று, சங்கத்தாரைக் கூவுவித்து "நம்பெருமான் நமதிடுக்கண் கண்டு அருளிச்செய்த பொருளதிகாரம், இதனைக் கொண்டுபோய்ப்பொருள் காண்மின்" என, அவர்கள் அதனைக்கொண்டுபோந்து கன்மாப்பலகை ஏறியிருந்து ஆராய்வுழி, எல்லாருந் தாந்தாம் உரைத்த உரையே நல்லதென்று சில நாளெல்லாஞ் சென்றன. செல்ல, நாம் இங்ஙனம் எத்துணை யுரைப்பினும் ஒருதலைப்படாது. நாம் அரசனுழைச் சென்று நமக்கோர் காரணிகனைத் தரல்வேண்டுமென்று கொண்டுபோந்து அவனாற் பொருளெனப்பட்டது பொருளாய் அன்றெனப்பட்டது அன்றாய் ஒழியக் காண்டுமென, எல்லாரும் ஒருப்பட்டுப் பாண்டியனுழைச் சென்றார். பாண்டியன் எதிர்சென்று "என்னை! நூலுக்குப் பொருள் கண்டீரோ?" என்றான். அவர் "அது காணுமாறு எமக்கோர் காரணிகனைத் தரல்வேண்டும்" எனப், "போமின், நுமக்கோர் காரணிகனை எங்ஙனம் நாடுவேன்! நீயிர் நாற்பத்தொன்பதின்மராயிற்று. உமக்கு நிகராவார் ஒருவர் இம்மையினின்றே" என்று பாண்டியன் சொல்லினான். சங்கப்புலவர் போந்து கன்மாப்பலகையில் ஏறியிருந்து, "அரசன் இது சொல்லினான்; காரணிகனைப் பெறுமாறு என்னைகொல்?" என்று சிந்திப்புழிச், "சூத்திரஞ் செய்தான் ஆலவாயில் அவிர்சடைக்கடவுளன்றே! அவனையே காரணிகனைத் தரல்வேண்டுமென்று சென்று வரங்கிடத்தும்" என்று வரங்கிடந்தார். இடையாமத்து "இவ்வூர் உப்பூரிகுடிகிழார் மகனுவான் உருத்திரசன்மனென்பான், பைங்கண்ணன், புன்மயிரன், ஐயாட்டைப் பிராயத்தான் ஒரு மூங்கைப்பிள்ளை யுளன்; அவனை அன்னனென் றிகழாது கொண்டுபோந்து ஆசனமேலிரீஇக் கீழிருந்து சூத்திரப்பொருளுரைத்தால், கண்ணீர் வார்ந்து மெய்ம்மயிர் சிலிர்க்கும், மெய்யாயின உரைகேட்டவிடத்து. மெய்யல்லாத வுரை கேட்டவிடத்து வாளாவிருக்கும். அவன் குமாரதெய்வம்; அங்கோர் சாபத்தினாற் றோன்றினான்" என முக்காலிசைத்த குரல் எல்லார்க்கும் உடன்பாடாயிற்றாக, எழுந்திருந்து தேவர் குலத்தை வலங்கொண்டு போந்து, உப்பூரிகுடிகிழாருழைச் சங்கமெல்லாஞ் சென்று, இவ்

வார்த்தை யெல்லாஞ் சொல்லி, "ஐயனுவான், உருத்திர சன் மனைத் தரல்வேண்டும்" என்று வேண்டிக், கொடுபோந்து, வெளி யது உடீஇ, வெண்பூச்சூட்டி, வெண்சாந்தணிந்து, கன்மாப்பலகை யேற்றிக் கீழிருந்து சூத்திரப்பொரு ளுரைத்தார். உருத்திரசன்மனு வான் எல்லாரும் முறையே உரைக்கக் கேட்டு வாளாவிருந்து, மதுரை மருதனிளநாகனர் உரைத்தவிடத்துக் கண்ணீர் வார்ந்து மெய்ம்மயிர் நிறுத்தினன்; பின்னர்க் கணக்காயனர் மகனர் நக்கீரர் உரைத்தவிடத் துப் பதந்தொறுங் கண்ணீர்வார்ந்து மெய்ம்மயிர் சிலிர்ப்ப இருந்தான். இருப்பச், சங்கப்புலவர் ஆர்ப்பெடுத்து "மெய்யுரை பெற்று மிந் நூற்கு" என்றார். அதனல், உப்பூரி குடிகிழார் மகனுவான் உருத்திர சன்மன் செய்தது இந்நூற்கு உரையென்பாரு முளர். அவர் செய்திலர். மெய்யுரை கேட்டாரென்க. மதுரை ஆலவாயிற் பெரு மானடிகளாற் செய்யப்பட்ட நூற்கு, நக்கீரனுரால் உரை கண்டு, குமாரசுவாமியாற் கேட்கப்பட்டதென்க. களவியல் வந்தவாறும் அதற்கு மெய்யுரை கண்டவாறும் இவையாம். இனி உரை நடந்தவாறு சொல்லுதும். மதுரைக் கணக்காயனர் மகனர் நக்கீரனர் தம்மகனர் கீரவிகொற்றனர்க்கு அதனை யுரைத்தார்; அவர் தேனூர்கிழார்க்கு உரைத்தார்; அவர் படியங்கொற்றனர்க்கு உரைத்தார்; அவர் செல் வத்தாசிரியர் பெருஞ்சுவனர்க்கு உரைத்தார்; அவர் மணலூராசிரியர் புளியங்காய்ப் பெருஞ்சேந்தனர்க்கு உரைத்தார்; அவர் சொல்லூரா சிரியர் ஆண்டைப் பெருங்குமாரனர்க்கு உரைத்தார்; அவர் திருக் குன்றத்தாசிரியர்க்கு உரைத்தார்; அவர் மாதளவனர் இளநாகனர்க்கு உரைத்தார்; அவர் முசிறியாசிரியர்க்கு உரைத்தார். இங்ஙனம் வரு கின்றது உரை. இந்நூலுட் கூறிய முச்சங்க வரலாறு களவியல்முத னூன் முகத்து நக்கீரனர் உரைத்து நிறுத்தியதென் றறிக.

அற்றே லஃதங்ஙனமாக; ஆசிரியர் அகத்தியனர் முதற்கண் முத்தமிழ்நூல் முதன்மைபெறச் செய்தனர். அதனல் அகத்தியமே தமிழ் முதனூலாய்ச் சிறந்தது. மற்று அகத்தியத்தின்பின்னர் ஆலவா யில் அவிர்சடைக்கடவுள் செய்தருளிய களவியல் தமிழ் முதனூலா குமாறு என்னையோவெனின்,— முற்காலத்தாகப் பிற்காலத்தாக வினை யினீங்கி விளங்கிய வறிவின் முனைவன் செய்தனவே முதனூலாம். அங்ஙனமாயினும், அம் முதல்வன் தன்னருளால் வினையினீங்கி விளங்

கிய அறிவின் முனைவரை அதிட்டித்துச் செயப்படுவனவும் முதனூல்களாம். அதனால் சிவபிரான் உபதேசவழி வினையின் நீங்கி விளங்கிய அறிவின் முனைவராகிய அகத்தியனாராற் செய்யப்பட்ட நூலும் முதனூலாயது. இதனால், பிற்காலத்துப் பாண்டியன் பொருட்டுப் பெருமானடிகள் செய்த களவியல் வேதாகமம் போல்வதோர் முதனூலேயாமென் றுணர்க. மற்றின்னும் இதனானே, முதல்வன் உபதேசவருளால் வினையினீங்கி மெய்புணராதார் முதன்மையாக நூல்கள் செய்யினும் அவை முதனூலாகாவென்பது தெளிக. மற்றிவையெல்லாம் பெறுவித்தற்பொருட்டன்றே ஆசிரியர் தொல்காப்பியனார்,

"வினையி னீங்கி விளங்கிய வறிவின்
முனைவன் கண்டது முதனூ லாகும்"

என நோக்குப் பெரிது புணர்த்து அங்ஙனஞ் சூத்திரம் யாக்கலுறுவாராயினரென்க.

இக்களவியலென்னும் முதனூல்,

"அன்பி னைந்திணைக் களவெனப் படுவது
அந்தண ரருமறை மன்றல் எட்டினுட்
கந்தருவ வழக்க மென்மனார் புலவர்"

என்பது முதலாக,

"களவு கற்பெனக் கண்ணிய வீண்டையோர்
உளநிக ழன்பி னுயர்ச்சி மேன"

என்பது ஈறாக அறுபது சூத்திரமுடையதீ. இதன் சூத்திரங்கள் அறுபதுந் திட்பமும் நுட்பமும் ஒட்பமுஞ் சிறந்து, அகப்பொருட்டிறனெல்லாம் மிகத் தெளித்துரைத்தலின் தாமே தமக்கு நிகராய், ஏனோர் கூறிய அகப்பொருள்கட்கெல்லாங் கடவுட் பிரமாண வரம்பாய் நிலைபெறுவன. இஃது உள்ளுதொறுள்ளுதொறுள்ளம் உருக்குவதாம்! நவிறொறும் நவிறொறும் நாச்சுவை பெருக்குவதாம்! பயிறொறும் பயிறொறும் பேரின்பம் பயப்பதாம்! எல்லாம் இயல்பின் உணரவல்ல இறைவன் அருளிச்செய்த இதன் பெருமைகளைச் சொல்லாலுரைத்து அவதி நேர்தல் யார்க்கும் ஒல்வதன்று. மற்றிதன் பெருமை நிற்க; கணக்காயனார் மகனார் நக்கீரனார் கண்டு கசடற வகுத்த இதனுரையுந் திட்பமும் நுட்பமும் ஒட்பமுஞ் சிறந்து ஏனோர் உரை

கட்கெல்லாம் ஓர் வரம்பாய் நிலைபெறுவது. இந்நூல் "இறையனார் களவியல்" என்றும் "இறையனாரகப்பொருள்" என்றும் வழங்கப் படும். இது நன்மக்கள் எய்துதற்குரிய அறம் பொருள் இன்பம் வீடுபே றென்னும் நான்கனுள் வைத்து ஐம்பொறிகளானும் ஒருங்கு நுகர்தற் பாலதாம் அன்புடைக் காமவின்பம் நுதலி இயற்றப்பட்டது. இவ்வின் பம் அகத்துறுபொருளாய் நிகழ்தலின் அகப்பொருளெனப்படும். இவ் வன்புடைக் காமக்கைகோள் களவென்றுங் கற்பென்றும் இரண்டாய் நடக்கும். இவற்றுள் இந்நூல் நுதலுங் கைகோள் களவாம். களவாவது தலைமகனுந் தலைமகளும் உழுவலன்பினானே கொடுப்பாரும் அடுப்பாரு மின்றிப் பால்வகையிற் றமியராய் ஓர் பொழில்வயிற் றலைப்பட்டுக் கரந்த உள்ளத்தினராய் நுகர்ந்து செல்லுங் காமவொழுக்கமாம். இது கற்பொழுக்கமும் ஒதினும் மிகுதிபற்றிக் களவியலெனப்பட்ட தென் றுணர்க.

இக்களவென்னுங் கைகோள் காமப்புணர்ச்சியும், அது நிகழ்ந்த பின்னர் இடந்தலைப்பாடும், அதன்பின்னர்ப் பாங்கற்குச் சொல்லி அவ னாற் கூடுதலும், அதன் பின்னர்த் தோழிவழிநின்று குறைமுடித்துக் கோடலுமென நான்கா யடங்கும். அது,

"காமப் புணர்ச்சியும் இடந்தலைப் படலும்
பாங்கொடு தழாஅலுந் தோழியிற் புணர்வுமென்
றாங்கநால் வகையினும் அடைந்த சார்பொடு
மறையென மொழிதல் மறையோ ராறே"

என்னுந் தொல்காப்பியச் சூத்திரத்தான் அறிக.

இது தலைமகன் தலைமகளென்னும் இருவோரும் அஃகாவன்பிற் றலைநின்று பால் வகையாற் றமக்குரித்தாய் நிற்கும் இன்பங் கரந்து நுகர்ந்து வருவதோர் ஒழுக்கமாய் நிற்றலானும், தலையாயவறனும் நிலையாய ஞானமும் பயந்து அவை வாயிலாகச் சுவர்க்கம் வீடுபேறு உதவுதலானும், பிறர்க்குரிய பொருளை மறைபிற் கொள்ளுங் களவன்று யிற்று. இதுதன்னைக் களவென்றல் வேதத்தினை மறையென்றல் போலுமென் றறிக. இது மன்றலெட்டனுட் கந்தருவத்தின் பாற் படும். கந்தருவ மன்றலாவது—இருவரொத்தார் தாமே கூடுங் கூட் டம். இனி இந்நூல் கூறுங் களவொழுக்கம் இல்லது இனியது நல்

லது என்று புலவரால் காட்டப்படுவ தொன்றுதலின், உலகவ்வழக்கத்தினோடு இயையாதென் றறிக.

அற்றே லஃதாக; தெய்வத் தமிழ்மொழியினானே ஓர் நூல் செய்தற்கமர்ந்த தனிமுதற்கடவுளாகிய இறையனார்க்கு நன்மக்கட்கு உறுதிபெரிது பயத்தற் சிறப்புடைய அறம் வீடுபேறென்னும் உறுதிப்பொருள்கள் பற்றி முதனூல் செய்தலே மாண்பாம். பொருள் அவ்விரண்டுஞ் சாதித்தற்குத் துணையாய் நிற்பதொன்றாதலால் அது பற்றியும் நூல் செய்தல் அப்பரனார்க்கு மாண்பாம். இச்சிறப்புடைய அம்மூன்றனையும் ஒழித்து இம்மையே உறுதி சிறிது பயக்கும் நீரதாகுங் காமப்பொருள் பற்றித் தமிழ் நூல் செய்தருள அமைந்தது அப்பரனார்க்கு மாண்பாமா றென்னையெனின்,— கூறுதும். நிலவுலகத்துத் தலைமகன் தலைமகளென்று சிறப்பித்து ஓதப்படுவோர் உம்மைக் காலத்துப் பிறப்புக்க ளெல்லாவற்றினும் அன்பான் உயிரொன்றுபட்டு ஒருவரையொருவர் இன்றியமையாராய் அந்நல்வினையான் இம்மைக்கண்ணும் அந்நீரராகி ஒழுகுபவராவர். இவர் குலங் கல்வி முதலிய பத்துவகை யிலக்கணங்களுந் தம்முள் ஒத்தபாலினராவர். இத்தலைமகற்கு இழிந்தாரல்லது, ஒத்தாரும் மிக்காரும் உலகத்தினில்லை. தலைமகளும் அந்நீர்மையினளாம். இப்பெற்றியார் ஒழுக்கங் கேட்டல் மாத்திரையானே விழைவு விடுத்த விழுமியோருள்ளமும் விழைவின்கண் தாழ்வுறும். இத்தரையில் இவர் துய்க்கும் இவ்வின்பம் அத்துறக்கத்தாரும் விழைவதொன்றும். இத்தனை விழுப்பமுடைய அன்புடைக் காமவின்பம் இம்பரிற் றுய்த்துச் செல்லும் இவர் அறப்பாலெல்லாந் திறப்பட உடையாரென்பது ஒருதலையாம்; இப்பேறுடையார் பொருட்பாலெல்லாந் திறப்பட உடையரென்பது சொல்லாமேயெய்தும். இங்ஙனம் அறம் பொருள் என்னுமிவை சிறப்புறப் பெற்று முனிவருந் தேவரும் விழைதரும் இன்பம் நுகர்ந்து செல்லுமிவர், எதிர்காலத்து நிலையாமை யுணர்ந்து பற்றறத் துறந்து மெய்யுணர்ந்து வீடுபேறு ஒருதலையாற் றலைக்கூடுபவராவர். இங்ஙனமாதலின், இப்பெற்றியார் அன்புடைக் காமவொழுக்கமாகுங் களவியல் காமவியலாதலன்றி அறவியல் பொருளியல் வீடுபேற்றியலுமாம் ஆதலால், அதுபற்றித் தமிழ்நூல் அருளிச்செய்தது இறையனார்க்கு மாண்பேயாமென்று கடைப்பிடிக்க.

அற்றேலஃதங்ஙனமாக; பொருளதிகாரம் வல்லாரைப் பெற்றிலேமென்று புடைபடக் கவன்ற பாண்டியற்கு ஆலவாயில் அழனிறக்கடவுளாகிய இறையனார் பொருளதிகாரம் வல்லார்தம்மைக் கூட்டிக் கவற்சி நீக்குதலே முறையாமன்றிப் பொருளதிகாரத்து உள்ளுறையாகக் களவியல் இயற்றி யருளுதல் முறையாங்கொல்லோ வெனின்,- ஆலவாயில் அழனிறக்கடவுளாகிய இறையனார் பொருளதிகாரத்து உள்ளுறுதெளிவாகக் களவியல் இயற்றியருளி அதன் மெய்யுரை நிறுத்த வல்ல உருத்திரசன்மனாரைச் சங்கத்தார்க்குக் கூட்டும் முகத்தானே பாண்டியன் கவற்சி நீக்கியருளினாராதலால், அது கடாவன்றென்று விடுக்க. இனி நக்கீரனார் முதலிய கடைச்சங்கப் புலவரெல்லாம் பொருளதிகாரம் மிக வல்லரேயாயினும், அவர் தாந்தாம் வல்லவாறு பலபட எடுத்துரைக்கும் அப்பொருளதிகாரப் பொருள் நுட்பங்களுள் இவை வாய்ப்புடையன, இவை வாய்ப்புடையன அல்லவென்று ஒருதலைப் படுத்து உரைக்கவல்ல தெய்வப்பெற்றியுடைய காரணிகர்ப் பெருமை காரணமாகவே பாண்டியன் கவன்றான்; இறையனார் அக்காரணிகராதற்குரிய தெய்வப்பெற்றியுடைய உருத்திரசன்மனாரை அவற்கு உதவியருள, அவன் அக்கவற்சி யகன்று மகிழ்ச்சி எய்தினானென்பது. அற்றேல், உருத்திரசன்மனாரை உதவியருளுதலே அது தீர்த்தலாயமையும், களவிய லியற்றி அதன் மெய்யுரை வரையறுப்பிக்கும் முகத்தால் உருத்திரசன்மனாரைப் பாண்டியற்கு இறையனார் கூட்டியருள வேண்டிய தென்னுக்கெனின்,-அகத்தியத்தினுந் தொல்காப்பியத்தினும் ஓதிய அகப்பொரு ளிலக்கணங்கள் மிகப் பரந்து கிடந்தன வாதலால், அவையெல்லாஞ் சுருங்கி ஒவ்வோர் துறைப்பட்டுத் தெளிவுற்று நிலைபெறச்செய்தல் வேண்டி இறையனார் களவிய லியற்றி அதன் மெய்யுரை வரையறுப்பிக்கும் முகத்தானே அவரை உதவிட அமர்ந்தருளினா ரென்க.

“உலகிய னிறுத்தும் பொருண்மர பொடுங்க
மாறனும் புலவரு மயங்குறு காலை
முக்கணு மும் பெருமறை முளைத்தருள் வாக்கால்
அன்பினைந் திணையென் றறுபது சூத்திரங்
கடலமு தெடுத்துக் கரையில்வைத் ததுபோற்

பரப்பின் தமிழ்ச்சுவை திரட்டிமற் றவர்க்குத்
தெளிதரக் கொடுத்த தென்தமிழ்க் கடவுள்...''

என்னுங் கல்லாடத்தானும் இதுவே கருத்தாதல் தெளிக. ஆண்டு உலகியல் நிறுத்தும் பொருள்மரபொடுங்க என்று பொதுப்பட எடுத்தோதியது,உறுதிப்பொருள் நான்கனையுந் தழுவ வேண்டியென்றுணர்க. அறம் வீடு பயவா அகப்புறப்பொருள்கள் உலகியல் நிறுத்தா வாதலால், உலகிய னிறுத்தும் பொருளெனவே அவையும் உடன் போதருமென்க. இவ்வுலகியற் பொருளொழுக்கம் இறைவனருளிய வேதாகம முதலோத்துப் பற்றி ஆதிகாலந் தொடங்கி இம்மேதினிக்கண் ஆன்றோர் வழிவழிக் கொண்டுபோதரும் வழக்காறென்பது குறிப்பிப்பார் பொருளென்று ஒழியாது, பொருண்மரபென்றார். பரப்பின் தமிழ்ச்சுவை திரட்டி மற்றவர்க்குத் தெளிதரக் கொடுத்தவென்றார், அகத்தியத்தின்கண்ணுந் தொல்காப்பியத்தின் கண்ணும் அகப்பொருள் இலக்கணங்களாய்ப் பரந்துகிடப்பனவும் பிறவுங் களவியலின்கண் திரண்டு துறைப்பட அமைந்தவாறு அறிவித்தற்கு. இன்னும் இதன் நோக்குகள் விரிப்பிற் பெருகுமென்பது.

## தொல்காப்பியவுரைகள்

கடைச்சங்கத்தின் பிற்றைஞான்று தொல்காப்பியத்திற்கு இளம்பூரணர், கல்லாடர், பேராசிரியர், சேனாவரையர், நச்சினார்க்கினியர் என்பார் தனித்தனி உரையியற்றினார். இவருள் இளம்பூரணர் இதற்கு முதற்கண் உரை யியற்றினமையின் உரையாசிரியரென்று அவ்வாறு விழங்கப்படுகின்றார். இனி இதற்கு இளம்பூரணர் செய்தவுரை எழுத்ததிகாரஞ் சொல்லதிகாரம் மாத்திரையின் இக்காலத்து நிலைபெறுகின்றது. பேராசிரியருரையும், கல்லாடருரையும் ஒவ்வோர் கூற்றினன்றி, முழுதும் நிலைபெறக்காணாமையின் இறந்தனபோலும். சேனாவரையர் சொல்லதிகார மாத்திரைக்கே யுரையியற்றினர். நச்சினார்க்கினியர் மூன்றதிகாரங்கட்கும் உரையியற்றினர். இவை நிலைபெறுகின்றன. இளம்பூரணரியற்றிய எழுத்ததிகாரவுரையும், நச்சினார்க்கினியரியற்றிய எழுத்ததிகாரவுரையும், ஓர் பெற்றியவாயே விளங்கும். ஆயினும் நச்சினார்க்கினியரியற்றிய எழுத்ததிகாரவுரை, இளம்பூரணரெழுத்ததிகாரவுரை நுட்பங்கள் ஆண்டாண்டு விளக்கி அதற்கு

விருத்திபோன்று நிற்கும். இனி இம்மூவருஞ் சொல்லதிகாரத்திற்குத் தனித்தனி யுரை யியற்றினும், சேனுவரையர் இயற்றியவுரையே சொல்லதிகாரத்திற்கு மிக வாய்ப்புடைத்தாய் விளங்குகின்றது. சேனுவரையர் இளம்பூரணரியற்றிய சொல்லதிகார வுரைத்திறங்களை ஆண்டாண்டுத் தழுவியும் மறுத்துந் தந்துணிபு நிலையிட்டுரைப்பர். நச்சினார்க்கினியர் சொல்லதிகாரச் சூத்திரங்கட்கு யாண்டுஞ் சேனுவரையர் உரைத்தவாறே யுரைத்தார். ஆயினும், சேனுவரையர் உரைநுட்பங்களை ஓரோரிடங்களில் விளக்கி உதாரணம் மேலுஞ் சில சில காட்டினர். இனிச் சேனுவரையர் உரைக்கருத்துக்களைச் சிற்சிலசூத்திரவுரைகளில் நச்சினார்க்கினியர் மறுத்துத் தங்கருத்து வேறாக நிறுத்துவர். அவற்றுள் ஒரு சில பொருந்துவனவு முள. நச்சினார்க்கினிய ரியற்றிய பொருளதிகாரவுரை அவ்வதிகாரத்திற்குச் சிறந்ததோர் உரையாம். நச்சினார்க்கினியர் இதன்கட் பூர்வாசிரியர் சிலர்கருத்துக்களை உடம்பட்டும், மறுத்தும், ஆண்டாண்டுத் தந்துணிபு நிலையிட்டுரைப்பர்.

### தொல்காப்பியப் பாயிரவிருத்தி, முதற்சூத்திரவிருத்தி

வடநூற்கடலுந் தென்தமிழ்க்கடலும் நிலைகண்டுணர்ந்த ஆசிரியர் சிவஞானயோகிகள், தொல்காப்பியப் பாயிரச் சூத்திரத்திற்கும், அதன் எழுத்ததிகார முதற்சூத்திரத்திற்கும் மாபாடியரூபமான விருத்திகள் தனித்தனி இயற்றினர். இவ்விருத்திகள், திட்பநுட்பம் வாய்ப்பப்பொருந்தி மற்றவ்விரண்டன் சொற்பொருள்முடிபெல்லாம் இனிது நனி விளக்கி இயற்றமிழ்க்கோர் அணைவரம்பாய் நிலைபெறுகின்றன. சூத்திரவிருத்தி இளம்பூரணர் நச்சினார்க்கினியர் எழுத்ததிகார உரைக்கருத்துக்களைப் பெரும்பான்மையாக ஆண்டாண்டுப் பூர்வபக்கஞ்செய்து தொல்லாசிரியர் இயற்றமிழ் வரம்புநிறுத்தி விளக்காநின்றது. இன்னும், ஆசிரியர் சிவஞானயோகிகள் சூத்திரவிருத்தியில் இளம்பூரணர் சேனுவரையர் நச்சினார்க்கினியரியற்றிய சொல்லதிகார வுரைகளைச் சிற்சில சூத்திரங்களில் முழுதும் மறுத்து ஆசிரியர் தொல்காப்பியனார் கருத்துத் தடைவிடைகளான் இனிதுவிளக்கித் துணிவுதோன்ற வேறுரை யுரைத்தார். பொருளதிகாரத்து நச்சினார்க்கினியருரையையுஞ் சூத்திரவிருத்தியில் ஓரோரிடங்களின் மறுத்து அவ்வாறு வேறுரை யுரைத்தார். இங்ஙனம் மூவருரைகளையும்

அவ்வாறு மறுத்து வேறுரையுரைத்து உண்மை நிறுத்தினரேனும் "வடநூற்கடலை நிலைகண்டறிந்த சேனாவரையர் எழுத்ததிகாரத்திற்கு உரைசெய்தாராயின், இன்னோரன்ன பொருளனைத்துந் தோன்ற ஆசிரியர் கருத்துணர்ந்து உரைப்பர். அவர் சொல்லதிகாரம்போலப் பெரும்பயன் படாமை கருதி எழுத்திற்கு உரைசெய்யா தொழிந்தமையின், தமிழ்நூல் ஒன்றே வல்ல உரையாசிரியருள்ளிட்டோர் உரையை ஆசிரியர் கருத்தாகக்கொண்டு பின்னுள்ளோரும் மயங்குவாராயினர்" என்றும், "இனிச் சேனாவரையர் ஆகுபெயரும் அன்மொழித்தொகையும் ஒன்றே யெனவும், இயற்பெயர் ஆகுபெயரெனப் பெயரிரண்டாய் அடங்கும்வழிப் பொற்றொடி யென்பதொரு பெயர்ப்பட்டது. அதுவே அன்மொழித் தொகையாதலும் உடைமையான் எச்சவியலுள்ளுங் கூறப்பட்டதென்வும் கூறினர். அது வடநூல் விதியோடு முரணுதலானும் வடநூலோடு மாறுகொள்ளாமற் கூறலே ஆசிரியர் மேற்கோளென "அதனினியறல்" என்னுஞ் சூத்திரத்துத் தாமுங் கூறினராகலானும், அவர்க்கது கருத்தன்றென்க. இன்னும் அவர், சாத்தனதனை சாத்தனதனொடு என்புழிச் சாத்தனென்பது தவ்விகுதியும் அகரச்சாரியையும் பெற்று உருபேற்றுநின்ற பெயராகலின் ஈண்டு அதுவென வேறாக வைத்து ஆறனுருபென்றல் பொருந்தாதென்பது நோக்காது, உருபேற்றல் பெயர்க்கேயுரிய இலக்கணமென்பது நோக்காது, எச்சவியலுட் கூறுந் தொகைச்சொற்கண் உருபுதொகுதல் ஈண்டுக் கூறுதற்கோரியைபின்றென்பது நோக்காது, இனமல்லவற்றை உடனெண்ணுதன் மரபன்றென்பது நோக்காது, "பிறிது பிறிதேற்றலும்" என்பதற்கு ஆறனுருபு பிறிதோர் உருபையேற்றலும் ஆறுருபுந் தொக்குநிற்றலும் வழுவாகாவென உரையாசிரியர் உரைத்தவாறே யுரைத்தார். இச் சூத்திரப்பொருள் முன்னர்க் கூறுதும். ஆண்டுக்காண்க. இன்னும் ஒரோவிடங்களில் இவ்வாறே மயங்கிக்கூறுவர். அங்ஙனம் ஒரோவழி மயங்குதல்பற்றி அவரை யிகழற்க; நச்சினார்க்கினியர் முதலியோர்போல யாம் பிடித்ததே சாதிப்பேமென்னுஞ் செருக்கால் யாண்டும் மயங்காமையின் முக்குணங்களும் மாறி மாறி வருதலின், அது பற்றி எனைத்துணை நுண்ணறிவாளரும் ஒரோவழி மயங்குதல் இயல்பென்க. இக்கருத்துப் பற்றியன்றே,

> " அரியகற் றூசற்றூர் கண்ணுந் தெரியுங்கா
> லின்மை யரிதே வெளிறு "
>
> " குணநாடிக் குற்றமு நாடி யவற்றுள்
> மிகைநாடி மிக்க கொளல் "

என்றூர் தெய்வப்புலமைத் திருவள்ளுவநாயனுரு மென்பது. இங்ஙன மாகலின், வடமொழியினும் ஆசிரியர் பாணினியார் தொல்லாசிரியர் சூத்திரங்களுட் சிலவற்றைத் தம்முடைய சூத்திரங்களால் எடுத் தோதி மறுத்து வேறுவிதி கூறுவர். அவர் சூத்திரங்களுட் சில வற்றை ஆசிரியர் வாருசியார் எடுத்தோதி மறுத்து வேறு விதி கூறுவர். அவ்விருவரையும் ஓரோரிடங்களில் ஆசிரியர் பதஞ்சலியார் எடுத்தோதி மறுத்து வேறு விதி கூறுவர். அது பற்றி அவர் இகழப்படா ரென்க. அஃதேல், ஆசிரியர் அகத்தியனுர் தொல்காப் பியனுர் பதஞ்சலியார் முதலாயினுரும் ஓரோவழி யவ்வாறு மயங் கிக் கூறுபவாலோ வெனின்,— அவர் தவத்தான் மனந்தூயராய் முக்குணங்களையுங் கடந்து இறைவன் அருள்பெற்றுடையராதலின், அன்னர் அல்லரென வுணர்க" என்றும், தொல்காப்பியச் சூத்திர விருத்தியிற் சேனுவரையர் பெருமை நிலையிட்டார். இனி " அவ் வாறு வந்தன வடமொழி வியாகரண சூத்திர வார்த்திக மாபாடியங் களுள் யாண்டுங் கேட்கப்படாமையின் அது வடமொழி வழக்கறி யாருரையாம்" என்று புறங்கூறுவாரு முளர். ஆசிரியர் பாணினியார் பாணினீயத்துள் ஆண்டாண்டு இலக்கியங்கள் நிறுத்துகின்றுழி,

> த்ருதீயாஶிஷஹாஷிதவஂஷ்ஂவஂவதீ ஶாஜவவஸ்ய ।
> ஶொவஸ்ரகஶ்யஸ்ய ।
> ஈஜதாஹாரபாஜஸ்ய ।
> தித்ரு ஹுதிஷஶாகடாயநஸ்ய ।
> த்ருஷித்ருஷிக்ருஷே꞉காஶ்யவஸ்ய ।

என்றற்றொடக்கத்துச் சூத்திரங்களால் தொல்லாசிரியர் சிலர்கொள் கைக்குத் தங்கொள்கை வேறுதல் விளக்கியிட்டார். அஃதொன்றே,

> தடஶிஷ்யஂஸஂஜ்ஞாப்ரமாணத்வாத் ।
> லுப்யோகாப்ரக்யாநாத் ।

யொமவ்ரொணெவதஃஹாவெஃஶ-ஷ்நம்ஸ்யாக |
வ்யாநவ்ரத்யாய-ஷவநஃய-ஷ்ஸ்யாந்யவ்ரொணகாக |
காலொவஸஜ-ஷெநவதஂவ்யம் |

என்னுஞ் சூத்திரங்களானே தொல்லாசிரியர் சூத்திரங்களில் சில வற்றை மறுத்து வேறுவிதி கூறினர். இனி ஆசிரியர் வாருசியார்

விஹாஷாவ்ரகரணெதீயஸ்யஜிசஸஷவெஸம்வ்யாநம் |
வ்யெஃவ-ஷ்யஂஷிஹாவொவக்தவ்ய: |
வதஂரஸ்தயதாவாஃஷ்யக்ஷரஸ்யொவஸ்த |
யவலவரெயவலாவெதிவக்தவ்யம் |
ராயொஹிம்ஸாயாம்ஸநீஷ்வாவ்ய: |

என்றற்றொடக்கத்துச் சூத்திரங்களானே ஆசிரியர் பாணினியார் குன் றக்கூறினமை எடுத்துக்காட்டினர். அஃதொன்றோ, அப்பாணினியார் சொல்லிய

காஸ்த்யாஃஃஂஜெமிபி |
உந்யகஉ-ஷ்ண்யநாஃரெவிஹாஷாவ்ராணிஷஂ |

என்றற்றொடக்கத்துச் சூத்திரங்களை,

காஸ்யநெகாஜ்க்ருஹணம்கதஷ்வ்யம் |
நெளகாகாஶஂகஸ்ரமாலவஜெ-ஷ்ஷிதிவாவ்யம் |

என்றற்றொடக்கத்துச் சூத்திரங்களான் மறுத்து வேறுவிதி கூறினர், இனி ஆசிரியர் பதஞ்சலியார் வாருசியார் மறுத்திட்ட

கஷாஷிவஷ |

என்றற் றொடக்கத்துப் பாணினி சூத்திரங்களை நிறுத்தியும், அவ் வரருசியார் உடம்பட்ட

நவஹஂவ்ரீஹௌ |

என்றற்றொடக்கத்துப் பாணினி சூத்திரங்களை (கவதவிதக: என்பது கங்கசவிதக: என்று படிக்கற்பாற்றென்று இங்ஙனம்) மறுத்து வேறுவிதி கூறினர். அஃதொன்றோ,

விஷ்ணுமித்ரோ விஷ்வக்ஸேனோ ந்யதரஸ்யாம் ।

என்றற் றொடக்கத்துப் பாணினி சூத்திரங்களில் வரருசியார் மறுத்திடாத பதங்களைத் தாம் மறுத்து வேறுவிதி கூறினர். இன்னும் ஆசிரியர் பதஞ்சலியார் மாபாடியத்துள் ஓரோரிடங்களில்

த்வித்ருஹணம் வ்யாமோஹ ஆசார்யஸ்ய ।

என்றற்றொடக்கத்து உரைகளால் ஆசிரியர் பாணினியார் பிழைபடக் கூறினரென்று வெளிப்படையாக உரைத்திட்டார். இன்னும் அவர்,

ப்ரியதத்³தி⁴தா தா³க்ஷிணாத்யா꞉ ।
ஸஹேதாவம்ஸ்தம்பாவுத்தா நவக்ருஷ்யதே ।

என்றற்றொடக்கத்து உரைகளால் வரருசியாரை இகழ்ந்து உரையாடினர். இங்ஙனஞ் சூத்திர வார்த்திக மாபாடியங்களிற் கேட்கப்படுதலின், அது துர்அபிமானப் பிதற்றுரையாதல் தெற்றென உணர்ந்து கொள்க. மற்றுப் பட்டோஜிதீக்ஷிதர் இவ்வாறெல்லாம் ஆய்ந்துணர்ந்தன்றோ

யதோ²த்தரம் முனீனாம் ப்ராமாண்யம் ।

என்று அம்முத்திறத்தாசிரியர்கள் பிராமாணிய தாரதம்மியம் சித்தாந்தகௌமுதியுள் அங்ஙனம் நிலையிட்டு உரைத்தாரென்க. இனிச் சூத்திர வார்த்திக மாபாடியங்கள் முறையே தம்முள் ஒன்றினொன்று விரிந்து பொருள் இனிது விளக்குதல் பற்றி அங்ஙனங் கூறினரெனின்,— இலக்கியம் வரையறுக்கின்றுழி அவ்வாறுரைத்தலானும், பிராமாணியச்சொற்கு அது பொருளன்மையானும், அது போலியுரையென மறுக்க.

அஃதேல், ஆசிரியர் பதஞ்சலியார் "ஆசிரியர் பாணினியார் சூத்திரங்கள் ஓரெழுத்து மாத்திரையும் பயனில் ஒத்தாகா" என்றும், "பாணினியார் சூத்திரங்களால் இலக்கியஞ் சித்திப்பது அறியமாட்டாதார் வேறு சூத்திரம் வேண்டி யிடர்ப்படுவர், பாணினியார் சூத்திரங்கட்கு விரோதமாக எழுதுவது பிரமாண மாகாது" என்றும், மாபாடியத்துள் எடுத்தோதிய தென்னையோவெனின்,— பாணினியார் மகேசுரனை இறைவன் ஆணைவழி வடமொழி யிலக்கண நூலியற்றினமை

யின், அவர் சூத்திர ஒத்துக் கடைப்பிடித்து வடமொழி யிலக்கியம் ஆய்தலே முறையாமென்று அறிந்தடங்காது, சிற்றுணர்வுடையார், தாந்தாம் அறிந்தவாறெல்லாம் அவர் சூத்திரங்களுள் ஒருசில மிகை படக் கூறலாம், ஒருசில குன்றக்கூறலாம், ஒருசில நின்றுவற்றலாம் என்று திருத்தங் காணலுறின், அது பெரியதோர் இடர்ப்பாடா மென்று அவ்வாறு ஆணைதருவாராயினு ரென்பது. தாம் அருந்தவத் தான் மனந்தூயராய் முக்குணங்களையுங் கடந்து இறைவனருள் முற் றப்பெற்றுக் கடவுட்டன்மை யுடையராயினமையின், அவ்வாசிரியர் முக்குண வசத்தான் அட்டாத்தியாயியில் ஓரோரிடங்களில் முறை மறந்து உரைத்தனவற்றை முறைமைப்படுத்து வழக்கு வழிப்படுத்து வாராயினர். வரருசியார் வார்த்திகத்தின் முறை பிறழ்ந்தனவற்றை முறைப்படுத்தியதற்கும் இஃதொக்கும். "ஆசிரியர் பதஞ்சலியார் பாணினியார் சூத்திரமெல்லாம் பயனுடையனவேயாம்" என்று மாபாடியத்துக் கூறி, அவ்வாசிரியர் சூத்திரங்களுள் "ஓரோவொன்றை ஆண்டாண்டு மறுத்து வேறு விதி கூறுதல் மலைவாகும்" என்று பின் னுள்ளோர் ஆசங்கித்து, "ஆண்டுப் பயனுடையன வென்றது பொரு ளின்மொழி அன்றென்றவாறும்" என்றும், "அவை இம்மைக்கண் இலக்கியம் பயக்காவிடினும், அத்தியயனவோத்தாய் மறுமைபயத்தல் ஒருதலையாகலின், குற்றமாகா" என்றும், சமாதானங் கூறுதலானும் இதனுண்மை கடைப்பிடித்து உணரப்படு மென்க.

அற்றே லஃதங்ஙனமாக ;

"ஆக்கியோன் பெயரே வழியே யெல்லை
நூற்பெயர் யாப்பே நுதலிய பொருளே
கேட்போர் பயனோ டாயெண் பொருளும்
வாய்ப்பக் காட்டல் பாயிரத் தியல்பே"

என்னுந் தொல்லாசிரியர் சூத்திரத்துள் யாப்புக் கேட்போர் என்பன வற்றிற்கு உரையாசிரியர் நச்சினார்க்கினியர் உரைத்தவுரை போலி யென மறுத்துச் சிவஞானமுனிவர் வேறுரை யுரைத்தனர். ஆண்டு அவ்வாசிரியர்கள் முக்குணமயக்கத்தால் முறைமறந்து உரைத்தாரென் றல் பொருந்தாது ; அவ்வுரை இறையனார் களவியல் முகத்துக் கணக் காயனார் மகனார் நக்கீரனாருரைத்த பொருளாகலி னெனின்,—அவ்வுரை இறையனார் களவியல் முகத்து நக்கீரனார் கண்ட பொருளென்பது சிவ

ஞானயோகிகள் அறியாதாரல்லர். பொருந்துமாற்றிற்கு ஏலாமை யானும், வடநூல் மாறுகலானும், அவை முக்குண மயக்கால் முறை மறந் துரைத்த பொருளென்று மறுத்து, ஆசிரியர் கருத்தறிந்து உண் மைப்பொருள் கூறினாராகலின், அது பொருத்த முடைத்தாகாமை யாண்டைய தென்க. அவ்வுரைமாட்சி, தொல்காப்பியப் பாயிரவிருத் யுட் காண்க; ஈண்டுக் காட்டலுறின் விரியுமென்பது.

அற்றேல், தெய்வச் சங்கப்பலகை மேலிரீஇக் கடைச்சங்கத் தலைமைபூண்ட நக்கீரனார் முக்குண மயக்கான் அங்ஙனம் முறை மறந்து உரைத்தாரென்றல் வேதவழக்கொடும் ஆன்றோர் வழக் கொடும் மாறுறுமாலெனின்,--அது வேதவழக்கொடும் ஆன்றோர் வழக் கொடும் மாறுறுவாறு காட்டுதும். தெய்வச் சங்கப்பலகை மேலிருந்து தமிழாராய்ந்தார் கடைச்சங்கப்புலவர் நக்கீரனார் முதல் நாற்பத்தொன் பதின்மருளர். அவரெல்லாம் முக்குணமயக்கம் முற்றக் கடந்து மெய்யுணர்வால் உயர்ந்தாரென்றல் நிரம்பாது. என்னை? அவர் "பாண் டியன் வேண்டுகோளாற் களவியற்பொருள் தனித்தனி கண்டு, தாந் தாங் கண்டதே மெய்யுரையென்று சிலநாளெல்லா மாறுடினார்" என் றும், பின்னர் "ஆலவாயில் அழனிறக்கடவுள்பால் வரங்கிடந்து உப் பூரிகுடிகிழார் மகனுவான் உருத்திரசன்மனைப் பெற்று, அவன் தன் னால் மெய்யுரை கண்டு தேறினார்" என்றும், ஆலவாய் மான்மியத்துங் களவியலுரை முகத்துங் கூறுதலினென்க. அற்றாயினும், 'உருத்திர சன்மனார் நக்கீரனார் களவியற்பொருள் கேட்புழிப் பதந்தொறுங் கண் ணீர் வார்ந்து மெய்ம்மயிர் சிலிர்ப்ப' இருந்தார். சங்கப்புலவர் ஆர்ப் பெடுத்து "மெய்யுரை பெற்றாம் இந்நூற்கு என்றார்" என்று ஆண் டாண்டுக் கூறுதலின், நக்கீரனார் முக்குணமயக்கம் முற்றக் கடந்து கள வியற் பொருள் கண்டாரெனக் கொள்ளாமோவெனின்,— கொள்ளாம். என்னை? உருத்திரசன்மனார் நக்கீரனாருரை அவ்வாறு கேட்டாரென் றதனான், ஏனைப்புலவரெல்லாங் கண்ட களவியற்பொருள்களை நோக்க நக்கீரனார் கண்ட களவியற்பொருள் சிறந்ததென்னும் பொருள் போத ருதலன்றி, அவர் முழுதுணர்ந்து அது செய்தாரென்பது அதனாற் பெறப்படாமையி னென்பது.

இன்னும், நக்கீரனார் மெய்யுணர்வில் முற்றுப் பேறுடையராய்க் களவியற்பொருள் கண்டாரென்பாரை, அவ்வாறு மெய்யுணர்வுடைய

ராயினுர் தெய்வப்புலமைத் திருவள்ளுவநாயனுர் உத்தரவேதம் வித்தகமுறச் செய்துகொண்டு சங்க மேவியஞான்று அவரோடு சங்கப் பலகை யொக்க வீற்றிருக்கப்பெறுது, ஏனைப்புலவரோடு இழிந்த தென்னையோவென்று கடாவி மறுக்க.

"திருத்தகு தெய்வத் திருவள் ளுவரோடு
உருத்தகு நற்பலகை யொக்க—இருக்க
உருத்திர சன்ம ரெனவுரைத்து வானில்
ஒருக்கவோ வென்றதோர் சொல்"

"மெய்த்ததிரு வள்ளுவனுர் வென்றுயர்ந்தார் கல்விநலந்
துய்த்தசங்கத் தார்தாழ்ந்தார் சோமேசா—உய்த்தறியின்
மேற்பிறந்தா ராயினுங் கல்லாதார் கீழ்ப்பிறந்துங்
கற்ரு ரனைத்திலர் பாடு"

என்னும் பாக்களானும் நக்கீரருள்ளிட்ட சங்கப்புலவர் திருவள்ளுவ நாயனுரோடு சங்கப்பலகை வீற்றிருப்புப் பெருது தாழ்ந்தமை தெளிக.

அற்றேலஃதாக; முக்குணங்களையுங் கடந்து மெய்புணர்வின் முற்றுப் பேறுடையரல்லரான நக்கீரனுர் முதலியோ ரியற்றிய திருமுருகாற்றுப்படை முதலிய பிரபந்தங்களை முக்குணங்களையுங்கடந்து இறைவரருள் பெற்றுடைய நாயன்மார் திருவாக்குக்களோடொப்பப் பதினொராந் திருமுறையில் ஆன்ருேர் கோத்துப் போற்றுமா றென்னை கொலெனின்,— அஃதொக்கும். திருமுருகாற்றுப்படை முதலிய பிரபந்தங்கள் நக்கீரனுர் முதலியோர் தவத்தால் மனந்தூயராய் முக்குணங்களையுங் கடந்து இறைவனருள் பெற்றுடையராயபின் அவர் தம்மான் அருளிச்செய்யப்பட்டன; ஆகலின், ஆன்ருேர் அவைதம்மையும் நாயன்மார் திருவாக்குக்களோ டொப்பப் பதினொராந் திருமுறையிற்கோத்து அவ்வாறு போற்றுவா ராயினுரென்க. அற்றுகலினன்றே, நம்பியாரூரர் பெருமானுர் "பொய்யடிமை யில்லாத புலவர்க்கு மடியேன்" எனத் திருத்தொண்டத்தொகைச் சுருதியுள் அவர்தம்மையுந் தொகுத்து அங்ஙனஞ் சேவைசெய்வா ராயினதூஉமென வறிக. இவற்ருனே, யாப்புக் கேட்போர் என்பவற்றிற்கு நக்கீரனுருரைத்த பொருள் பொருந்தாவென மறுத்துச் சிவஞானயோகிகள் வேறுரை

வகுத்தது பொருத்த முடைத்தென்பதூஉம், அது வேதவழக்கொடும் ஆன்ரோர் வழக்கொடும் மிக் இயைவதன்றி மாறுறுமாறு இல்லையென் பதூஉம் தெற்றெனவுணர்க.

## வெண்பாமாலை

இது ஐயனாரிதனாரென்பவர் இயற்றிய ஓர் புறப்பொருள் நூல். இந்நூல், நச்சினார்க்கினியர் காலத்திற்கு முற்பட்டுத் தோன்றிய தென்பது,

"மன்னிய சிறப்பின் வானோர் வேண்டத்
தென்மலை யிருந்த சீர்சான் முனிவரன்
தன்பாற் றண்டமிழ் தாவின் றுணர்ந்த
துன்னருஞ் சீர்த்தித் தொல்காப் பியன்முதற்
பன்னிரு புலவரும் பாங்குறப் பகர்ந்த"

என்னும் இந்நூற் பாயிரச்செய்யுளை மரபியலுரையகத்து எடுத்து அவர் காட்டுதலானறிக. இந்நூல் தொல்காப்பியனார் முதலிய பன்னிருவராலுஞ் செய்யப்பட்ட பன்னிருபடலத்தினைத் தனக்கு முதனூலாகக் கொண்டதென்பது,

"துன்னருஞ் சீர்த்தித் தொல்காப் பியன்முதற்
பன்னிரு புலவரும் பாங்குறப் பகர்ந்த
பன்னிரு படலம் பழிப்பின் றுணர்ந்தோன்"

என்னு மிந்நூற் சிறப்புப்பாயிரத்தானும் "பன்னிருபடல முதலாக வழிநூல் செய்த வெண்பாமாலை ஐயனாரிதனாரும் இது கூறினார்" என்று நச்சினார்க்கினியர் மரபியலுள் உரை வகுத்தலானு மறிக. இஃது புறப்பொருளினை வெட்சித்திணை, கரந்தைத்திணை, வஞ்சித்திணை, காஞ்சித்திணை, நொச்சித்திணை, உழிஞைத்திணை, தும்பைத்திணை, வாகைத்திணை, பாடாண்டிணை, பொதுவியல், கைக்கிளைத்திணை, பெருந்திணை எனப் பன்னிரண்டாக வகுத்துக் கூறும். இவற்றுள், கரந்தைத்திணை—வெட்சித்திணைக்கு மறுதலைத்திணை. நொச்சித்திணை—உழிஞைத்திணைக்கு மறுதலைத்திணை. பொதுவியல்—மேற்கூறிய புறத்திணைகட்கெல்லாம் பொதுவாயுள்ளனவும், பிறவுங் கூறுதலின், அப்பெயர்த்தாயிற்று. கைக்கிளைத்திணை—ஒருதலைக்

காமம் உள்ளிட்ட பல துறைகளையுடையது. அது ஆண்பாற் கூற்றும் பெண்பாற் கூற்றுமென இரண்டாம். பெருந்திணை—பொருந்தாக் காம முள்ளிட்ட பலதுறைகளையுடையது. ஏனைத் திணையிலக்கணமெல் லாம் முற்கூறியவாறுபற்றி யுணர்ந்து கொள்க. இதனுள் நொச்சித் திணையை உழிஞைத்திணையின் பின் வையாதது ஓர் முறை பிறழ் வாம் என்பாரும் உளராலோவெனின்,— அது முறைபிறழ்வாகாது. என்னை? மதிற்காப்பு அதனை முற்றுதற்கு முன்னரும் ஒருதலையாகச் செயற்பாலதாகலி னென்க.

"வருமுன்னர்க் காவாதான் வாழ்க்கை யெரிமுன்னர்
வைத்தூறு போலக் கெடும்"

என்பதனானும் அது கடைப்பிடித்துணர்க.

அகப்பொருள் விளக்கம்

இந்நூலாசிரியர் நாற்கவிராயநம்பி. இஃது அகப்பொருளிலக் கணங்களைச் சுருக்கிக் கூறும் நூல். அகத்திணையியல், புறத்திணை யியல், களவியல், வரைவியல், ஒழிபியலென ஐந்தியல்களுடைத்து.

யாப்பருங்கலம்

இஃது யாப்பிலக்கணத்தைச் சூத்திரயாப்பினால் தெளிவாக வுணர்த்தும் நூல். இதற்குச் சிறந்ததோர் விருத்தியுரையுள்ளது.

யாப்பருங்கலக்காரிகை

இந்நூல் செய்யுளிலக்கணம் உரைப்பது; இஃது உறுப்பியல், செய்யுளியல், ஒழிபியலென மூன்றியல்களுடைத்து.

வேண்பாப்பாட்டியல்

இந்நூலாசிரியர் வச்சணந்தி. இது முதன்மொழியியல், செய் யுளியல், பொதுவியலென மூன்றியல்க ளுடைத்து. இதன்கண் மங் கலப்பொருத்தம், சொற்பொருத்தம், எழுத்துப்பொருத்தம், தானப் பொருத்தம், பாற்பொருத்தம், உணாப்பொருத்தம், வருணப்பொருத் தம், நாட்பொருத்தம், கதிப்பொருத்தம், கணப்பொருத்தமென்னுந் தசப்பொருத்தங்களின் இலக்கணமும், பிரபந்தங்களின் இலக்கணமும் பிறவுங் கூறப்படும்.

## தண்டியலங்காரம்

இஃது அணியிலக்கணங் கூறும் நூல்; பொதுவணியியல், பொருளணியியல், சொல்லணியியலென மூன்றியல்க ளுடைத்து.

## நேமிநாதம்

இந்நூலாசிரியர் குணவீரர். இஃது எழுத்துஞ் சொல்லும் உணர்த்துவது.

## வீரசோழியம்

இந்நூலாசிரியர், அருகந்தருட்பட்ட புத்தமித்திரனார். இஃது எழுத்துச் சொற்பொருள் யாப்பணி யென்னும் ஐந்திலக்கணமும் உணர்த்து மொரு சிறுநூல். "ஏதமறு சகாப்த மெழுநூற்றிற் கச்சியப்ப சிவாசாரியர் தாம் பாடிய கந்தபுராணம் அரங்கேற்றுழித் 'திகடசக்கரம்' என்னும் புணர்ச்சி முடிபிற்கு விதி இந்நூல் கொண்டு காட்டினார்" என்று பதிப்புரைகாரர் உரைத்தார். வீரசோழியம் அகத்தியத்தின்வழித் தோன்றிய தொல்காப்பியத்தினையும் வேறு சில நூல்களையும் முதலாகக்கொண்டு செய்ததோர் இயற்றமிழ்நூல். ஆசிரியர் தொல்காப்பியனார்,

"யாரழ வென்னும் புள்ளி முன்னர்
முதலா கெழுத்து ஙகரமொடு தோன்றும்"

என நூன்மரபுள்ளும்,

"யாரழ வென்னு மூன்றுமுன் னொற்றக்
கசதப ஙஞநம வீரொற் றாகும்"

என மொழிமரபுள்ளும், யரழக்கள் கசதபக்களோடு தனியொற்றாயும் ஈரொற்றாயும், மயங்குமென்று ஓதுதலானும்,

"யகரவிறுதி வேற்றுமைப் பொருள்வயின்
வல்லெழுத் தியையி னவ்வெழுத்து மிகுமே"

"அல்வழி யெல்லா மியல்பென மொழிப"

என்று புள்ளிமயங்கியலுட் கூறிவைத்து அவ்விதியை,

"ரகார விறுதி யகார வியற்றே"
"ழகார விறுதி ரகார வியற்றே"

என ரகர ழகரங்களும் பெறுமென மாட்டெறிந் தோதுதலானும், ழக ரத்தின்முன் வந்து புணருங் க ச த ப க்கள் இருவழியினும் இயல்பாயும் வல்லெழுத்து இரட்டியும் புணர்ச்சி யுறுதலன்றித் திரியாவென்பது தெள்ளிதிற் பெறப்படுதலின்,

"...பதினைந்தொ டெண்ணிரண்டாய்த்
தோன்றுடற் பின்னர்த் தகாரம் வரினிரண் டுந்தொடர்பா
ஞன்றவைந் தாமுட லாமுன்பி லொற்றுக் கழிவுமுண்டே"

எனப் புத்தமித்திரனார் வீரசோழியத்து ழகரத்தின் முன்வருந் தகரம் டகரமாய்த் திரியும் என்றுரைத்தது, அங்ஙனம் போந்த தொல்காப் பிய விதிக்கு மாறுகோளென்று மறுக்கப்படுமென்க. அது தொல் காப்பிய விதிக்கு மாறுகோளாயினும் பிற்காலத்து இலக்கியங்களில் அங்ஙனம் போந்த பிரயோகங்கண்டு அவ்வாறு கூறப்பெருரோ வெனின்,—சங்கத்துச்சான்றோர் இலக்கியங்களுள்ளும், பிற ஆன்றோர் இலக்கியங்களுள்ளும் அவ்வாறு போந்த பிரயோகம் யாண்டுங் காணப்படாமையானும், இனி அவ்வாறு போந்த இலக்கியங்காணப் படினும், தொல்காப்பிய மாறுகோளாகலின் வழுவென்று களையப்படுவ தல்லது இலக்கணமென்று தழுவப்படா தாகலானும், அது பொருந் தாதென் றொழிக. இனிக் கந்தபுராணத்துத் "திகட சக்காம்" எனவும், "கீட்டிசை வாயில்" எனவும் போந்த இலக்கியப் பிரயோகங் கண்டு புத்தமித்திரர் அவ்வாறு இலக்கணங் கூறப்பெற்றுரெனின்,— அது கந்தபுரான இலக்கியப் பிரயோகம்பற்றி வீரசோழியத்தில் அங்ஙனம் இலக்கணங் கூறப்பட்டது, வீரசோழிய இலக்கணவிதிபற் றிக் கந்தபுராணத்தில் இங்ஙனம் இலக்கியஞ் செய்யப்பட்டதென, ஒன் றனை யொன்று பற்றுதலென்னுங் குற்றத்திற்கு இடனுமென்க. வட நூலார் ஒன்றனையொன்று பற்றுதலென்னுங் குற்றத்தினை இதரேத ராச்சிரயதோடமென்றும், தன்னைப்பற்றுதலென்னுங் குற்றத்தினை ஆன்மாச்சிரயதோடமென்றுங் கூறுப. இனி வீரசோழியம் முதலிய ஆதுனிக இலக்கண நூல்கள், சிற்றறிவுப் புலவர் நூல்களாகலின், அவைதம்முட் கூறப்படும் இலக்கணங்கள் தவத்தான் மனந்தூயராய் முக்குணங்களையுங் கடந்து இறைவனருள் பெற்றுடைய தொல்லா சிரியர் இலக்கணங்களோடு மாறுகோ ளுறுதவழியே பிரமாணமா

மென்று கடைப்பிடித்து உணர்ந்து கொள்க. அற்றேல், கந்தபுரா ணத்துத் "திகட சக்கரம்" "கீட்டிசை வாயில்" என்றங்ஙனம் போந்த பிரயோகந் தொல்காப்பியம் முதலிய இலக்கண வழுவாம் போலு மெனின்,— அது இலக்கண வழுவாகாமை இலக்கிய மரபிய லுட் கந்தபுராண வரலாறு உரைப்புழிக் கூறுதும்.

நன்னூல்

இந் நூலாசிரியர் பவணந்தி முனிவர். இஃதெழுத்துஞ் சொல்லும் உணர்த்தும் பின்னூல்களுள் வைத்து மிகச்சிறந்ததோர் இயற்றமிழ் நூல். ஆசிரியர் தொல்காப்பியனார் கூறிய எழுத்துச் சொல்லிலக் கணப்பரப்பினைச் சுருக்கி இனிது நனிவிளங்க உரைத்தலிற் பிற் காலத்தார் எழுத்தாராய்ச்சிக்குஞ் சொல்லாராய்ச்சிக்கும் மற்றிதனை விரும்பிக் கற்பாராயினர். இஃது பெரும்பான்மையுந் தொல்காப்பிய மரபு நிலை திரியாமல் எழுத்துஞ் சொல்லுமுணர்த்தி, அதற்கோர் வழி நூல் போன்று விளங்கும். ஆயினும், ஓரோரிடங்களில் தொல்காப் பிய இலக்கணமரபுநிலை திரிதரக்கொண்டு கூறிய இலக்கணங்களுஞ் சில இதனகத்துள்ளன. அவை,

"சார்ந்துவரன் மரபின் மூன்றலங் கடையே"

எனவும்,

"சார்ந்துவரி னல்லது தமக்கியல் பிலவெனத்
தேர்ந்து வெளிப்படுத்த வேனை மூன்றும்"

எனவும் வரையறுத் தோதியவாறே, சார்பெழுத்து மூன்றென்னாது, சில உயிரெழுத்துக்களையும் மெய்யெழுத்துக்களையும் உடன்சேர்த்து எண்ணுதலுந் தன்மைச்சொல்லை உயர்திணையென்னாது விரவுத்திணை யெனச் சாதித்தலும் போல்வன. சூத்திரவிருத்திகாரர் அவை யெலாந் தொல்காப்பிய மரபுநிலை திரிபாமென்றெடுத்து மறுத்திட் டார். இந்நூற்கு வாய்ப்புடைத்தாயதோர் விருத்தியுரை சங்கர நமசிவாயப்புலவராற் செய்யப்பட்டது. ஆசிரியர் சிவஞானயோகிகள் இவ்விருத்தியை ஆண்டாண்டுத் திருத்திச் சிறப்பித்தனர். சங்கர நமசிவாயப்புலவர் கயிலாயபரம்பரைத் திருவாவடுதுறை யாதீனத்துச் சுவாமிநாததேசிகர் மாணக்கர். அது,

" மலர்தலை யுலகிற் பலநூ லாய்ந்து
செய்வதுந் தவிர்வதும் பெறவிது முறவதும்
உய்வது மறியே னொருபொரு ளாக
நன்னெறி பிறழா நற்றவத் தோர்பெறுந்
தன்னடித் தாமரை தந்தெனை யாண்ட
திருவா வடுதுறைத் தேசிக னாகிய
கருணையங் கடலையென் கண்ணைவிட் டகலாச்
சுவாமி நாத குரவனை யனுதினம்
மனமொழி மெய்களிற் றொழுதவ னருளாற்
பொன்மலை யெனவிப் புவிபுகழ் பெருமை
மன்னிய வூற்று மலைமரு தப்பன்
முத்தமிழ்ப் புலமையு முறையா சுரிமையும்
இத்தலத் தெய்திய விறைமக னாதலின்
நன்னூற் குரைநீ நவையறச் செய்து
பன்னூற் புலவர்முன் பகர்தியென் றியம்பலின்
நன்னு வலர்முக நகைநா ணமே
என்னு லியன்றவை யியற்றுமிந் நூலுள் "

என நன்னூல் உரைமுகத்து அவர் கூறுமாற்றானுணர்க.

### பிரயோக விவேகம்

இந்நூலும் உரையுஞ் செய்த ஆசிரியர் சுப்பிரமணியதீக்கிதர். இந்நூல் வடமொழிச் சத்தசாத்திரத்தைக் காரகப்படலம், சமாசபடலம், தத்திதபடலம், திங்குப்படலம் என நான்கு படலங்களாக வகுத்து அவை தம்மைத் தென்மொழி யிலக்கணத்தோடு ஒப்பித்துக் கூறுமுகத்தானே வடமொழிக்குந் தென்மொழிக்கும் இலக்கணமொன்றென்று நிலையிட்டுரைக்கும். இவ்வாற்றால், வடமொழி வல்லார் தென்மொழி யிலக்கணம் அறிதற்கும், தென்மொழிவல்லார் வடமொழியிலக்கணம் அறிதற்குங் கருவியாய்ச் சிறப்பது இந்நூலென்றுணர்க.

### இலக்கண விளக்கம்

இந்நூலும் உரையும் இயற்றிய ஆசிரியர் வைத்தியநாததேசிகர். இஃது எழுத்ததிகாரம், சொல்லதிகாரம், பொருளதிகாரமென மூன்று அதிகாரங்களுடைத்து. இதில் எழுத்துச் சொற்பொருள் யாப்பணி

யென்னும் ஐந்திலக்கணங்களுங் கூறப்படும். வைத்தியநாததேசிகர் இந் நூலைப் பெரும்பான்மையாற் றொல்காப்பியம் நன்னூற்சூத்திரங்கள் கொண்டும், சிறுபான்மையாற் றண்டியலங்காரம் யாப்பருங்கலம் பாட்டியல் முதலியவற்றின் சூத்திரங்கள் கொண்டும், தாமியற்றிய சூத்திரஞ்சில தலைப்பெய்தும், செய்தனர். இதனானே இஃதோர் புது நூலாயினும் பழைய இலக்கண நூற்றிரட்டென்றே கோடற்பாற்று. இந்நூற் சூத்திரவுரைகள் ஆண்டாண்டுத் தொல்லாசிரியர் மேற்கோள் மலைவு முதலிய குற்றங்கள் பலவுடையனவாயிருத்தல் கண்டு ஆசிரியர் சிவஞானயோகிகள் இதற்கு இலக்கண விளக்கச் சூறாவளியென ஓர் மறுப்பியற்றினர்.

## இலக்கணக்கொத்து

இந்நூல் கயிலாய பரம்பரைத் திருவாவடுதுறைச் சுவாமிநாத தேசிகரால் இயற்றப்பட்டது. இது தொல்காப்பிய இலக்கண நூலினுந் தொல்காப்பியங்களிலும் அருகிக்கிடந்த விதிகளைப் பெருகத் திரட்டி வடமொழியிலக்கண வழக்குஞ் சிலவிராய்க் கூறும் நூலாம். இது வேற்றுமையியல், வினையியல், ஒழிபியலென்னும் மூன்றியல்களாற் சொல்லிலக்கணநுட்பந் தெள்ளிதின் றுறைப்படுத்து உணர்த்துமோர் சிறப்புடை நூலாம்.

## இலக்கண விளக்கச் சூறாவளி

இஃதியற்றினர் ஆசிரியர் சிவஞானயோகிகளென்பது மேலுரைத்தாம். இஃது இலக்கணவிளக்க நூலுரை வழுக்களை இனிது விளங்க ஆசங்கித்து எடுத்துக்காட்டு முகத்தானே தொல்லாசிரியர் எழுத்திலக்கண நுட்பமுஞ் சொல்லிலக்கண நுட்பமுந் துணிவு தோன்ற உணர்த்தும். "சிவஞானமுனிவர் சூறாவளியுள் இலக்கணவிளக்க நூலார்,

> "மலைமக ளொருபான் மணந்துல களித்த
> தலைவனை வணங்கிச் சாற்றுவ னெழுத்தே"

என்புழி 'மலைமகள்' என்பது மலையு மகளெனவும் அமங்கலப் பொருள் தந்து தொகையார் பொருள் பல வாய்ப்பத் தோன்றலின், வழுவாமென்று மறுத்துரைத்துத், தருக்கசங்கிரக தீபிகை முகத்து 'மலைமகள் மணந்தவுலகினுக் கிறைவன்' எனத் தாமுமவ்வாறு மங்

கலங்கூறியது அவர்க்குப் பெரியதோரிழுக்காம்" என்பர் சிலர். அது நுணுகியாராயாமையாற் கூறுங் கையறியா வுரையாம்; யாதினு லெனின்,— ஓதுதும். நூலாசிரியர் தாமே தமது நூற்குரையியற்று வாராயின், நூலில் இனிதுமுடிதற்பொருட்டுக் கூறும் மங்கலவாழ்த்தே உரை இனிதுமுடிதற்பொருட்டும் அமையுமாகலின், உரைக்கு வேறு மங்கலவாழ்த்துக் கூறல் வேண்டாவென்பது, ஒருசார் ஆசிரியர்கோட்பாடு. நூல் இனிது முடிதற்பொருட்டுக் கூறும் மங்கலவாழ்த்து அஃது இனிதுமுடிதற் பொருட்டாயே யமைக, உரைக்கு வேருக மங்கலவாழ்த்துக் கூறற்பாற்றென்பது, மற்ருெருசாராசிரியர் கோட்பாடு. பிரயோகவிவேக நூலுடையார், இலக்கணக்கொத்து நூலுடையார், இலக்கணவிளக்க நூலுடையார் முதலாயினர் நூல்மங்கல மொன்றுமே கூறி அஃதுரைக்குமாமென்று ஒழிந்தாராகலின், அவை முன்னதற்கும், அன்னம்பட்டர் முதலாயினர் நூல் மங்கலமும், அதனுரை மங்கலமும், வேறு வேறு கூறினராகலின், அது பின்னதற்கும், எடுத்துக்காட்டுக்களாத லறிக.

நூலுரைகளை ஒற்றுமைநயத்தான் ஒன்றெனவும் வேற்றுமை நயத்தான் வேறெனவுங்கொண்டு அவ்வாறு செய்தலின், அவ்விரு கொள்கைகளும் வழக்கென ஆன்ருேர் போற்றிக்கோடற்கு ஏற்பன வாத லுணர்க.

இனித் தருக்கசங்கிரகமும் அதனுரையும் தென்மொழியாற்கூறப் புகுந்த ஆசிரியர் சிவஞானயோகிகள், இங்ஙனம் ஆசிரியன்மார் ஒன்றற்கொன்று மாறுபாடாகக் கொண்ட இரண்டு கொள்கைகளுள், ஒருதலை துணிதலானே முன்னையதனையே தம்மதமாகத் தழீஇ,

"மன்றவாணனை மனத்திடை நிறுவிவண் டறைசை
வென்றசீர்நமச் சிவாயமெய்க் குரவனை வணங்கி
என்றனைப்பொருஉ ளிளையவர்க் கினிதுணர் வுதிப்பத்
தென்றமிழ்ச்சொலாற் செயப்படுந் தருக்கசங் கிரகம்"

என்னுஞ் செய்யுளால் மங்கலவாழ்த்துச் செய்தருளினுரென்பது.

அற்றேல், அக்கொள்கை தழீஇ யங்ஙனஞ் செய்வாராயினர்க்கு, "மலைமகண் மணந்த" என்னும் பிற்செய்யுள் ஆண்டுச் செயாதொழிதல் வேண்டுமாலெனின்,— அறியாது கடாயினுய். அவ்வாசிரியர்,

"மொழிபெயர்த்ததர்ப்பட யாத்தல்" என்னும் யாப்பினுனே அன்னம் பட்டர் வடமொழிக்கண் இயற்றிய தருக்கசங்கிரக நூலினையும், அத னுரையினையுந் தென்மொழியான் மொழிபெயர்த்ததர்ப்பட யாத்து அங்ஙனந் தருக்கநூல் செய்தருளுவாராயினமையின், அவ்வடநூலா சிரியர் கொள்கை அதுவென்று காட்டிய அப்பிற்செய்யுட் செய்தருளி னர். ஆகலின், அது குற்றமாகா தென்க.

அற்றேல், அவ்வாறு காட்டல்வேண்டி அப்பிற்செய்யுள் மொழி பெயர்த்துச் செய்தார்க்கு அதனை மங்கலமொழி முதலாகச்செய்தலே முறையாமன்றி "மலைமகள்" என அமங்கலம்பட முதற்சீர் தலைப் பெய்து அவ்வாறு செய்தல் முறைமையாகாதாம் பிறவெனின்,—அற் றன்று; முன்னைக் கொள்கையேதழுவி "மன்றவாணனை" என நூல் உரை இரண்டும் இனிது முடிபுபோக மங்கலச்செய்யுள் முதற்கட்செய் தருளினராகலின், பின்னைச் செய்யுளும் மங்கலமாகச் செய்திடின், தாந்தழீஇய அக்கொள்கைக்கு மாறுமென்று கண்டு, அங்ஙனம் மங்க லம்படச் செய்யாராய் "மலைமகள்" எனத் தொகையார் பொருள் பலவாய் அமங்கலம்பட, அவ்வாறு செய்தருளுவா ராயினமையி னென்க.

அஃதேல், அவ்வாசிரியர்க்கு அதுவே கருத்தாமாறு எற்றாற் பெற்றீரென்பாரைப் பிரயோகவிவேக நூலார் முதலாயினர்க்கு அது கருத்தாமாறு எற்றாற் பெற்றீரென்று கடாவி மறுக்க. பிரயோகவிவேக நூலார் முதலாயினர் நான்முக மங்கலச்செய்யுளே இயற்றி உரைமுக மங்கலச்செய்யுள் வேறு செய்யாமையின், அவ்வருத்தாபத்தியான் அவர்க்கது கருத்தாதல் பெற்றாமெனின், ஆசிரியர் சிவஞானயோகிகள் நான்மங்கலம் "மன்றவாணனை" என மங்கலம்படச்செய்து உரைமங் கலம் "மலைமகள்" எனத்தொகையார் பொருள்பலவாய், அமங்கலம் படச்செய்தலின், அவ்வருத்தாபத்தியானே யாமும் அவ்வாசிரியர்க்கு அது கருத்தாதல் பெற்றாமென்க.

இன்னும், "மன்றவாணனை மனத்திடைநிறுவி" எனவும், "வண் டுறைசை வென்றசீர் நமச்சிவாயமெய்க் குரவனை வணங்கி" எனவும், முறையானே தமது சந்தானகுரவர் பரமெனக்கண்டு உபாசிக்கும் நடராசமூர்த்தியையும், தமது குருமுதல்வரையும் மொழிபெயர்ப்பி

னுள் தலைப்பெய்து இளந்தினிதோதிப், பிற்செய்யுள் வடமொழியுட் கிடந்தவாறே மொழிபெயர்த்துக் கூறும்தனுலும், அவ்வாசிரியர்க்கு அதுவே கருத்தாதல் இனிதறியப்படு மென்க.

அல்லதூஉம், ஒருநூற்கு மங்கலவாழ்த்து ஒன்றேயன்றிப் பல கூறினும் மங்கலமுதற்சீர் முதற்செய்யுளின்கணன்றி, மற்றைச் செய்யுட்கள் தோறும் யாப்புறுத்து உரையாமை வழக்கின்கட் காண்டலின், வடமொழித் தருக்கசங்கிரக நூலும் உரையுந் தென்மொழியான் ஒருங்கு பெயர்த்துச் செய்யலுற்ற ஆசிரியர்க்கு, முன்னைச் செய்யுளிற்போலப் பின்னைச் செய்யுளினும் மங்கலமெய்த முதற்சீர் தலைப்பெய்துரைத்தல், வேண்டற்பாற்றன்றாகலின், "அம்மலைமேலேறிய குற்றம் இம் மலைமேலேறாதோ" என்றல் கடாவாகாமை ஓர்ந்துணர்க.

அற்றேலஃதாக; மொழிபெயர்த்தல் யாப்புள் ஆண்டில்லாத பொருள்கள் தலைப்பெய்து அங்ஙனங் கூறுதல் அமையாதாம் பிறவெனின், மொழிபெயர்த்தல் யாப்புள் அப்பொருள்களோடு மாறுபடுவன ஆண்டுத் தலைப்பெய்து உரைத்தல் அமையாதென்ப தொக்கும்; அன்றி ஆண்டைக்கு உபகாரமாய் வேண்டப்படும் பொருள்கள் தலைப்பெய்து கூறுதல் அந்நூற்குச் சிறப்பேயாகலின், அஃது அமையாதென்றல் கையறியார் உரையேயாமென் றொழிக. இன்னோரன்ன வெல்லாம் அமைவுடையனவாமென்று அறிவுறுத்தற்கன்றே, ஆசிரியர் தொல்காப்பியனார் "தொகுத்தல் விரித்த றொகைவிரி மொழிபெயர்த்து" என் றொழியாது, "மொழிபெயர்த் ததர்ப்பட யாத்தலோ டனைமரபினவே" என்றங்ஙனஞ் சூத்திரஞ் செய்வாராயினதூஉமென்று கடைப்பிடிக்க. அக்கருத்தறியாத நன்னூலார்,

"தொகுத்தல் விரித்த றொகைவிரி மொழிபெயர்ப்
பெனத்தகு நூல்யாப் பீரிரண் டென்ப"

எனச் சூத்திரஞ் சிதைத்து வேறுபடுத்து, மொழிபெயர்ப்பு யாப்பிலக்கணங் குன்றக் கூறிப் புரைபோயினு ரென்பது.

இம்முறை யெல்லாம் நுணுகி நோக்காது, "இலக்கண விளக்க நூலார் "மலைமகள்" என்றெடுத்தது குற்றமாம்" எனச் சொற்றவாசிரியர் தாமே "மலைமக ளொருபான் மணந்தென்று" அவ்வா

றெடுத்து இழுக்குற்றுரென்று தூற்றுங் கையறியாமாந்தர் என்கடவர் என்றொழிக. அது நிற்க.

இனிக் "குடாகாயம் வடநூல் முடிபு" என்றும், அதனைக் "குடவாகாயம் குடாகாயமென மரீஇயிற்று, குள ஆம்பல் - குளாம்பலென மரீஇயினாற்போல" "எனச்சிவஞானபோதச் சிற்றுரையிற் சிவஞானமுனிவர் உரைத்தது எலாது" என்றும், கூறினாரும் உளராலோவெனின்,— 'குடம்' என்பது தமிழியற்சொல்லாகலின், அதனோடு புணரும் ஆகாயந் தீர்க்கசந்தி பெறுதல் சாலாதென்பார், சிவஞானயோகிகள் "குடவாகாயம் குடாகாயமென மரீஇயிற்று" என்றுரைத்தாராகலின், அஃது சாலாமை யாண்டையதென மறுக்க. குடந் தமிழியற்சொல்லாதல், "குடந்தம்பட்டு," "குடக்கூத்து" "குடமுழா" என்றற்றொடக்கத்தாற் பயின்று வருந் தமிழ் வழக்குரைகளான் அறிக. இன்னும், குடம், தமிழியற் சொல்லென்பது, "குடந்தம்பட்டு" எனவருந் திருமுருகாற்றுப்படைத் தொடர்க்கு— "வழிபட்டு" என்றும், "வணக்கம்பட் டென்றும் உரைப்பர்" என்றும், "குடவென்பது தடவென்பதுபோல வளைவு உணர்த்துவதோர் உரிச்சொல்லாகலின் அதனடியிற் பிறந்த பெயருமாம்" என்றும், நச்சினார்க்கினியர் உரை கூறுதலானும் அறிக.

வடமொழி அமரநிகண்டுள் அந்நூலார் "குடம்" வடசொல்லாகக்கொண்டு ஓதுதலின், அது வட இயற்சொல்லுமாம். ஆயினும் அஃது ஆண்டுத் தமிழிற்போலப் பெருவரவிற்றாகாது அருகி வழங்குதலானும், வடநூலார் 'கடாகாசம்' 'மடாகாசம்' என வழங்குவதன்றிக், 'குடாகாயம்' என யாண்டும் வழங்காமையானும், அதனை வடசொல்லென வைத்து முடிபு கூறாது, தமிழ்ச்சொல்லென வைத்து அவ்வாறு மரூஉ முடிபு கூறினர் ஆசிரியர் சிவஞானயோகிகளென் றுணர்க. குடம் பொதுவெழுத்தானய சொல்லாகலின், இருமொழிக்கண்ணும் அங்ஙனம் வெவ்வேறு பொருள்குறிக்கும் ,மொழியாதற்கு எற்குமாறு அறிக.

அற்றேல் லஃதங்ஙனமாக ; ஆசிரியர் சிவஞானயோகிகள் "குடாகாயம்" வடநூன் முடிபுமாம் எனக் கூறுதலென்னையோவெனின்,— "குடாகாயம் வடநூன்முடிபெனக் கோடலு மொன்று" எனச் சிவஞானமாபாடியத்து உரைத்தா ராகலின், அது கடாவன்றென் றொழிக.

---

# ௬. இலக்கிய மரபியல்

தமிழிலக்கியம் - திருமுறை யிலக்கியம், சங்க இலக்கியம், காவிய இலக்கியம், புராண இலக்கியம், இதிகாச இலக்கியம், பல வகைப்பிரபந்த இலக்கியமெனப் பலதிறப்படும்.

வேத்துணையோர் பரிபாடல், முதுநாரை, முதுகுருகு, களரியா விரையென்று இத்தொடக்கத்துத் தலைச்சங்க இலக்கியங்களும், கலி, குருகு, வெண்டாளி, வியாழமாலையகவல் என்று இத்தொடக்கத்து இடைச்சங்க இலக்கியங்களும் இறந்தனவாதலான், அவற்றின் வரலா றறிந்து கூறுமாறில்லை. கடைச்சங்க இலக்கியங்கள் - நெடுந் தொகை நானூறு, குறுந்தொகை நானூறு, நற்றிணை நானூறு, ஐங் குறு நூறு, பதிற்றுப்பத்து, நூற்றைம்பதுகலி, எழுபதுபரிபாடல், கூத்து, வரி, பேரிசை, சிற்றிசை யென்றித்தொடக்கத்தன. இவற் றுட்சில இறந்தன, பல நிலவுகின்றன. இவையும் இன்னோரன்னவு மான கடைச்சங்க இலக்கிய வரலாறு திருமுறையிலக்கியங்களின் பின் னர்த் தந்து கூறுதும்.

## (க) திருமுறை யிலக்கியம்

### திருமுறையோத்தின் முறைவைப்பு

திருமுறையிலக்கியங்கள் சங்கனூன்று அவதரித்தல்பற்றியும், அவையெல்லாந் திருவருளோத்துக்களாதற் சிறப்புப்பற்றியும், அவற் றின் வரலாறு முதற்கண்தந்து சொல்லுதும். திருமுறையிலக்கியங்கள் பன்னிரண்டு திருமுறைகளாக வகுக்கப்பட்டன. ஆளுடைய பிள்ளை யார் அருளிச்செய்த தேவாரஓத்து முதல்மூன்று திருமுறைக ளாம். திருநாவுக்கரசர் அருளிச்செய்த தேவாரஓத்துப் பின் மூன்று திருமுறைகளாம். நம்பியாரூரர் அருளிச்செய்த தேவாரஓத்து அதன்பின் ஓர்திருமுறையாம். இவ்வாற்றானே தேவாரஓத்துக்கள் ஏழுதிருமுறைகளாயின என்பது. வாதவூரடிகள் அருளிச்செய்த திருவாசகஓத்துந் திருக்கோவையும், எட்டாந்திருமுறையாம். திரு மாளிகைத்தேவர் முதலிய ஒன்பதின்மரும் அருளிச்செய்த திரு விசைப்பாவும், அவருட்சேந்தனர் அருளிச்செய்த திருப்பல்லாண்டும், ஒன்பதாந் திருமுறையாம். திருமூலநாயனர் அருளிச்செய்த திருமந்

திரம் பத்தாந்திருமுறையாம். திருவாலவாயுடைய சிவபிரான் முதலாயினர் அருளிச்செய்த திருமுகப்பாசுரம் முதல் திருநாவுக்கரசு தேவர் திருவேகாதசமாலை யீறான நாற்பது பிரபந்தங்களும் பதினொராந் திருமுறையாம். அருண்மொழித்தேவர் அருளிச்செய்த திருத்தொண்டர் பெரியபுராணம் பன்னிரண்டாந் திருமுறையாம்.

தேவாரந் திருவாசகந் திருக்கோவை திருவிசைப்பாத் திருப்பல்லாண்டு திருமந்திரந் திருமுகப்பாசுரமுதலிய நாற்பான் பிரபந்தங்களென்னும் இவைதம்மை அபயகுலசேகர சோழவரசர்பெருமான் வேண்டிடத் திருநாரையூர் நம்பியாண்டார்நம்பி பதினொரு திருமுறைகளாக அங்ஙனம் வகுத்தருளினர். இனித்தேவாரத் திருமுறைகளேழற்கும் பண்ணடைவு, திருநீலகண்டயாழ்ப்பாணர் மரபிற் பெண்மகள் ஒருத்தியால் அபயகுலசேகர சோழவரசன் காலத்திற்றானே வகுக்கப்பட்டது. இவ்வரலாறெல்லாந் திருமுறைகண்ட புராணத்துட்காண்க. அருண்மொழித்தேவர் அருளிச்செய்த திருத்தொண்டர் புராணத்தினைப் பன்னிரண்டாந் திருமுறையாக அநபாயசோழவரசர் பெருமான் ஆணையால் ஆன்றோர் அவன்காலத்து வகுத்தருளினர். இவ்வரலாறு திருத்தொண்டர் புராணவரலாற்றுட் காண்க.

ஆளுடைய பிள்ளையார் வாகீசர் தேவார ஒத்துக்கள் முடத்திருமாறன் காலத்தும், நம்பியாரூரர் தேவாரவோத்து அவன்வழித்தோன்றலான மற்றோர்மாறன் காலத்தும் அவதரித்தன. வாதவூரடிகள் திருவாசகந் திருக்கோவை யென்னும் ஒத்துக்கள் அரிமர்த்தனவழுதி காலத்து அவதரித்தன. அரிமர்த்தனவழுதி, முடத்திருமாறன் முற்றோன்றலாயுள்ளான். அது ஆலவாய்ப் புராணத்துட்காண்க. "நரியைக் குதிரைசெய்வானும்" என்னும் வாகீசர் திருவாக்கும் இதற்குறுசான்றாத லறிக.

தேவார ஒத்துள்ளுந் திருவாசக ஒத்துள்ளுஞ் சீராமசந்திரன் சரித்திரப் பிரயோகமும் அவற்கு முன்னுள சிலபுராண சரித்திரப் பிரயோகமும் அவற்குப்பின்னுள பாரதகாலத்து மன்னர் முதலியோர் சரித்திரப் பிரயோகமும் காணப்படுதலானும், அவற்றுள் இக்கலிகால சரித்திரப் பிரயோகம் யாதும் வரக்காணாமையானும், அவைதாங் கலியுகத்தின் முற்பொழுதே அவதரித்தன வென்பது தெள்ளிதிற் றுணியப்படும். இனி அநாரிய பாடை நூல் வழிப்பட்ட சிலர்,

தென்தமிழ்க்கால வரலாற்றினைத் தமிழாசிரியர் நூலுரை பற்றி முறை யாற்கொள்ளாது, பிறழக்கொண்டு, ஆளுடைய பிள்ளையார் முதலிய உண்மை நாயன்மார், கிறிஸ்து பிறந்தபின் அவதரித்தவரென்று தமக்கு வேண்டியவாறு கூறுவர். கிறிஸ்து இக்கலியுகத்தின் மூவா யிரத்தொரு நூற்றாண்டின்பின் தோன்றினாரென்பது அநாரிய பாடை நூல்களான் இனிதறியப்படுதலானும், "கடைச்சங்க மிரீஇய பாண்டி யர் முடத்திருமாறன் முதலாக உக்கிரப்பெருவழுதியீறாக நாற்பத் தொன்பதின்மர்" என்றும், "கடைச்சங்கம் ஆயிரத்தெண்ணூற் றைம்பதிற்றியாண்டு நிலவிற்று" என்றும், தோலா நாவின் மேலோ ரான கடைச்சங்கத் தலைமைப்புலவரான நக்கீரனார் களவியலுரை முகத்துக் கூறுதலானும், கடைச்சங்க மொடுங்கியஞான்று தொடங்கி இற்றை ஞான்றுவரை யுள்ள காலம் இரண்டாயிரத்தின் மிக்கதென் பது தமிழ் நூலுரைகளால் இனிதறியப்படுதலானும், ஆளுடைய பிள்ளையார் முடத்திருமாறனைத் திருப்பதிகத்தினால் சுரப்பிணி தீர்த் தாண்டருளிய சமயாசாரியரென்பது திருத்தொண்டர் பெரியபுராணம் முதலியவற்றாற் பெறப்படுதலானும், அவர்கூற்று வேதவழக்கோடும் ஆன்றோர் வழக்கோடும் மாறுபாடுறும் மயக்கவுரையே யென்றொழிக.

அற்றேலஃதாக; திருவாதவூரடிகள் அரிமர்த்தன வழுதிக்கு அமைச்சராய் அவனைத் தெய்வ ஆற்றலால் ஆட்கொண்டருளிய சமயா சாரிய ரென்பதூஉம், ஆளுடைய பிள்ளையார் முடத்திருமாறனைக் கூன் நிமிர்த்துச் சமண்மயல் தீர்த்து உய்யக் கொண்டருளிய சமயாசாரிய ரென்பதூஉம், புராண நூல்களான் அறியப்படுதலின், திருவாசகத்தினை யுந் திருக்கோவையினையுந் தேவார ஒத்துக்களுக்கு முன்வைத்து ஓது தலே முறையாமெனின்,— அதுவே காலம்பற்றிய முறையாயினும், திருஞானசம்பந்தர் உண்மை நாயன்மார்களுள் தவமுதல்வராய் முதல் வன் பிரளயாகலர்க்குப்போல நாற்றோளும், முக்கண்ணும் கறைமிட றும் முதலிய உறுப்பிற்றாய் முத்தொழில் நடாத்திநின்ற தன் னியற்கை வடிவே குருவடிவாகக்காட்டி முன்னின்று தலையளித்துத் தன்னருட் சத்தியாகிய உமைப்பெரும் பிராட்டியைக்கொண்டு திரு முலைப்பாலருளமுது பொன் வள்ளத்தூட்டுவிக்க உண்டு ஞானசம்பந்த ராய் ஆளுடைய பிள்ளையாரென விளங்கி வைதிகசைவத் திருநெறிப் பெருந்தலைமை யெய்திய சமயாசாரியராகலான், நம்பியாண்டார் நம்பி

அவரருளிச்செய்த தேவாரத்திருவோத்தினை மற்றைத் திருமுறை யோத்துக்களுக்கெல்லாம் முதலாக வைத்து அங்ஙனந் திருமுறை வகுப்புச் செய்தருளுவாராயிற் றென்றுணர்க.

இனி வாகீசர் வன்றொண்டர் திருவோத்துக்கள், ஆளுடைய பிள்ளையார் திருவோத்துப்போலும் இயலும் இசையு முடையவாய்த் தேவார மெனப்பட்டு இனமாதலின், அவை தம்மை மற்றவர் திரு முறைகளுக்குப் பின் திருமுறைகளாகக் கொண்டு அவ்வாறு வகுத்தரு ளிச் சமயாசாரியர் திருவாக்காகித் தமிழ்வேதமாதல் ஒப்புமையால் திருவாசகந் திருக்கோவைகளை அவற்றின்பின் முறையாகக்கொண்டு அவ்வாறு வகுத்தருளினர். திருவிசைப்பரத் திருப்பல்லாண்டென் னும் ஒத்துக்கள் வேதப்பொருள் மலிந்து ஓதற்குரிய இசையமைதியும் உடையவாய் அருளோத்தொப்புமையுறுதல் பற்றி, அவைதம்மை அவற்றின்பின் ஒன்பதாந் திருமுறையாகக் கொண்டு அவ்வாறு வகுத் தருளினர். திருமந்திரம் வேதப்பொருள்விராய் வேதவேதாந்தத் தெளிவான சிவாகம நாற்பாதப் பொருண் மலிந்து நிற்பதொன்றாத லின், அதனை அவற்றின் பின்னாகக்கொண்டு பத்தாந்திருமுறை யென்று அவ்வாறு வகுத்தருளினர். திருமுகப்பாசுரம் முதலிய நாற் பது பிரபந்தங்களும், தெய்வத் திருவருள் கைவந்து கிடைத்த உண்மைநாயன்மார் திருவாக்குக்களாய் அருட்பா ஒத்திலக்கண முறுதலின், அவைதம்மை அதன் பின்னாகக்கொண்டு பதினொராந் திருமுறை யென்று அவ்வாறு வகுத்தருளினர். மற்றுத் திருமுகப் பாசுரம் ஆலவாயிலவிர்சடைக் கடவுளான இறையனார் திருவாக்காத லின், அதனைத் திருமுறைகட்கெல்லாம் முதலாகக்கொண்டு வகுத் தலே முறையாம்பிறவெனின்,—அஃதப்பெற்றித் தாயினும், பாணபத் திரரென்னும் அன்பர்க்கெளிவந்து அவர் வேண்டிற்று அருளுதற் பொருட்டுக் கட்டளை செய்ததோர் திருமுகப்பாசுரமாய் முழுநூற் றன்மை யெய்தாமையின், அதனை அவ்வியல்புடைய பிரபந்தங்களோடு ஒன்றெனக்கொண்டு அவற்றின் முதற்கண்தந்து அவ்வாறு வகுத்தருளி னரென்றறிக. பெரியபுராணந் திருவருட்பாவாய்த் திருமுறைகள் ஆக் கியருளிய நாயன்மாருட் பெரும்பான்மையோர் சரித்திரங் கூறி, அந்நாயன்மார் அருளொழுக்கத்திற்கு ஓரிலக்கியமாய் நிற்றற் சிறப்

புடைமை பற்றி, அதனை இறுதிக்கண்தந்து பன்னிரண்டாந் திருமுறையென்று அவ்வாறு வகுத்தருளினர்.

இனித் திருத்தொண்டத் தொகையுட்போந்த தனியடியாருட் கண்ணப்பநாயனாரும், சண்டேசுரநாயனாரும், கோச்செங்கட்சோழ நாயனாரும், சாக்கியநாயனாரும், புகழ்த்துணைநாயனாரும், காரைக்காலம்மையாரும், வாதவூரடிகள்போல ஆளுடைய பிள்ளையாருக்குந் திருநாவுக்கரசருக்கும் முற்பட்ட நாயன்மார்க ளென்றுணர்க. அது,

"வேயனைய தோளுமையொர் பாகமது வாகவிடை யேறிசடைமேல்
தூயமதி சூடிசுடு காடினட மாடிமலை தன்னை வினவில்
வாய்கலச மாகவழி பாடுசெயும் வேடன்மல ராகுநயனம்
காய்கணையி னாலிடந் தீசனடி கூடுகா ளத்திமலையே"

என்றும்,

"பீரடைந்த பாலதாட்டப் பேணாத வன்றாதை
வேரடைந்து பாய்ந்ததாளை வேர்த்தடிந் தான்றனக்குத்
தாரடைந்த மாலைசூட்டித் தலைமை வகுத்ததென்னே
சீரடைந்த கோயின்மல்கு சேய்ஞலூர் மேயவனே"

"எரிதரவனல்கையிலேந்தியெல்லியில்
நரிதிரிகானிடைநட்டமாடுவார்
அரிசிலம்பொருபுனலம்பர்மாநகர்க்
குரிசில்செங்கண்ணவன்கோயில்சேர்வரே"

என்றும் வரும் ஆளுடையபிள்ளையார் தேவாரவோத்துக்களானும்,

"புலர்ந்தகால் பூவுநீருங் கொண்டடி போற்றமாட்டா
வலஞ்செய்து வாயினூலால் வட்டணைப் பந்தர்செய்த
சிலந்தியை யரையனாக்கிச் சீர்மைக ளருளவல்லார்
கலந்திகழ் சோலைசூழ்ந்த கனிபள்ளி யடிகளாரே"

எனவும்,

"...புத்தன் மறவா தோடி
யெறிசல்லி புதுமலர்க ளாக்கி னான்காண்..."

எனவும்,

"அகத்தடிமைசெய்யு மந்தணன்றானரிசிற்புனல் கொண்டுவந் தாட்டுகின்றான்
மிகத்தளர் வெய்திக் குடத்தையுநும்முடி மேல்விழுத் திட்டு நடுங்குதலும்
வருத்தவ னுக்குநித் தற்படியும் வருமென்றொரு காசினை நின்றநன்றிப்
புகழ்த்துணை கைப்புகச் செய்துகந்தீர் பொழிலார் திருப்புத்தூர்ப் புனிதனீரே"

எனவும்வருஞ் சுந்தரர் தேவார ஓத்துக்களானும்,

"இம்மையிலே புவியுள்ளோ ரியாருங் காண
வேழுலகும் போற்றிசைப்ப வெம்மை யாளும்
அம்மைதிருத் தலையாலே நடந்து போற்ற
மம்மையப்பர் திருவாலங் காடா மென்று
தம்மையுடை யவர்மூதூர் மிதிக்க வஞ்சிச்
சண்பைவருஞ் சிகாமணியார் சாரச் சென்றார்
செம்மைநெறி வழுவாத பதியின் மாடோர்
செழும்பதியி லன்றிரவு பள்ளி சேர்ந்தார்"

என்னும் அருண்மொழித்தேவர் பெரியபுராணத் திருவாக்கானும், பிற வற்றானுமறிக. இவர் தமக்கு முற்பட்ட நாயன்மார் பிறருளராதல் உரையளவையாற் பெறப்படிற் கொள்க. மற்றிவர் தம்முள் கண்ணப்ப நாயனாருஞ் சண்டேசுரநாயனாரும் வாதவூரடிகளுக்குமுன் விளங்கி யருளினோர். அது,

"கண்ணப்ப னொப்பதோ ரன்பின்மை கண்டபி
னென்னப்ப னென்னொப்பி லென்னையுமாட் கொண்டருளி
வண்ணப் பணித்தென்னை வாவென்ற வான்கருணைச்
சுண்ணப்பொன் னீற்றற்கே சென்றூதாய் கோத்தும்பீ"

என்றும்,

"தீதில்லை மாணி சிவகருமஞ் சிதைத்தானைச்
சாதியும் வேதியன் றாதைதனைத் தாளிரண்டுஞ்
சேதிப்ப வீசன் றிருவருளாற் றேவர்தொழப்
பாதகமே சோறு பற்றினவா றோணோக்கம்"

என்றும் வரும் அவர் திருவாச்கச் சுருதிகளானறிக. "கண்ணப்ப னொப் தோரன்பின்மை" என்புழி, ஒப்பு மறுதலைப் பண்பின்கண்வந்த உவமம். மற்றிது "வினைப்பயன் மெய்யுரு" என்ற நான்கனுள் யாதன்பாற்படுமெனின்,—அன்பு மற்றன்பின்மையும் பொருட்பண் பாகலின், மெய்யின் பாலதாய் அதனுளடங்கு மென்க.

ஆளுடைய பிள்ளையாரும் வாகீசரும் தம்முள் அருட்புலமை நட் புடையராய் வைதிகசைவத் திருநெறி வளர்த்தருளினா ரென்று

அருண்மொழித்தேவர் முதலியோர் திருத்தொண்டர் புராணம் முதலியவற்றில் அவர் சரித்திரம் பரவியருளுதலின், அச்சமயாசாரியர் இருவரும் ஒரு காலத்து விளங்கியருளினோ ரென்பது ஓதாமே விளங்கும். இனி நம்பியாரூரர்,

"பொய்யடிமை யில்லாத புலவர்க்கு மடியேன்"

என்று திருத்தொண்டத் தொகையுட் சேவித்தலின், அவர்தாம்,

"தாரணியிற் பொய்ம்மை யிலாத்தமிழ்ச் சங்க மதிற்கபிலர்
பரணர் நக்கீரர் முதனாற்பத் தொன்பது பல்புலவோர்
அருணமக் கீயுந் திருவால வாயரன் சேவடிக்கே
பொருளமைத் தின்பக் கவிபல பாடும் புலவர்களே"

என்னும் நம்பியாண்டார் நம்பி திருவந்தாதியினானே மதுரைக் கடைச் சங்கப்புலவ ரென்பது வெளிப்படுதலின், அந்நம்பியாரூரனார் கடைச் சங்கம் ஒடுங்கிய பிற்றைஞான்று அவதரித்து வைதிகசைவம் வளர்த் தருளிய சமயாசாரிய ரென்பதூஉம்,

"தம்பிரா னருளி னாலே தவத்தினான் மிக்கார் போற்று
நம்பியா ரூர ரென்றே நாமமுஞ் சாத்தி மிக்க
வைம்படை சதங்கை சாத்தி யணிமணிச் சுட்டி சாத்திச்
செம்பொனா ணரையின் மின்னத் தெருவிற்றே ருருட்டு நாளில்"

"நரசிங்க முனைய ரென்னு நாடுவா ழரசர் கண்டு
பரவருங் காதல் கூரப் பயந்தவர் தம்பாற் சென்று
விரவிய நண்பி னாலே வேண்டினர் பெற்றுத் தங்க
ளரசிளங் குமரற் கேற்ப வன்பினான் மகன்மைக் கொண்டார்"

என்று திருத்தொண்டர் புராணத்துள் அருண்மொழித்தேவர் கூறியருளுதலின், அவர் காலம் நடுநாட்டரசு புரந்தருளிய நரசிங்கமுனையர் காலமென்பதூஉம், தெள்ளிதிற் பெறப்படு மென்பது,

மற்றுக் கடைச்சங்கப் புலவர் தமிழ்நாட்டு மூவேந்தர் முதலியோரையும் பாடினாராக, அவர் தம்மை நம்பியாரூரனார் "பொய்யடிமை யில்லாத புலவர்" என்றும், நம்பியாண்டார்நம்பி

"அருணமக் கீயுந் திருவால வாயரன் சேவடிக்கே
பொருளமைத் தின்பக் கவிபல பாடும் புலவர்கள்"

என்றும், அருண்மொழித்தேவர்

"செய்யுணிகழ் சொற்றெளிவுஞ் செவ்வியநூல் பலநோக்கு
மெய்யுணர்வின் பயனிதுவே யெனத்துணிந்து விளங்கியொளிர்
மையணியுங் கண்டத்தார் மலரடிக்கே யாளானார்
பொய்யடிமை யில்லாத புலவரெனப் புகழ்மிக்கார்"

"பொற்பமைந்த வரவாரும் புரிசடையார் தமையல்லாற்
சொற்பதங்கள் வாய்திறவாத் தொண்டுநெறித் தலைநின்ற
பெற்றியினின் மெய்யடிமை யுடையாராம் பெரும்புலவர்"

என்றும் போற்றுதல் பொருந்தாதாலெனின்,— அம்மூவேந்தர் முதலாயினர் மையணியுங் கண்டத்து இறையனார் மலரடிப் பத்திவழிபாடு தலைநின்று செங்கோன்மையும் வரையாஈகையும் விண்ணும் மண்ணும் போற்ற நண்ணிய பெரியராதல்பற்றிக் கடைச்சங்கப்புலவர் அவரையும் பாடினர். அப்பாட்டெல்லாம் அறம் பொருள் இன்பம் வீடென்னும் உறுதிப்பொருள் நான்கின் திறனும் விளக்கித் தமிழுலகிற்கு உறுதியே பயவாநிற்கும். ஆகலின், அவர்தம்மை நம்பியாரூரர் முதலியோர் அவ்வாறு போற்றியது பொருத்தமுடைத்தேயா மென்க.

### சமயாசாரியர்சொரூப நிரூபணம்

ஆளுடைய பிள்ளையார் முதல்வன் அங்ஙனம் நிராதாரத்தாற் சிவஞானமருளப் பெற்றாரென்பது,

"அங்கிலையிற் றிருத்தோணி வீற்றிருந்தா ரருணோக்கான்
முன்னிலைமைத் திருத்தொண்டு முன்னியவர்க் கருள்புரிவான்
பொன்மலைவல் லியுந்தாமும் பொருவிடை மேலெழுந்தருளிச்
சென்னியிளம் பிறைதிகழச் செழும்பொய்கை மருங்கணைந்தார்"

"திருமறைநூல் வேதியர்க்குந் தேவியர்க்குந் தாங்கொடுத்த
பெருகுவர நினைந்தோதான் றம்பெருமைக் கழல்பேணு
மொருநெறியில் வருஞானங் கொடுப்பதனுக் குடனிருந்த
வருமறையா ளுடையவளை யளித்தருள வருள்செய்வார்"

"அழுகின்ற பிள்ளையார் தமைநோக்கி யருட்கருணை
யெழுகின்ற திருவுள்ளத் திறையவர்தா மெவ்வுலகுந்
தொழுகின்ற மலைக்கொடியைப் பார்த்தருளித் துணைமுலைகள்
பொழிகின்ற பாலடிசில் பொன்வள்ளத் தூட்டென்ன"

"ஆரணமு முலகேழு மீன்றருளி யனைத்தினுக்குங்
காரணமாய் வளம்பெருகு கருணைதிரு வடிவான
சீரணங்கு சிவபெருமா னருளுதலுஞ் சென்றணைந்து
வாரிணங்கு திருமுலைப்பால் வள்ளத்துக் கறந்தருளி"

"எண்ணரிய சிவஞானத் தின்னமுதங் குழைத்தருளி
யுண்ணடிசி லெனவூட்ட வுமையம்மை யெதிர்நோக்குங்
கண்மலர்நீர் துடைத்தருளிக் கையிற்பொற் கிண்ணமளித்
தண்ணலையங் கழுகைதீர்த் தங்கணனு ரருள்புரிந்தார்"

"யாவருக்குந் தந்தைதா யெனுமிவரிப் படியளித்தா
ராவதனு லாளுடைய பிள்ளையா ராயகில
தேவருக்கு முனிவருக்குந் தெரிவரிய பொருளாகுந்
தாவிறீனிச் சிவஞான சம்பந்த ராயினூர்"

"சிவனடியே சிந்திக்குந் திருப்பெருகு சிவஞானம்
பவமதனை யறமாற்றும் பாங்கினிலோங் கியஞான
முவமையிலாக் கலைஞான முணர்வரிய மெய்ஞ்ஞானந்
தவமுதல்வர் சம்பந்தர் தாமுணர்ந்தா ரந்நிலையில்"

என வருந் திருத்தொண்டர் புராணத் திருப்பாட்டுக்களா னறிக.

"முன்னிலைமைத் திருத்தொண்டு முன்னியவர்க்கருள் புரிவான்" என்றருளிச் செய்தலின், பிள்ளையார் உம்மையிற் சிவஞானப் பேற்றிற்கேதுவாகும் அருந்தவம் முயன்று வைத்தமை குறிக்கப்படும். படவே, "தவமுதல்வர் சம்பந்தர்" என்று உடம்பொடு புணர்த்தருளிச் செய்தது மற்றதற்கு ஞாபகமாயிற்று.

"திருமறைநூல் வேதியர்க்குந் தேவியர்க்குந் தாங்கொடுத்த பெருகுவா நினைந்தோ" என்றதனால், "மனையறத்தி லின்பமுறு மகப்பெறுவான்" விரும்பிப் "பரசமய நிராகரித்து நீறாக்கி" வைதிக சைவம் வளர்த்தற்குரிய "புனைமணிப்பூண் காதலனைப்" பெறுதற் பொருட்டு அவரும் உம்மையில் தவமுழந்தா ரென்பதூஉம், வேண்டியார் வேண்டிற்றே யருளும் பரங்கருணைத் தடங்கடலான சிவபிரான் ஆண்டு அவர்க்கவ்வரம் நேர்ந்தருளினு ரென்பதூஉம் பெறப்பட்டன. இனி அவர் அந்நினைவே தலைக்கீடாக இம்மையில் இன்னிலை நின்று,

"பெருத்தெழுமன் பார்ப்பெரிய நாச்சியா ருடன்புகலித்
திருத்தோணி வீற்றிருந்தார் சேவடிக்கீழ் வழிபட்டுக்
கருத்து முடிந்திடப் பராயினர்"

என்றும், அங்ஙனம் பராய்ச் செல்கின்றுழிக்,

"......காதலியார் மணிவயிற்றி
னுருத்தெரிய வரும்பெரும்பே றுலகுய்ய வுளதாயிற்று"

என்றும்,

"ஆளுடையா ளுடன்றோணி யமர்ந்தபிரா னருள்போற்றி
மூளுமகிழ்ச் சியிற்றங்கண் முதன்மறைநூன் முறைச்சடங்கு
நாளுடைய வீரைந்து திங்களினு நலஞ்சிறப்பக்
கேளிருடன் செயல்புரிந்து பெரிதின்பங் கிளர்வுறுநாள்"

என்றும், அங்ஙனங் கிளர்வுறு நாளில்,

"அருக்கன்முதற் கோளனைத்து மழகியவுச் சங்களிலே
பெருக்கவலி யுடனிற்கப் பேணியநல் லோரையெழத்
திருக்கிளரு மாதிரைநாட் டிசைவிளங்கப் பரசமயத்
தருக்கொழியச் சைவமுதல் வைதிகமுந் தழைத்தோங்க"

* * * * *

"அவம்பெருக்கும் புல்லறிவி னமண்முதலாம் பரசமயப்
பவம்பெருக்கும் புரைநெறிகள் பாழ்படநல் லூழிதொறுந்
தவம்பெருக்குஞ் சண்பையிலே தாவில்சரா சரங்களெலாஞ்
சிவம்பெருக்கும் பிள்ளையார் திருவவதா ரஞ்செய்தார்"

என்றும், உணர்க. ஓ—தெரிநிலை, "திருத்தொண்டு முன்னியோ" "பெருகு வரநினைந்தோ" யாதுநோக்கி யெனத் தெரிதற்கண் வருதலின்.

உமையம்மை எண்ணரிய சிவஞானத் தின்னமுதங் குழைத்தருளி எதிர் நோக்குங் கண்மலர் நீர் துடைத்தருளிக் கையிற்பொற் கிண்ணமளித்து அடிசில் உண்ணென வூட்ட, அங்கணனார் அங்கு அண்ணலையழுகை தீர்த் தருள்புரிந்தா ரெனப் பொருளியைபிற் கேற்பக் கொண்டு கூட்டி வினை முடிவு செய்க.

"யாவருக்குந் தந்தைதா யெனுமிவ ரிப்படி யளித்தார்" என்றது-- சகலராகிய சிவபாதவிருதயர் பகவதியார் மாதவத்தானே அவர் புனை

மணிப்பூண் காதலராய்த் திருவவதாரஞ்செய்த பிள்ளையாருக்குச் சகலர்க்குரிய படர்க்கையானன்றிப் பிரளயாகலர்க்குரிய முன்னிலையால் அங்ஙனஞ் சிவஞானம் அளித்தருளுதல் சால்பாமோ வென்று ஆசங்கித்து, பிள்ளையார் தவமுதன்மை நோக்கி அவ்வாறு அளித்தருளுதலின், அது சால்பேயாமென்று விடுத்தவாறுயிற்று. அஃறிணையுயிர்களுமடங்க யாவைக்கும் என்று ஓதா ராயினர், தத்துவ ஞானம் எய்தற்காம் பரிபக்குவம் உயர்திணைக் கண்ணதாதல் நோக்கி யென்க. இப்படி யளித்தா ரென்பதற்கு - அப்படியில் அளித்தற்குரிய பேற்றினை இப்படியில் அளித்தருளின ரென்று பொருள் கூறுதலுமொன்று. ஆவதனு லாளுடைய பிள்ளையாராய்ச் சிவஞான சம்பந்தராயினு ரென்றது - அங்ஙனந் திருமுலைப்பாலுண்டமையின் ஆளுடைய பிள்ளையாராய்ச் சிவஞானசம்பந்தர் ஆனுரென்பது அறிவித்தவாறும்.

"செயற்கைப் பொருளை யாக்கமொடு கூறல்"

"ஆக்கந் தானே காரண முதற்றே"

என்பவாகலின், ஆதலினுல் ஆளுடைய பிள்ளையாராய்ச் சிவஞானசம்பந்தராயினுரென்று அங்ஙனங் காரணமுதற் கிளந்து ஆக்கந்தலைப்பெய்தோதினுரென்க. பரஞானசத்தி பிள்ளையார் அறிவின்கண் இயற்கையர் னுள்ளதாயினும், அந்நிலையில் அபிவியஞ்சக முறுதலின், ஆக்கப்பொருளாக உபசரித்தோதப்பட்டது. ஆளுடையபிள்ளையா ரென்பது— ஆளப்படுதலுடைய பிள்ளையாரென்று விரிக்கப்படும். ஆளப்படுதல்—பண்டைப்பேதநிலை விண்டொழியுமாறு பரஞானத்தான் ஒற்றுமை செய்யப்படுதல். இவ்வத்துவித ஞான ஒற்றுமையானே பிள்ளையார் பரமசிவனுக்குரிய முற்றறிவுத் தொழிலோடு சிவானந்தந் தமதெனக் கொண்டு அனுபவிக்குஞ் சுதந்திர மகன்மை ஆண்டுற்று ரென்பது. "ஆண்டவரசு" முதலியவாகப் போதருங் குறிவழக்கிற்கும் இதுவே பொருளாகக் கொள்க. பரமசிவனே கந்தசுவாமியாய் விளங்குதலின், அக்குமாரசுவாமியோடு இப்பிள்ளையார்க்கு வேறுபாடு தெரிப்பார் "ஆளுடைய பிள்ளையார்" என்று அங்ஙனம் பிறிதினியைபு நீக்கும் விசேடணம் அடுத்தோதியருளின ரென்பது. கந்தசுவாமி. பரமசிவனே யென்பது,

"ஈசனேயவ னுடலான் மதலையா யினன்கா
ணுசிலாவவ னறுமுகத் துண்மையா லறிநீ
பேசிலாங்கவன் பரனொடு பேதக னல்லன்
நேசுலாவகன் மணியிடைக் கதிர்வரு திறம்போல்"

எனவும்,

"அருவமு முருவு மாகி யனாதியாய்ப் பலவா யொன்றாய்ப்
பிரமமாய் நின்ற சோதிப் பிழம்பதோர் மேனி யாகக்
கருணைகூர் முகங்க ளாறுங் கரங்கள்பன் னிரண்டுங் கொண்டே
யொருதிரு முருகன் வந்தாங் குதித்தன னுலக முய்ய"

எனவும்,

"காலமாய்க் கால மின்றிக் கருமமாய்க் கரும மின்றிக்
கோலமாய்க் கோல மின்றிக் குணங்களாய்க் குணங்க ளின்றி
ஞாலமாய் ஞால மின்றி யனாதியாய் நங்கட் கெல்லா
மூலமா யிருந்த வள்ளன் மூவிரு முகங்கொண் டுற்றான்"

எனவும்,

"மானுடத்தரின் விலங்கினிற் புட்களின் மற்று
மூனமுற்றழல் யாக்கையிற் பிறந்துளா ரொப்ப
நீநினைக்கல பரஞ்சுடர் நெற்றியந் தலத்தே
தானுதித்தனன் மறைகளுங் கடந்ததோர் தலைவன்"

"தன்னுருவாகு - மொருமகன்"

என்றற்றொடக்கத்தான் வரும் கந்தபுராண வசனங்களா னறிக. சோமாஸ்கந்தமூர்த்தியிற் குமாரசுவாமி யொன்றாய் நிலவுதலின், 'தன்னுருவாகும் ஒருமகனென்றார். சோமாஸ்கந்தமூர்த்தி அயன் மால் உருத்திரக்கடவுள் என்னும் மூவரையுந் தோற்றுவித்து முத்தொழிலினும் நிறுத்துந் துரியமுதற் கடவுளான பரமசிவனென்பது, வேதாகமங்களிரண்டிற்கும் ஒப்பமுடிந்த துணிபாகலின், அம் முதல்வனோடொன்றான கந்தசுவாமி அப்பரமசிவனின் வேறாகாத பரம்பொருளென்பதூஉம், அவ்விரு முதனூற்கும் ஒப்பமுடிந்த துணிபாதல் தானே போதருமென்க.

பெரிய புராணம் இங்ஙனம் பிள்ளையார் கவுணியர் மாதவத்தானே தவமுதல்வராய் அவதரித்துச் சிவஞானமெய்தி வைதிக சைவம்

வளர்த்துத் திருமணத்திற் சிவபரஞ்சோதியிற் போதநிலை முடிந்த வழிப் புக்கொன்றிப் பரமசிவசாயுச்சியந் தலைக்கூடினாரென்று, அர்த்த வாதங் குணவாதந் துதிவாதமென்பவற்றிற்கு அவகாசமில்லா வுரை யாற் கூறுதலின், இங்நிர்அவகாச வுரையோடு மாறுகொள்ளாமே திருத்தொண்டர் புராணத்தும், பிறண்டும் பிள்ளையாரைச் சிவகுமார ரெனக் கூறிய வசனங்கட்குப் பொருள்கோடல் உரைமுறையா மென்க. இங்ஙனமாகலின், "ஒருபிறப்பு மெய்தாமை யுடையார் தம்மை" "ஈறிலாத் திருஞானசம்பந்தர்"

"பாச மற்றிலா ராயினும் பார்மிசை
யாசை சங்கரற் காயின தன்மையாற்
றேசு மிக்க திருவுரு வானவர்"

என்பனவற்றிற்கு - இனிப்பிறப்பொன்றும் எய்தாமை யுடையார் தம்மை யென்றும், திருப்பெருமணச் சிவபரஞ்சோதியிற் போதநிலை முடிந்தவழிப் புக்கொன்றி யுடனாதற்காந் திருவுடையராகலின் ஏனோர் போல இறுதலில்லாத ஞானசம்பந்தரென்றும், பற்றுப் பிறிதிலராயி னும், பரசமயக் குறும்பு கடிந்து சங்கரன் திருவருணெறியை நிறுத்தி வளர்த்தற்கண் பற்றுடையராய காரணத்தானே இப்புண்ணிய பூமி யில் தேசுமிக்க திருவுருவானவதரித்த பிள்ளையாரென்றும், இவ்வாறு அவிரோதப் பொருள் கொள்க. ஆசைசங்கரற் காயினதன்மையா னெனப் பின்வருதலின், பாசமற்றில ரென்றருளிச் செய்தார். ஆண்டு மற்று, "மற்றுப்பற்றெனக்கின்றி" "மற்றுநான் பற்றிலேன் கண் டாய்" என்புழிப்போலப் பிறிதென்னும் பொருட்டாய் நின்றது. சங்கரற்காசையென்புழி, நான்காவது ஏழாவதன் பொருள்பட வங் தது. இது சதிசத்தமியாதல் உய்த்துணர்க.

"இனிப் பிறவாமை செய்தான்"

"துறக்குமா சொலப்படாய் துருத்தியாய் திருந்தடி
மறக்குமா றிலாதவென்னை மையல்செய்திம் மண்ணின்மேற்
பிறக்குமாறு காட்டினாய் பிணிப்படு முடம்புவிட்
டிறக்குமாறு காட்டினாய்க் கிழுக்குகின்ற தென்னையே"

எனவரும் ஆளுடைய பிள்ளையார் திருவாக்குக்களானும் இவற்றிற் கிவையே செம்பொருளாதல் தெளிக. "பதியானஞான முனிவன்" என்

றது தலைவனான ஞானசம்பந்த முனிவன் என்றவாறே யாகலின், இஃததனோடு முரணாமையறிக. தலைமை - சிவஞானப்பாலடிசில் உமைபொன் வள்ளத்தூட்ட உண்டருளிய தவமேம்பாடு. மற்று வாகீசர் வன்றொண்டர் வாதவூரடிகளும் இந்நீரரான சமயாசாரிய ரென்பது, அவர் சரித்திரங் கூறும் புராணங்களானும்,

"தொண்டனேன் பிறந்து வாளா தொல்வினைக் குழியில் வீழ்ந்து
பிண்டமே சுமந்து நைந்து பேர்வதோர் வழியுங் காணேன்"

"பெற்றலும் பிறந்தேனினிப் பிறவாத தன்மை வந்தெய்தினேன்"

"மரணம் பிறப்பென் றிவையிரண் டின்மயக்கறுத்த - கருணைக்கடல்"

என்றற்றொடக்கத்தான் வரும் அவர் திருவாக்குக்களானு மறிக.

"புரமெரித்தார் திருமகனார்"

"செய்யமேனியர் திருமகனார்"

"இறைவர் திருமைந்தர்"

"சேவிற்றிகழ்ந்தவர் மைந்தரான திருஞானசம்பந்தர்"

"ஈசர் மிழலை யிறையவர்பா லிமையப் பாவை திருமுலைப்பா
றேச முய்ய வுண்டவர்தாந் திருமா மகனா ராதலினாற்
காசு வாசி யுடன்பெற்றார் கைத்தொண் டாகு மடிமையினால்
வாசி யில்லாக் காசுபடி பெற்று வந்தார் வாகீசர்"

என்றொடக்கத்தான் ஆண்டாண்டுப் பெரியபுராணத்து அருண்மொழித்தேவர் பிள்ளையாரைச் சிவகுமாரரெனக் கூறிய வெல்லாந் திருத்தோணி வீற்றிருந்த சிவபிரான் திருவருளாற் பெரியநாயகியார் திருமுலைப்பால் ஞானவடிசில் ஊட்டியருள வுண்டு ஆளுடைய பிள்ளையாராயினமை பற்றியே யாகலின், அவை மேலதனோடு மாறுபடா வென்பது தெற்றென வுணர்ந்துகொள்க. திருச்சேய்ஞலூர் எச்சதத்த குமாரர் தாதை சிவாபராதங்கண்டு அவனைத் தாளறவீசிய காரணத்தானே சிவபிரான் அவரை அந்நிலையில் ஆண்டு பிள்ளையார் ஆக்கியதுபோலக் கவுணியர் தலைவராய் உதித்தருளிய பிள்ளையார் முன்னிலைமைத் திருத்தொண்டு முதன்மை பற்றி அவருக்குச் சிவஞானப்பாலடிசில் ஊட்டுவித்துச் சிவஞானசம்பந்தமியற்றி, ஆளுடைய பிள்ளையாராக்கியருளினரென்க. அருண்மொழித்தேவர்க்கு இதுவே கருத்தாயாறு,

"மாமறை யாளர்வண் புகலிப் பிள்ளையார்
தாமெழுந் தருளிடத் தங்கள் பிள்ளையார்
காமரும் பதியில்வந் தருளக் கண்டன
ராமகிழ் வுடன்பணிந் தாடி யார்த்தனர்"

என்றிங்ஙனஞ் சேய்ஞலூர்ப் பிள்ளையாரோடு புகலிப்பிள்ளையார் ஒப்பித்துரைத்தவாறு பற்றி யுணர்ந்துகொள்க. ஆசிரியர் சிவஞானயோகிகளுக்கும் இதுவே கருத்தாமாறு "ஆளுடைய பிள்ளையார் முதலிய உண்மை நாயன்மார்க்குத் தவமின்றியும் ஞானம் நிகழ்ந்தவாறென்னை யென்னுங் கடாவை விடுத்தற்கு 'மேற்செய்துழி' என ஈண்டும் வலியுறுத்தார்" என்று சிவஞானமாபாடியத்துள் அவர் ஓதியவாற்றானுணர்க. இவற்றானே ஆளுடைய பிள்ளையார், உக்கிரபாண்டியனார் உருத்திரசன்மனார் போல்வாரோர் அபரசுப்பிரமணிய ரென்பது போந்தவாறுணர்க. ஆளுடைய பிள்ளையார் இவ்வாறு அபர சுப்பிரமணியராம் ஒற்றுமை பற்றியே ஆன்றோரும் புராண நூலுடையாரும் ஆண்டாண்டு அப்பிள்ளையாரைச் சுப்பிரமணியக் கடவுட்குரிய குறிகுணங்களால் விசேடித்து அவ்வாறோதுவாராயினர். ஆகலின், அவை குணவாதந் துதிவாதங்களே யாமென்க. அருணகிரியார் முதலியோர் திருப்புகழ் முதலியவற்றில் ஆளுடைய பிள்ளையார் அற்புதச் செயல்களை அறுமுகக்கடவுள் செயலாக ஓதியதூஉம், பிள்ளையார் உமைமுலைப்பாலுண்டு அறுமுகக்கடவுள் திருவருளமிச முறுதல் பற்றி யாதலின், அஃது வைரவக்கடவுள் வீரபத்திரக்கடவுள் முதலியோர் இயற்றியருளிய அயன்தலை கோடல் தக்கன்வேள்வி தகர்த்தல் முதலிய செயல்களை அவர் சிவபிரான் அருள்அமிசமுறுதல்பற்றி அம்முதல்வன் செயலாக ஓதுவது போல்வதோர் உபசார வழக்கென்று துணிக. விசாலாக்கன் தாணு சங்காரவுருத்திரரென்னும் அமிசவுருத்திரர் குணிருத்திரக்கடவுட்குரிய குறிகுணங்களான் அங்ஙனம் விசேடிக்கப்படினும் அக்கடவுளாகாதவாறு போலவும், குணிருத்திரக்கடவுள் துரிய முதற்கடவுளான பரமசிவனுக்குரிய குறிகுணங்களான் அங்ஙனம் விசேடிக்கப்படினும் அம்முதல்வனாகாதவாறு போலவும், ஆளுடைய பிள்ளையார் உருத்திரசன்மனார் உக்கிரபாண்டியனாரென்னும் அமிச சுப்பிரமணியர் பரசுப்பிரமணியக் கடவுட்குரிய குறிகுணங்களால் அங்ஙனம் விசேடிக்கப்படினும் அச்சிவசுப்பிரமணியக் கடவுளாகாரென்பது தெற்றென வுணர்ந்துகொள்க,

இன்னும், சிவபாதவிருதயர் மாதவத்தால் அவர் கடவுட் கற்பிற் சிறந்த தேவியரான பகவதியார் மணிவயிற்றின் உருத்தெரியவந்து உலகுய்யத் திருவவதாரமுறுதல், திருமுலைப்பால்அருளமுதுண்டு திருஞானசம்பந்தராதல், அத்தவஞானப்பேற்றில் திருத்தொண்டர் தொகையுட் சேர்தல், போதநிலை முடிந்தவழி ஏனைச்சமயாசாரியர்போலச் சிவபரிபூரணம் புக்கொன்றி யுடனுதல் போல்வன, அபர சுப்பிரமணியர்க் கன்றிப் பரமசிவனுன பரசுப்பிரமணியக் கடவுட்கு ஏலாவென்க. இன்னும், திருக்காளத்தியிற் கண்ணப்பநாயனுர் திருவுருக்கண்டு வணங்குதலும், காரைக்காலம்மையார் திருத்தலையால் நடந்த திருப்பதியாமென்று திருவாலங்காட்டினை மிதிப்ப அஞ்சி ஒதுங்குதலும், வாகீசர் வணங்க அவரெதிர் வணங்குதலும் என்றின்னோன்ன அடிமைப் பத்திமைத் தொண்டுகள் - ஆளுடையபிள்ளையார் பேணியதூஉம், அவர் அபர சுப்பிரமணிய ரென்பதைத் தெள்ளிதிற் புலப்படுத்து மென்க. இன்னும், ஆளுடையபிள்ளையார்,

> "*மாயச் சூரன் றறுத்த மைந்தன் ரூதை*"
>
> "சேயடைந்த சேய்ஞலூரிற் செல்வன்"
>
> "பெற்ற முகந்தது கந்தனையே"

என்றித் தொடக்கத்தான் அறுமுகக்கடவுளை வேறுகொண்டு பாரா யதூஉம், அவர் அமிசசுப்பிரமணியராதலை வலியுறுத்து மென்க. இன்னும்.

> "பாலநெய்சுல் பாடியதும் பாம்பொழியப் பாடியதுங்
> காலனையன் றேவிக் கராக்கொண்ட - பாலன்
> மரணந் தவிர்த்ததுவு மற்றவர்க்கு நந்தங்
> கரணம்போ லல்லாமை காண்"

எனச் சைவசித்தாந்த நூலுடையார் கூறிய திருவாக்கும் பிள்ளையார் ஏனைச் சமயாசாரியரோ டொத்த சிவஞானச் செயலுடைய ஆசாரியரென்பதை நன்குநிறுத்து மென்க. அங்ஙனமாயினும், உமைப் பெரும்பிராட்டியார் திருமுலைப்பாலுண்டு ஆளுடையபிள்ளையாராயினமையின் சமயாசாரியருந் தேவரும் முனிவரும் மேன்மக்கள்யாவரும் வணங்கியேத்தும் ஆசாரிய முதன்மை யுடையராயினரென அவர் பிரபாவங் கடைப்பிடித் துணர்ந்து கொள்க. இனித் திருநாவுக்கரசர்

வன்றொண்டர் வாதவூரடிகளென்னும் மற்றைச் சமயாசாரியரும் ஆளுடைய பிள்ளையார் போல உம்மையிற் சிவகணநாதராய் வைதிக் சங்கரன் அருணெறி வளர்த்தற்கண் பற்றுடையராய காரணத்தானே இப் புண்ணியபூமியில் திருவவதாரஞ் செய்தருளினரென்பது, அவர் பிரபாவங் கூறும் புராணங்களானே நன்றறிய நிற்றலின், அவருந் தேவரும் முனிவரும் மேன்மக்கள் யாவரும் வணங்கி வழிபடற்குரிய சமயாசாரிய சுவாமிகளென்பது தெரிந்துணர்ந்து கொள்க. இனிச் சமயாசாரியர் நால்வருள் வைத்து ஆளுடையபிள்ளையார் அமிச சுப்பிரமணியராதலின், விசேட சகற்குருசுவாமிகளு மாவரென்பது,

" ஸ்வாமிநஸ்ய-ஜகத்நாயஜமநாய ஜமஸ்மரோ "

என்றற் றொடக்கத்தான் வரும் ஆலவாய் மான்மிய வசனங்களானு மறிக. இன்னும், ஆளுடையபிள்ளையார் நம்பியாண்டார்நம்பி முதலிய சைவத்திறத்தருஞ் சங்கராசாரியர் முதலிய வைதிகத் திறத்தருந் தத்தம் பிரபந்தங்களில் எடுத்தேத்தப்படும் மகிமையுடைய ஆசாரியசுவாமிகளாகலின், மற்றவர் விசேட வைதிகசைவ சகற்குரு முதல்வரென்பது நிங்காத வழக்காமென்க.

இனிச் சிவஞானச் செயலுடைய நாயன்மார் தாமுற்ற சாதி குலம் நிலைகளான் வேறுபாடுறினும், எய்திய சிவஞானத்தானே ஒற்றுமையுடையரே யாவர். அது,

" ஶவாஶெநகவண-ா-நாம் க்ஷீரஸ்யாவெ்யகவண-தா
க்ஷீரவசுஜ்ஶ்யெதஜ்ஞா-நம் லிஂகிநஷ்-ஶவாஂவஸா: "

என்னுஞ் சருவ ஞானோத்தராகம வசனத்தான் அறிக.

மற்று ஆளுடையபிள்ளையார் முதலிய சமயாசாரியர் நால்வரும் நிலவுலகத்தில் திருவவதாரமுறினும், பரமசிவன் அவர் முற்றவ முதன்மைநோக்கி ஆசான் மூர்த்தியை யதிட்டிக்காது, முறையே திருத்தோணி அம்மையப்பராயும், திருவதிகை-வீரட்டான மூர்த்தியாயும், திருவருட்டுறை அந்தணனாயும், திருப்பெருந்துறையிற் குருந்தின்கீழ்ப் பரமாசாரியனாயும், தாமே முன்னின்று, ஞானதீக்கையினை மற்றவர்க்குச் செய்துய்யக் கொண்டருளின ரென்பது. இது நிராதார தீக்கையெனப்படும். நிராதார தீக்கையாவது - விஞ்ஞானகலர்

பிரளயாகலர்க்குத் தீவிரந் தீவிரதர மென்னும் இருவகைச் சத்திநிபா தத்தாற் பரமசிவன் ஆசான் மூர்த்தியை அதிட்டித்து நின்று செய்வ தன்றித் தானே முன்னின்று செய்வது. இங்நிராதார தீக்கை தீவிர சத்திநிபாதத்தான் அனந்ததேவர் முதலியோர் பதங்களை உதவுவ தூஉந் தீவிரதர சத்திநிபாதத்தான் வீடுபேறுதவுவதூஉமென இரு வகைப்படும். அவற்றுள் சமயாசாரியர் நால்வருக்குஞ் செய்தருளியது பின்னையதென்றுணர்க. தீக்கையென்னுஞ் சொற்குப் பொருள்—மலத் தைக் கெடுத்து ஞானத்தைக் கொடுப்பதென்பதாம்.

தவமுதல்வர்சம்பந்தர்தாம், சிவனடியே சிந்திக்குந் திருப்பெருகு சிவஞானம் உவமையிலாக் கலைஞானம், பவமதனை யறமாற்றும் பாங் கினிலோங்கிய ஞானம் உணர்வரிய மெய்ஞ்ஞானம், அங்நிலையில் உணர்ந்தாரென நிரல்நிறையாற் கொண்டு கூட்டுக. தவமுதல்வர் சம்பந்தர் உவமையிலாக் கலைஞானமாகிய அபரஞானமும் உணர்வரிய மெய்ஞ்ஞானமாகிய பரஞானமுமென்னும் இரண்டனையும், அங்நிலையில் உணர்ந்தாரென வினைமுடிவு செய்க. கேட்டல் சிந்தித்தலென்னு மிரண்டும் நூல் பற்றியும், தெளிதல் நிட்டை யென்னு மிரண்டும் நூல் பற்றாதும் நிகழுமொப்புமையான், அவை தம்மை அங்ஙனம் இரண் டிரண்டு ஓரினமாக்கி ஓதியருளினர்.

இனிக் கேட்டல் வடிவான கலையும், சிந்தனைவடிவான கலையும், அபரஞானமென வொன்றாயினும், சிந்தனைக்கலை தன்செவிக்கே புலப் படுஞ் சூக்குமவைகரியாய் உண்ணிலவும் விருத்திக்குறைவும், கேட்டற் கலை தன்செவிக்கும் பிறர் செவிக்கும் புலப்படுந் தூலவைகரியாய்ப் புறத்து நிலவும் விருத்தி மேம்பாடும் உடையன வாகலின், அக்குறை வாக்கு வடிவான சிந்தனைக்கலையை விசேடணமாக்கியும், அங்நிறை வாக்குவடிவான கேட்டற்கலையை விசேடிய மாக்கியும், அவ்வாறோதி யருளினர். தெளிதலறிவும் நிட்டையறிவும் பரஞானமென ஒன்றாயி னும், தெளிதலிற் றிருவருண்ஞானசத்தி குறைவாயும் நிட்டையில் நிறைவாயும் விளங்குதலின், அக்குறைவு நிறைவுபற்றித் தெளித லறிவை விசேடணமாக்கியும், நிட்டையறிவை விசேடியமாக்கியும், அவ்வாறோதியருளினர். ஆசிரியர் சகலாகமபண்டிதர்,

"கேட்டலுடன் சிந்தித்த றெளித னிட்டை
கிளத்தலென வீரிரண்டாங் கிளக்கின் ஞானம்"

எனக் கேட்டல் சிந்தித்தல்களை யொன்றாகவும் ஏனைத்தெளிதல் நிட்டைகளை மற்றொன்றாகவுங் கொண்டோதி யருளுதலின், அந்நான்கும் இங்ஙனமிரண்டிரண்டு ஓரினமாமென்பது அவர் தமக்கும் உடம்பாடாதல் பெற்றாம். "கேட்டலுடன் சிந்தித்த றெளித னிட்டை கிளத்தலென வீரிரண்டாம்" என்புழி, 'உடன்' என்னுஞ் சகார்த்தத் திருதியைத் தெளிதலுடன் நிட்டையெனப் பின்னும் பிரித்துக் கூட்டி யுரைக்கற்பாலதென்பது, 'ஈரிரண்டாம்' என்றங்ஙனம் வகுத்தோதிய வாறுபற்றி யுணரப்படும். இத்திருப்பாட்டிற்கு இங்ஙனம் நோக்குறுப் புப்பெரிது புணர்த்து நிரல்நிறைப் பொருள் கோளுக்கிடனாக ஆசிரிய ரோதிய கருத்துணரமாட்டாதார் இடர்ப்பட்டுத் தமக்கு வேண்டிய வாறு உரையளவை மாறாகப் போலியுரை பலவாறுரைத்தார். ஈண்டு யாமுரைத்ததே ஆசிரியர் கருத்தாமாறும், அவருரைத்தனவெல்லாம் போலியுரைகளாமாறும், ஞானசூடாமணி யென்னுங்கிரந்தத்தில் விரித்துக்கூறினாம். ஆண்டுக் காண்க.

### திருமுறைகள் சதுர்வேதமோக்குந் தமிழ்வேதமாதல் தேரித்தல்

இறைவன் திருவாய்மொழியான இருக்கு முதலிய நான்கும் முதற்றொட்டு வேதமென வழங்கப்படும். ஆளுடைய பிள்ளையார் முதலிய உண்மை நாயன்மார் அருளிச்செய்த திராவிட ஒத்துக்கள் திருமுறைகளென்று வழங்கப்படும். மற்றவைதம்மை வேதமென்று வழங்குதல் மரபாமோ வெனின்,—

"எழுது மாமறை யாம்பதி கத்திசை
முழுதும் பாடி முதல்வரைப் போற்றி"

"மிக்கசொற் றமிழினால் வேதமும் பாடினார்"

"விருப்புடன்பா டலிசைத்தார் வேதந்தமி ழான்விரித்தார்"

"...திருத் தோணிமிசை மேவினார்கள்
தங்க டிருமுன்பு தாழ்ந்தெழுந்து தமிழ்வேதம் பாடினார் தாளம்பெற்றார்"

என்று இத்தொடக்கத்தாற் பன்னிரண்டாம் திருமுறையுள் அருண்மொழித்தேவர் ஓதியருளுதலின், அவைதம்மைத் தமிழ்வேதமென்று அவ்வாறு வழங்குதல் மரபேயாமென்று விடுக்க.

இனிப் பரமான்மாவாகிய பரமசிவத்தினுடைய பராசத்தி குடிலையை நோக்கியவழிக் குடிலையினின்று நாதவடிவாயும், அதன்பின்

விந்து வடிவாயும், அதன்பின் அக்கரவடிவாயும், வேதாகமங்கள் தோன்றியவாறுபோல, பாசமனைத்தினும் நீங்கி விளங்கிய ஆளுடைய பிள்ளையார் முதலிய சமயாசாரியர் தூயவறிவின் மேம்பட்டு விளங்கிய சிவசத்தி அத்துவித இயைபான் மற்றதனைப் பிரேரிக்கலுற்றுழி, ஆண்டு நின்று நாதவடிவாயும், விந்துவடிவாயும் அதன்பின் அக்கர வடிவாயுந் தோன்றின கடவுண்மொழி யாகலின், தேவாரந் திருவாசகந் திருக்கோவை யென்னும் அருளோத்துக்களைத் 'தமிழ்வேதம்' என்றுந் 'திருமுறைகள்' என்றுந் 'திருவருட்பாக்கள்' என்றும் அவ்வாறு, ஆன்றோர் வேறுகொண்டு போற்றி வழங்குவாராயினரென்று உணர்ந்து கொள்க. அவ்வாறு,

"எனதுரை தனதுரையாக நீறணிந் தேறுகந்தேறிய நிமலன்"

என்னும் ஆளுடைய பிள்ளையார் திருவாக்கானும்,

"பன்னியநூற் றமிழ்மாலை பாடுவித்தென்
சிந்தைமயக் கறுத்ததிரு வருளினானை"

என்னும் வாகிசர் திருவாக்கானும்,

"எல்லையிலா மறைமுதன்மை யுடனெடுத்த வெழுதுமறை
மல்லனெடுந் தமிழாலிம் மாநிலத்தோர்க் குரைசிறப்ப"

எனவும்,

"திரைக்கெடில வீரட்டா னத்திருந்த செங்கனக
வரைச்சிலையார் பெருங்கோயி றொழுதவலங் கொண்டிறைஞ்சித்
தரைத்தலத்தின் மிசைவீழ்ந்து தம்பிரா னிருவருளா
லுரைத்தமிழ்மா லைகள்சாத்து முணர்வுபெற வுணர்ந்துரைப்பார்"

எனவும்,

"தம்பெருமான் கொடுத்தமொழி முதலாகத் தமிழ்மாலைச்
செம்பொருளாற் றிருத்தொண்டத் தொகையான திருப்பதிக
மும்பர்பிரான் றனதருளு முணர்வுபெற வுலகேத்த
வெம்பெருமான் வன்றொண்டர் பாடியவ ரெதிர்பணிந்தார்"

எனவும் வரும் அருண்மொழித் தேவர் திருவாக்குக்களானும்,

"சிவனவனென் சிந்தையு ணின்ற வதனால்
அவனரு ளாலே யவன்றாள் வணங்கிச்
சிந்தை மகிழச் சிவபுரா ணந்தன்னை
முந்தை வினைமுழுது மோய வுரைப்பனியான்"

என்னும் வாதவூரடிகள் திருவாக்கானும்,

"வண்டுபோற் புண்டரிக மலரில்விளை சிவானந்த மதுவை வாரி
யுண்டுவா சகம்பாடி"

என்னும் ஆலவாய்ப்புராண வசனத்தானும்,

"ஐயா றதன்மிசை யெட்டுத்தலை யிட்ட
மையில் வான்கலை மெய்யுடன் பொருந்தித்
தில்லை மூதூர்ப் பொதுவினிற் றோன்றி
யெல்லையி லானந்த நடம்புரி கின்ற
பரம காரணன் றிருவரு ளதனாற்
றிருவாத வூர்மகிழ் செழுமறை முனிவர்
ஐம்பொறி கையிகந் தறிவா யறியாச்
செம்புலச் செல்வ ராயின ராதலி
னறிவனூற் பொருளு முலகநூல் வழக்குமென
விருபொருளு நுதலி யெடுத்துக் கொண்டனர்"

எனவும், "மாணிக்கவாசகர் அறிவாற்சிவனே யென்பது திண்ணம். அன்றியும், அழகிய திருச்சிற்றம்பலமுடையார் அவர் வாக்கிற்கலந்து (திருவாசகந் திருக்கோவைகளை) இரந்து அருமைத் திருக்கையா லெழுதினார்" எனவும் வரும் ஆன்றோர் உரைகளானுந் தெளிக. ஆண்டு, 'மறைமுதன்மை' என்றது - பிரணவத்தினை. முதன்மை யுடையதனை முதன்மை யென்றுபசரித்தார். புண்டரிகமல ரென்றது - தத்துவ கமலத்தினை. தத்துவ பங்கயத்தின் மேற்பகுதி சுத்தமாயை யாகலின், அதன் கண்ணதான அருட்சத்தி சிவானந்த மதுவென அவ்வாறு உருவகஞ் செய்யப்பட்ட தென்பது. இஃது உபலக்கணமாதலின், ஏனைத் திருமுறைகளும் இவ்வாறு அருளோத்தாதல் கொள்க. இஃதொன்றின முடித்தலென்னும் உத்தி.

இனிச் சமயாசாரியர் நால்வர் திருவோத்துக்கள் வேத இயலிசைப்பொருளும் புராண இதிகாச முதலிய வைதிகநூற் பொருளும் பெருகியுஞ் சிவாகமப்பொருளருகியும் விளங்க அருளிச்செய்யப்பட்ட

திருமுறைகளாகலின், அம்மிகுதிபற்றித் தமிழ்வேதம் என்று அவ்வாறு வழங்கப்படுவன வாயின என்றறிக. உத்தரவேதமான திருக்குறளுந் திருமுறைகள் போல்வதோர் அருளோத்தாம். அதன் வரலாறு முன்னர்க் கூறுதும்.

### வேதாகமப் பிராமாணியம்

வைதிகரில் ஒருசாரார் "வேதம் பிரமாணநூல்" என்றும், "சிவாகமம் பிரமாணநூலன்று" என்றுங் கூறுவர். சைவரிலொரு சாரார் "சிவாகமம் பிரமாணநூல்" என்றும், "வேதம் அதுபோல்வதோர் பிரமாணநூலன்று" என்றும் கூறுவர். நீலகண்ட வாசிரியர் அப்பயதீக்கிதர் முதலிய சிவாத்துவித சைவாசிரியர்கள், நீலகண்ட பாடியம், சிவாதித்தமணி தீபிகை, சிவதத்துவ விவேகம் முதலியவற்றில், அவ்வைதிகரை மறுத்துச் சிவாகமப் பிராமாணியம் வலியுறுத்துரைத்தார். அரதத்த சிவாசாரியர், உமாபதிசிவாசாரியர் முதலிய வைதிகசித்தாந்த சைவாசாரியர் சதுர்வேத தாற்பரியசங்கிரகம், பவுட்கரவிருத்தி முதலியவற்றில், வேதாகமப் பிராமாணியம் வலியுறுத்துரைத்தார். அவ்வாறெல்லாம் ஆசிரியர் சிவஞானயோகிகள் சிவஞானமாபாடியத்து உபோற்காதத்துள் எடுத்துக்காட்டித் தந்துணிபு நிலையிட்டுரைத்தார். அம்மாபாடியவுரையை அவ்வாறே ஈண்டெடுத்துக் காட்டு முகத்தால், வேதாகமங்கள் ஒற்றுமையுடைய முதனூல்களாதல் விளக்கித் திருமுறைகள் அவ்விரண்டின் சாரமான அருளோத்துக்களாதல் நிறுத்துதும்.

"வேதங்களொருவராற் செய்யப்படாது நிலைபேறுடைமையானும், ஆன்றோராற் றழுவப்படுதலானும், குற்றமின்றிப் பிரமாணமாமென்பது துணியப்படும். ஆகமங்களவ்வாறு நித்தமன்றி ஒருவராற் செய்யப்பட்டமையானும், பிரமப்பொருள் வேதமொன்றானே உணரப்படுமென்பது எல்லார்க்கும் ஒப்பமுடிந்தமையானும், அங்ஙனமாயினும் மிருதி நூல்முதலியனபோல வேதம்முதனூலாகக்கொண்டு ஆகமங்கள் செய்யப்பட்டனவெனின், அது நம்மனோர்க்குக் கொள்கையன்மையானும், அங்ஙனங் கொள்ளின், வேதப்பொருளுணர்ந்து நூல் செய்த மனுமுதலியோர்போல ஆகமஞ்செய்த இறைவனுக்கு முற்றுணர்வின்மை பெறப்படுதலானும், அவ்வாறன்றி முற்றுணர்வு இயல்

பாகவுடைய இறைவனாற் செய்யப்பட்டமையின் ஆகமங்கள் பிரமாண மெனக்கூறின், முற்றுணர்வுடைய இறைவனுண்மை துணிந்தபின்னர் அவனாற் செய்யப்பட்டமையின் ஆகமம் பிரமாணமெனத் துணியப் படும்; ஆகமம் பிரமாணமெனத் துணிந்தபின்னர் அதனால் இறைவ னுண்மை துணியப்படுமென, ஒன்றனையொன்றுபற்றுதலென்னுங் குற்றமாமாகலானும், ஆகமம் பிரமாணமென்பது தெளியப்படாதாம். அல்லதூஉம், வாசிட்டலயிங்கத்தில்,

"பாஞ்சராத்திரம் புகழ்ந்தெடுத் தொருசிலர் பகர்வார்"

என்பது முதலாகத் தந்திரவழி யொழுகுவோரை எடுத்துக்கூறி "அவர்மாமூடர்" எனவும், பாற்மபுராணத்தில் வசிட்டனுக்குந் திலீப னுக்குங் கூற்று நிகழ்வுழி,

"திராவிட தேசந் தன்னிற் சித்திர சேன னென்பான்"

என்றெடுத்துக்கொண்டு, "சித்திரசேனனென்னும் அரசன் பாசண்டர் கூற்றேபற்றி வைதிக வொழுக்கத்தைக் கைவிட்டுப் பாசுபதவழி யொழுகி நரகத்தில் வீழ்ந்தான்" எனவும், வாசிட்டலயிங்கத்தில் "சாண்டில்லியன் என்பானொருவன் தறுகண்ணனாய்ப் பிறர்மனை நயந்து வாசுதேவனைத் தீங்குநெறியானே வழிபட்டு நிரயத்தில் வீழ்ந்தான்" எனவும், சூதசங்கிதையில்,

"மொழிபாஞ்ச ராத்திரங் காபாலங் காளாமுகஞ்
சாத்தம் பவுத்த மாருகதந் தன்னிற்
கழிபாசு பதநூல் சாம்பவத்திற் றீக்கை
காதலிப்பீர் வேதியரிற் கடையர் காணீர்"

என்றற்றொடக்கத்தால் "தந்திரவழியொழுகுதல் பொய்த் தொழி லுணர்ந்து வெகுண்ட கவுதமன் சாபப்பயன்" எனவும், கூர்மபுராணத் தில் "அனைவரு மரன்றனை யரியை யண்மி" என்றெடுத்துக்கொண்டு "அறுமுனிவரிட்ட சாபவயத்தானே வேட்பித்தல் முதலியவற்றின் அதிகாரமின்மையான் விருத்தியின்றி வருந்துவோர்க்கு விருத்தியின் பொருட்டுத் தந்திரஞ் செய்யப்பட்டது" எனவும், அதனுள்,

"மோகநூ லிருவோமுஞ் செய்வோம் விடைக்கொடியாய்"

என்பதனல் ஆகமங்கள் மோகிப்பிக்கும் நூலெனவுங் கூறுதலால் ஆக மம் பிரமாணமல்லவென்பதே தெற்றென விளங்குமாகலின் அவை வீடு பேறு முதலிய மறுமைப்பயன் பயப்பிக்குமா றென்னையெனின்,—கூறு தும். வேதம் நித்தமென்பதற்குப் பிரமாண மின்மையானும், தோற் றக்கேடுகள் காணப்படுதலான் அனித்தமென்பதே துணியப்படுதலா னும், "அந்தக்ககரமேயிது" என்னுமறித்துணர்வு அந்தச் சுடரே யிதுவென்பதுபோலச் சாதியொருமைபற்றி நிகழ்வதேயாமாகலானும், அவ்வாறன்றி எழுத்துக்கள் நித்தமெனக் கொள்ளினும் அவையொன் ருேடொன்று தொடர்ப்பாடுற்று வருஞ்சொற்கள் அனித்தமேயாகலா னும், உலகத்திற்குத் தோற்ற ஒடுக்கங்களுண்மையிற் பிரவாக நித்த மென்பதும் பொருந்தாமையானும், எல்லாவுயிர்கள்மாட்டும் பேரரு ளுடைய பரமசிவனுற் செய்யப்பட்டமை பற்றியே வேதங்கட்குப் பிர மாண வுண்மை கொள்ளப்படும். அம்முறையானே சிவாகமங்களும் பிரமாணமாதல் துணியப்படும். அது "வேதமுதலுலகாயதநூலி றுதியாகிய எல்லா நெறியும் பரமசிவனுற் செய்யப்பட்டமையானும், இறுதிக்காலத்துப் பரமசிவனிடத்தொடுங்கிய வேதம் படைப்புக் காலத்து முன்போலவே தோன்றுதலானும், 'நித்தம்' என்றுபசரித் துக் கூறப்படும். ஆகலின், சிவாகமங்களை நித்தமென்பதும் இக் கருத்தே பற்றியென்க. அங்ஙனமல்லாக்கால், "வேதம் பரமசிவ னுற்செய்யப்பட்டது" என்னுஞ் சுருதிகளோடும், "அட்டாதச வித் தைக்கு முதற்கருத்தாவாகிய சூலபாணி" என்றற்ருெடக்கத்துப் புராணவசனங்களோடும், ஈண்டுக்கூறும் அனுமானவளவையோடும் முரணுமாறறிக.

ஒருவனின்னேன் வந்தேனென்புழி அவனுமவன் வாய்மொழியும் போல, முதல்வனும் முதல்வனுற் செய்யப்படும் வேதாகமங்களும் தம் முட்காரகவேதும் ஞாபகவேதுவுமாகிய வேறுபாடுடைமையின், இன் னோரன்னவை ஒன்றனையொன்று பற்றுதலென்னும் குற்றமாகா வென்க. இனி ஆன்ருேராற்றூவப்பட்டமைபற்றி வேதஞ் சிவாகம மிரண்டும் பிரமாணமெனத் துணிந்தபின்னர் அவற்ருனே அவை பரம சிவனுற் செய்யப்பட்டனவென்பது துணியப்படுமாகலானும் ஒன்றனை யொன்று பற்றுதல் ஆகாமையுமுணர்க. ஆன்ருேராற்றமுவப்படுதல் ஆகமப்பகுதியினின்ருலெனின், அற்றன்று, "துறக்கம் வேண்டியோன்

சோதிட்டோமத்தான் வேட்க" என்றற் றொடக்கத்துச் சுருதிகட்கு அவை வேட்குமாறு வகுத்துக் கூறுஞ் சுருதிகளும் அத்தன்மைய வாகிய கற்பசூத்திரங்களும் இன்றியமையாது வேண்டப்படுமாறு போல வேதத்துள் விதிக்கப்படுஞ் சிவபூசை முதலிய விதிகட்கும் அவற்றை வகுத்துக்கூறுங் காமிகம் முதலிய சிவாகமங்கள் இன்றி யமையாது வேண்டப்பட்டு நிற்றலின், அவை ஆன்றோராற் றழுவப்படு தல் ஒரு தலையாகலானென்க. இது சதுர்வேததாற்பரிய சங்கிரகத்தின் அரதத்தாசாரியர் கூறிய வாற்றானறிக. அங்ஙனமாயினுந் தீக்கைப் பேறு ஆன்றோராற் றழுவப்படாமையின், அப்பகுதியிற் பிரமாண மாமாறென்னையெனின்;—அற்றன்று: சுவேதன் உபமன்னியன் அகத் தியன் முதலியோர்க்குத் தீக்கைப்பேறு காண்டலாலென்க. உபமன்னி யன் அகத்தியன் முதலியோர்பாற் கண்ணன் இராமன் முதலியோர்க் குத் தீக்கைப்பேறு அரிவஞ்சம் பாரதம் பாற்மபுராணம் முதலியவற் றின் விரித்துக் கூறியவாறுங் காண்க. அஃதெல்லாரும் பெறுமை, எல்லாருக்கும் மலபரிபாக மின்மையால், பரமகஞ்ச சந்நியாசம்போல, அதற்குரியவதிகாரிகள் சிலரேயாகலானென்பது. அற்றேல், வாம நூல் முதலாயினவும் பரமசிவனாற் செய்யப்பட்டமையின், காமிகமுத லியவற்றோடொப்பப் பிரமாணமாதல் வேண்டப்படும் பிறவெனில்,— படாது; அவற்றுட் கூறுஞ் சுரைக்குடந்தாபித்தல் முதலியவாசாரங் கள் வேதத்துள் எடுத்தோதி விலக்கபபட்டமையின், சவுத்திராமணி யாகத்திற் சுரையேற்றல் வேதத்துள் விதிக்கப்பட்டதாயினும் ஏனை யோர்க்கே யாயவாறுபோல, அவையும் ஏனையோர்க்கே யுரியவென்பது பெறுதுமாகலின், அவையும் அவற்றிற்குரிய அதிகாரிகள் வேறுபாட் டாற் பிரமாணமாமெனக் கொள்ளப்படு மென்க. அங்ஙனமாயின், அது வேதவிதியோடு முரணுமாலோவெனின்,—அவற்றுட் கூறுங் கிரியைகட்கு வேதநெறியிற்றப்பிய மாந்தர் அதிகாரிகளெனப் பிரித்து வைத்தலான் முரணாதென்க. இது காந்தத்துட் கூறப்பட்டது. இனிப்பொருள்கள் முரணியவழி வலியவற்றால் மெலியவை கண்டிக் கப்படு மெனக்கொள்க. எல்லாநெறியும் இறைவனாற் செய்யப்பட்டமை யான் விசேடமின்மையின் அவற்றுள் ஒன்றற்கொன்று வன்மை மென்மை கூறின், இதுவே மாறுகொளக் கூறலாமாலெனின்,- அற் றன்று; அவற்றைப் பின் வழிப்படுத்து நூல்செய்தோர் தாரதம்மியத்

தானே அவற்றிற்கு வன்மை மென்மை கூறுதலமையுமாகலின், பின்னூல் செய்தார் அவ்வங்நெறியிற் கூறும் பொருள்களை அம்மொழியின் தாற்பரியமறியாது மயங்கி அவற்றோடு மாறுகொளத் தொகுத்தும் விரித்துஞ் செய்தாராகலின், அவை மென்மை யெனப்பட்டன. மாறுகோளில் கூற்றினெல்லாம் பிரமாணமேயாமென்க. இனி வேதத்தினுஞ் சிவாகமத்தினும் இந்திரன் முதலியோர் அவ்வாறு வழிப்படுத்து வேறுநூல் செய்யாது, வேதத்திற்கு வியாசர் முதலியோரும் ஆகமத்துக்குப் பிரணவர் முதலியோரும்போலச் சம்பிரதாய மாத்திரமே விளக்கினாராகலின், அவ்விரண்டினுள் வன்மை மென்மைகள் கூறுதல் பொருந்தாமையின், அவற்றுளோரோவழி மாறுகோள்போலத் தோன்றியவழி, வேதவாக்கியங்கள் தம்முள் மாறுபட்டவழிக் கருத்து வேறுபாடுபற்றிக் கூறியதெனத் தெரிந்துரைத்துக் கொள்வதுபோல, அவை முரணாதவாறு தெரிந்துரைத்துக் கொள்வதன்றி, அவை ஒன்றானொன்று மறுக்கப்படாவென்க. இவ்வாறன்றி, இன்னுமொருவாற்றான் விடுக்குமாறு: சாருவாகம் முதலிய எல்லாச்சமயமும் பரமசிவனாற் செய்யப்பட்டமையிற் பிரமாணமேயாமாயினும், அவற்றுள் முதற்கண் மிகவும் மந்தவுணர்வினராய் உலகவின்பமே பெரும்பயனெனவுந் தமக்குப் புறம்பாகியமக்கள் முதலியோரே ஆன்மாவெனவும் அபிமானஞ் செய்துழலும் அதிகாரிகளுக்குப் பரமசிவன் இரங்கித் துன்பம் முதலியவற்றோடு விரவுதலான் உலகவின்பம் பேருறுதிப்பயன் அன்றெனவும் மக்கள் முதலியோர் ஆன்மாவல்லரெனவு முணர்த்தி, அவர்களுணர்வு அவ்வளவில் நிலைபெறுதற் பொருட்டு நுட்பப்பொருளுணர்த்தப் புகிற் கொள்ளமாட்டாமையால் தூலவுடம்பே ஆன்மாவெனவும் அவ்வுடம்பு நசித்தலே பேருறுதிப் பயனெனவும் அறிவுறுத்தருளினன். பின்பு அங்ஙனம் அறிவுறுத்த நெறியே யொழுகிப் பரமசிவன் திருவருட்குரியராய் மலசத்தியிற் சிறிதுநீங்கி, உடம்பேயான்மா உடம்பு நசித்தலே பெரும்பயன் என்பவற்றின் ஐயப்பாடுதோன்றிய அதிகாரிகளுக்கு, உடம்பு முதலியன ஆன்மாவல்லவென்று மறுத்தற் பொருட்டுப் புத்தநூல் அறிவுறுத்தருளினன். இவ்வாறே மேலுஞ் சோபானமுறையான் உபதேசித்தருளியதெனமாறுபாடின்மையுணர்ந்து கொள்ளப்படும். இங்ஙனஞ் சாருவாகம் முதலிய நூல்களைச் சோபான முறையாற் கொள்ளவே, அதிகாரி தாரதம்மியத்தால் மேலுள்ள நூல்

கள் கீழுள்ள நூல்களை மறுக்குமுகத்தால் தோன்றினவாகலின், மாறு கோளில்லையென்பதூஉம், அவையும் ஒருவாற்றாற் பிரமாணமேயா மென்பதூஉம், போந்தமையுணர்க. இது தயித்திரியத்தில் அதிகாரி பேதம்பற்றி "அன்னமயகோசம் பிரமம்" என்றும், அதனை மறுத்து மேலதனிற் சூக்குமமாகிய "பிராணமயகோசம் பிரமம்" என்றும், அதற்குமேல் "மனோமயகோசம் பிரமம்" என்றும், அதற்குமேல் "விஞ்ஞானமய கோசம் பிரமம்" என்றும், அதற்குமேல் "ஆனந்த மயகோசம் பிரமம்" என்றும், ஒன்றற்கொன்று சூக்குமமா புணர்த்து தல் போலவும், கவுசிதக உபநிடதத்தில் அதிகாரிபேதத்தால் இந்திரன் தயித்தியனுக்குத் தன்னையே பிரமமாகக் கூறியதுபோலவுங் கொள்க. அங்ஙனம் புல்லையெதிரேகாட்டி ஆக்களைப் பிடிக்குமாறுபோலச் சோபான முறைமைபற்றிக் கூறியதென்பதும், அவையெல்லாம் ஒரு வாற்றாற் பிரமாணமென்பதும், சூதசங்கிதையிற் காண்க. இங்ஙனங் கூறியவாற்றானே, வேதமுஞ் சித்தாந்த சைவாகமமுமென்னும் இரண் டுமே உத்தமநூலெனவும், ஏனைச் சாருவாகமுதற் பாஞ்சராத்திரம் இறுதியாகிய நூல்களெல்லாம் இவ்விரண்டினோடு மாறுபட்டவழி மறுக்கப்படுமெனவும், அவற்றுள்ளும் வழிநூல் செய்தார் தாரதம்மியத் தாற் கீழ்க்கீழ் நூல்கள் மேன்மேல் நூல்களால் மறுக்கப்படுமெனவும், உணர்ந்து கொள்க. இனித் "தந்திரவழி யொழுகினோர் மூடர்" எனவும், "நிரயத்தில் வீழ்ந்தார்" எனவும், "அவை சாபப்பயன்" எனவும், "விருத்திப் பொருட்டு" எனவும், "மோகநூல்" எனவும், புராணங்களிற் கூறியது, வேதப்பொருளொடு மாறுகொளக் கூறும் பாசுபதம் பாஞ்சராத்திரம் முதலிய புறச்சமயங்களையேயாம்; வேதப் பொருளையே விரித்துக் கூறப்புகுந்த வேதசாரமாகிய சித்தாந்த சைவாகமங்களை அன்றெனவுணர்க. இதுவும் வாயவ்வியசங்கிதை சனற்குமாரசங்கிதை கூர்மபுராணம் மகுடாகமம் முதலியவற்றுட் கூறியவாறு. இனிப் புறச்சமயவழி ஒழுகினோரை அங்ஙனம் இழித்துக் கூறியதூஉம், அந்நெறி யொழுகுதல் பற்றியன்று; மற்றென்னெனின், அவற்றையே பொருளாகக் கொண்டு வேதநெறியை நிந்தித்தமை பற்றி யென்க. அதுவும் ஆண்டே கூறப்பட்டது. புறச்சமய நூல்கள் விருத்திப் பொருட்டுச் செய்யப்பட்டன வென்பதூஉம், உடலோம் புதற் பொருட்டென்றதன்று; விருத்தி ஒழுக்கமுமாமாகலிற் சாபத்

தால் வேதநெறியின் நீங்கினோர் ஆசரித்தற்பொருட்டு என்றவாறும். மோகநூலென்றதூஉம், மணி மந்திரம் மருந்து முதலியவற்றான் விம்மிதம்பயக்கும் நூலென்றவாறேயாம். இனி வேதமுஞ் சிவாகமமும் ஒன்றேயாயினும் இருபகுதிப்பட்டது; வேதம் மூன்று வருணத்தாருக்குஞ் சிவாகமம் நான்கு வருணத்தாருக்கும் பொதுவாதல்பற்றி யாதலாற் சிவாகமங்கள் பிரமாணமென்பது தெற்றெனவுணர்க. இங்ஙனஞ் சைவாகமங்களுக்குப் பிராமாணியம் பவுட்கரவுரையின் உமாபதிசிவாசாரியர் காட்டியவாறே காண்க. நீலகண்டபாடியத்திற் பதியதிகாணத்திற் காட்டுமாறு: "சிவாகமங்களின் ஒருசாரன பரப்பிரமங் கேவலம் நிமித்த காரணமெனக் கூறும்; அதனை மறுத்தற்கெழுந்தது இவ்வதிகரணம் என்றுரைப்பாருமுளர்; அது பொருந்தாது; யாம் வேதத்திற்குஞ் சிவாகமத்திற்கும் வேற்றுமை கண்டிலம்; சிவனாற் செய்யப்படுதலின் வேதமுஞ் சிவாகமமென வழங்கப்படுமாதலால், சிவாகமம் மூன்று வருணத்துக்கே உரித்தாயதும் நான்கு வருணத்துக்கே உரித்தாயதுமென இருவகைப்படும். அவற்றுள் முன்னையது வேதமெனவும் பின்னையது சிவாகமமெனவும் வழங்கப்பட்டன; இவ்விரண்டுஞ்செய்த கருத்தன் சிவனொருவனேயாம். இவ்வாறு சுருதியினும் புராணங்களினுஞ் சிவாகமங்களினுங் கூறப்பட்டது. பஞ்சப்பிரமம் பிரணவம் பஞ்சாக்கரம் பிரசாதம் முதலிய மந்திரங்களும் பதி பசு பாசம் முதலிய பொருள் வழக்கமும், திருநீற்றின் உத்தூளனந் திரிபுண்டரம் உருத்திராக்கந்தரித்தல் சிவலிங்கபூசை முதலிய தருமங்களும் பிறவும், வேதஞ் சிவாகமமிரண்டினும் ஒப்பக்காண்டலான், அவ்விரண்டும் பிரமாணமேயாகலானும், கருத்தா வொருவனே யாதலான் அவ்விரண்டிற்கும் பொருளொன்றேயாகலின் அவற்றுள்ளும் மாறுபாடின்மையானும், இவ்வதிகரணங் கேவலம் நிமித்தமாத்திரமே இறைவனெனக்கூறும் இரணியகருப்ப நூலாகிய யோகசாத்திரத்தை மறுத்தற் கெழுந்ததெனவே யாங்கூறுதும்" என்று இவ்வாறு நீலகண்ட ஆசாரியராற் காட்டப்பட்டது. இதனை விரித்துச் சிவாதித்தமணிதீபிகை சிவதத்துவவிவேகம் முதலிய நூலுடையார் சிவாகமங்கட்குப் பிராமாணியங் காட்டியவாறும் அந்நூல்களுட் காண்க. வேதஞ் சிவாகமமென இருபகுதிப்பட்டது, மூன்று வருணத்திற்கும் உரிமையாதலும் நான்கு வருணத்திற்கும் உரிமையாதலும் பற்றியென நீலகண்டபாடியத்திற் கூறப்பட்டது.

"வேதநூல் சைவநூலென் றிரண்டே நூல்கள்
வேறுரைக்கு நூலிவற்றின் விரிந்த நூல்க
ளாதிநூ லநாதியம லன்றருநூ லிரண்டு
மாரணநூல் பொதுசைவ மருஞ்சிறப்பு நூலா
நீதியினு லுலகர்க்குஞ் சத்திநிபா தர்க்கு
நிகழ்த்தியது நீண்மறையி னொழிபொருள்வே தாந்தத்
தீதில்பொருள் கொண்டுரைக்கு நூல்சைவம் பிறநூ
றிகழ்பூர்வஞ் சிவாகமங்கள் சித்தாந்த மாகும்"

என்றும்,

"உலகியல் வேதநூ லொழுக்க மென்பதும்
நிலவுமெய்ந் நெறிசிவ நெறிய தென்பதும்"

என்றுங் கூறுபவாகலின், அங்ஙனந் தூலாருந்ததி முறைமைபற்றிக் கூறுதலின் இருபகுதிப் பட்டதெனவே யாங்கோடும்.

இனிச் சைவரிலொருசாரார் சைவாகமங்களில், "உலக நூல், வைதிகம், அத்தியான்மிகம், அதிமார்க்கம், மாந்திரம்" என நூல்களை ஐவகைப்படுத்து, "மாந்திரமொழிந்த நான்கும் புறநூல்" என வைதிகத்தினையும் அவற்றுடன் விலக்குதலானும், "வேதாந்தத்தில் ஏகனேயான்மா" என வேதாந்தத்தைப் புறச்சமயங்களோடு எடுத்தோதி மறுத்தலானும், வேதம் பிரமாணமன்றென்பர். அது பகுத்துணர்வில்லாதார் கூற்றேயாமென்று மறுக்க. என்னை? ஆண்டு 'வைதிகம்' என்றது மீமாஞ்சைநூலும், வைசேடிகநூலும், நையாயிகநூலுமென்னும் மூன்றுமேயாமெனவும், புறச்சமயங்களோடு வைத்தெண்ணிய 'வேதாந்த' மாவது ஏகான்மவாதங் கூறும் வியாசநூலெனவும், சித்தாந்தப் பிரகாசிகையிற் சர்வான்மசம்பு சிவாசாரியர் கூறுதலான், அது வேறென்பது தெற்றெனவிளங்குமாகலின், ஆண்டு 'வேதம்' என்றதூஉம் மீமாஞ்சை நூலேயெனக்கொள்க. வேதத்துள் விதித்த கருமகாண்டத்தை ஆராய்ச்சிசெய்தலின் அதற்கும் அப்பெயராயிற்று. அங்ஙனங் கொள்ளாக்கால், வேதசாரஞ் சிவாகமமாதலாற் "சைவாசாரத்திற்குரியோன் வைதிகன்" எனவும், "வேதாந்தப்பொருளைத் தெளித்துக் கூறுவது சித்தாந்தம்" எனவும், "பிறநூல் பிறபொருள்களைக்கூறும்" எனவும், "வேதத்தோடு ஒற்றுமையுடைமை

பற்றியே சிவாகமங்கட்குப் பிரமாணமாதல் கூறும் வசனங்களோடு முரணுமாறறிக. 'பாசுபதம்' என்பது யோகப் பெயராற் சைவாகமங் கட்கும் உரூடப்பெயராற் பாசுபதாகமங்கட்கும் ஆமாறுபோல, 'வேதாந்தம்' என்பது யோகப்பெயரான் வேதத்தின் முடிபாகிய உப நிடதங்களைக் கூறும்; உரூடப்பெயரால் அவற்றை எடுத்துச்செய்த ஏகான்மவாத நூலைக் கூறும். ஆகலின், அவ்விருவேறு வகையுந் தெரிந் துணர்ந்து கொள்க.

வேதமோதுதற்கண்ணும் வைதிக ஆசாரத்தின்கண்ணும் உப நயனப் பேறுடையார்க்கன்றி அதிகாரமின்மைபோலச் சைவாகமம் ஓதுதற்கண்ணுஞ் சைவாசாரத்தின்கண்ணுஞ் சிவதீக்கைப் பேறுடை யார்க்கன்றி அதிகாரமில்லையெனக் கொள்க." இவ்வாறு சிவஞான மாபாடியத்து உரைக்கப்பட்டது.

## தமிழ்வேதம் முதலியதிருமுறைகள் வைதிகசைவ ஓத்தாமாறு விளக்கல்

இனித் தமிழ்வேதங்கள் வேதாகம முதனூலிரண்டினையும் மூல மாகக்கொண்டு அவற்றின் சாரமாய் அவதரித்தனவென்பது,

"ஆகமத்தொடு மந்திரங்க ளமைந்த சங்கத பங்கமாய்"

என்றும்,

"மந்திரமாவதுநீறு வானவர்மேலதுநீறு
சுந்தரமாவதுநீறு துதிக்கப்படுவதுநீறு
தந்திரமாவதுநீறு"

என்றும்,

"மந்திரநான்மறையாகிவானவர்
சிந்தையுணின்றவர்தம்மையாள்வன"

என்றும்,

"தோகையம்பீலிகொள்வார்தவர்க்கூறைகள்போர்த்துழல்வார்
ஆகமசெல்வனாரையலர்தூற்றுதல்காரணமா"

என்றும் வரும் ஆளுடையபிள்ளையார் திருவாக்குக்களானும்,

"சூலப்படையார்தாமேபோலுஞ்சுடர்த்திங்கட்கண்ணியுடையார்போலு
மாலைமகிழ்ந்தொருபால்வைத்தார்போலுமந்திரமுந்தந்திரமுமானார்போலும்"

எனவரும் வாகீசர் திருவாக்கானும்,

" தொண்டர்தமக்கெளியசோதியைவேதியனைத்
தூயமறைப்பொருளாநீதியைவார்கடனஞ்
சுண்டதனுக்கிறவாதென்றுமிருந்தவனை
யூழிபடைத்தவனோடொள்ளரியும்முணரா
வண்டனையண்டர்தமக்காகமநூன்மொழியுமாதியை "

எனவரும் நம்பியாரூரர் திருவாக்கானும்,

" ஆகம மாகிநின் றண்ணிப்பான் றாள்வாழ்க "

என்றும்,

" கேவேட ராகிக் கெளிறது படுத்து
மாவேட் டாகிய வாகமம் வாங்கியு
மற்றவை தம்மை மகேந்தி ரத்திருந்
துற்றவைம் முகங்க ளாற்பணித் தருளியும் "

என்றும்,

" மறையுமாய்மறையின்பொருளுமாய்வந்தென்மனத்திடைமன்னியமன்னே "

என்றும் வரும் வாதவூரடிகள் திருவாக்குக்களானும்,

" வேதநெறி தழைத்தோங்க மிகுசைவத் துறைவிளங்க "

என்றும்,

" தவம்பெருக்குஞ் சண்பையிலே தாவில்சரா சரங்களெலாஞ்
சிவம்பெருக்கும் பிள்ளையார் திருவவதா ரஞ்செய்தார் "

என்றும்,

" வேத மோடு சைவநெறி விளங்க வந்த கௌணியனார் "

என்றும்,

" மன்னுபுகழ்த் திருத்தொண்டர் குழாத்தி னோடு மறைவாழ வந்தவர்தாம் "

என்றும்,

" மறைவாழ வந்தணர்தம் வாய்மையொழுக் கம்பெருகுந்
துறைவாழச் சுற்றத்தார் தமக்கருளி "

என்றும்,

"தென்னற் குயிரோடு நீறளித்துச் செங்கமலத்
தன்ன மனையார்க்கு மமைச்சர்க்கு மன்பருளித்
தன்னுநெறி வைதிகத்தின் றூநெறியே யாக்குதலால்"

என்றும்,

"புந்தியினு லவருரைத்த பொருளின் தன்மை
பொருளன்ரும் படியன்பர் பொருந்தக் கூற
மந்தவுணர் வுடையவரை நோக்கிச் சைவ
மல்லாது மற்றொன்று மில்லை யென்றே
யந்தமில்சீர் மறைகளா கமங்க ளேனை
யகிலகலைப் பொருளுணர்ந்தா ரருளிச் செய்ய"

என்றும்,

"தூக்கின் றமிழ்விரகர் சொல்லிறந்த ஞானமறை
தேக்குந் திருவாயாற் செப்பி யருள்செய்தார்"

என்றும்,

"வந்தணைந்தமாதவத்தோர்வணங்கித்தாழ்ந்துமறைவாழ்வேசைவசிகாமணியே"

என்றும்,

"இன்னதன்மையி லிவர்சிவ நெறியினையெய்தி"

என்றும்,

"மறைக ளாய நான்குமென மலர்ந்த செஞ்சொற் றமிழ்ப்பதிகம்
நிறையுங் காத லுடனெடுத்து"

என்றும்,

"தாண்டவம் புரியுந் தம்பிரா னுரைத் தலைப்படக் கிடைத்தபின் சைவ
வாண்டகை யாருக் கடுத்தவந் நிலைமை"

என்றும் வரும் அருண்மொழித்தேவர் திருவாக்குக்களானுமறிக. எனைத் திருமுறைகளும் நிகமாகம சாரமாதல் ஆய்ந்துணர்க.

மந்திரம் - வேதம். தந்திரம் - ஆகமம்.

"......தாவில்சரா சரங்களெலாஞ்
சிவம்பெருக்கும் பிள்ளையார்........"

என்றார், தம்மை வழிபட்ட திருக்கூட்டத்தடியார் முதலியோருக்குந் திருவோத்தூர் ஆண்பனைகளுக்குஞ் சிவப்பேறருளுந்திறம் அறிவித்தற்கு.

ஆளுடையபிள்ளையார் வளர்த்தருளிய வைதிகநெறி, பூர்வமீமாஞ்சை, சாங்கியம், நியாயம், வைசேடிகம், பாதஞ்சலம், உத்தரமீமாஞ்சை யென்று இத்திறத்து வைதிக சமயங்கட்கு மேலாய்அவைதமக்கு அணு கொணுத நுண்பொருளுடைத்தாய்த் தூய்மையுற்று "வைதிகசைவம்" எனநிற்கும் மாட்சியுணர்த்துவார், "துன்னுநெறி வைதிகத்தின்றாநெறி யேயாக்குதலான்" என்றவ்வாறு எடுத்தோதினுரென்பது. அறிவினுன் மிக்க அறுவகைச் சமயத்தோர்க்கும் வைதிகத்தின் தூநெறி கடைப் பிடித்துச் சிவபரத்துவந் தேறினேர்க்கும் வேறுதிருவருளினுல் வீடு பெற முயன்றோர்க்குந் திருவைந்தெழுத்து உபதேசப் பிரமஞானம் பிரசாதித்தருளி வைதிகசைவ ஆசிரியத்தலைவராய் நின்றாரென்பது விளக்குவார், ஆளுடையபிள்ளையாரை "மறைவாழ்வே சைவசிகா மணியே" என்று அங்ஙனம் போற்றிசைத்தார். பிரமஞானமெனினும் சிவஞானமெனினும் ஒக்கும்.

"ஞானமெய்ந் நெறிதான் யார்க்கு நமச்சிவா யச்சொ லாமென்
றூனமீர் நமச்சி வாயத் திருப்பதி கத்தை யங்கண்
வானமு நிலனுங் கேட்க வருள்செய்திம் மணத்தின் வந்தோ
ரீனமாம் பிறவிதீர யாவரும் புகுக வென்ன"

"ஆறுவகைச் சமயத்தி லருந்தவரு மடியவருங்
கூறுமறை முனிவர்களுங் கும்பிடவந் தணைந்தாரும்
வேறுதிரு வருளினுல் வீடுபெற வந்தாரு
மீறில்பெருஞ் சோதியினு ளெல்லாரும் புக்கதற்பின்"

"காதலியைக் கைப்பற்றிக் கொண்டுவலஞ் செய்தருளித்
தீதகற்ற வந்தருளுந் திருஞான சம்பந்தர்
நாதனெழில் வளர்சோதி நண்ணியத னுட்புகுவார்
போதநிலை முடிந்தவழி புக்கொன்றி யுடனுனர்"

என்னும் அருண்மொழித்தேவர் திருவாக்குக்களால் ஆளுடையபிள்ளை யார்க்குத் திருவஞ்செழுத்தின் வாச்சியமான பிரமஞான உபதேச ஆசிரியத்தலைமை அத்திறத்தார்கண்ணெல்லாம் உண்மை கடைப் பிடித்து உணர்ந்துகொள்க. ஆளுடைய பிள்ளையார் பரஞானப் பாலமு துண்டு பரம ஞானுசாரியராயினேர்;

"ஆறுவகைச் சமயத்தி லருந்தவரு மடியவருங்
கூறுமறை முனிவர்"

முதலாயினேரும் மலபரிபாக வேறுபாட்டிற்கேற்பச் சிவ சரியை கிரியாயோக ஞானநெறிநின்று வீடுபேறு காதலித்து அவர் தொண்டு பேணினோராதலின், அவரருளிய திருவஞ்செழுத்து அருமறைத் திருப் பதிக ஞானவுபதேசம் ஆண்டுறினும் மற்றவரொப்பப் பரமுத்தியான சிவசாயுச்சியம் ஈறில் பெருஞ்சோதியுள் புக்கெய்தினரென்பது யாங் ஙனம் இயையுமெனின்,—நன்று வினவினாய். அத்திருக்கூட்டத்தாரெல் லாம் ஈறில் பெருஞ் சோதியுட்புக்கு வீடுபேறுகூடினரேனும் ஆளுடைய பிள்ளையாரொப்பப் போதநிலை முடிந்தவழிப் புக்கொன்றி யுடனாதலாம் பரசிவசாயுச்சியந் தலைக்கூடின ரல்லரென்பதே சேக்கிழார் முனிவர்க் குக் கருத்தாம். அது திருக்கூட்டத்தடியரெய்திய வீடுபேற்றினை,

"சீர்பெருகு நீலநக்கர் திருமுருகர் முதற்றொண்டர்
ஏர்கெழுவு சிவபாத விருதயர்நம் பாண்டார்சீர்
ஆர்திருமெய்ப் பெரும்பாணர் மற்றெனையோ ரணைந்துளோர்
பார்நிலவு கிளைசூழப் பன்னிகளோ டுடன்புக்கார்"

"அணிமுத்தின் சிவிகைமுத லணிதாங்கிச் சென்றார்கண்
மணிமுத்த மாலைபுனை மடவார்மங் கலம்பெருகும்
பணிமுற்ற மெடுத்தார்கள் பரிசனங்கள் வினைப்பாசந்
துணிவித்த வுணர்வினராய்த் தொழுதுடன்புக் கொடுங்கினார்"

"ஆறுவகைச் சமயத்தி லருந்தவரு மடியவருங்
கூறுமறை முனிவர்களுங் கும்பிடவந் தணைந்தாரும்
வேறுதிரு வருளினால் வீடுபெற வந்தாரு
மீறில்பெருஞ் சோதியினு ளெல்லாரும் புக்கதற்பின்"

என்றங்ஙனம் பொதுவாகவும், ஆளுடைய பிள்ளையார் தலைக்கூடிய வீடுபேற்றினை,

"தீதகற்ற வந்தருளுந் திருஞான சம்பந்தர்
நாதனெழில் வளர்சோதி நண்ணியத னுட்புகுவார்
போதநிலை முடிந்தவழி புக்கொன்றி யுடனானார்"

என்றிங்ஙனஞ் சிறப்பாகவும் எடுத்துத் திருப்பாட்டருளிச் செய்த வாற்றா னுணர்க. சேரர்பெருமான் முதலியோர் நம்பியாரூரரோடு

திருக்கயிலை தலைக்கூடினும் மற்றவர் பதப்பேறுறாது தத்தம் பரிபாக வறிவுச் செய்திக்கேற்ற பதப்பேறுகள் ஆண்டுற்றதுபற்றியும் மற்றிது தெளிந்துகொள்க. வாகீசர் நம்பியாரூரர் வாதவூரடிகளும் ஆளுடைய பிள்ளையா ரொப்பப் போதநிலை முடிந்தவழிப் புக்கொன்றியுடனாதலாகும் பரமுத்தியெனப்படுஞ் சிவசாயுச்சிய வீடுபேறு தலைக்கூடினாரென்பது, அவர் பரஞானவொழுக்கங் கூறும் புராணவரலாறுகள் பற்றி யுணர்ந்து கொள்க. இப்பரம சிவசாயுச்சிய வீடுபேறு தலைக்கூடிய நாயன்மார் பிறருமுளர்.

அற்றேலஃதங்ஙனமாக; நம்பியாரூரர் சிவபிரானால் விடுத்தருளப் பட்ட வெள்ளையானை யூர்ந்து அரியயன் இந்திரன் முதலிய தேவருங் கணங்களும் எதிர்கொண்டு புடைசூழ்ந்து ஏத்தெடுப்பத் திருமேனியோடே திருக்கயிலைசென்றெய்தி அணுக்கத்தொண்டராய்ப் பண்டு போல் அமர்ந்தருளினாரென்று பெரியபுராணம் முதலியன ஓதுதலின், அவர் ஏனைச்சமயாசாரியர் மூவரோடொப்பப் பரசிவசாயுச்சிய வீடு பேறு தலைக்கூடினாரென்றல் பொருந்துமா றென்னையெனின், நன்று வினாயினாய். நம்பியாரூரர் இறைவர்பணி தலைமேற்கொண்டு திருக்கயிலையின் நீங்கித் தென்னாட்டிற் றிருவவதாரஞ் செய்து திருத்தொண்டத்தொகை தந்து வைதிகசைவம் வளர்த்து இன்புற்று வைகி அவ்விறைவர் அருளுப்பாட்டானே கேட்டதுணையானே திருக்கயிலையைத் தலைக்கூடிப் பண்டுபோல் அணுக்கத்தொண்டராய் ஆண்டுமேவினார். ஆயினும், ஆண்டிறைவர் திருவருளாற் போதநிலை முடிந்தவழி அவர் சிவ பரிபூரணம் புக்கொன்றியுடனாதல் ஒருதலையாகலின், அவரும் பரசிவ சாயுச்சிய வீடுபேறு தலைக்கூடினாரென்று துணிந்துரைத்தாம். ஆகலின், அது பொருத்தமேயாமென்க. இனி நம்பியாரூரர் திருமேனி வேறு செய்தே திருக்கயிலைத் தலைக்கூடினார். அது,

> "தானெனை முன்படைத்தா னதறிந்துதன் பொன்னடிக்கே
> நானென பாடலந்தோ நாயினேனைப் பொருட்படுத்து
> வானெனை வந்தெதிர் கொள்ளமத்த யானையருள்புரிந்து
> வூனுயிர் வேறசெய்தா னொடித் தான்மலையுத்தமனே"

என வரும் அவர் தேவார ஒத்தானறிக. நொடித்தல் - அழித்தல். அது "நோக்காது நோக்கி நொடித்து" என்பதனானறிக.

## முக்குணவசத்தரான தமிழ்ப்புலவர் பாக்கள் திருவருட்பாவுந் திருமுறையும் ஆகாமை நிரூபித்தல்

இனிச் சமயாசாரியர் முதலியோர் அருளிச்செய்த திருவருட் பாக்களும் மற்றைக் கலைப்புலவர் பாட்டுக்களுஞ் சொல்வடிவு பாவடிவு களால் தம்முள் ஒருபுடை ஒப்பனபோன்று காணப்படினும், அத்திரு வாக்குக்கள் திரோதானம் நீங்கிய அருள்நாதவொலியும் இவை மாயா நாத ஒலியுமாமாகலின், சிறிதுந் தம்முள் ஒப்புப்பெறு என்றுணர்க. இது மெய்யுணர்ந்த ஞானிகளுங் கையறியாமாக்களுந் தம்முள் வடி வான் ஒரோவழி யொப்பினும் முறையே உண்ணின்ற அருளறிவும் பிராகிருதவுணர்வும் பற்றித் தம்முட் சிறிதும் ஒவ்வாமை போலவும், இயற்கை மாணிக்கமுஞ் செயற்கைச் செங்கல்லும் வடிவுநிறம் ஒருபுடை யொப்பினும் எரிசுடர்க் குணமுடைமையும் அக்குணமின்மையும் பற் றித் தம்முட் சிறிதும் ஒவ்வாமை போலவுங் காண்க.

இனிப் புல்லறிவாளர் சிலர் முக்குண வசத்தரான இக்காலத் தமிழ்ப்புலவரை "அருட்பிரகாச வள்ளலார்" என்றும், "அஞ்சாஞ் சமயகுரவர்" என்றும், அவர் பாட்டுக்களைத் "திருவருட்பாக்கள்" என்றும், அப்பாட்டுக்கள் தொகுத்த புத்தகத்தினைத் "திருமுறை" என்றும், தமக்கு வேண்டியவாறெல்லாம் பிதற்றித் திருமுறை வரம் பழித்துக் கொள்வாய்நிரயத்திற்கு ஆளாவர்.

"செயற்கரிய செய்வார் பெரியர் சிறியர்
செயற்கரிய செய்கலா தார்"

"பெருமைக்கு மேனைச் சிறுமைக்குந் தத்தங்
கருமமே கட்டளைக் கல்"

எனத் தெய்வப்புலமைத் திருவள்ளுவ நாயனர் கட்டளை தருதலின்,

"காழிநகர்ச் சிவபாத விதயர் தந்த
கவுணியர்கோ னமுதுமையாள் கருதி யூட்டு
மேழிசையி னமுதுண்டு தாளம் வாங்கி
யிலங்கியநித் திலச்சிவிகை யிசைய வேறி
வாழுமுய லகனகற்றிப் பந்த ரேய்ந்து
வளர்கிழிபெற் றரவின்விட மருகற் றீர்த்து
வீழிநகர்க் காசெய்தி மறைக்கதவம் பிணித்து
மீனவன்மே னியின்வெப்பு விடுவித் தாரே"

" ஆரெரியிட் டெடுத்தவே டவைமுன் னேற்றி
யாற்றிலிடு மேடெதிர்போ யணைய வேற்றி
யோரமண ரொழியாமே கழுவி லேற்றி
யோதுதிருப் பதிகத்தா லோட மேற்றிக்
காருதவு மிடிபுத்தன் றலையி லேற்றிக்
காயாத பனையின்முது கனிக ளேற்றி
யீரமிலா வங்கமுயி ரெய்த வேற்றி
யிலங்குபெரு மணத்தரனை யெய்தி னாரே "

" போற்றுதிரு வாமூரில் வேளாண் டொன்மைப்
பொருவில்கொறுக் கையரதிபர் புகழ னார்பான்
மாற்றருமன் பினிற்றிலக வதியா மாது
வந்துதித்த பின்புமரு ணீக்கி யாருந்
தோற்றியமண் சமயமுழு துயர நீங்கத்
துணைவரு டரவந்த சூலை நோயாற்
பாற்றருநீ ளிடரெய்திப் பாடலிபுத் திரத்திற்
பாழியொழித் தானதிகைப் பதியில் வந்தார் "

" வந்துதமக் கையாருளா னீறு சாத்தி
வண்டமிழா னேய்தீர்ந்து வாக்கின் மன்னாய்
வெந்தபொடி விடம்வேழம் வேலை நீந்தி
வியன்சூலங் கொடியிடபம் விளங்கச் சாத்தி
யந்தமிலப் பூதிமக னரவு மாற்றி
யருட்காசு பெற்றுமறை யடைப்பு நீக்கிப்
புந்திமகிழ்ந் தையாற்றிற் கயிலை கண்டு
பூம்புகலூ ரரன்பாதம் பொருந்தி னாரே "

" தண்கயிலை யதுநீங்கி நாவ லூர்வாழ்
சைவனார் சடையனார் தனய னாராய்
மண்புகழ வருட்டுறையா னோலை காட்டி
மணம்விலக்க வன்றொண்டா யதிகை சேர்ந்து
நண்பினுட னருள்புரிய வாரூர் மேவி
நலங்கிளரும் பரவைதோ ணயந்து வைகித்
திண்குலவும் விறன்மிண்டர் திறல்கண் டேத்துந்
திருத்தொண்டத் தொகையருளாற் செப்பி னாரே "

" செப்பலருங் குண்டையூர் நெல்லலழைத்துத்
திருப்புகலூர்ச் செங்கல்செழும் பொன்னுச் செய்து
தப்பின்முதுகுன்றர்தரும் பொருளாற் றிட்டுத்
தடத்தெடுத்துச் சங்கிலிதோள் சார்ந்து நாத
னெப்பிறனித் தூதுவந்தா றூடு கீறி
யுறமுதலை சிறுமதலை யுமிழ நல்கி
மெய்ப்பெரிய களிறேறி யருளாற் சேர
வேந்தருடன் வடகயிலை மேவி னாரே"

" வைகை கரைகடக்க மாவேறிச் சோதிவரத்
தைய லொருமூங்கை தான்பேசக்—கையர்தாம்
ஏத வுரை தறக்க வீசர்தந் நூலெழுத
வாதபுரீ சர்செய்தார் மாண்பு"

என்றினைய செயற்கருந் தெய்வச் செயல்களாற் சிவபரத்துவம் நிலையிட்ட உண்மைநாயன்மார் திருவாக்குக்களே திருவருட்பாக்களாமென்க. இவ்வருளறிவாற்றல் சிறிதுமெய்தப்பெறாது அவை யெய்தப்பெற்றுடையவர்போல அபிநயித்துக் கைதவப் பழிபாவச்செய்திகள் அஞ்சாதுபுரிந்து சிறுமைக்கு இலக்கான கயமைப் புலவர் பாட்டுக்கள் அருட்பாப் போலியேயாமென்க. இவர் கைதவப் பழிபாவ வரலாறு போலியருட்பா மறுப்பானும்,

" வெள்ளைமா நதியின் மாடே விளங்கவோ ரூர்கண் டேழை
யுள்ளுயிர் துறந்தோர் யாக்கை யூங்குறப் புதைப்பித் திட்டுக்
கொள்ளையா மந்தர்க் கூட்டி யுயிர்ப்பிப்ப லெனப்பொய் கூறி
வெள்ளிடி யொடுநோ யுண்டு வீந்து"

ஒழிந்த பரிபவக் காட்சியானும், நன்று உணரப்படுமென்க. இவர் அருட்பெற்றியேயன்றிக் கலைப்புலமை தானும் நிரம்பினரல்ல ரென்பதற்கு, இவரியற்றிய பாட்டுரைகளிலுள்ள சொல்வழுவும் பொருள் வழுவுமே உறுகரியா மென்க. அவ்வழுக்கள் பலவாம். அவற்றுள் முன்முறை வழுக்களிற் சில, தாலிபுலாக நியாயத்தாற் போலியருட்பா மறுப்பிற் காட்டப்பட்டன. பின்முறை வழுக்களுள் ஒரு சிலவற்றை, அந்நியாயமே பற்றிப் "போலியருட்பா வழுத்திரட்டு" எனப் பெயர் தந்து வேறெடுத்துக் காட்டுதும். இன்னும், தமிழ்வேதங்கள் வேதாகம புராண இதிகாசம் முதலிய வடகலைகள் பற்றியும், அகத்தியந்

தொல்காப்பியம் களவியல் முதலிய தென்கலைகள் பற்றியும், திருவருட்கண்ணால் ஆய்ந்தறியற்பாலன. தமிழ்ச்சங்கச் செய்யுட்களெல்லாம் அகத்தியந் தொல்காப்பியம் முதலியன பற்றிப் பெரும்பான்மையான் ஆராய்ந்து அறியற்பாலன. ஆகலின், சங்கச்செய்யுட்கள் சொன்மாட்சியில் தமிழ்வேதங்களோடு ஓரோவழி யொப்புறினும், பொருண்மாட்சியின் ஒப்புப்பெறா என்பதுணர்ந்துகொள்க. இனித் தெய்வச் சங்கப்புலவர் செய்யுட்களே தமிழ்வேத ஒப்புமை பெறாவெனின், முக்குண வசப்பட்டுழன்ற இக்காலைச் சிற்றறிவுத் தமிழ்ப் புலவர் பாட்டுக்கள் மற்றத் தமிழ்வேதம் முதலியவற்றோடு ஒக்குந் திருவருட்பாக்களாமென்று மதமானம் மேற்கொண்டு கலாய்த்தல், புல்லறிவுப் பெற்றியேயாமென்று ஒருதலையான் அறிந்துகொள்க. ஈண்டுச் சங்கச்செய்யுட்க ளென்றவற்றுள் திருமுறைக்கேற்ற பிரபந்தங்கள் ஒழித்து ஒழிந்தனவே கொள்க. அதற்குக் காரணம் இலக்கண மரபியலுட் கூறினும்; கடைப்பிடிக்க.

### ஆரியவேதமும் தமிழ்வேதமும் தம்முள் ஒத்த கருத்துடையன என்பது உணர்த்துதல்

ஆரியநான்மறை உபநிடதங்களும் தமிழ்வேதம் முதலிய திருமுறைகளும் மொழியான் வேறுபாடுறினும், பொருளான் ஒற்றுமையுடைய சுருதிகளாம். அது,

> "தேவர் குறளுந் திருநான் மறைமுடிவு
> மூவர் தமிழு முனிமொழியுங்-கோவை
> திருவா சகமுந் திருமூலர் சொல்லு
> மொருவா சகமென் றுணர்"

என்னும் ஔவை திருவாக்கானுணர்க. தேவர்குறள் - திருவள்ளுவ நாயனார் அருளிச்செய்த உத்தரவேதம். திருநான்மறைமுடிவு - உபநிடதம். திருநான்மறையும் முடிவுமென உம்மைத் தொகையாகக் கொண்டு உரைத்தலுமொன்று. மூவர்தமிழ் - ஆளுடையபிள்ளையார் முதலிய சமயாசாரியர் மூவரும் அருளிச்செய்த தேவார ஒத்துக்கள். முனிமொழியுங் கோவை திருவாசகம் - வாதவூர் முனிவராகிய சமயாசாரியர் அருளிச்செய்த திருக்கோவை திருவாசக ஒத்துக்கள். திருமூலர் சொல் - திருமூலநாயனார் அருளிச்செய்த திருமந்திர ஒத்து.

வாதவூரடிகள் முற்றத்துறந்து முழுதுணர்ந்த அந்தணர் சிகாமணியாத லின், முனியென்றெடுத்து ஓதப்பட்டார். பேராசிரியரும் "திருவாத வூர்மகிழ் செழுமறை முனிவர்" என்று அங்ஙனம் வழங்கியது காண்க. ஆளுடையபிள்ளையார் வாகீசர் முதலியோரும் "பிரமாபுரத்து மறை ஞானஞானமுனிவன்" "திருநாவுக்கரசு வளர்திருத்தொண்டி னெறிவாழ-வருஞானத் தவமுனிவர்" என்றங்ஙனம் வழங்கப்படுமாறு உணர்க. மொழியுமென்பது முன்னும் பின்னுங்கூட்டியுரைக்க நின்ற மையின் நடுநிலை விளக்கு. இச்செம்பொருள் காணமாட்டாதார், முனி மொழி - வியாசசூத்திரமென்று, ஓர்முறையுமின்றி யுரைத்தார். முனிமொழி வியாச சூத்திரமென்று அங்ஙனமுரைத்தாரை, அப் பொருள் செம்பொருள் இலக்கணைப்பொருள் குறிப்புப்பொருளென் னும் மூன்றனுள் யாதெனக் கடாயினர்க்கு, அது செம்பொருளென்றல் பொருந்தாது. என்னை? வழக்கின் கண்ணுதல் செய்யுட் கண்ணுதல் நிகண்டுநூல்களினுதல் முனி - வியாசமுனிவரை யுணர்த்துதற்கும், மொழி-அவர் சூத்திரத்தை யுணர்த்துதற்கும், பிரயோகம் இன்மையா னென்க. இனி இலக்கணைப் பொருளென்றலும் பொருந்தாது. என்னை? கங்கையின்கண் வேடச்சேரி யென்புழிக் கங்கையென்னுஞ் சொற்குப் பொருளாகிய வெள்ளநீர் வேடச்சேரிக்கிடனுதல் செல்லா மையின், ஆண்டுக் கரையென்று இலக்கணைப்பொருள் கோடல் வேண் டிற்று. முனி மொழியென்பன, பகையின்றி யொன்றனையொன்று அவாவியுந் தகுதியுற்றும் அண்மைகொண்டும் நிற்றலின், அவற்றுள் ஒன்றனை இயற்பெயராக வைத்து மற்றொன்றனை இலக்கணைப் பொருள் செய்தல் வேண்டற்பாற்றன்றாதலானென்க. இனிச் சொன் மாத்திரையானன்றிச் சொல்லுவான் குறிப்பொடு படுத்துணரப் படுவதாகிய குறிப்புப்பொருள் என்றலும் பொருந்தாது. என்னை? ஆண்டு ஒளவைகருத்து வேறுதல் காட்டினுமாகலானும், வியாசமுனி வரையும் அவர் சூத்திரத்தினையுங் குறிப்பான் விளக்குதற்குரிய சொற் றொடர் ஆண்டின்மையானுமென்க. "வியாசநூல் ஏகான்மவாதம் நுத லுவது" என்று சித்தாந்தப் பிரகாசிகையினுஞ் சிவஞானமாபாடியத் தும் முறையே சர்வான்மசம்பு சிவாசாரியரும் ஆசிரியர் சிவஞான யோகிகளுங் கூறுதலின் அதனை அவற்றோடு உடனெண்ணி ஒரு வாசகமென்றல் பொருந்தாமையும் உணர்க.

தமிழ்வேதம் முதலிய திருமுறைகள் நுதலிய பரம்பொருள் பரமசிவன்

தமிழ்வேதம் முதலிய திருமுறைகள் நுதலிய பரம்பொருள், அயன் அரி அரன் என்னும் மூவரையுந் தோற்றுவித்து நடத்துந் துரிய முழுமுதற் கடவுளாகிய பரமசிவனும். அது,

"தேவராயுமசுரராயுஞ்சித்தர்செழுமறைசேர்
நாவராயுநண்ணுபாரும்விண்ணெரிகானீரு
மேவராயவிரைமலரோன்செங்கண்மாலீசனென்னு
மூவராயமுதலொருவன்மேயதிமுதுகுன்றே"

"வரியாயமலரானும்வையந்தன்னை
யுரிதாயவளந்தானுமுள்ளுதற்கங்
கரியானுமரிதாயகள்ளின்மேயான்
பெரியானென்றறிவார்கள்பேசுவாரே"

"மாவையுரித்ததள்கொண்டங்கமணிந்தவனை
வஞ்சர்மனத்திறையுநெஞ்சணுகாதவனை
மூவருருத்தனதாமூலமுதற்கருவை"

"படைத்தளித்தழிப்பமும்மூர்த்திகளாயினை"

"தேவர்கோவறியாததேவதேவன்
செழும்பொழில்கள்பயந்துகாத்தழிக்குமற்றை
மூவர்கோனாய்நின்றமுதல்வன்"

"மூந்துநடுவுமுடிவுமாகியமூவரறியாச்
சிந்துரச்சேவடியானை"

"முந்தியமுதனடுவிறுதியுமானாய்
மூவருமறிகிலர்யாவர்மற்றறிவார்"

என்றற் றொடக்கத்தான் வருந் தேவார திருவாசகச் சுருதிகளா னறிக. இவ்வேறுபாடுணராது மகாருத்திரனாகிய பரமசிவனைக் குண ருத்திரனாக வைத்தெண்ணுவோரை நோக்கி,

"நம்மவரவரே-மூவரென்றேயெம்பிரானொடு
மெண்ணிவிண்ணாண்டுமண்மேற்
றேவரென்றேயிறுமாந்தென்னபாவந்திரிதவரே"

என வாதவூரடிகள் இரங்கிக் கூறியதும் உணர்க.

"தேவரி னொருவ னென்பர் திருவுருச் சிவனைத் தேவர்
மூவராய் நின்ற தோரார்"

என்னுஞ் சிவஞானசித்தியும் அது. இதுவே சுருதி மிருதி புராண இதிகாசங்கட்கெல்லாம் கருத்தென்பது, சிவதத்துவ விவேக நூலுடையார் "குணாதீதன்" என்னுஞ் சுலோகத்தில் தடைவிடைகளான் விளங்க விரித்துக் காட்டியவாற்றானறிக.

### தமிழ்வேதம் முதலிய திருமுறைகள் ஓதுதற்குரிய அதிகாரிகள்

உபநயனப் பேறுடைய துவிசர் மூவரும், சிவதீக்கைப் பேறுடைய சதுர்த்தரான வேளாளரும், மற்றைச் சங்கர குலத்தருள் சிவதீக்கைப் பேறுடைய அநுலோமர் முதலிய நன்மக்களும், தமிழ் வேதம் முதலிய திருமுறைகள் ஓதுதற்கு அதிகாரிகளாவர். மற்றிவர் சுத்தியுடைய தத்தம் மாளிகைத் தலங்களினும், சிவாலய மடாலய வித்தியாலயங்களினும், ஸ்நானனுட்டான சீலர்களாய்த் திருமுறைகளைப் பீடத்திலேற்றி ஆராதித்து அவ்வவற்றிற்குரிய இசைமுறை பற்றி அன்பான் ஓதக்கடவர். இவ்வாறன்றி ஓதுவார் அவ்வோதற் பயன் எய்தப்பெறுமை மேலும் அக்குற்றப் பயனுந் தப்பாது எய்துவர். மதுமாமிசம் உண்போர் திருமுறைகளை ஓதிடுவரேல் கடுநிரயத்தில் வீழ்ந்து பெருந்துயருழப்பரென்று உண்மைநூல் ஓதும். இனிச் சமயாசாரியர் முதலிய நாயன்மார் அருளிச்செய்த பன்னிரண்டு திருமுறைகளல்லாத தமிழ்ப்புலவர் பாக்களை மற்றவைகளோடு விராய் ஓதுதல், அவற்றோடு அவைதம்மை ஒப்பித்த உய்தியில் பெருங்குற்றமாம். அது,

"ஒப்பிலி வனாதி முத்த னோதிய வேத மாதிக்
கொப்புயர் வுரைப்பார் நிந்தை யுரைப்பவ ருன்னு வாரும்
வெப்பெரி நிரயந் தன்னுள் வீழ்ந்துவெந் துருகி வீயா
ரெப்பொழு தேற வாமென் றிளைத்திளைத் தேங்கு வாரே"

என்னுஞ் சிவதருமோத்தரத்தினாலறிக.

ஆதிசத்தத்தானே பரமசிவன் திருவருள் கைவந்தி கிடைத்த உண்மை நாயன்மார் திருவருள் நூல்களுந் தழுவப்படு மென்க.

### தமிழ்வேதம் முதலிய திருமுறைகள் பரார்த்த ஆன்மார்த்த மந்திர ஒத்தாயது அறிவுறுத்தல்

தமிழ்வேதம் முதலிய திருமுறைகள் திருவருட் சுருதிகளாதல் நோக்கி, அவை அவதரித்த ஞான்றே மெய்யுணர்வுடைய ஆன்றோர் அவை தம்மைப் பரார்த்த ஆன்மார்த்த சிவாராதனைக்குரிய மந்திர ஒத்தாக விதித்தருளி, அவ்வாறு வழங்கிவர ஆணை தந்தருளினர். அவர் அதுவொன்றோ, அத்தமிழ்வேதம் முதலிய திருமுறைகளை அருளிச்செய்த சமயாசாரியர் திருவுருக்களை ஏனைநாயன்மார் திருவுருக்களோடு திருக்கோயிலான சிதம்பரந் திருவாரூர் திருவேகம்பந் திருவாலவாய் முதலிய சிவாலயமெங்குந் தாபித்து மற்றவர்க்கு நித்திய நைமித்திக ஆராதனை விதியுள் இயற்றிவரவும் ஆணை தந்தருளினர். இனி ஆரியவேதாகமபுராணம் முதலிய பாராயணமேய்தினும், தேவாரந் திருவாசகந் திருக்கோவை யென்னுந் தமிழ்வேத பாராயணமும் மற்றைத் திருமுறைப் பாராயணமும் எய்திடப் பெறாத சிவாலயம், மடாலயம், வித்தியாலயம், மாளிகைகள் திருவருள் விளக்கம் இக்கலியுகத்தில் அத்தனை வாய்ப்பப் பொருந்தாவாம். தமிழ் வேதம் அப்பெற்றியவாம் அருட்சுருதிகளாதல் நோக்கியன்றோ,

"சொற்கோவுந் தோணிபுரத் தோன்றலு மெஞ்சுந்தரனுஞ்
சிற்கோல வாதவூர்த் தேசிகனு - முற்கோலி
வந்திலரே னீறெங்கே மாமறைநூ லெங்கே
யெந்தைபிரா னஞ்செழுத்தெங் கே"

என்று ஆன்றோரெடுத்து அங்ஙனம் ஓதுவராயிற்றென்பது.

### தமிழ்வேதம் "திருச்சிற்றம்பலம்" எழுவாய் இறுவாயாக ஓதுமுறை தெரித்தல்

தமிழ்வேதம் முதலிய திருமுறைகள் "திருச்சிற்றம்பலம்" எழுவாயாகவும் இறுவாயாகவும் ஓதற்பாலன. இம்முறை தமிழ்வேத ஆசாரியர்களால் தமிழ்வேதம் அருளிச்செய்த பொழுதே நிறுத்தப் பட்டது. தமிழ்வேதந் தந்தருளிய சமயாசாரியர் "திருச்சிற்றம்பலம்" எழுவாயிறுவாயாக அங்ஙனந் தமிழ்வேதமோத ஆணை நிறுத்தி யருளிய தென்னை யெனின்,—"திருச்சிற்றம்பலம்" பிரணவ உறையுளாதலின், அஃது எழுவாய் இறுவாயாகத் தமிழ்வேதம் ஓதிடச் சமயாசாரியர்

அங்ஙனம் ஆணை நிறுத்தியருளினர் என்றுணர்க. "திருச்சிற்றம்பலம்" பிரணவ உறையுளாமாறு யாங்ஙனமெனின்,—கூறுதும். இந்தச் சரீரம் பிரமபுரமாம். பிரமம் - பரமான்மா. புரம், சரீரம், புற்கலமென்பன ஒரு பொருட்கிளவி. மற்றிந்தச் சரீரஞ் சீவான்ம வாசக்கிரகமாயி னும், அச்சீவான்மாவிற்கு இதன்கண் அறிவு இச்சை தொழில் வியா பாரம் அந்தரியாமியான பரமான்மாவை இன்றியமையாமையின், அம் முறைபற்றிப் பிரமபுரமென்று அவ்வாறு உபசரிக்கப்பட்டதென்று உணர்க. இந்தப்புரத்தினுள் தகரபுண்டரீகமுளது. தகர புண்ட ரீகமெனினும், இருதய கமலமெனினும் ஒக்கும். இத்தகரபுண்டரீகத் தில் அம்பரமுளது. அம்பரமெனினும், ஆகாயமெனினும், வெளி யெனினும் ஒக்கும். இவ்வம்பரஞ் சித்தாகலின், சிதம்பரமெனப் படும். இவ்வாறே விராட்புருட சரீரமான பிரமாண்டமும் பிரமபுர மாம். இதன் கண்ணுந் தகரபுண்டரீகமுளது. இது விராட்புருட இருதயகமலமாம். இக்கமலம் நாளம் முதலாக மேல்நோக்கித் தோன்றும் உலகத்துக் கமலம் போலாது பீசமுதலாகக் கீழ்நோக்கித் தோன்றியதோர் திப்பிய கமலமெனக் கொள்க. இது முன்னை இருதய கமலத்துக்குமாம். இவ்வாறு சாந்தோக்கியத்திற் கூறப்பட்டது.

இனித் தகரவித்தை பரமான்மாவான சிவபரம்பொருளாமாறும், அதன் இயல்பும், அதனையுபாசிக்குஞ் சீவான்மாவின் இயல்பும், உபாசிக் கும் முறையும், அவ்வுபாசனையானெய்தும் வீடுபேறும், கைவல்லியம் முதலிய உபநிடதங்களிற் பொதுவாற்ருன் எடுத்தோதப்படும். மற்றிப் பிண்டவண்ட இருதய புண்டரீகம் முப்பத்தாறெனப்படும் மாயா தத் துவங்களாமாறும், இத்தத்துவ கமலபீடத்தினை வியாபித்து வித்தியா தேகம் மன்னிவிளங்கும் பரமசிவத்தினைச் சீவான்மாக் கண்டு வழி படுமாறும், அவ்வழிபாட்டானெய்தும் உண்மை ஞானத்தினல் துவித பாவனையைக் கைவிட்டுச் சிவோகமென அத்துவிதபாவனை செய்யு மாறும், அவ்வத்துவித ஞானபாவனையாற் சிவபரம்பொருளைத் தன் னுட்கண்டு முழுதும் வியாபகமாய் நின்றறியும் முற்றுணர்வுடையனுய்ப் பொருளுண்மை யுணர்ந்து மலவாசனை நீங்கிக் கேவலமாய் நின்று முடிவு காண்கில்லாப் பேரின்பம் பெறுமாறும், சைவாகமங்களிற் சிறப் பாற்ருன் எடுத்தோதப்படும். இந்தத் தகரபுண்டரீக புரமான சிதம் பரஞ் சேதனசேதனப் பிரவஞ்சந்தோன்றி நின்றொடுங்குமிடனும்

முத்தான்ம நிரதிசயானந்த பூரணப்பொதுவுமாம். இதுவே தில்லைத் திருச்சிற்றம்பல மெனப்படும். இத்தில்லைத் திருச்சிற்றம்பலம் இங்ஙனம் பரமாதாரப் பொதுவாகலின், சமயாசாரியர் மற்றிதனை யெல்லாத் திருத்தளிகளுக்கும் மேலான "திருக்கோயில்" என்று அவ்வாறு வழங்கி யருளுவாராயினர். இவ்வாற்றால் "திருச்சிற்றம்பலம்" பிரணவ உறையுளாமாறு தெற்றென வுணர்ந்து கொள்க.

## தேவாரம்

தே ஆரம், தேவாரமென்றாயிற்று. தெய்வத்தன்மை பொருந்திய பாமாலையென்றவாறு. தேவாரமென்பது தெய்வத்தன்மை பொருந்திய பதிகப் பாமாலைகளையுடையதென அன்மொழித்தொகையாய் மூவர் திருமுறைகளுக்குங் காரணக்குறியாயிற்று. ஆளுடைய பிள்ளையார் திருப்பதிகம் பதினாறாயிரமும், வாகீசர் திருப்பதிகம் நாற்பத்தொன்பதினாயிரமும், நம்பியாரூரர் திருப்பதிகம் முப்பத்தெண்ணாயிரமுமாம். இவை தம்முளொடுங்கினபோக எஞ்சியிக்காலத்து நிலைபெறும் மூவர் பதிகங்கள் முறையே முந்நூற்றெண்பத்துநான்கும், முந்நூற்றுப்பதினொன்றும், நூறுமாம். இவ்வெழுநூற்றுத் தொண்ணூற்றைந்தும் அடங்கிய திருமுறை அடங்கன் முறையென்று அவ்வாறு வழங்கப்படும். இவை பண்முறையாகவுந் தலமுறையாகவும் ஓதப்படும்.

சிவாலயமுனிவர் தேவாரவோத்து முழுதையும் நித்தலும் பாராயணஞ் செய்யமாட்டாது இடர்ப்பட்டு அகத்தியனாரைச் சரணடைந்து அக்குறை கூறி வணங்கிட, அவர் தேவாரப் பதிகங்களுள் இருபத்தைந்தினை வாங்கித் திரட்டிக்கொடுத்து, இவ்விருபத்தைந்தினையும் பாராயணஞ் செய்வோர் அடங்கன்முறை முழுதையும் பாராயணஞ் செய்தாரெய்தும் பயனை ஒருதலையாக எய்துவரென்று கட்டளை புரிந்தருளினர். இங்ஙனமாகலின், அவ்விருபத்தைந்தும் அகத்தியத் திரட்டென்று அவ்வாறு வழங்கப்படும்.

"குருவுருவும் வெண்ணீ றெழுத்தஞ்சுங் கோயி
லரனுருவு மென்றலைமே லாக்கும் - திருவடியுஞ்
சிட்டான வர்ச்சனையுந் தொண்டுஞ் சிவாலயர்க்கென்
றிட்டா ரகத்தியனா ரெட்டு"

எனவும்;

"தோடு கூற்றுப் பித்தா மூன்றும்
பீடுடைத் தேசிகன் பேரரு ளாகு
நீற்றுப் பதிக நிகழ்த்துங் காலை
மாற்றுப் பரையின் வரலா றுகுஞ்
துஞ்சல் காதல் சொற்றுணை மற்று
மஞ்செழுத் துண்மை யருளிய தாகு
மாரூர் தில்லை காட்டூர் மூன்றுஞ்
சீரார் கோயிற் றிறமைய தாகு
மோருரு வரிய பாலை வடிவே
மருவா றென்ற வண்டமி ழைந்துந்
திருவார் மேனிச் செய்திய தாகும்
பொடியுடை யரவணை யந்த ணாள
னடியிணை தந்த வருளே யாகும்
பந்து வேற்று கொன்றிவை மூன்று
நந்தலி லருச்சனை நாட்டிய தாகும்
வேய்குலந் தில்லை யெனுமிவை மூன்று
நாயனு மடிமையு நாட்டிய தாகு
மிப்பரி சகத்திய முனிவ னிருநிலத்
தொப்பரு மூவ ரோதுதே வார
முழுதையுஞ் சிவாலய முனிக்கறி வித்துப்
பழுதிலா வவையுட் பரிந்தெடுத் திருபத்
தைந்துயர் பதிகமு மறிவுறத் திரட்டி
யெண்ணரு மடங்க வியாவையு முணரும்
புண்ணிய மிவைகொடு பொருந்து மென்றவன்
றனக்கருள் செய்தனன் றகவுற வதனாற்
றீதிலா வகத்தியத் திரட்டினை யுலகி
லோதின ரடங்கலு மோதின ராவரே"

எனவருந் திருவாக்குக்களானே அத்திருப்பதிகம் இருபத்தைந்தும், அவற்றின் இனவடைவும், அவைநுதலும் பொருளுந் தெரிந்து கொள்க.

தேவார ஒத்துக்கள் அபயகுல சேகர சோழவேந்தன் காலத்தில் தமிழ்நாட்டின்கண் மறைந்தன. அவ்வரசர் பெருமான் தன்னவைக்

களத்துக்குப் போதாநின்ற பெரியோர் அவைதம்முள் ஓரோர் பதிகம் ஓதிடக்கேட்டுக் கைகளிரண்டுந் தலைமேலேறக் கண்ணில் ஆனந்த வெள்ளம் மெய்யெலாம் பொழியத் தமிழ்வேத முதல்வரான நாயன்மார்களைப் போற்றித் தேவாரத் திருமுறைகளை யாண்டுந்தேடிக் கண்டிலனாய்க் கவற்சியுறுவானாயினான். அங்ஙனங் கவல்கின்றான், திருநாரையூர் ஆதிசைவ வேதியர்மரபில் வந்து அவதரித்தருளிய நம்பியாண்டார்நம்பி அத்திருப்பதியில் வீற்றிருந்தருளும் பொல்லாப்பிள்ளையார் திருவருளானே வேதம்முதலிய கலைகளெல்லாம் ஓதாதுணர்ந்தருளிய வரலாறு கேட்டு அவர்பாற்போந்து வழிபாடாற்றி, "எம்பிரானே! தேவார ஓத்துக்களையும், அவை தம்மை யருளிச்செய்த மூவர் முதலியோர் சரித்திரங்களையும் உலகில் விளங்கச் செய்தருளுக" என்று பிரார்த்தித்தான். நம்பியாண்டார்நம்பி அவ்வரசன் வேண்டுகோளுக்கு உடம்பட்டாராய்த் திருக்கோயிலுட்புகுந்து, பொல்லாப் பிள்ளையாருக்கு அதனை விண்ணப்பஞ்செய்தார். பொல்லாப்பிள்ளையார் "நம்பீ! தேவாரத்திருமுறைகள் சிதம்பரத்தில் மூவர் கையடையாளமுடைய ஓரறையில் உள்ளன" என்று திருவாய்மலர்ந்து, அவைதம்மை யருளிச்செய்த ஆளுடைய பிள்ளையார் முதலிய நாயன்மார் சரித்திரத்தினையும் அவர்க்குச் செவியறிவுறுத்தருளினார். நம்பியாண்டார்நம்பி அவ்வரலாற்றினைச் சோழர்பெருமானுக்குச் செவியறிவுறுத்தருளினார். அவ்வரசர்பெருமான் நம்பியாண்டார் நம்பியோடு திருத்தில்லை சென்று பரமகாரணனை நடராசமூர்த்தியைத் தரிசித்து வணங்கித் தில்லைவாழந்தணர்களையும் இறைஞ்சி அம்முனிவர்கள் கட்டளைப்படி மூவரையுந் திருவுலாவிற் கொடுபோந்து, அவரடையாளமுடைய அவ்வறையின்மாடே நிறுத்திக் கதவினைத்திறந்து திருமுறைகளை வன்மீகம் மூடியிருப்பக்கண்டு, கரையில் பெருங்கவலைக் கடற்படிந்தான். அவ்வரசர்பிரானைக் கவலைக்கடனின்று கரையேற்றி மகிழ்விக்குமாறு நடராசமூர்த்தி திருவருளினால் "வேந்தர் பெருந்தகையே! தேவாரப் பதிகங்களுள் இக்காலத்துக்கு வேண்டுமவை தம்மை நிறீஇ, ஏனையவற்றைச் செல்லுணச் செய்தாம்" என்று ஓர் திருவாக்கு அந்தரத்தெழுந்தது. அது கேட்ட வேந்தர்பெருமான் மனக்கவலை மாறிக் களிபேர் இறும்பூதுற்று, நம்பியாண்டார் நம்பியைத்தொழுது, "எம்பிரானே! தேவாரத் திருப்பதிகங்களைத் திரு

முறைகளாக வகுத்தருண்மோ" என்றிரப்ப, நம்பியாண்டார்நம்பி அவை தம்மையும் மற்றைத் திருவாசகம் முதலியவற்றினையும் பதினொரு திருமுறைகளாக வகுத்தருளினர். அன்று தொடங்கித் தேவார பாராயணம் பண்டுபோல யாண்டும் நடைபெறுவதாயிற்று.

### திருவாசகம்

திருவாசகமென்பது திருமயமான வாசகமெனப் பொருள்படும். ஈண்டுத் திரு அருட்டிரு. எனவே, அருள்நாத வடிவான வாசகமென்றவாறாயிற்று. திருவாசகமென்பது, அழகிய வாசகத்தையுடையதென அன்மொழித் தொகையாய் வாதவூரடிகள் அருளிச்செய்த தமிழ் வேதத்திற்குக் காரணக்குறி யாயிற்று. இனித் திருவாசகம் பின்மொழி ஆகுபெயர் என்றுரைப்பாருமுளர். உற்று நோக்குவார்க்கு அஃது அன்மொழித் தொகையேயாம். அவ்வாறு தொல்காப்பியச் சூத்திரவிருத்தியுட் காண்க. வாதவூரடிகள் "நமச்சிவாய வாஅழ்க" என்பது முதலிய நான்கு திருவகவல் முதற்கொண்டு, திருச்சதகம், நீத்தல்விண்ணப்பம், திருவெம்பாவை, திருவம்மானை, திருப்பொற்சுண்ணம், திருக்கோத்தும்பி, திருத்தெள்ளேணம், திருச்சாழல், திருப்பூவல்லி, திருவுந்தி, திருத்தோணோக்கம், திருப்பொன்னூசல், அன்னைப்பத்து, குயிற்பத்து, திருத்தசாங்கம், திருப்பள்ளியெழுச்சி, கோயின்மூத்ததிருப்பதிகம், கோயிற்றிருப்பதிகம், செத்திலாப்பத்து, அடைக்கலப்பத்து, ஆசைப்பத்து, அதிசயப்பத்து, புணர்ச்சிப்பத்து, வாழாப்பத்து, அருட்பத்து, திருக்கழுக்குன்றப்பதிகம், கண்டபத்து, பிரார்த்தனைப்பத்து, குழைத்தபத்து, உயிருண்ணிப்பத்து, அச்சப்பத்து, திருப்பாண்டிப்பதிகம், பிடித்தபத்து, திருவேசறவு, திருப்புலம்பல், குலாப்பத்து, அற்புதப்பத்து, சென்னிப்பத்து, திருவார்த்தை, எண்ணப்பதிகம், யாத்திரைப்பத்து, திருப்படையெழுச்சி, திருவெண்பா, பண்டாய நான்மறை, திருப்படையாட்சி, ஆனந்தமாலை, அச்சோப்பதிகம் ஈறாகப் பலவகைப்படுத்துச் செந்தமிழ் வேதம் அருளிச்செய்தார். இத்தமிழ் வேதப்பகுதிகள் அருளிச்செய்த இடனும், அவற்றினுட்கருத்தும், அதனதன் முகத்துக் காண்க. வாதவூரடிகள் மற்றுத் தமிழ்வேதம், "நமச்சிவாய" என்பது முதலாக எடுத்தருளிச் செய்தார். திருவுருத்திரத்து உள்ளுறையான அத்திரு

வைந்தெழுத்து வேத மந்திரங்கட்கெல்லாம் மேலாயும் உயிராயும் நிற்கும் மகிமைநோக்கி யென்க. வேதாகமம் முதலிய நூல்களெல்லாம் இத்திருவைந்தெழுத்தின் பொருளே நுதலி யெழுந்தன வென்பது,

"அருணூலு மாரணமு மல்லாது மைந்தின்
பொருணூ றெரியப் புகும்"

என உமாபதிசிவாசாரியர் திருவருட்பயனுள் ஓதியவாறு பற்றி யுணர்க. திருவைந்தெழுத்து, பெருவார்த்தை, மகாவாக்கிய மென்பன ஒருபொருட்கிளவி. இது சித்தாந்த மகாவாக்கியம். சித்தாந்த மகாவாக்கியமும் வேதாந்த மகாவாக்கியமுந் தம்முளொத்த கருத்துடையன வென்பது சிவஞான மாபாடியத்துட் காண்க. ஆளுடையபிள்ளையார் "தோடுடையசெவியன்" எனப் பிரணவம் முதலாகக்கொண்டு தமிழ் வேதந் திருவாய் மலர்ந்தருளினர். வாதவூரடிகள் "நமச்சிவாய" எனப் பஞ்சாக்கரம் முதலாகக்கொண்டு தமிழ்வேதந் திருவாய் மலர்ந்தருளினர். அற்றேல் அஃதங்ஙனமாக; வாகீசர் "கூற்றாயினவாறு" என்றும், நம்பியாரூரர் "பித்தாபிறைசூடீ" என்றும், தமிழ்வேதந் திருவாய் மலர்ந்தருளியது யாதுபற்றியெனின்—குருவருள், சூலை நோய் முந்துறுத்தும், ஆவணவோலை விவகாரம் முந்துறுத்தும், தமக்கு முன்னீடாகலின், அவை முன்னாகக்கொண்டு அச்சமயாசாரியர் இருவருந் தமிழ்வேதம் அங்ஙனந் திருவாய்மலர்ந்து அருளுவாராயிற்றென்று உணர்ந்துகொள்க. அவை அவ்விருவர்க்குங் குருவருள் முறையாயவாறு "தோடுகூற்றுப் பித்தாமூன்றும் - பீடுடைத்தேசிகன் பேரருளாகும்" என்று ஆன்றோர் எடுத்தோதிய வாற்றானறிக. இத்தமிழ் வேதந் தன்னையன்போடு ஓதுவாரைப் பிறவிக்கடலினெடுத்து அவர்க்குச் சிவானந்தமாக்க வல்லதென்பது,

"தொல்லை யிரும்பிறவிச் சூழுந் தளைநீக்கி
அல்லலறுத் தானந்த மாக்கியதே—எல்லை
மருவா நெறியளிக்கும் வாதவூ ரெங்கோன்
திருவா சகமென்னுந் தேன்"

என்னும் ஆன்றோர் அனுபவத் திருவாக்கானறிக.

## திருக்கோவையார்

வாதவூரடிகள் இத்தமிழ்த் திருக்கோவை நூலை அறிவனூற் பொருளும் உலகநூல் வழக்குமென இருபொருளும் நுதலி யியற்றி

யருளினர். அறிவனூற்பொருள் ஆகமப்பொருள். "உலகியல் வேத நூலொழுக்கம்" என்பவாகலின், அகத்தியத்தினுந் தொல்காப்பியத் தினுங் களவியலினும் வேதமரபுபற்றி எடுத்தோதப்பட்ட களவு கற் பென்னும் பாகு பாடுடைய அகனைந்திணை இன்பவரலாறே ஈண்டுலக நூல் வழக்காம். வாதவூரடிகள் இங்ஙனந் நூலாருந்ததி நியாயம்பற்றி அறிவனூற்பொருளும் உலகநூல் வழக்கும்விராய்த் தமிழ்வேதம் அரு ளிச் செய்ததற்குக் காரணம், இலக்கணமரபியலிற் கூறினும். இந்நூல் இவ்விரு திறனும் நுதலுதலோடு இயற்றமிழாராய்ச்சிக்கும் நியாய வாராய்ச்சிக்கும் வாய்ப்புடைய சொல்வழக்கும் பொருள்வழக்கும் இனிது நுதலும் நன்னூலுமாம். அது,

"ஆரணங் காணென்ப ரந்தணர் யோகிய ராகமத்தின்
காரணங் காணென்பர் காமுகர் காமநன் னூலிதென்ப
ரேரணங் காணென்ப ரெண்ண ரெழுத்தென்ப ரின்புலவோர்
சீரணங் காயசிற் றம்பலக் கோவையைச் செப்பிடினே"

என்று ஆன்றோர் அதன்மாட்சி யெடுத்துப் போற்றிசைத்தலான் இனிதறியற்பாற்று. ஏரணம் - நியாயம். எழுத்து - இயற்றமிழ். இந்நூல் இங்ஙனம் சொன்மாட்சி பொருண்மாட்சி நன்று பொருந்திச் சிறப்புறுதல் நோக்கியன்றே

"வருவாசகத்தினின்முற்றுணர்ந்தோனைவண்டில்லைமன்னைத்
திருவாதவூர்ச்சிவபாத்தியன்செய்திருச்சிற்றம்பலப்
பொருளார்தருதிருக்கோவைகண்டேயுமற்றப்பொருளைத்
தெருளாதவுள்ளத்தவர்கவிபாடிச்சிரிப்பிப்பரே"

என நம்பியாண்டார் நம்பியும்,

"உருவாருந் தமிழ்ச்சங்கத் தடம்பொய்கைத் தோன்றி
யுயர்ந்தோங்கு மெய்ஞ்ஞான வொளியையுடைத் தாகி
மருவாருங் கிளவியிதழ் நானூ றுகி
மதுப்பொருள்வாய் மதிப்புலவர் வண்டா யுண்ணத்
தருவாரும் புலியூரி னுலகுய்யக் குனிப்போன்
றடங்கருணை யெனுமிரவி தன்கதிரா லலருந்
திருவாத வூராளி திருச்சிற்றம் பலவன்
றிருவடித்தா மரைச்சாத்துந் திருவளர்தா மரையே"

என அபியுத்தருைம்,

“ பல்காற் பழகினுந் தெரியா வுளவேற்
றொல்காப் பியந்திரு வள்ளுவர் கோவையார்
மூன்றினு முழங்கு மாண்டினு மிலையேல்
வடமொழி வெளிபெற வழங்கு மென்க ”

எனச் சுவாமிநாததேசிகரும், இதன் பெருமை அவ்வாறுபோற்றி இசைத்தாரென்க. இது “ திருவளர்தாமரை ” யென்பது முதலாகக் “காரணிகற்பகம்” என்பது ஈறுகக் களவுகற்பென்று இருகைகோளால் இயற்கைப் புணர்ச்சி, பாங்கற்கூட்டம், இடந்தலைப்பாடு, மதியுடன் படுத்தல், இருவருமுள்வழி அவன்வரவுணர்தல், முன்னுறவுணர்தல், குறையுறவுணர்தல், நாணநாட்டம், நடுங்கநாட்டம், மடல், குறை நயப்பித்தல், சேட்படை, பகற்குறி, இரவுக்குறி, ஒருவழித்தணத்தல், உடன்போக்கு, வரைவுமுடுக்கம், வரைபொருட்பிரிதல், மணஞ்சிறப் புரைத்தல், ஓதற்பிரிதல், காவற்பிரிதல், பகைதணிவினைப்பிரிதல், வேந்தற்கு உற்றுழிப்பிரிதல், பொருள் வயிற்பிரிதல், பரத்தையிற்பிரி தல் என்னும் இவ்விருபத்தைந்து கிளவிக்கொத்துக்கள் கொண்டு கோக்கப்படுதலிற் கோவையெனப்பட்டது. கோவையென்பதில் ஐ செயப்படுபொருள் விகுதி. இந்நூல் நுதலும் பொருளிரண்டனுள் வைத்து உலக நூற்பொருண்மரபு இனிது விளங்குமாறு பேராசிரி யர், இதற்கோருரை யியற்றினர். இவ்வுரை மற்றிந்நூல் நுதலும் அகனைந்திணை யின்பவுறுதிப் பொருளின் திட்பநுட்பஞ் செவ்விதின் விளக்கி, மற்றிதற்குச் சிறந்ததோருரையாம். இனி, தமிழ்ப்புல வருட் சிலர் இவ்வுரையாசிரியர் நச்சினர்க்கினியரென்ப. திருக் கோவைக்கு நச்சினர்க்கினியர் உரைசெய்திலர். மற்றுப் பிரயோக விவேக நூலார் “ ‘வஞ்சரையஞ்சப்படும்’ என்னுங் குறளினுங் ‘ கொள்ளப்படாது மறப்பதறிவிலென் கூற்றுக்களே ’ என்னுந் திருக் கோவையாரினும், பரிமேலழகரும் பேராசிரியரும், முதனிலையைப் பிரித்தெழுவாயாக்கி முடித்தலுங் காண்க ; ‘ மருங்கோடித் தீவினை செய்யானெனின் ’ ‘ கற்றிலகண்டன்னம் ’ என்னுங் குறளினுந் திருக்கோவையாரினும், பரிமேலழகரும் பேராசிரியரும் செய்த லோடுங் கற்றலோடும் முடியுமென்பர்; இனிக் ‘கொழுநற் றொழுதெழு வாள் ’ ‘ தொழுதெழுவார்வினை வளநீறெழ ’ என்னுந் திருவள்ளுவ

ரினுந் திருக்கோவையாரினும் பரிமேலழகரும் பேராசிரியருந் துணை வினையாய் உரைப்பர் '' என்றிங்ஙனம் உரைத்தலானும்,

> '' பாரத்தொல் காப்பியமும் பத்துப்பாட் டுங்கலியும்
> ஆரக் குறுந்தொகையு ளைஞ்ஞான்குஞ்—சாரத்
> திருத்தகு மாமுனிசெய் சிந்தா மணியும்
> விருத்தி நச்சினார்க்கினிய மே ''

என்பதனாலும், திருக்கோவை உரையாசிரியர் பேராசிரியரென்றே துணிக. இனித் திருக்கோவை நுதலிய அறிவனூற்பொருள், வாத வூரடிகளொப்ப உலகநிலையாமை கண்டு முற்றத்துறந்து மெய்யுணர்ந்து அவாவறுத்துச் சிவானந்தச் செல்வரானோர்க்கே அனுபவமாய்ப் புலனாகற்பாலதா மென்றுணர்க. இனிப் பேரின்பப் பொருள்தான் ஒத்த கிழவனும் கிழத்தியுந் தம்முள் அஃகாவுமுவலன்பால் நுகர்ந்து போதருஞ் சிற்றின்பம் போல்வதொன்றாகலின் மற்றது சிற்றின்பம் அகனைந்திணைபற்றி நிகழ்தல்போலக் குருதரிசனம் முன்னான நின்மலசாக்கிராதி ஐந்தும்பற்றி நிகழும் நீரதாம். அங்ஙனம் நிகழ் வுழிப் பேரின்பக்கிழத்தி சிற்றம்பலமுங் கிழவோன் முத்தான்மாவு மாம். என்னை ? ஆண்டுக்கிழத்தியை

> '' உணர்ந்தார்க்குணர்வரியோன்றில்லைச்சிற்றம்பலத்தொருத்தன்
> குணந்தான்வெளிப்பட்டகொவ்வைச்செவ்வாயிக்கொடியிடை ''

> '' பாயும்விடையரன்றில்லையன்னாள் ''

> '' அளவி யையார்க்குமறிவரியோன்றில்லையம்பலம்போல்
> வளவியவான்கொங்கை ''

> '' குவளைக்களத்தம்பலவன்குரைகழல்போற்கமலத்—தவளை ''

> '' நேயத்ததாய்நென்னலென்னைப்புணர்ந்துநெஞ்சநெகப்போ
> யாயத்ததாயமுதாயணங்காயரனம்பலம்போற்—றேயத்ததாய் ''

என்று இத்தொடக்கத்தாற்சிற்றம்பலத்தொடு சார்த்தொன்றாகக் கூறுத லானும், அச்சிற்றம்பலத்தின் கண்ணதாம் பேரின்பம் விழைந்திரந்து பெறுதற்குரியான் முத்தான்மாவாகிய கிழவனாகலானுமென்க. இனி முத்தான்மா எய்துதற்குரிய பேரின்பவுறுதிப்பொருள் சிவனருட்குண மான சிற்றம்பலமேயாதல்,

" ஆரண வுருவர் தில்லை யம்பல மெய்தப் பெற்றோ
ரோருணர் வாவ ரென்று மொன்றலா ரொன்றா ரல்லர்
காரண ராகா ரொத்த கருத்திலர் நிருத்த வின்பப்
பூரண ரவர்கள் வாழும் புவனமும் பொதுவா மன்றே"

என்பதனானறிக. முத்தான்மாவால் அனுபவிக்கப்படுஞ் சிவானந்தம் அவ்வான்மா அந்தரியாமியாய் விளங்குஞ் சிவஞானசத்தாகலின், அது சிவன் ஐந்தொழிற்காரணமான பரையாதி சிவசத்தி பேதங்களுள் ஒன்றாக வைத்தெண்ணுதற்கு உரிமையின்றாம். இயைபின்றாகவே, இக்கூற்று முறைபிறழ்வு முதலிய குற்றங்கட்கு மிக்க சேய்த்தாமாறு உணர்க.

" பேரின்ப மான பிரமக் கிழத்தியோ
டோரின்பத் துள்ளானென் றுந்தீபற"

" இருட்டறை மூலை யிருந்த குமரி
குருட்டுக் கிழவனை கூட நினைந்து
குருட்டினை நீக்கிக் குணம்பல காட்டி
மருட்டி யவனை மணம்புணர்ந் தாளே"

" என்னிடை ஞான வல்லியை நன்மணம் புணர்த்தி
யானு நேயத் தரும்பொருள் வழங்கி
யிறவா வீட்டினி லிருத்திக்
குறையாச் செல்வரொடு கூட்டுதி மகிழ்ந்தே"

என்றற் றொடக்கத்துத் திருவாக்குக்களும் இவ்வுண்மை தெளிவித்தல் காண்க. பெத்தத்திற் சிற்றின்ப காரணமாய் மறைந்து பக்குவஞ் செய்துவந்த சிவசத்தி முத்தியில் அவ்வியல்பின் நீங்கி வெளிநின்று பேரின்பகாரணமாய்ப் போகரூபமாயிற் றென்பார் "பேரின்பமான பிரமக்கிழத்தி" யென்றார். உயிர்க்குப் பரிபக்குவஞ் செய்தற் பொருட்டு மலத்தின்வழிச் சிறுமையுற்று நிற்றலேக்கித் திரோதான சத்தியை "இருட்டறை மூலையிருந்த குமரி" யென்றார். ஆன்மாவை நாயகியாகவுஞ் சிவனை நாயகனாகவும் அருளிச்செய்த திருவாக்கெல்லாம், ஆண்டானடிமை முறைபற்றி யெழுந்தன. இஃது நுகர்வான் நுகரப்படும் பொருள் முறைபற்றி யெழுந்தது. இவ்விரு வழக்கினும் ஆன்மா அடிமைத் திறத்திற் றீர்ந்தின்றாகலானும், சிவம் உபகரிக்கும் இறை

மைக் குணத்திற் றீர்ந்தின்றாகலானும், நடராசன் அருட்குணமான சிற்றம்பலம் பெண்பாற்படுத்து ஓதப்பட்டதல்லது நடராச பரம்பொருள் பெண்பாற்படுத்து ஓதப்படாமையானும், தம்முள் முரணுமையறிக. இனித் திருக்கோவைப் பேரின்பத் துறைக்கண் கிழவிகூற்றுக்கள் ஓரோரிடங்களிற் பணிந்த மொழியானும் வருந்துமொழியானும் நிகழ்வன ஆன்மாவின் அன்பிற்கும் அருட் கையறவிற்கும் எளிவரும் கருணையும் இரக்கமுமாகவும், கிழவோன் கூற்றுக்கள் பெருமிதத்தானுந் தலையளிப்பானும் நிகழ்வன இன்பப்பேற்றின் இறுமாப்பும் அவ்வின்ப அத்துவித அனுபவ ஒப்புரவாகவும் கொள்க. இன்னும் இதன் திறம் விரிப்பிற் பெருகுமென்பது.

## திருவிசைப்பா

அழகிய இசைபொருந்திய பாக்களையுடையதென அன்மொழித் தொகையாய்த் திருமுறைக்குக் காரணக் குறியாயிற்று. இது திருமாளிகைத்தேவர், சேந்தனர், கருவூர்த்தேவர், பூந்துருத்திநம்பி காடநம்பி, கண்டராதித்தர், வேணாட்டடிகள், திருவாலியமுதனர், புருடோத்தமநம்பி, சேதிராயர் என்னும் ஒன்பது நாயன்மாரானும் அருளிச் செய்யப்பட்டது. இவை அருளிச் செய்யப்பட்ட தலங்களின் பெயர் அவ்வப்பதிக முகத்துக்காண்க.

## திருப்பல்லாண்டு

இஃது இறைமுதற் கடவுளான பரமசிவனைப் பல்லாண்டு வாழ்கவென அன்பினாற் பாட்டருளிச்செய்தலின், பல்லாண்டென்றாயிற்று. பலவாண்டு பயத்தலைச் செய்வதியாது அது பல்லாண்டென அன்மொழித் தொகையாய்த் திருமுறைக்குக் காரணக் குறியாயிற்று. இஃது திருக்கோயில்மேல் வைத்துச் சேந்தனரால் திருவாய்மலர்ந்தருளப்பட்டது.

“ சொல்லாண்டசுருதிப்பொருள்சோதித்ததூய்மனத்தொண்டருள்ளீர்
சில்லாண்டிற்சிதையுஞ்சிலதேவர்சிறுநெறிசேராமே
வில்லாண்டகனகத்திரண்மேருவிடங்கன்விடைப்பாகன்
பல்லாண்டென்னும்பதங்கடந்தானுக்கேபல்லாண்டகூறுதுமே”

எனச்சேந்தனர் இதனுள் திருவாய்மலர்ந்தருளுதலின், சில்லாண்டிற் சிதையுஞ் சிலதேவர்க்குப் பல்லாண்டு கூறுதல் உபசாரமென்றும், அவர்

கட்கூறும் பல்லாண்டு மக்கள் தம்முள் ஒருவரை யொருவர் நீடுவாழ்க எனக்கூறும் வாழ்த்துப் போல்வதாமென்றும் அறிக.

## திருமந்திரம்

இஃது அறுபான்மும்மை நாயன்மாருள் ஒருவரான திருமூல நாயனாரால் அருளிச் செய்யப்பட்டது. இவர் நந்தி திருவருள்பெற்ற நான்மறை யோகிகளிலொருவர். அணிமா முதலாகவரும் எண்பெருஞ் சித்தியும் பெற்றுடையார். சித்தியெனினும் முத்தியெனினுஞ் செல்வ மெனினும் ஒக்கும். அணிமாமுதலிய எண்பெருஞ் சித்திகளாவன: அணுவினும் அதிசூக்கும வடிவுற்று நிற்றல் அணிமாவென்னுஞ் செல்வம். மேருவினும் மிகப்பெரிய வடிவுற்று நிற்றல் மகிமாவென்னுஞ் செல்வம். விடயங்களை நுகர்ந்தும் அவற்றில் தொடக்குண்ணாமை கெரிமையென்னுஞ் செல்வம். சேறு முதலியவற்றின் இயங்கினும் அழுந்துதலின்றிக் காற்றினுங் கடுநடையுடைத்தாம் மெல்லிய வடிவுற்று நிற்றல் லகிமாவென்னுஞ் செல்வம். மனத்தான் விழையப்பட்ட அனைத்தும் விழைந்தவாறே பெறுதல் பிராத்தியென்னுஞ் செல்வம். சங்கற்ப மாத்திரையான் ஆயிரமகளிரைப் படைத்து அவ்வாயிரமகளி ரொடும் ஆயிரம் வடிவாய்நின்று கிரீடித்தல் பிராகாமியமென்னுஞ் செல்வம். பிரமன் முதலியோர்மாட்டுத் தன்னாணை செலுத்தி அவ ராற் பூசிக்கப்படுதல் ஈசத்துவமென்னுஞ் செல்வம். உலக முழுவதை யுந் தன்வசமாக்குதலும் உலகத்தை யுண்டாக்கலும் வசித்துவமென் னுஞ் செல்வம். இவ்வெண்வகைச் சித்தியுள், முன்னைய மூன்றும் உடம்பானும், பின்னையவைந்தும் மனமுதலியவற்றானும் பெறப்படு வன என்றுணர்க. சிவஞானயோகியான மற்றிவர் முனிப்பெருங் கடவுளான குறுமுனிவர்பா லுற்றதொரு கேண்மையினல் நற்றமிழ்ப் பொதியமலையை நண்ணி அகத்தியனாருடன் சிலநாளுறைவதற்கு எண் ணிக் கொற்றவனார் திருக்கயிலை மலைநின்று நீங்கித் திருக்கேதாரம், பசுபதி நேபாளம், அவிமுத்தம், திருக்காளத்தி, திருவாலங்காடு, திரு வேகாம்பரம், திருவதிகை, திருப்புலியூர் இவைகளை வழியில் வணங்கி ஆண்டாண்டுறையும் யோகமுனிவர்களை நயந்து காவிரியின் கரையணைந்து, திருவாவடுதுறையைத் தலைக்கூடி, ஆண்டுள்ள பசுபதி யார் சிவர்லயம் வலம்வந்து பெருங்காதலினாற் பணிந்து விருப்போடு

அங்குறையுநாளில், கோக்குலங்களை ஆண்டு அன்பால் மேய்த்துவருஞ் சாத்தனூர் மூலனென்பான் ஓரிடைக்குலமகன், வாழுநாள் உலந்திறந் தொழிந்தானாக, ஆனிரைகள் அவனுடம்பினை வந்தணைந்து சுற்றி மிகக்கதறிச் சுழன்று மோந்து துயருழந்தலை அந்நற்றவ யோகியார் கண்டு, நம்பாருளானே இவ்வானிரைகளுற்ற துயரினை ஒழிப்பலென்று தம்முடம்புக்கு அரண்செய்து தாமுயன்ற பவனவழியினால் தம் முயிரை அவனுடலிற் பாய்த்தி எழுந்தார். அதுகண்ட பசுக்க ளெல்லாம் அணைந்து நாத்தழும்புற நக்கிமோந்து கனைத்து நயந்து களிப்பினால் வாலெடுத்துத் துள்ளித் துயர்நீத்து நிரைந்துபோய் மேய்ந் தன. அவர் அவை தம்மை மேய்த்து அவற்றோடுடன்போந்து, அவை மனைகள்தோறும் புக்கதற்பின் திருவாவடுதுறை சேர்ந்து, காப் பினில் வைத்த முந்தையுடற்பொறை காணாராய் முழுதுணர்ந் மெய்ஞ்ஞானச் சிந்தையினில் வந்த செயலாராய்ந்து தெளிகின்றார், தண்ணிலவார் சடையார் தாம்தந்த ஆகமப்பொருளை மண்ணின்மிசைத் தந்திருவாக்கினாற் றமிழ்வகுப்பக் கண்ணியவத் திருவருளினாற் கரப் பித்தாரென்றறிந்து, திருவாவடுதுறைத் திருக்கோயிலை யணைந்து பரம்பொருளை வணங்கி, அத்திருக்கோயிற் புறக்குடபாலின் மிக் குயர்ந்த அரசின் கீழிருந்து, சிவயோகந் தலைநின்று, பூவலரும் இதயத் துப் பொருளாகிய பரமசிவத்தோடு உணர்ந்து சமாதியில் வீற்றிருந் தருளினார். அங்ஙனஞ் சமாதியில் வீற்றிருந்தருளாநின்ற நாயனார் ஊனு டம்பிற் பிறவிவிடந்தீர்ந்து தமிழுலகமுய்ய ஞானம் முதலிய நான்கும் அலர்கின்ற நற்றிருமந்திரமாலை ஓராண்டுக் கொன்றாகப் பரம்பொரு ளாகிய பரமசிவனை,

"ஒன்றவன் றானே யிரண்டவ னின்னரு
ணின்றனன் மூன்றினு ணான்குணர்ந் தானைந்து
வென்றனன் ஆறு விரித்தன னேழும்பர்ச்
சென்றனன் றானிருந் தானுணர்ந் தெட்டே"

என்னுந் திருப்பாட்டு முதலாக எடுத்து, அவற்கு மூவாயிரந் திருப் பாட்டுச் சாத்தி, மூவாயிரத்தியாண்டு புவிமேல் மகிழ்ந்திருந்து, சென்னி மதியணிந்த அப்பரமன் திருவருளினாற் றிருக்கைலையைத் தலைக்கூடி, ஒருகாலும் பிரியாப்பேரானந்த வாழ்வை அவன் திருவடிக் கீழ் அடைந்தார். நாயனார்க்குத் திருமூலரென்னும் பெயர்வந்த வர

லாறும், திருமந்திர நூல் செய்தருளிய வரலாறும், இக்கூறியவாற்ரு னறிக.

இம்முதற்செய்யுளின் பொருள் வருமாறு: அவன் ஒன்றே—மகா வாக்கியத்தில் தற்பதத்தாலெடுத்து ஓதப்படும் பரமான்மாவான பரமசிவன் ஒரு பொருளேயாம்; அவன் இன்னருள் இரண்டு—அங்ஙனம் ஒருபொருளாயினும் தன் இன்னருள் தாதான்மிய சத்தியோடு எண்ணில் சிவமுஞ் சத்தியுமென இரண்டுமாம்; மூன்றினுள் நின்றனன்—தன்போல நித்தியப் பொருள்களாயினுஞ் சமலராயுள்ள சீவான்மாக்களை அம்மலப்பிணியினீக்கி வாழ்வித்தற்பொருட்டு இலயபோக அதிகார அவத்தையுற்று முறையே சத்தன் உத்தியுத்தன் பிரவிருத்தன் என மும்முதலாயும் நின்ருன்; நான்குணர்ந்தான்—அங்ஙனம் நின்று ஆன்மாக்கள் மெய்யுணர்ந்து வீடுபேறு கூடுதற்பொருட்டுச் சுத்தமாயையைக் காரியப்படுத்து வேதாகமமென்னும் முதனூல்களானே அறம் முதலிய உறுதிப்பொருள் நான்கினையும் ஓதியருளினன்; ஐந்து வென்றனன்—அவ்வாற்ருன் ஐந்தவத்தையும் உயிர்களுக்கு விளைத்தும் பஞ்சபாசவுபாதி தனக்கிலனய் அமலனுயே நின்ருன்; விரித்தனனுறு—இன்னும் ஆன்மாக்கள் கன்மபோகம் நுகர்ந்து மலபரிபாகம் எய்துதற்பொருட்டு மந்திரம் முதலிய அத்துவாக்கள் ஆறினையும் நித்தபரிக்கிரக சத்தியான அம்மாயையினுனே விரித்திட்டான்; ஏழும்பர்ச் சென்றனன்—இன்னும் ஐவகை முத்தொழில்களையும் அதிசூக்குமமாயும் சூக்குமமாயுந் தூலமாயும் நடாத்த வேண்டுதலின், அவ்வத்துவாக்களின் இடனுய்ச் சிவன் நாதசிவன் எனவும், சதாசிவன் எனவும், மகேசன் உருத்திரன் மால் அயன் எனவும், முறையே அருவம் அருவுருவம் உருவமென்னும் முக்கூற்று எழுவகைத் திருமேனிகளையும் உற்று மேலாயோங்கினன்;—தான் எட்டுணர்ந்து இருந்தனன்—அப்பெற்றியனுய முதல்வன் முற்றறிவு முதலிய எண்குண சொரூபனுயுணரப்பட்டு என்னுள்ளத்தின்கண் சோகம்பாவனையால் துவிதமற்று ஏகனுய் மன்னினன்; ஆகலின் அவன் திருவருளானே வேதாகமப் பொருள்களையெடுத்துத் தமிழுலகம் எளிதினுணர்ந்து உய்தற்பொருட்டு இங்ஙனந் திருமந்திரமாலை செந்தமிழாற் கூறலுற்ரும் என்றவாறு. அவன் திருவருளானே வேதாகமப் பொருள்களையெடுத்துத் தமிழுலகம் எளிதி னுணர்ந்து உய்தற்பொருட்டு இங்ஙனந் திருமந்திரமாலை செந்

தமிழாற் கூறலுற்றுமென்பது குறிப்பெச்சம். உணர்ந்தானெனக் காரியத்தைக் காரணமாக உபசரித்தார். ஏழாயும்பர்ச் சென்றனன் என ஆக்கச்சொல் வருவித்து உரைக்கப்பட்டது. உணர்ந்து-உணரப் பட்டு. தான் - முன்னையது அசைநிலை; பின்னையது பெயராய்ச் சுட்டுப் பொருள்பட நின்றது, "புலந்தொகுத்தோனே போக்கறுபனுவல்" என்புழிப்போல. இஃது எண்ணலங்காரம். தானுணர்ந்தானிருந் தெட்டேயென்பதற்கு - அவன் அட்டமூர்த்திகளாக எளிதினுணரப் பட்டு யாவருமறிய இருந்தானென்று உரைத்தலுமொன்று. ஏழுபா ரென்பது பாடமாயின், ஏழுவகை ஞானபூமிகளையும் வியாபித்தானென வுரைக்க. ஏழு ஞானபூமிகளாவன: சுபேச்சை, விசாரணை, தனு மானசி, சத்துவாபத்தி, அசஞ்சத்தி, பதார்த்தபாவனை, துரியகை என்பனவாம். இம்முதற்செய்யுள், நூற்பொருளை இங்ஙனம் தன் னகத்து அடங்கக்கொண்டு நிற்றலின், வருபொருள் தெரிக்கும் மங்கல மாம். அத்திறம் விரிப்பிற் பெருகும்; நுண்ணுணர்வாற் கண்டு கொள்க. இந்நூலின்கண் வேதப்பொருள் அருகிவருமாறுஞ் சிவாகம நாற்பாதப் பொருள் பெருகி வருமாறும் உற்றுணர்ந்து கொள்க. இந் நூல் பாயிரம் உளப்பட ஒன்பது தந்திரங்களுடைத்து. இந்நூற் பொருள் பெரும்பான்மையான் ஆகமநூல் நன்குணர்ந்தார்க்கே இனிது புலனாகற்பாலதாம்.

## பதினோராந்திருமுறைப் பிரபந்தங்கள்

இஃது திருமுகப்பாசுரமுதல் திருவேகாதசமாலை யீறான நாற் பது பிரபந்தங்களைத் தன்னுட்கொண்டது. இவற்றுள் திருமுகப்பா சுரம் திருவாலவாயுடையார் திருவாய்மலர்ந்தருளியது. திருவாலங் காட்டு மூத்த திருப்பதிகம், திருவிரட்டைமணிமாலை, அற்புதத்திருவந் தாதி யென்னும் மூன்றும் காரைக்காலம்மை அருளிச்செய்தன. க்ஷேத் திரத் திருவெண்பா ஐயடிகள் காடவர்கோனயனர் அருளிச்செய் தது. பொன்வண்ணத்தந்தாதி, திருவாரூர்மும்மணிக்கோவை, திருக் கைலாய ஞானவுலா என்னுமூன்றுஞ் சேரமான்பெருமாணயனர் அரு ளிச்செய்தன. கைலைபாதி காளத்திபாதி யந்தாதி, திருவீங்கோய் மலை யெழுபது, திருவலஞ்சுழி மும்மணிக்கோவை, திருவெழு கூற்றிருக்கை, பெருந்தேவபாணி, கோபப்பிரசாதம், காரெட்டு, போற்றித் திருக்கலிவெண்பா, திருமுருகாற்றுப்படை, திருக்

கண்ணப்பதேவர் திருமறம் என்னும் பத்தும் நக்கீரதேவர் அருளிச்செய்தன. திருக்கண்ணப்பதேவர் திருமறம் கல்லாடனர் அருளிச்செய்தது. மூத்தநாயனர் திருவிரட்டைமணிமாலை, சிவபெருமான் திருவிரட்டை மணிமாலை, சிவபெருமான் திருவந்தாதி கபிலதேவர் அருளிச்செய்தன. சிவபெருமான் திருவந்தாதி பரணதேவர் அருளிச்செய்தது. சிவபெருமான் திருமும்மணிக்கோவை இளம்பெருமானடிகள் அருளிச்செய்தது. மூத்தபிள்ளையார் திருமும்மணிக்கோவை அதிராவடிகள் அருளிச்செய்தது. கோயில் நான்மணிமாலை, திருக்கழுமல மும்மணிக்கோவை, திருவிடைமருதூர் மும்மணிக்கோவை, திருவேகம்பமுடையார் திருவந்தாதி, திருவொற்றியூர் ஒருபாவொருபஃது என்னும் ஐந்தும் பட்டணத்தடிகள் அருளிச்செய்தன. விநாயகர் திருவிரட்டைமணிமாலை, கோயிற்றிருப்பண்ணியர் விருத்தம், திருத்தொண்டர் திருவந்தாதி, ஆளுடைய பிள்ளையார் திருவந்தாதி, திருச்சண்பைவிருத்தம், திருமும்மணிக்கோவை, திருவுலாமாலை, திருக்கலம்பகம், திருத்தொகை, திருநாவுக்கரசுதேவர் திருவேகாதசமாலை என்னும் பத்தும் நம்பியாண்டார்நம்பி அருளிச்செய்தன. இங்ஙனம் பதினேராந்திருமுறையிற் கோக்கப்பட்ட நாற்பான் பிரபந்தங்களுக்கும் வகை கண்டுகொள்க. திருமுறையிற் கோத்த திருமுருகாற்றுப்படையினைப் பத்துப்பாட்டெனச் சங்கப்பாட்டினுங் கோத்துத் தொகைகொண்டவாறு என்னையெனின்,—அதற்குக் காரணம் சங்க இலக்கிய வரலாறு உரைப்புழிக் கூறுதும்.

## பெரியபுராணம்

இது சேக்கிழார்நாயனரால் அருளிச்செய்யப்பட்டது. இது பெரிய புராணமெனவும், திருத்தொண்டர் புராணமெனவும் வழங்கப்படும். இவ்விரு திருநாமங்களும் இதற்கு ஆசிரியரே இட்டனவென்பது "எடுக்குமாக்கதை" யெனவும் "இங்கிதனுமங்கூறின்—செங்கதிரவன்போல் நீக்குந் திருத்தொண்டர் புராணமென்பாம்" எனவும் போந்த பாயிரத்தாலறிக. பெரியபுராணம் - பெருமையை அறிவுறுக்கும் புராணம். யாவர் பெருமையென்னும் அவாய் நிலைக்கண் திருத்தொண்டர் பெருமையென்பது தானே போதரு மென்பது. அநபாயன் என்னுஞ் சோழமகாராசன் சிந்தாமணியென்னும் அவைதிகத் தொடர்நிலைச் செய்யுளைப் பலபடப் பாராட்டிக் கேட்டான். சேக்கிழார்

அதுகண்டு 'வேந்தர் பெருந்தகாய்! இது சமணர் பொய்ந்நூல்; இதன் கேள்வி மறுமைக்கும் ஆகாது; மற்றிம்மைக்கும் ஆகாது. சிவகதை கேட்பின், மறுமைக்கும் ஆம்; மற்றிம்மைக்கும் ஆம்' என்றெடுத்து அரசற்குபதேசித்தருளினர். அநபாயவேந்தன் 'அடிகேள்! இச்சிந்தாமணி அவகதையாய்ப் பயனுமற்றதாயின் அம்மையும் இம்மையும் உறுதி பயக்கத்தக்க சிவகதை யாது? அதுகண்ட தனிப்பேரார்? அது தான் நவகதையோ? புராதனமோ? அதற்கு முதனூலுண்டோ? அதனைக் கேட்பித்தார் யாவர்? கேட்டார் யாவர்? அது தவமுயலுங் கதையோ? தவஞ்செய்து பேறுபெற்ற கதையோ? இவற்றிற்கு அடைவுபட உத்தரங்கூறுக' என்றான். சேக்கிழார் அன்னுழித் "திருவாரூர்ப் பெருமானடிகள் அடியெடுத்துக் கொடுத்தருளத் திருநாவலூர் நம்பியாரூரர் பதினொரு திருப்பாட்டால் அம்பலவாணர் திருத்தொண்டர் பெருமையினைத் தொகுத்துத் திருப்பதிகம் பாடியருளினர். அது திருத்தொண்டத் தொகையென்று உலகம் பரவப் பெற்றது. அதற்கு திருநாரையூர்ப் பொல்லாப்பிள்ளையார் பொருளுரைத்தருள, நம்பியாண்டார் நம்பி வகைதந்து சுருதிமொழிக் கலித்துறையந்தாதி செய்தருளினர். அதனைத் திருமுறைகண்ட அபய குலசேகர சோழமகாராசன் முதலியவுயர்ந்தோர் பாராட்டிக் கேட்டனர்" என்று உத்தரங் கூறியருளினர். அதுகேட்ட அநபாயவேந்தன் அவ்வருட்டொண்டர் பெருமை வரலாறெல்லாம் திறம்படவிரித்துச் செந்தமிழ்க் காவியமாகச் செய்தருளுக என்றிரந்து வேண்டினன். சேக்கிழார் அரசன் வேண்டுகோளுக்கு உடம்பட்டு அவன்பால் விடைகொண்டு திருத்தில்லை நகரினைத் தலைக்கூடித் திருக்கோயிலை வணங்கித் திருச்சிற்றம்பலம் அணைந்து, "அம்பலத்தெம்பெருமானே! உமதடியார் சீர் அடியேனுரைத்து இடர்கெடும்படி அடியெடுத்துத் தந்தருளுவீர்" என்று பிரார்த்தித்துத் திருவருளையுன்னி இறைஞ்சினர். அன்னுழி இலகுமன்றினிலாடுவார் திருவருளினால் அசரீரி "உலகெலாம்" என அடியெடுத்து உரைசெய்தருளியது. அப்பெரிய அருள்நாத வாக்கொலி தில்லைவாழந்தணர் முதலாக ஆண்டுத் தலைக்கூடிநின்ற திருக்கூட்டத்தார் செவிப்புலம் எங்குமாகி நிறைந்தது. சேக்கிழார் அவ்வருளுபதேச வாக்கமிர்தஞ் செவிமடுத்து மெய்யுணர்வெய்தித் தெய்வப் புலமை மிக்கார். அப்பொழுது தில்லைவாழந்தணர் மன்றுடைய

பிரானுன வள்ளலார் திருமாலையுந் திருநீறுந் திருப்பரிவட்டமுஞ் சேவையர் காவலர்க்கு அளித்துச் சிறப்பித்தார். சேக்கிழார்நாயனுர் அத்திருவருட் பிரசாதங்களைப்பெற்றுச் சிவானந்தக் களியுற்று திருவம்பலத்தினை வணங்கிப்போந்து தாம் பாடுகின்ற புராணத்திற்கு மூவரோதிய திருநெறித்தமிழ் அடியாதலால், அத்திருநெறித் தமிழ்வேத முதல்வர்களை வணங்கி அவர் திருவருளோடு இணங்கிச் சிவ சாதனங்கள் மிகப்பூண்டு, ஆயிரக்கால் மணிமண்டபத்தினை யணைந்து, எந்தையார் திருவருளையுன்னி வீற்றிருந்து, அவர் தந்தருளிய "உலகெலாம்" என்பது முதலாகக்கொண்டு திருத்தொண்டத்தொகை, திருவந்தாதி வகைவழியே செந்தமிழ்த்தொகை விளங்கிய திருவிருத்தத்தால் தானுவான புராணநூல் விரித்துப்பாடி முடித்தருளினுர்.

உலகெலா முணர்ந் தோதற் கரியவ
னிலவு லாவிய நீர்மலி வேணிய
னலகில் சோதிய னம்பலத் தாடுவான்
மலர்சி லம்படி வாழ்த்தி வணங்குவாம்.

உலகு என்பது ஆரியத்திரிசொல். அஃது ஈண்டுயிர்கள் மேனின்றது. உலகமென்பது இடத்தையுணர்த்துஞ் சொல்லாகலின் மக்கட்டொகுதியை யுணர்த்தும்வழி ஆகுபெயராம் பிறவெனின்,—அற்றன்று; வடநூலுள், "லொகஸ்து ஹுவநெ ஜநெ" என இரு பொருட்கும் உரித்தாக ஓதப்பட்டமையின், மக்கட்டொகுதியை உணர்த்தும்வழியும் உரிய பெயரேயாகலின், ஆகுபெயரன்றென்க. இது "காலமுலகம்" என்னுஞ் சூத்திரத்துச் சேனுவரையர் கடாவிடைகளான் விளங்க எடுத்தோதிய வாற்ருனுமுணர்க. அவ்வுயிர் தாம், மலமொன்றேயுடைய விஞ்ஞானகலரும், மலம் கன்மம் என்னும் இரண்டுமுடைய பிரளயாகலரும், மலம் கன்மம் மாயை யென்னு மூன்றுமுடைய சகலருமென மூவகையராதலின், எல்லாமென்ருர். மலரடி வினைத்தொகை. சிதசித் பிரபஞ்சமெங்கும் மலருகின்ற சிலம்படியென்க. சிலம்பு - ஆரணநூபுரம். அது சிலம்புதலின் சிலம்பெனப் பட்டது.

இதன் பொருள் :—அம்பலத்தாடுந் துரிய அதிகார சிவனுன முழுமுதல்வன் உலகெலாமுணர்ந்து ஓதற்கரிய சொரூப சிவமாயும், அல

கில் சோதிமயமான இலய சிவனையும், நிலவுலாவிய நீர்மலி வேணி யுடைய போகசிவனையும் நின்றுனைகலின், யாம் இவ்வருட்காவிய இலக்கி யம் இனிது முடிதற்பொருட்டு அவன் மலர் சிலம்படியினை வாழ்த்தி வணங்குவாம் என்றவாறு. யாம் என்னும் எழுவாய் வெளிப்படாது நின்றது. நிலவு - ஞானசந்திரகலை. நிலவு உலாவிய - நிலவு விளங்கா நின்ற. உலாவிய என்பதனைச் செய்பியவென்னும் வாய்பாட்டு வினையெச்சமாகக் கொண்டு நிலவுலவும்படி நீர்மிகாநின்ற வேணியன் எனப் பொருளுரைத்தலு மொன்று. வேணி - அனைத்தையும் ஓரியல்பான் ஒருங்கறியுஞ் சருவஞ்ஞத்துவம் எனப்படும் ஒரு பெருஞ் சுடர்முடி. அளவெனினும் அலகெனினும் ஒக்கும். அம்பலம் - சிதா காசம். ஆடல் - ஐந்தொழிற் கூத்து. அது,

"தோற்றந் துடியதனிற் றோயுந் திதியமைப்பிற்
சாற்றியிடு மங்கியிலே சங்கார—மூற்றமா
யூன்று மலர்ப்பதத்தே யுற்ற திரோதமுத்தி
நான்ற மலர்ப்பதத்தே நாடு"

என்பதனானறிக. மற்று இவ்விறைநடனம் திருவஞ்செழுத்து அருட் கூத்துமாம். அது,

"சேர்க்குந் துடிசிகரஞ் சிக்கனவா வீசுகர
மார்க்கும் யகர மபயகரம்—பார்க்கிலிறைக்
கங்கி நகர மடிக்கீழ் முயலகனார்
தங்கு மகரமது தான்"

என்பதனானுணர்க. இத்திருக்கூத்தானே ஆன்மாவுக்கு மும்மல நீக்க மெனப்படும் பாசவிடுதியும், சிவத்துவ விளக்கமெனப்படும் பரமானந்த அனுபூதியுங் கைகூடும். அது

"மாயை தனையுதறி வல்வினையைச் சுட்டுமலஞ்
சாய வமுக்கியரு டானெடுத்து—நேயத்தா
லானந்த வாரிதியி லான்மாவைத் தானழுத்த
றானெந்தை யார்பாதந் தான்"

என்பதனானறிக. இவ்விருதய கமல சிற்சபாநடன தகரவித்தை வரலாறும், இதனையுபாசிக்கும் முறையுஞ் சாந்தோக்கியங் கைவல்லியம் முதலிய உபநிடதங்களிற் கண்டுகொள்க. இன்னும் இவ்விருதய புண்ட

ரீக இயல்பு சிறப்பாற்ருன் விரித்தெடுத்தோதுமாறு ஆகமங்களுட் காண்க.

இறைவன் தன்னியல்பெனப்படுஞ் சொரூப இலக்கணமும் பொதுவியல்பெனப்படுந் தடத்த இலக்கணமும் உடையனென வேதாகமங்கள் ஓதுதலின், அவற்குத் தன்னியல்பெனப்படுஞ் சொரூபவிலக்கணம் இதுவென்பார் உலகெலாமுணர்ந்து ஓதற்கரியவனென்றும், பொதுவியல்பெனப்படுந் தடத்த இலக்கணம் இதுவென்பார் நிலவுலாவிய நீர்மலி வேணியன் அலகில்சோதியன் அம்பலத்தாடுவான் என்றும் ஓதியருளினர். நிலவுலாவிய நீர்மலி வேணியுடைய சதாசிவத் திருமேனிமேலுள்ள அருவ தத்துவங்களையுங் கீழுள்ள உருவ தத்துவங்களையும் வியாபித்து நிற்குஞ் சிறப்பு நோக்கி, அதனை முற்கூறியருளினர். அங்ஙனங்கூறினும், அலகில் சோதியனுய் நின்றே நிலவுலாவிய நீர்மலிவேணியனுய் அம்பலத்தாடுமென்பது கருத்தாம். இனி இவ்விரண்டு திருமேனிகளோடும் அம்பலத்தாடுவானென உடம்பொடு புணர்த்து வினைமுதலாக ஓதிய மகேசத் திருமேனியுங் கூட்ட, தடத்தத் திருமேனி மூன்ருமாறு காண்க. சேக்கிழார் முனிவர், தாம் "உலகெலா முணர்ந் தோதற் கரியவன்" என்று நடராசப்பெருமான் சிதாகாசத் திருவம்பலவெளியில் அசரீரி வாக்கான் உபதேசித்தருளக் கேட்டு மெய்யுணர்ந்து இவ்வருட்காவிய விலக்கியஞ் செய்கின்றமை உலகிற்கு உணர்த்தும்பொருட்டு, அதனை முதலடியாக நிறீஇ இங்ஙனம் மங்கல வாழ்த்துக் கூறியருளினர். அது,

"அருளி னீர்மைத் திருத்தொண் டறிவருந்
தெருளி னீரிது செப்புதற் காமெனின்
வெருளின் மெய்ம்மொழி வானிழல் கூறிய
பொருளி னுகு மெனப்புகல் வாமன்றே"

என ஆசிரியர் தாமே பாயிரத்துட் கூறியவாற்ருனு முணர்க. அறிவரும்-அறிய அரும். வெருளின் மெய்ம்மொழியாகிய வானிழலென்க. வானிழல் - அசரீரித் திருவாக்கு. ஆமென்பது - குறிப்புமொழியாய் ஆகாமை விளக்கி நின்றது; "உடம்போ டுயிரிடை நட்பு" என்புழிப் போல.

இங்ஙனம் ஞானம் முதலிய நான்கு நெறியினுமொழுகி வழிபடற் குரிய சொரூபமும், நிட்களமும், நிட்களசகளமும், சகளமுமென்னும்

நான்கும் இதன்கட் பொருந்தி விளங்கக்கொண்டு ஆசிரியர் மங்கலங் கூறியருளியது, தாம்பாட எடுத்துக்கொண்ட செந்தமிழ்க்காவிய இலக்கியத் தலைவரான உண்மைநாயன்மார் இந்நான்கு திருமேனியும்பற்றி நாற்பாத நெறியினுமொழுகிப் பரமுத்தி பதமுத்திகள் தலைக்கூடிய பெற்றிமை விளக்கல் நோக்கியென்க. இங்ஙனமாகலின், இம்மங்கலத் திருப்பாட்டு வாழ்த்து வணக்கம் அடிப்பாடாக வருபொருள் தெரித்தலாயவாறு காண்க.

இத்திருப்பாட்டிற்கு இவ்வாறன்றி விஞ்ஞானகலர் முதலிய மூவருக்கும் அருள் வழங்குதற்குரிய இறைவன் அருவுருவத் திருமேனிகள் பொருளாகக்கொண்டு உரைப்பாருமுளர். அவர் அலகில் சோதியன் என்பதனை அம்பலத்தாடுவானுக்கு விசேடணமாக்குப. அதனால், அருவம் அருவுருவம் உருவம் என்னும் மூவகைத் தடத்தத் திருமேனிகள் பெறப்படுதலன்றி அகண்டாகார நித்தவியாபக சச்சிதானந்த சொரூபத் திருமேனி பெறப்படாமையானும், அகில லோகைக நாயகனான நடராசப்பெருமானைச் சகலர் வழிபடற்குரிய மூர்த்தியென்றல் ஏலாமையானும், அது பொருளன்மையுணர்க. இனி உலகெலாமுணர்ந்தோதற்கரியவன் என்பதற்குத் "திருவருட்குறிச் சிவஞானத்தால் இவ்வியல்பினரென அறிஞரோதி யுணர்ந்தும் அவ்வியல்பெடுத்து ஓதுதற்கரியவன்" என்று ஆறுமுகமுனிவர் உரைத்தார்.

"மறையினா லயனான் மாலான் மனத்தினான் வாக்கான் மற்றுங்
குறைவிலா வளவி னாலுங் கூறொணா தாகி நின்ற
இறைவனார் கமல பாதம்"

என எடுத்தோதிய ஆசிரியர் சகலாகமபண்டிதர், பின்னர்

"அருளினா லாக மத்தே யறியலா மளவி னாலுந்
தெருளலாஞ் சிவனை ஞானச் செய்தியாற் சிந்தை யுள்ளே
மருளெலா நீங்கக் கண்டு வாழலாம் பிறவி மாயா
இருளெலா மிரிக்க லாகு மடியரோ டிருக்க லாமே"

என்று கூறியருளினர். இதனானே, இறைவனியல்பு சிவஞானத்தால் உணரப்பட்டு அதனானே ஓதவும் படுவதா மென்பது போதருதலின், அவ்வுரை போலியாமென்றொழிக. இனி யுணர்தற்கும் ஓதற்கும் அரிதாம் பொருள் சூனியமாமாலென ஆசங்கை நிகழ்ந்துழி, ஆண்டு

உணர்ந்து ஓதற்கரியன் என்ற கருத்துப் பசுபாசஞானங்களால் முறையே சிந்தித்தற்கும் விவகரித்தற்கும் எய்தா நுண்ணியன் என்பதாகலின், தன்னருளானே உள்ளத்தின்கண் வைத்து ஆராயலுறுவார்க்கு முதற்பொருள் அவ்வாற்றானே உணரவும் ஓதவும் படுவதாகியுள்ளதொரு சிவசத்தாமென விடுப்பார், 'அலகில் சோதியன் அம்பலத் தாடுவான் - மலர் சிலம்படி வாழ்த்தி வணங்குவாம்' என்றாரென்பது. இது,

> "பாசஞா னத்தாலும் பசுஞானத் தாலும்
> பார்ப்பரிய பரம்பரனைப் பதிஞானத் தாலே
> நேசமொடு முள்ளத்தே நாடி"

என்னுஞ் சிவஞானசித்தியினானும் உணர்க.

ஆறுமுகமுனிவர் இவ்வாறே ஆசிரியர் சொற்பொருட் பெற்றி தேற மாட்டாது, ஆண்டாண்டுப் போலியாக உரைத்தனவும், வழுமலிதர உரைத்தனவும் மிகப்பலவாம். ஆறுமுக முனிவர் உரைகூறாதொழிந்த புராணங்கள் சிலவற்றிற்கு இராமலிங்கர் என்பாரொருவர் திருவிருத்தங்கள் தோறும் ஆசிரியர்கொண்ட சொற்பொருள் விருத்தமுற உரைகூறி முடித்தார். இவரெல்லாந் தொல்காப்பியம் முதலிய நல்லியற்புலமை நிரம்பி உரைகூறினாரல்லரென்பதற்கு இவர் வாக்கிய இயல் வழுக்களே உறுசான்றாமென்க. இனி வடலூர் இராமலிங்கர் 'உலகெலாம்' என்பதற்குப் பலவாறு விகற்பித்து உரைத்தன சொல்வழு விராய் வேதாகம உரையளவை மாறாகலின், உலகங் கொள்ளாதென்க.

> "எள்ளாத வெண்ணிச் செயல்வேண்டுந் தம்மொடு
> கொள்ளாத கொள்ளா துலகு"

திருவாசகச் செந்தமிழ் அருமறைக்கு இவர்போல ஒருவர் போலியும் பொய்யும் மலிய உரையொன்று எழுதி வெளியிட்டார். இவை கையறியா மாக்கள் புல்லவையினன்றிச் செந்தமிழ் இலக்கிய இலக்கண வைதிக சைவநூலுரைகளை முற்றக் கற்றுவல்ல முதுவோர் நல்லவையிற் செல்லப் பெறாவென்பது. இவரிவ்வாற்றால்,

> "பொய்படு மொன்றோ புனைபூணுங் கையறியாப்
> பேதை வினைமேற் கொளின்"

என்னும் பொய்யாமொழிக்கு இலக்கியம் புதுக்கினாரென்க. இது செந்தமிழ்ச் சந்தச்செய்யுளானே வேதாகம அருணெறி யறிவுறுக்கும் உத்

தம காவியமாகலின், தொல்காப்பியம் முதலிய பழைய இலக்கணங் களும், தேவாரம் திருவாசக முதலிய திருமுறை யிலக்கியங்களும், திருக்குறளிலக்கியமும், பத்துப்பாட்டு எட்டுத்தொகை முதலிய சங்க இலக்கியங்களும், வடமொழி வைதிக சைவ நூல்களும் மரபாற் கற்று வல்ல ஆசிரியரே இதன் மெய்ப்பொருள் உரைக்க வல்லுநரென்க.

பெரியபுராணம் பரமசிவன் அருட்பத்தி ஞானநெறிச் சென்ற வித்தகரான உண்மை நாயன்மார் கருமஞான அருளொழுக்கம் சரித் திரத்தில் வைத்துணர்த்துந் திருவருட் காவியமாம். இதன்கண் அகம் புறமென்று இருதிறத்துப் பதினாற்றிணை வழக்கும், மனு முதலிய ஆன் றோர் வகுத்த வருணஆச்சிரம வழக்கும், புறநெறிச்சமயப் பூர்வ பக்க வழக்கும், அகநெறிச்சமய ஆசாரவழக்கும், வைதிகசைவ மெய்ந் நெறி வழக்கும், உண்மைச் சரியை வழக்கும், உண்மைக்கிரியை வழக் கும், உண்மையோக வழக்கும், உண்மைஞான வழக்கும், குருலிங்க சங்கம வழிபாட்டு வழக்கும் ஒட்பமும் திட்பமும் நுட்பமும் பொருந்தி உவமனின்றாமாறு ஓதப்பட்டன. இஃது இப்பெருமையெல் லாம் ஒருங்குடைத்தாய்ச் சிறப்புறுதலினன்றே இதனைத் திருச்சிற்றம் பல மகாசன்னிதி யரங்கிருந்து கேட்ட வளவர்பிரானாகிய அநபாய வேந்தன் இஃது அருண்மொழியென்று கொண்டு இஃது இயற்றியரு ளிய சேக்கிழாருக்கு அருண்மொழித் தேவரென்றுஞ் சிறப்புப்பெயர் வழங்கி இதனைப் பதினொரு திருமுறைகளோடு ஒன்றென வைத்துப் பன்னிரண்டாந் திருமுறையென்று போற்றினானென்பது.

இனி இக்காலத்து ஒருசிலர் "சேக்கிழார் தெய்வப்புலமை நிரம்பி இதுபாடிற்றிலர்" என்றும், "பலநூலாய்ந்த புலமை வலி யானே இது பாடினார்" என்றும், "அவர்பாடிய நாயன்மார் சரித்திரங் கள் ஓரோரிடங்களிற் குறைவுற்றன" என்றும், "அக்குறைகளை நாங் கண்டறிந்தாம்" என்றும் "அவற்றையும் ஆண்டாண்டுக் கூட்டிப் பொருள்கூறல் வேண்டும்" என்றும், தமக்கு வேண்டியவாறு பிதற்றித் திருமுறை வரம்பழிப்பர். மிக்குக்

"களித்தானைக் காரணங் காட்டுதல் கீழ்நீர்க்
குளித்தானைத் தீத்துரீஇ யற்று"

எனத் தெய்வப்புலமைத் திருவள்ளுவநாயனார் புல்லறிவாண்மையுள் ஒதியருளுதலின், இந்நீரரைக் காரணங் காட்டித் தெளிவித்தல் கூடா

தாகலானும், வைதிக சைவ வரன்முறை போற்றுந் தமிழ் நல்லாசிரியர் வழிப்பட்ட நன்மக்கள் இவர் பிதற்றுரையாற் பேதுறுராகலானும், இவர் புல்லறிவுரை களைந்து மெய்ப்பொருள் தேற்ற வேண்டிற்றில மென்க.

இது முதற்றொடங்கி நமிநந்தியடிகள் புராணமீறாக ஒருகாண்டமாகவும், ஆளுடைய பிள்ளையார் புராணமுதலாக வெள்ளானைச் சருக்கமீறாக மற்றொரு காண்டமாகவும் வகுக்கப்பட்டது. இக்காண்டங்களுட் சருக்கங்கள் பதின்மூன்றாகப் பிரித்து முறைதெரிக்கப் பட்டன. இதன் திருவிருத்த முழுத்தொகை நாலாயிரத்து இருநூற்று ஐம்பத்துமூன்று.

இதன்கண் மாமறையோர் மரபில் வந்தவதரித்த நாயன்மார் புராணம் பன்னிரண்டு. சிவமறையோர் மரபில் வந்தவதரித்த நாயன்மார் புராணம் இரண்டு. மாமாத்திர வேதியர் மரபில் வந்தவதரித்த நாயனார் புராணம் ஒன்று. முடிமன்னர் மரபில் வந்தவதரித்த நாயன்மார் புராணம் ஆறு. குறுநிலமன்னர் மரபில் வந்தவதரித்த நாயன்மார் புராணம் ஐந்து. வணிகர் மரபில் வந்தவதரித்த நாயன்மார் புராணம் ஐந்து. வேளாளர் மரபில் வந்தவதரித்த நாயன்மார் புராணம் பதின்மூன்று. இடையர் மரபில் வந்தவதரித்த நாயன்மார் புராணம் இரண்டு. சாலியர், குயவர், தயிலவினையாளர், பரதவர், சான்றார், வண்ணார், சிலைமறவர், நீசர், பாணர் முதலிய மரபுகளில் வந்தவதரித்த நாயன்மார் புராணங்கள் ஓரோவொன்று. திருமரபு குறித்துரையா நாயன்மார் புராணம் பதின்மூன்று. திருக்கூட்டந்தன்னில் திருப்பதியறிந்த நாயன்மார் புராணம் இரண்டு. திருமரபறிந்த நாயன்மார் புராணம் இரண்டு. திருப்பேரறிந்த நாயன்மார் புராணம் ஒன்று. திருமரபு தெரியாத நாயன்மார் புராணம் ஏழு. ஊரறியாத நாயன்மார் புராணம் ஏழு. பேரறியாத நாயன்மார் புராணம் எட்டு. இறுதி யிலக்கங்கண்ட நாயன்மார் புராணம் ஒன்று. எண் இத்தனை யென்றறியாத நாயன்மார் புராணம் எட்டு. ஈண்டுக் கூறிய வகைகட்குப் பெயர் வரலாறு புராணத்துள் உற்றுணர்ந்து கொள்க. மற்றுப் புராண வரலாற்றுள் இவை வெளிப்படையாம்.

திருத்தொண்டத்தொகையுட் போந்த நாயன்மார்களுட் குருவருளான் வீடுபேறு தலைக்கூடினார், ஆளுடையபிள்ளையார், திருநாவுக்கரசர்

முதற் பதினொரு திருப்பெயர். சிவலிங்க வழிபாட்டால் வீடுபேறு தலைக்கூடினர், எறிபத்தர், கலையர் முதல் முப்பது திருப்பெயர். திருவேட வழிபாட்டான் வீடுபேறு தலைக்கூடினர், திருநீலகண்டர், இயற்பகையார் முதலாகப் பத்தொன்பது திருப்பெயர்.

அற்றே லஃதங்ஙனமாக; சேக்கிழார் திருவருட்புலவரன்றே! இவர்க்கு நாயன்மார் சிலர் மரபு, ஊர், பெயர் அறியலாகாதது என்னையெனின்,—திருவருள்காட்டிய நெறியானே சேக்கிழார் திருத்தொண்டர் புராணம் பாடியருளினராதலின், அது கடாவன்றென்க.

"அருளி னீர்மைத் திருத்தொண் டறிவருந்
தெருளி னீரிது செப்புதற் காமெனின்
வெருளின் மெய்ம்மொழி வானிழல் கூறிய
பொருளி னாகு மெனப்புகல் வாமன்றே"

"வெறியேர் பொழிற்சண் பையர்வேந்தர் மெய்ப்பா சுரத்தைக்
குறியே றியவெல்லை யறிந்துகும் பிட்டே னல்லேன்
சிறியே னறிவுக் கவர்தந்திருப் பாதந் தந்த
நெறியே சிறிதியா னறிநீர்மைகும் பிட்டே னன்பால்"

என ஆசிரியர் தாமே ஓதிய திருப்பாட்டுக்களானும் இது கடைப்பிடிக்க. அஃதேல், திருவருள் நாயன்மாருட் பலர் மரபு ஊர் பெயர் சேக்கிழாருக்குக் காட்டிச் சிலர் மரபு ஊர் பெயர் அவருக்குக் காட்டாதொழிந்தது என்னையெனின்,— நம்பியாரூரர் திருத்தொண்டத் தொகை அருளிச்செய்தது திருவருள் காட்டிய வழியானென்பது யாவர்க்கும் ஒப்ப முடிந்த பொருளாம். அத்திருவருள் சிவபிரான் திருவருளானே வீடுபேறு தலைக்கூடிய நாயன்மார் பின்னையுகத்தில் வாதவூரடிகள் முதற் பிறருமுளராகவும், அறுபத்துமூன்று திருப்பெயரையே தெரிந்துகொண்டு அவர்க்குக்காட்டித் திருத்தொண்டத் தொகை பாடுவித்தருளியது, யாதுகாரணம் பற்றியென்று வினவுழிப் படும் விடையே ஈண்டும் விடையாமென்றொழிக.

இனித் திருத்தொண்டத்தொகையுட் போந்த அறுபது தனித் திருப்பேர் புராணங்களோடு அத்திருத்தொண்டத்தொகை தந்தருளிய நம்பியாரூரர், அவர் தந்தையார் சடையனர், அவர் தாயார் இசைஞானியார் தம்மையுங் கூட்டத் தனித்திருப்பேர் புராணம் அறுபத்துமூன்று

மாறும், அவ்வறுபத்து மூன்று புராணங்களோடு திருக்கூட்டப்புராணம் ஒன்பதுங்கூட்டப் புராணமுழுத்தொகை எழுபத்திரண்டாமாறும், கண்டுகொள்க.

இனித் திருவருள் திருத்தொண்டத் தொகையுட்போந்த நாயன்மார் முன்னைவரலாறியாதுஞ் சேக்கிழார் நாயனார்க்குக் காட்டிக் கூறுவித்தருளாதாயிற்று. மற்றது அத்திருத்தொண்டத் தொகைப் பதிகம் அருளிச்செய்த திருநாவலூரார் பெருமானார் வரலாறு மாத்திரம் அவர்க்குக் காட்டிக் கூறுவித்தருளிற்று. இவ்வண்ணமருளிய திருக்குறிப்பு யாதெனில்,—நன்று வினாயினாய்: திருத்தொண்டத் தொகையுட் போந்த நாயன்மார் முன்னை வரலாறுகள் தனித்தனி கூறப்புகின் அளவுபடாமையானும், அவை கூறாமையாற் பெரியபுராணத்து அவ்வவர் சரித்திர ஒழுக்க ஆராய்ச்சிக்கு நேருங்குறையொன்று இன்மையானும், அது அந்நாயன்மார் முன்னை வரலாறுகள் சேக்கிழார் நாயனாருக்குக் காட்டிக் கூறுவித்தருளாதாயிற்று. மற்று நம்பியாரூரர் புராணம் அத்திருத்தொண்டர் புராணத்திற்கு உபோற்காதப் பிரகரணமாய் அளவுட்பட்டு நிற்குஞ் சிறப்புடைமையான், அவர் முன்னை வரலாற்றினை மாத்திரம் அது சேக்கிழார் நாயனார்க்குக் காட்டிக் கூறுவித்தருளுவதாயிற்று. இஃது என்சொல்லிய வாறோவெனின்,—திருத்தொண்டத் தொகையுட்பட்ட நாயன்மார் பலர் சாதி குலம் பிறப்பாற் சிறந்தாரல்லர்; சாதி குலம் பிறப்பாற் சிறந்த நாம் அவர்தஞ் சரித்திரங்கேட்டு வியப்புறக்கடவ மாவதல்லது அவர்தம்மை வழிபடக்கடவமாவம் அல்லேமென்று உலகத்தார் தம் புல்லறிவால் அவமதித்து நிரயத்திற்காளாவர்; திருக்கைலாயக் கோயிலிற் சீகண்ட சிவபெருமானுக்கு அணுக்கத்தொண்டராயமர்ந்த ஆலாலசுந்தரர் சிவத்துவிசவேதியர் திருமரபில் வந்தவதரித்துச் சிவபிரானால் தடுத்தாட்கொள்ளப்பட்டு அவர் அடியெடுத்துக் கொடுத்தருள,

"தில்லைவா ழந்தணர்த மடியார்க்கு மடியேன்
திருநீல கண்டத்துக் குயவனார்க் கடியேன்"

என்றிவ்வாறு தனித்தனி திருத்தொண்டர் பெயரெடுத்தோதி அவர் அடியார்க்கெல்லாந் தாமடியாரென்று சேவைசெய்தருளிய முறைகேட்பின், அவ்வுலகர் பொய்ம்மாயச் சாதி குலம் பிறப்புத் தருக்கற்று அவ்

வடியர் மெய்யருள் அடிமைபேணி உய்திகூடுதல் ஒருதலையாமென்று கடைப்பிடித்துத் திருவருள் அங்நம்பியாரூரர் முன்னை வரலாறு மாத்திரையே எடுத்துச் சேக்கிழார்க்குக் காட்டிப் பாடுவித்தருளியது என்றவாறுமென்க.

உமாபதிசிவாசாரியர் பெரியபுராண மகிமை வரலாறெல்லாம் இனிது நனி விளங்குமாறு "திருத்தொண்டர் புராணவரலாறு" எனப் பெயர்தந்து ஒரு நூல் இயற்றியருளினர். உமாபதிசிவாசாரியர் அதுவேயுமன்றித் திருத்தொண்டர் சரித்திரம் எளிதினறியும் பொருட்டுத் "திருத்தொண்டர் புராணசாரம்" எனவும் ஒருநூல் இயற்றியருளினர்.

சிவஞானயோகிகள் இத்திருத்தொண்டர் திருநாமங்களைப் பத்தியோடு என்றும் பாராயணஞ் செய்வார்க்கு உபகாரமாகத் "திருத்தொண்டர் திருநாமக்கோவை" எனக் கலிவெண்பாவால் ஒரு நூல் இயற்றியருளினர். திருத்தொண்டத் தொகையினையும் இத்திருத்தொண்டர் திருநாமக்கோவையினையும் 'மந்திரமாகக்கொண்டு பத்தியோடு நித்தலும் பாராயாணஞ் செய்வோர் கைதவமும் புல்லறிவுங் கற்பனையும் மையலுந்தீர்ந்து அத்துவிதாநந்த அகண்ட பரிபூரணத்துள் நித்தியமாக வாழ்தல்' ஒருதலையாம். திருத்தொண்டர் திருநாம பாராயண வழிபாட்டிற்குத் திருத்தொண்டத் தொகையே அமைவதாகவும், சிவஞான யோகிகள், அவர் திருநாமக்கோவை வேறுசெய்தருளியது எற்றுக்கெனின்,--திருத்தொண்டத் தொகையுள் அத்திருத்தொண்டத் தொகை திருவாய்மலர்ந்தருளிய சமயாசாரியரான திருநாவலூரர் பெருமானும், அவர் தந்தை தாயராகிய சடையனர் இசைஞானியாரென்பாரும் அடங்காமையின், அவர்தந் திருநாம பாராயணமும் உடனெய்தல் வேண்டிச் சிவஞானயோகிகள் திருத்தொண்டர் திருநாமக்கோவையென்று அங்ஙனம் வேறுநூல் அருளிச்செய்தாரென்க.

இனித் "திருமுறைகண்ட புராணம்", அறுபான் மும்மை நாயன்மார் பரிபூரணமெய்திய "திருநக்ஷத்திரக்கோவை", திருப்பதிகம் பெற்ற "திருப்பதிக்கோவை", "திருப்பதிகக்கோவை"யென்பன திருமுறை யாராய்ச்சிக்கு இன்றியமையாத நூல்களாம். இவை அருளிச்செய்த பெரியார் திருநாமம் புலனாகவில்லை. இவை அருளிச்செய்தார் உமாபதி சிவாசாரியர் என்பாருமுளர்.

## திருப்புகழ்

இஃது அறுமுகக்கடவுள் திருவருட் செல்வரான அருணகிரிநாதர் அருளிச்செய்தது. இது அறுமுகக்கடவுள் திருப்புகழைப் பொருளாகக் கொண்டமையின், திருப்புகழென்று அங்ஙனம் வழங்கப்படா நின்றது. திருப்புகழ் என்பது - திருப்புகழை யுடையதெனப் பிரபந்தத்தின்மேல் நிற்றலின், அன்மொழித்தொகை. யாவர் திருப்புகழென்னும் அவாய் நிலைக்கண் அறுமுகக்கடவுள் திருப்புகழென்பது தானே போதருமென்க. இஃது சந்தத்தொடைச் செந்தமிழ்த் திருப்பாட்டுக்களாற் சிறக்குந் திவ்விய பிரபந்தம். இது சொற்சுவை பொருட்சுவை மிக நிரம்பியது. இது அறுமுகக்கடவுள் திருப்படை வீடுகள் மேலதாயும் பொதுவாயும் விளங்கும். இத்திருப்புகழ் பதினாறுயிரமென்பது,

> "அருணகிரி நாதர்பதி னாறு யிரமென்
> றுரைசெய் திருப்புகழை யோதீர்—பரகதிக்கோ
> ரேணி யருட்கடலுக் கேற்ற மனத்தளர்ச்சிக்
> காணி பிறவிக் கரம்"

என்னும் ஆன்றோர் வாக்கான் அறியப்படும். இஃது அருட்பாவாகலின், முருகக்கடவுள் நித்திய நைமித்திக ஆராதனைப் போழ்தினெல்லாம் அப்பிரான் மந்திரமொழி போலக்கொண்டு பாராயணஞ் செய்யப்படுகின்றது. முருகக்கடவுள் திருவடிப் பத்திஞான வான்பயிர் வளர்த்தற்கு இது சாலச்சிறந்த சந்தப் பிரபந்தமாம். இத்திருப்புகழ் ஞானமிர்தம் விருப்புடன் ஓதல் கேட்டல்களான் நுகர்தல்செய்து அறுமுகக்கடவுள் திருவருட் செல்வராய் வாழும் இம்பர் மாநிலப்புலவர் அறிவில் அக்கட லமிர்தம் உண்டு சுவர்க்கத்தில் வாழும் புலவர்களைப் பொருளாகப் போற்றல்செய்யமாட்டார். இவ்வருணகிரிநாதர் இதுவேயன்றித் திருவகுப்பு, கந்தரலங்காரம், கந்தரனுபூதி முதலிய பிரபந்தங்கள் வேறு பலவும் தமிழுலகுய்ய அருளிச்செய்த பெரியார். திருவருட்பாவாதல் ஒப்புமையானே திருப்புகழ் வரலாறு திருமுறை வரலாற்றின் இறுதிக்கண் தந்துகூறினும்.

## நாலாயிரப்பிரபந்தம்

திருமால் திருவருட் செல்வர்களான பெரியோர் தம் பெருமாள் திருவடித் தாமரைகட்கு அன்பாற் சாத்திய பாமாலைகள், நாலாயிரப்

பிரபந்தமென வழங்கப்படும். சுருதி மிருதி புராண இதிகாசங்களில் நாராயணக் கடவுளைப்பற்றி ஓதிய வசனத்தொகுதிகளின் செம்பொருள்களைத் தமிழுலகம் அறிந்துய்யத் திருமால் திருவடித் தொண்டராகி மெய்யுணர்ந்த ஆழ்வார்கள் இங்ஙனஞ் செந்தமிழ்ப் பிரபந்தமாக அருளிச்செய்தார். வைணவப் பெரியோர் இவை தம்மைத் தமிழ்வேதமென்று அங்ஙனம் வழங்குவர். அவருள் ஒருசாரார் இந்நாலாயிரப் பிரபந்தமே ஒப்புயர்வில் திராவிட வேதமெனக் கொள்ப. மற்றொரு சாரார் வடமொழி மாமறைகளே ஒப்புயர்வில் வேதமெனக் கொள்ப. இம்முறையானே முன்னையோர் தென்கலை வைணவர்களெனவும், பின்னையோர் வடகலை வைணவர்களெனவும் இருபாலராயினர். அங்ஙனமாயினும், நாலாயிரப் பிரபந்தம் திருவருட்பாக்களான தமிழ்வேதமென்றற்கண் வைணவரெல்லாரும் ஒத்த கருத்துடையரே யென்பது. நாலாயிரப் பிரபந்தம் இங்ஙனந் திருவருட் சுருதியாதலின் திருமால் ஆராதனையினும் ஏனைக் கர்மானுட்டானங்களினும் அவை தம்மை வைணவர் திருமந்திரமாகக் கொண்டு பாராயணஞ் செய்ப. இப்பிரபந்த ஆசாரியரான ஆழ்வார் திருவுருக்களைத் திருமால் சமயத்து ஆன்றோர் திருமால் திவ்வியத் தளிகளினும் வேறு புனிதத் தலங்களினும் பிரதிட்டைசெய்து அவர்க்குப் பூசை திருவிழாப் புரிந்து வழிபடுப. இப்பிரபந்த பாராயணமும் இப்பிரபந்த ஆசாரியர் திருவுருத் தாபனமும் எய்திடப்பெறாத திருமால் திருக்கோயில்கள் எவ்வித வைப்பவமுடையவேனும், திருமால் திருவருட்பொலிவு அதிக முடையவாகா வென்பது திருமால் சமயத்தர் கொள்கை.

தேவார திருவாசகங்கள் சிவபத்திஞான வான்பயிர் வளர்த்தற்குச் சைவர்களுக்கு இன்றியமையாத ஞானமிர்தமென்பது நன்மக்கட்கெல்லாம் ஒப்பமுடிந்த பொருளானாற் போல, நாலாயிரப் பிரபந்தம் திருமால் திருவடிப் பத்திஞான வான்பயிர் வளர்த்தற்கு இன்றியமையா ஞானமிர்தமென்பது நன்மக்கட்கெல்லாம் ஒப்பமுடிந்த பொருளாமென்க.

நாலாயிரப் பிரபந்தத்துள் முதலாயிரம் பெரியாழ்வார், சூடிக்கொடுத்த நாச்சியார், குலசேகரப்பெருமாள், திருமழிசைப்பிரான், தொண்டரடிப் பொடியாழ்வார் அருளிச்செய்தன. பெரியதிருமொழி திருமங்கையாழ்வார் அருளிச்செய்தது. இயற்பா - பொய்கையாழ்

வார், பூதத்தாழ்வார், பேயாழ்வார், திருமழிசையாழ்வார், நம்மாழ்வார், திருமங்கையாழ்வார், திருவரங்கத்தமுதனார் அருளிச்செய்தன. திருவாய்மொழி நம்மாழ்வார் அருளிச்செய்தது.

இனி நாலாயிரப் பிரபந்தத்திற்கு வடகலே தென்கலே வல்ல வைணவ ஆசாரியர்கள் வியாக்கியானங்கள் வடமொழி தென்மொழி விரவிய நடையாற் சிறிதாகவும் பெரிதாகவும் பற்பல செய்திட்டார். நாலாயிரப் பிரபந்தஞ் செந்தமிழ்த்தொடை சிவணிய பாவானும் பாவினங்களானுஞ் சந்த இசை பொருந்தி விளங்குந் தமிழாய் வடமொழி வேத வேதாந்தார்த்தங்களும் புராண இதிகாசார்த்தங்களும் உட்பொருளாகக்கொண்டு நடத்தலான் தமிழ்ப் புலமையோடு வடகலே வேதமுதலிய ஓதியுணர்ந்தாரே அதன்பொருள் திட்பநுட்பம் நன்குணரவல்லர். பிற்காலத்து வைணவப் புலவர் சிலர் மதாபிமானத்தான் ஆண்டாண்டுச் சிவநிந்தை பொதிந்து நூலுரைகள் செய்தார். நாலாயிரப் பிரபந்தம் மூதறிஞரான வைணவப் பெரியரால் அருளிச் செய்யப்பட்ட நற்றமிழ் நூலாகலின், அக்குற்றத்தின் மிக்க சேய்த்தாயிற்று. இனி நாலாயிரப் பிரபந்தங்களின் ஓரோரிடங்களிற் சில வுருத்திரர் திருமாலுக்குத் தாழ்ந்தவராக ஓதப்பட்டார். அவர் குணிருத்திரக்கடவுள் கூறுன விசாலாக்கன் தாணு சங்கார வுருத்திரனென்பாரே. இனி மகா ருத்திரனாகிய பரமசிவன் துரியமூர்த்தியாகலின், அவ்வாதிபகவனைப்பற்றி ஈண்டாராய்ச்சி இல்லையென்பது கூறல்வேண்டாம்.

“ வெஷ்ணவெஷு வுராணெஷு யொவகுஷ்டிர்ஷ்டிர்ஹ்ருஷ்யதெ।
ஈஷுருஷ்யாஷு ஹுரஷ்யாஷு விஹ்மெதெரேவ கெவலமு ”

என்று பராசர புராணங் கூறுதலானும், பிறவாற்றானும், அவ்வுருத்திரர் அமிசபேத விடயமாதல் வச்சிரலேபமாக நாட்டப்படுமென்க.

வைணவர்தமிழ்வேதமாதல் ஒப்புமை நோக்கி நாலாயிரப் பிரபந்த வரலாறு திருமுறை வரலாற்றைச் சார வைத்தோதினும்.

## திருக்குறள்

தமிழ்வேத ஒப்புமையினானும், சங்க இலக்கியங்களுக்குச் சிரத்தானமாகி நிற்கும் மேம்பாட்டினானும், திருமுறை யிலக்கியத்திற்குஞ் சங்க இலக்கியத்திற்கும் இடையே வைத்துத் திருக்குறள் வரலாறு

கூறலுற்றும். திருக்குறள் திருவள்ளுவநாயனுர் அருளிச்செய்த திருமுறை. இது குறள்வெண்பாவால் அருளிச்செய்யப்பட்டமையின், திருக்குறளென்ருயிற்று. திருக்குறளென்பது - திருக்குறள் வெண்பாவை யுடையதென அன்மொழித் தொகையாய் நூலிற்குக் காரணக் குறியாயிற்று.

மற்றிஃது அறம் பொருள் இன்பமென்னும் முப்பாலுடைமையால் முப்பாலூலென்றும், இருக்கு எசுர் சாமம் அதர்வணம் என நான்கவாய் முன்மறைகட்குப் பின்மறையா யெழுந்தமையின் உத்தர வேதமென்றும், தெய்வ அருளாற் பிறந்தமையின் தெய்வநூலென்றும், பொய்யாமொழியால் நடத்தலிற் பொய்யாமொழி யென்றும்,

‘வேம்புங் கடுவும் போல வெஞ்சொற்
ருங்குத லின்றி வழிநனி பயக்குமென்
ருேம்படைக் கிளவியின்’

அறம் பொருள் இன்பம், வாயுறுத்தருளிச் செய்தலின் வாயுறை வாழ்த்தென்றும், தமிழால் மறைவாய பொருள் கிளத்தலின் தமிழ் மறையென்றும், அந்தணர் அரசர் வைசியரென்னுந் துவிசர் மூவரும் ஓதுதற்குரிய சிறப்பியல்புடைய நான்மறைகளும் போலாது அந்தணர் அரசர் வைசியர் வேளாளர் என்னும் நாற்பால் வருணத்தாரும் மற்றைச் சங்கர சாதிகளுட்பட்ட நன்மக்களும் ஓதுதற்காம் பொதுவியல்புடைத்தாய் மறைபொருள் கிளத்தலிற் பொது மறை யென்றும், திருவள்ளுவராற் செய்யப்படுங் காரியமாகலின் திருவள்ளுவரென்றும் வழங்கப்படும். திருவள்ளுவர் என்பது காரியமாகிய நூலிற்கு ஆதலிற் கருத்தாவாகுபெயர். இத்திருக்குறளாசிரியர் வேதத்துப் பல இடங்களினும் 'இலைமறை காய்கள் போலப் புலப்படாதிருந்த நலம்படு பொருள்கள் எல்லாவற்றையுந் தொகுத்தெடுத்து உலகத்தார்க்குக் கொடுத்தற் காரணத்தானே திருவள்ளுவரென்றும், பாய நாலுறுதிப்பொருளெல்லாம் பாரினுள்ளார் அறிந்துய்ய பாற்பட எடுத்துக் கூறிய அருட்டலைமை யுடைமையானே நாயனுரென்றும், அறம் பொருள் இன்ப உறுதிப் பொருளியல்களைத் தமிழுலகந் தெளிந்துய்ய அருள் விநோதத்திற் கூறினமையானே தேவரென்றும், முழுதுணர்வாற் சொற்பொருள் தெரிந்து நூல்செய்து எப்பாவலர்க்கும் மேலாய் முதல்வராய் நிற்றலினுற்றுன் நால்வகைப் பாக்களுள் வைத்து வெண்பாக்களும் அவற்றுள் வைத்துக் குறள்வெண்பா

வும் முதலாய் நிற்றலின் அக்குறள் வெண்பாவானே தமிழ்நூலியற்றிய அறிவுவலி யுடைமையாற்முன் முதற்பாவலரென்றும், தெய்வ வருளா னெய்திய புலமை யுடைமையின் தெய்வப் புலவரென்றும், மலரயனே வள்ளுவனாய் மறைந்து நான்மறையின் மெய்ப்பொருளை முப்பொரு ளாகத் தருதலின் நான்முகனென்றும், தலைமக்களுக்கெல்லாந் தாய் போல முப்பாலைத் தண்ணளியாற் சுரந்தருளுதலின் மாதாநுபங்கி யென்றும், அறனும் பொருளும் இன்புமாந் தெளிதேனை அரிறபச் சொரிதருஞ் செந்நாப் போதுடைமையின் செந்நாப் போதாரென்றும், அறத்துப்பாலும் பொருட்பாலுங் காமத்துப்பாலுந் தனித்தனி கொண்டு நூல்களியற்றிய சிறுநாவலர்கள் வியப்புற அம்முப்பாலும் ஒருங்குகொண்டு அறம் பொருள் இன்பம் வீடென்னும் நான்கு பொரு ளும் அடங்கத் தமிழ்வேதநூல் செய்தலின் பெருநாவலரென்றும் போற்றப்படுகின்முர். திவ் - விளையாட்டு. மாதாநுபங்கி - மாதாவைப் போலும் ஒழுக்கினன்.

இவ்வுத்தரவேதங் கடைச்சங்கத்தார் காலத்து அவதரித்து அவ ரரங்கேறியதென்பதற்கு அச்சங்கப் புலவர்களெல்லாந் தனித்தனி இதன் பெருமை நிலையிட்டு இயற்றிய சிறப்புப்பாயிரச் செய்யுட்களே அமையுஞ் சான்றும். அக்காலத்துக் கடைச்சங்கத்திருந்து இது கேட்ட பாண்டியன் உக்கிரப் பெருவழுதி. பாண்டியனுங் கடைச் சங்கப்புலவரும் வணங்கிக் கீழிருந்து கேட்பத் தெய்வப்புலமைத் திருவள்ளுவநாயனர் உருத்திரசன்மனரோடு சங்கப்பலகை வீற் றிருந்து திருக்குறள் அரங்கேற்றினர். அது,

“ திருத்தகு தெய்வத் திருவள் ளுவரோ
டுருத்தகு நற்பலகை யொக்க—விருக்க
உருத்திர சன்ம ரெனவுரைத்து வானி
லொருக்கவோ வென்றதோர் சொல் ”

என்னும் அசரீரி ஆணைவாக்கான் அறியப்படும். இஃது அரங்கேறிய பொழுது,

“ நாடா முதனான் மறைநான் முகனாவிற்
பாடா விடைப்பா ரதம்பகர்ந்தேன்—கூடாரை
யெள்ளிய வென்றி யிலங்கிலைவேன் மாறபின்
வள்ளுவன் வாயதென் வாக்கு ”

என நாமகளும்,

" என்றும் புலரா தியாணர்நாட் செல்லுகினு
நின்றலர்ந்து தேன்பிலிற்று நீர்மையதாய்—குன்ருத
செந்தளிர்க் கற்பகத்தின் தெய்வத் திருமலர்போன்
மன்புலவன் வள்ளுவன்வாய்ச் சொல் "

என இறையனரும் புகழ்ந்து உரைத்தருளினர். உக்கிரப்பெருவழுதி அரங்கிலிருந்து இதுகேட்டு உவந்து,

" நான்மறையின் மெய்ப்பொருளை முப்பொருளா நான்முகத்தோன்
முன்மறைந்து வள்ளுவனுய்த் தந்துரைத்த - நூன்முறையை
வந்திக்க சென்னிவாய் வாழ்த்துக நன்னெஞ்சஞ்
சிந்திக்க கேட்க செவி "

என்று உலகங் கைக்கொண்டு வழிபட்டோதியுய்ய இங்ஙனம் வழி பாடு கூறினன். மற்றுக் கபிலர் பரணர் நக்கீரர் முதலிய கடைச்சங் கப் புலவரெல்லாரும் ஆண்டிதனைப் பலவாறு புகழ்ந்தெடுத்துப் போற்றி இதன் தெய்வமாட்சி நிலையிட்டார். அத்திருப்பாட்டெல்லாம் ஈண் டெடுத்து உரைக்கிற் பெருகும். இதன் சிறப்புப் பாயிரமான திருவள் ளுவமாலையிற் காண்க.

திருக்குறள் உருத்திரசன்மனரும் நக்கீரனர் முதலிய சங்கப்புல வர்களுங் கேட்ப அரங்கேறியது வாய்மையே. அஃது அரங்கேறுதற்கு முன்னர் நக்கீரனர் இயற்றிய களவியலுரையுள் அஃது மேற்கோளாக எடுத்துக் காட்டப்படுதல் பொருந்துமா றென்னையெனின், திருக்குறள், நக்கீரனர் களவியலுரை இயற்றுமுன்னரே அவதரித்து உலகினிலவிப் பின்னர்ச் சங்கமிரீஇற்றுதலின், அவ்வெடுத்துக் காட்டுப் பொருந்த முடையதேயாம்; காலமாறுபாடு ஆண்டுப் போதருமாறு இல்லையென்க. அற்றே லஃதாக; வாகீசர் " கனியிருப்பக் காய்கவர்ந்த கள்வனேனே" என்று திருப்பதிகத்தில் அருளிச்செய்தார். நாயனர் " கனியிருப்பக் காய்கவர்ந்தற்று " என்று உத்தரவேதத்தில் அருளிச்செய்தார். இவைதம்முள் யாது முன்னவதரித்துப் பின் மேற்கோளாயதெனின்,— வாகீசர் கடைச்சங்கமிரீஇய முடத்திருமாறன் காலத்து விளங்கிய சமயாசாரியர். நாயனர் கடைச்சங்கத்து இறுவாயின் அதனை நடாத் திய உக்கிரப்பெருவழுதி காலத்து விளங்கிய தெய்வப்புலவர். ஆக லின், " கனியிருப்பக்காய்கவர்ந்த கள்வனேனே " என்றெழுந்த வாகீ

சர் திருவாக்கே முன்னவதரித்துத் திருக்குறளின் மேற்கோளாய தென்று விடுக்க.

திருக்குறள் தெய்வ மொழியான உத்தரவேதமாகலின், உத்தம மறைநூலென்க.

“ நாலடி நான்மணி நானாற்ப தைந்திணைமுப்
பால்கடுக்ங் கோவை பழமொழி—மாமூல
மின்னிலைசொல் காஞ்சியுட னேலாதி யென்பவே
கைந்நிலைய வாங்கீழ்க் கணக்கு ”

என்னும் வெண்பாவில் எடுத்தோதப்பட்ட முப்பால் திருக்குற ளென்றுகொண்டு, திருக்குறள் பதினெண் கீழ்க்கணக்கில் ஒன்று மென்று அதனை யவற்றோடு ஒப்பிப்பர் ஒரு சாரார். திருக்குறள் பெரிய தமிழ் வேதமாதலின், அதனை நாலடி முதலிய சிறு நூல்க ளோடு உடனெண்ணித் தொகைகோடல் சாலாமையின் ஆண்டு முப் பாலென்றது திருக்குறளன்றென்று மறுத்துரையாடுவர் மற்றொரு சாரார். ஆண்டு முப்பால் திருக்குறளெனக் கொள்ளினும் ஏனையவற் றோடு ஒப்புப்பெறா வென்பது, கடைச்சங்கப்புலவர் கோவூர்க்கிழார்,

“ அறமுத னான்கு மகலிடத்தோ ரெல்லாந்
திறமுறத் தேர்ந்து தெளியக்—குறள்வெண்பாப்
பன்னிய வள்ளுவனார் பான்முறைநே ரொவ்வாதே
முன்னை முதுவோர் மொழி ”

என்று திருக்குறள் உபோற்காதத்துள் எடுத்தோதுமாறுபற்றி நன்கு தெளியப்படும். ஆண்டு முன்னை முதுவோர் மொழிகளென்றவை வட மொழியின் மனுவும் மற்றை முனிவரும் இயற்றிய தருமநூல் முத லியனவுந் தென்மொழியிற் சங்கத்தாரும் பிறருமியற்றிய நீதிநூல் முதலியனவுமாம். மற்றுத் தேவாரந் திருவாசகந் திருக்கோவை திரு மந்திரம் என்பன இறப்பில் தவத்தான் மனந்தூயராய் முக்குண அவத்தை முற்றக்கடந்து மிக்க தெய்வப் பெற்றி யெய்திய வுண்மை நாயன்மார் திருவாக்குக்களாய் நிற்றலின், அத்திருமுறைகளோடு இத்திருக்குறளுக்கு ஒப்புநேர்தல் செப்பமேயாமென்க. அற்றாகலி னன்றே, ஔவை

"தேவர் குறளுந் திருநான் மறைமுடிவு
மூவர் தமிழு முனிமொழியுங் - கோவை
திருவா சகமுந் திருமூலர் சொல்லு
மொருவா சகமென் றுணர்"

என்று அவ்வாறு எடுத்துச் செய்யுள் செய்வாளாயிற் றெனக.

தெய்வப்புலமைத் திருவள்ளுவ நாயனார் போகமும் வீடும் பொருந்து நெறியை யறிந்து மேவுதற்குரிய நன்மக்கட்கு உறுதியென இறைவனும் அவ்விறைவன் அருள்பெற்றுடையாரும் ஓதியருளிய அற முதலிய உறுதிப்பொருள் நான்கனுள் அறம் பொருள் இன்பமென்னும் மூன்றும் பற்றித் தமிழ்மறைநூல் செய்தருளினர். மற்று நாயனார் திருக்குறள் தமிழ் மறைநூலுட் சிறப்புடைய சாத்தியமாகிய வீடு கூறிற்றிலராயின், அதுதான் தெய்வமுழுநூ லாகாதெனின்,—

"தானே முழுதுணர்ந்து தண்டமிழின் வெண்குறளா
லானு வறமுதலா வந்நான்கு - மேனோருக்
கூழி னுரைத்தாற்கு மொண்ணீர் முகிலுக்கும்
வாழியுல கென்னாற்று மற்று"

"அறம்பொரு ளின்பம்வீ டென்னுமந் நான்கின்
திறந்தெரிந்து செப்பிய தேவை - மறந்தேயும்
வள்ளுவ னென்பானோர் பேதை யவன்வாய்ச்சொற்
கொள்ளா ரறிவுடை யார்"

"இன்பம் பொருளறம் வீடென்னு மிந்நான்கு
முன்பறியச் சொன்ன முதுமொழிநூன் - மன்பதைகட்
குள்ள வரிதென் றவைவள் ளுவருலகங்
கொள்ள மொழிந்தார் குறள்"

"இம்மை மறுமை யிரண்டு மெழுமைக்குஞ்
செம்மை நெறியிற் றெளிவுபெற - மும்மையின்
வீடவற்றி னுன்கின் விதிவழங்க வள்ளுவனார்
பாடின ரின்குறள்வெண் பா"

"ஒருவ ரிருகுறளே முப்பாலி னோதுந்
தரும முதலுன்குஞ் சாலு - பருமறைக
ளைந்துஞ் சமயநூ லாறுநம் வள்ளுவனார்
புந்தி மொழிந்த பொருள்"

"அறனறிந்தே மான்ற பொருளறிந்தே மின்பின்
றிறனறிந்தேம் வீடுதெளிந்தே—மறனெறிந்த
வாளார் நெடுமாற வள்ளுவனர் தம்வாயாற்
கேளா தனவெல்லாங் கேட்டு"

என முறையே நக்கீரனாரும், மாமூலனாரும், நரிவெருத்தலையனாரும், இழிகட் பெருங்கண்ணனாரும், களத்தூர்க்கிழாரும், கொடிஞாழன்மாணி பூதனாரும் முதலாயினர், நாயனர் வீடும் உளப்பட எடுத்து உறுதிப் பொருள் நான்குந் திருக்குறளுள் அருளிச்செய்தாரென்று எடுத்தோது தலின், திருக்குறள் வீடுபேற்றுறுதிப் பொருளுங் கூறிற்றோர் நூலே யாம். நாயனர் தாமருளிச்செய்த தமிழ்மறையுள் வீட்டியல் யாங்ஙனங் கூறினாரெனின், துறவறமாகிய காரணவகையாற் கூறினாரென்க. அற் றேல், வீட்டியலை ஏனை முப்பொருள்கள் போல இலக்கண வகையாற் கூறாது காரணவகையாற் கூறியது என்னையெனின்,—வீடு சிந்தையு மொழியுஞ் செல்லா நிலைமைத்தாகலின், இலக்கணவகையாற் கூறும் பான்மைத்து அன்றென்றுணர்ந்து அங்ஙனங் காரணவகையாற் கூறினா ரென்க. ஆசிரியர் தொல்காப்பியனார்

"அந்நிலை மருங்கி னறமுத லாகிய
மும்முதற் பொருட்கு முரிய வென்ப"

எனச் சூத்திரஞ் செய்ததூஉம் இக்கருத்துப் பற்றியேயாம். இனி வீடுபேற்றியல் நுதலியெழுந்த வேதாந்த சித்தாந்த நூல்களும் வீட் டியற் பொருட்டிறஞ் சிரவணம் மனனம் என்னும் இருதிறத்தால் கூடத்தமாகவுஞ் சிரவண மனன நிதித்தியாசன நிட்டையென்னும் நாற்றிறத்தாற் சொரூபமாகவுஞ் சாதனவகையாற் கூறினவேயா மென்க. திருக்குறளில் வீட்டின்சாதனஞ் சுருக்கமாகக் கூறப்பட்டது. வேதாந்த சித்தாந்த நூல்களில் விரிவாகக் கூறப்பட்டது. இதுவே தம்முள் வேறுபாடு. இங்ஙனமாகலின், திருக்குறள் அறம் பொருள் இன்பம் வீடென்னும் உறுதிப்பொருள் நான்குந் திறம்படக்கூறும் முழுநூலேயாமென்றும், நக்கீரனர் முதலியோர் அப்பெற்றி தேர்ந்தே அஃது அறமுதலிய உறுதிப்பொருள் நான்குந் தெளித் துரைக்குந் தமிழ்மறை நூலாமென்று அங்ஙனம் அதனைச் சிறப்பித் துப் பாயிரஞ் செய்தாரென்றும் உணர்க. திருக்குறள் வீடுமுளப்பட

அறம் பொருள் இன்பங் கூறுமாறு முன்னர் விளங்கத் தெரித்தும். "வீடென்பது சிந்தையும் மொழியும் செல்லா நிலைமைத்தாகலின், துறவறமாகிய காரணவகையாற் கூறப்படுவதல்லது இலக்கண வகையாற் கூறப்படாமையின், நூல்களாற் கூறப்படுவன ஏனை மூன்றுமேயாம்" என்ற பரிமேலழகர் உரையானும் மேலது துணிக. நச்சினார்க்கினியர் இப்பெற்றி தேராது அகத்தியனார் தொல்காப்பியனார் திருவள்ளுவநாயனார் தமிழான் வீடுகூறாரென்னும் பொருள்படத் தொல்காப்பியவுரையில் தமக்கு வேண்டியவாறெல்லாம் உரைத்தார்.

நாயனார் நான்கவாய உறுதிப்பொருட் பெற்றி அறத்துப்பால் பொருட்பால் காமத்துப்பாலெனு மூன்றுபாலாற் கூறுவான் தொடங்கி, உயிர்கள் போகமும் வீடும் மேவுநெறியறிந்து உய்யுமாறு அனாதிக்கண் முதனூலான் அவற்றை யோதிய ஆதிபகவனை முதற்கடவுளை வழுத்துவதாகிய மங்கலக் கடவுள் வாழ்த்தும், அம்முதற்கடவுளது ஆணையான் உலகமும், அதற்கு உறுதியாகிய அறம் பொருள் இன்பங்களும் நடத்தற்கு ஏதுவாகிய வான்சிறப்பும், அம்முதற்கடவுள் அருளிச்செய்த முதனூல் நெறியொழுகி அருந்துயர்க்குரம்பை யெனப்படும் அகப்பொருளாகிய யாக்கையுங் கரணமும் அவற்றால் துய்க்கப்படும் புறப்பொருள்களாகிய புவனமும் போகமும் நிலையாமைநாடி முற்றத்துறந்து மெய்யுணர்ந்து அவாவறுத்து முதற்கடவுள் அருட்பெற்றி தலைக்கூடினமையானே அவ்வறமுதற் பொருள்களை முதற்கடவுளருளால் உலகிற்கு உள்ளவாறு உணர்த்தவல்ல முனிவராகிய நீத்தார் பெருமையும், அங்ஙனம் அவரால் உணர்த்தப்பட்ட உறுதிப்பொருள்களுள் பொருளும் இன்பமும் போலாது, அறம் இம்மை மறுமை வீடென்னும் மூன்றும் பயத்தற் சிறப்புடைமையின் அஃதேனையவற்றின் மகிமை பெரிதுடைத்தென அதன் வலியுறுத்தலும், முறையானே பாயிரமாக முதற்கண் கூறியருளினாரென்பது. நாயனார் அறம் பொருள் இன்பங்கள் முறையே இம்மை மறுமை வீடென்னும் மூன்றும் பயத்தலும் இம்மை மறுமை யிரண்டும் பயத்தலும் இம்மையே பயத்தலுமாகிய சிறப்புச் சிறப்பின்மைகள் நோக்கி அறத்துப்பாலை முன்னும், பொருட்பாலை அதன் பின்னும், காமத்துப்பாலை இறுதியினும் முறையே வைத்து, அவற்றியல் தெரித்தற்கு அமர்ந்தருளினாரென்க. இனிப்

பொருள்தான் அறஞ்செய்தற்கும் காமந்துய்த்தற்கும் உபகாரமாதலுடைத்தாகலின், அதன் முறைவைப்புச் சிங்கநோக்கா மென்க.

இல்லறந் துறவறமென்னும் இரண்டறங்களுள் இல்லறம் இல்லாளோடுகூடி வாழும் ஒழுக்கமாகலானும், பொருளும் இன்பமுந் தனக்கு அங்கமாகக்கொண்டே இயலும் பெற்றித்தாகலானும், பொருளும் இன்பமும் வேறுதலின்றி அறத்தின்வழி நிகழும் நீரனவாய் அதனுள் அடங்கும் இயற்கையவாகும்.

"சிறப்புடை மரபிற் பொருளு மின்பமு
மறத்தின் வழிப்படூஉந் தோற்றம் போல"

என்றதூஉம் இக்கருத்துப் பற்றியேயாம். இங்ஙனம் அறத்தின்கண் அடங்கும் பொருளின்பங்களை நாயனர் வேறுபிரித்துப் பொருட்பாலென்றுங் காமத்துப்பாலென்றுந் தனித்தனி நிறீஇயது, பொருளின் ஈட்டுதலும் அதன் பாதுகாப்பும் அதனுன் அறஞ்செய்தலும், அரசன் காவலை நடாத்தும் முறைமையென்னுந் துணைக்காரணம் பற்றியல்லது செல்லாமையின், அன்ன இயற்கைகளுடைய அப்பொருண்மேலிட்டு அரசனீதி விரித்து முறைபெறக் கூறல் வேண்டியும், உருவுந் திருவும் பருவமுங் குலனுங் குணனும் அன்பும் முதலியவற்றுல் தம்முளொத்த பான்மையுடைய தலைமக்களான அறக்கிழவனுங் கிழத்தியும் ஓர்காலத்து ஒரு பொருளான் இம்பரின் ஐம்புலன் நுகர்தற் சிறப்புடைய காம இருவகைக் கைகோள் வரலாறு விரித்துச் சுவைபெறக் கூறல்வேண்டியும் என்றுணர்க. இனிப்பொருளும் இன்பமும் அவ்வாறு கௌணமாய் அறத்தின் அடங்குதலின், திருக்குறள் முக்கிய விருத்தியால் அறங்கூறிய நூலேயாதல் காண்க.

இல்லறம் இருவகைப்பற்றின் முறுகிய மந்த அதிகாரிகளாகிய மக்களுக்கு அப்பற்றுக்கள் நன்னுகர்ச்சியான் அறுந்து சித்தசுத்தி எய்துதற் பொருட்டு விதிக்கப்பட்டதோர் ஒழுக்கமாதலின், அவ்வொழுக்காற்றுன் முனிவருந் தேவரும் விழைதரும்போகம் ஈண்டுத் துய்த்துச் செல்லா நின்றுர். அத்துய்ப்பினுனே பொய்ப்பற்றற்று மெய்ப்பற்றுநாடித் துறவறம் பூண்டு அந்தக்கரணங்கள் தூயவாதற் பொருட்டு விரதம் அனுட்டித்தலை உறுதியாகக் கைக்கொள்ப. ஆதலின், நாயனர் இல்லறவியல் முன்னும் துறவறவியல் அதன் பின்னும்

நிறுத்தியருளினர். அறம் மேற்கூறிய நியாயம் பற்றியே இல்லறந் துறவறமென இரண்டாயதென்பது,

> "காமஞ் சான்ற கடைக்கோட் காலை
> யேமஞ் சான்ற மக்களொடு துவன்றி
> யறம்புரி சுற்றமொடு கிழவனுங் கிழத்தியுஞ்
> சிறந்தது பயிற்ற லிறந்ததன் பயனே"

எனவருந் தொல்காப்பியச் சூத்திரத்தினானும் அறிந்துகொள்க.

இனித் துறவறந்தான் வினைமாசு தீர்ந்து அந்தக்கரணங்கள் தூயவாதற்பொருட்டுத் துறந்தாராற் காக்கப்படும் விரதங்களும் அவற்றான் அவை தூயவாயவழி உதிப்பதாய ஞானமும் என இருவகைப்படும். இனி விரதம், அங்கமும் ஞானம் அங்கியுமாகலின், விரதம் முன்னும், ஞானம் அதன்பின்னும் நிறுத்தியருளினர். இங்ஙனம் விரதத்தான் அந்தக்கரணசுத்தி யெய்தி வீடுபயக்கும் உணர்வெய்தப் பெற்றார், தோற்றமுடையன யாவும் நிலைபுதல் இலவாந்தன்மை யுணர்ந்து, ஒரோவழிச் செல்வம்பெறின் கடவுட்பூசை கடவுண்ஞான முடையார் கைத்தானம் முதலிய ஞானக்கிரியையே புரிந்து, புறமாகிய செல்வத்தின் கண்ணும் அகமாகிய யாக்கையின் கண்ணும் உளதாய பற்றினை அவற்றது நிலையாமையுணர்ந்து காலம்பெறத் துவரத்துறந்து, யானெனதென்னுஞ் செருக்கறுத்து, பரம்பொருளான இறைமுதற் கடவுள் ஓதிய வீட்டு நெறியினை இதுவே நன்னெறியென்று மனத்துட் கொண்டு, அதன்கண் உபாயமாய தியான சமாதிகளை மனத்தாற் செய்து, பிறப்பு வீடுகளையும் அவற்றின் காரணங்களையும் அவிச்சை யான் விளையும் ஐய விபரீதங்களானன்றி உண்மையானறிந்து, அநுபவமுடைய தேசிகர்பால் தத்துவ உபதேச மொழிகளைக் கேட்டலாகிய சிரவணமும் அவ்வுபதேச மொழிப்பொருளை அளவையானும் பொருந்துமாற்றானுந் தெளிய ஆராய்தலாகிய மனனமுஞ் செய்து, பிறப்பிற்கு முதற்காரணமாய அவிச்சைகெட வீட்டிற்கு நிமித்தகாரணமாகிய செவ்விய பரம்பொருளை அநுபூதியிற் காண்டலாகிய நிதித்தியாசன சமாதிகளுற்று, மேற்சாரக்கடவன துன்பங்கள் இலராய், காமம் வெகுளி மயக்கமென்னுங் குற்றங்கள் மூன்றனுடைய பெயருங் கூடக்கெடப் பெறுதலானே அவற்றின் காரியமாகிய இன்பதுன்ப

நுகர்ச்சி முற்றக்கெடுத்து, எடுத்தவுடம்பும் அதுகொண்ட வினைப்பயனும் நின்றமையின் நினைவு பயிற்சி வயத்தாற் பழைய புலன்கள் மேற்சேறலுறின், இடையறாத மெய்யுணர்வின் உறைத்து நின்று அவ்வவாவினை ஆற்றவறுத்து மலவாதனையும் நீங்கிச் சீவன்முத்தராயிருந்து களிப்புக் கவற்சிகளும் பிறப்புப்பிணி மூப்பு இறப்புக்களும் இன்றிக் கேவலமாய் நின்று முடிவு காண்கில்லாப் பரவீடாகிய நிரதிசய இன்பம் பெறுவரென்று, இவ்வாறு நிலையாமையுந் துறவும் மெய்யுணர்வும் அவாவறுத்தலுமாகிய ஞானசாதனங் கூறுமுகத்தானே வீடுபேற்றுறுதிப்பொருட் பெற்றி நன்கு விளக்கி யருளினர்.

இங்ஙனமாகலின், திருக்குறள் பொருளின்பம் அகப்படக்கொண்டு அறங்கூறி வீட்டியல்பு நன்று நாட்டிய தத்துவஞான நூலாம் உத்தரவேதமென்பது தெற்றென உணர்ந்துகொள்க.

அற்றே லஃதங்ஙனமாக; நாயனர் உத்தரவேதமுகத்து வாழ்த்திய முதற்கடவுள் சமயங்கள்கூறுங் கடவுளருள் வைத்தும் வீடுபேறுகளுள் வைத்தும் யாவனெனவும் யாதெனவுஞ் சிறப்பாற்றானறியுங் குதூகலம் பெரிதுடையேன்; கூறல்வேண்டும் என்பையாயின்,—நாயனர் முழுமுதற்கடவுள் இவனென்பதூஉம், மெய்வீடுபேறு இதுவென்பதூஉம், மதிநுட்ப நூலோடுடைய புலவர் சிறப்பாற்றாற் குறிப்பானறிந்திட வைத்துக் கடவுளியலும் வீடுபேற்றியலும் ஆத்திக சமயங்கட் கெல்லாம் பொதுவாக வெளிப்படையான் எடுத்தோதுந் திருக்குறளில் அங்ஙனஞ் சிறப்பியல்பு அறிவுறுத்தல் முறையன்றாயினும், இக்காலத்து ஏகான்மவாதிகளுள் ஒருசாராரும் பிறரும் நாயனர் வாழ்த்திய கடவுளும் அவரோதிய வீடுபேறுந் தத்தஞ்சமயக் கொள்கைகளோடு இயைபுற்று நிற்குமென்ச் சில போலியுரைகட்டி யெழுதித் தம்முள் வைத்துப் பாராட்டித் தமக்கென ஒன்றிலாகிய பேதைகளை அப்போலிக் கட்டுரைகொண்டு மயக்கித் தந்நெறியின் ஈர்க்கக் கேடுபல சூழுதலானும், பரிபாகியாகிய நீ அவ்விரண்டன் சிறப்பியல் அறியலுற்று வினா நிகழ்த்தலானும், "அகரமுதலவெழுத் தெல்லாம்" என்னு முதற்றிருக்குறளின் மெய்ப்பொருள் விரிக்குமுகத்தானே அவ்விரண்டன் மெய்ம்மைத் தன்மை சிறிது ஈண்டுத் தெரிக்கலுற்றாம்.

## முதற் றிருக்குறள் விருத்தி

அகர முதல வெழுத்தெல்லா மாதி
பகவன் முதற்றே யுலகு

என்பது திருக்குறள் என்னுதலிற்றோ வெனின்,—உலகிற்கு முதற் கடவுள் ஒருவனுளனென்பதூஉம், அம்முதற் கடவுள் தான் ஆதிபகவ னென்பதூஉம், உணர்த்துதல் நுதலிற்று. உத்தரவேத உரையாசிரிய ரான பரிமேலழகியார் மற்றிம்முதற் குறளினுக்கு இயற்றிய பிண்டப் பொழிப்புரையும் அதன் விசேடவுரையும் வருமாறு :—

எழுத்து எல்லாம் அகரமுதல உலகு ஆதிபகவன் முதற்று :— எழுத்துக்களெல்லாம் அகரமாகிய முதலையுடையன; அதுபோல உலகம் ஆதிபகவனாகிய முதலையுடைத்து என்றவாறு. இது தலைமைபற்றிவந்த எடுத்துக்காட்டுவமை. அகரத்திற்குத் தலைமை விகாரத்தானன்றி நாத மாத்திரையாகிய இயல்பாற் பிறத்தலானும், ஆதிபகவற்குத் தலைமை செயற்கையுணர்வானன்றி இயற்கையுணர்வான் முற்றுமுணர்தலானுங் கொள்க. தமிழெழுத்திற்கேயன்றி வடவெழுத்திற்கும் முதலாதல் நோக்கி, எழுத்தெல்லாமென்றார். ஆதிபகவன் என்னும் இருபெய ரொட்டுப் பண்புத்தொகை வடநூன்முடிபு. உலகென்றது ஈண்டுயிர் கண்மேல் நின்றது. காணப்பட்ட உலகத்தாற் காணப்படாத கட வுட்கு உண்மை கூறவேண்டுதலின், ஆதிபகவன் முதற்றேயென உல கின்மேல் வைத்துக் கூறினார் ; கூறினாரேனும், உலகிற்கு முதல் ஆதி பகவனென்பது கருத்தாகக் கொள்க. ஏகாரந் தேற்றத்தின்கண் வந் தது. இப்பாட்டான் முதற்கடவுளது உண்மை கூறப்பட்டது.

அதுபோலவென்பது இசையெச்சம். அது வருவித்து உரை செய்யப்பட்டது. அகரம் நாதமாத்திரையான இயற்கைத் தோற்ற முடைத்தாய் நிறைந்து முதன்மையுற்று நிற்ப ஏனையெழுத்துக்க ளெல்லாம் அதன் இயக்கத்தான் விகார முயற்சியிற்றோன்றி அதனானே வியாபிக்கப்பட்டுப் பாரதந்திர முடையவாய் நிலவுதல்போல, ஆதிபக வன் இயற்கையுணர்வினானே முற்றுமுணர்ந்து யாண்டும் நிறைந்து முழுமுதல்வனாய் விளங்கி நிற்ப, உலகனைத்தும் அவன் ஆணையான் வியாபிக்கப்பட்டுப் பாரதந்திரமுற்று வினைக்கீடாக உடல் கரணமெய் தித் தோன்றி இடவிடய வியாபார முடையவாய் நிலவாநின்றனவென்

பது இதன் கருத்தாம். இடம் - புவனம், விடயம் - போகம். இத்திருக்குறளினுக்கு இதுவே பொருளென்பது, உமாபதி சிவாசாரியர்

" அகர வுயிர்போ லறிவாகி யெங்கு
நிகரிலிறை நிற்கு நிறைந்து "

என்றிதன்பொருள் எடுத்தோதிய உபபிருங்கணத் திருவாக்கானும் அறிக. அகரவுயிர் முதலாதல்போல என்க. முதலாதலென்பது அவாய் நிலையான் வருவித்து முடிக்கப்பட்டது. இவ்வாறு வருவித்து முடிப்பதனை வடநூலார் அத்தியாகாரம் என்பர். முதலாதல் - முதலாய் நிற்றல். முதலாய் என்னும் உவமையடை பொருளினும், நிறைந்து என்னும் பொருளடை உவமையினுங் கூட்டி யுரைக்கப்பட்டன. பொருளெனினும் உவமேயமெனினும் ஒக்கும். இங்ஙனம் ஆதிபகவனாகியமுதற்கடவுளை எழுத்துக்களின்நிறைந்து அவை தமக்கு முதலாய் நிற்கும் பொதுவியல்புபற்றி அகரத்தோடு ஒப்பித்தருளினும், அப்பரம்பொருள் அறிவுருவாய் யாங்கணும் நிறைந்து எப்பொருட்கும் ஆதாரமாய்நிற்கும் முழுமுதலான உடையானாகலின், உண்மையில் தன்னுடைப் பொருளாகிய பசுபாசங்களுள் ஒன்றனோடும் உவமிக்கப்படானென்பதே நாயனாருக்குக் கருத்தென்பது அறிவிப்பார் "அறிவாகி யெங்கு நிகரிலிறை நிற்கு நிறைந்து" என்று அச்சுருதிப்பொருளினை இங்ஙனந் தெளித்து ஓதியருளினர். இனி உடைப்பொருள் அடிமையும் உடைமையுமென இருவகைப்படும். அவற்றுள் உயிர் வருக்கமெல்லாம் ஆதிபகவனாகிய இறைவனுக்கு அடிமை யெனவும் மாயை கன்மங்களும் அவற்றின் காரியங்களும் உடைமை யெனவும் உணர்ந்துகொள்க.

நாயனார் 'அகர முதல வெழுத்தெல்லா மாதிபகவன் முதற்றே யுலகு' என்று அங்ஙனம் எடுத்துக்காட்டுவமையாற் கூறியருளிய பொருட் பெற்றி இனிது புலப்படும் பொருட்டு உமாபதி சிவாசாரியர் இங்ஙனம் உவமாலங்காரத்தில் வைத்து உபபிருங்கணமாக எடுத்தோதியருளினர். உபபிருங்கணமாவது :—முதனூல் வசனங்களின் மெய்ப்பொருள் இனிது புலப்படுமாறு வேண்டுஞ் சொல் தலைப்பெய்து அவை தம்மை ஆண்டுக் கிடந்தவாறே எடுத்துரைக்கும் வாக்கியமாம். இது முற்றுவமை யாமாறு முன்னர்க் காட்டுதும்.

எடுத்துக்காட்டென்னும் உவமையினை வடநூலார் நிதரிசனலங்காரம் என்றுரைப்பர். நிதரிசனலங்காரத்திற்கும் உவமாலங்காரத்திற்கும் வேறுபாடு யாதெனின்,— உவமான உவமேயங்களிரண்டன் சாதிருசிய தருமம் பேதநெறியானே உவமவுருபு பற்றி வெளிப்படையால் விளக்குவது உவமாலங்காரம். அவ்விரண்டன் சாதிருசிய தருமம் அபேத நெறியாற் குறிப்பின் உணர்த்துவது நிதரிசனம். இதுவே தம்முள் வேறுபாடென்க. உவமத் தொகையில் அதிவியாத்தி நீக்குதற்கு அபேத நெறியானென்றும், குறிப்பினென்றும், உரைத்தாம். இன்னும் உவமத்தொகை, சாதிருசியம் புலப்படுத்தும் உவமவுருபு விதியான் எய்திடுவதாகவுங் கவி தொகையிலக்கணம் மேவவேண்டி அது தொகுத்து ஓதுவதாம். நிதரிசனம் கவி அவ்வுருபு வேண்டாது அபேதம் போதரக் கருதிப் பிரயோகிப்பதாம். இங்ஙனமாகலின், இரண்டற்கும் வேற்றுமை பெரிதாதலறிக. அற்றேலஃதாக ; திருட்டாந்தாலங்காரம் உவமான உவமேய சாதிருசியம் அவ்வாறே உவமவுருபின்றிக் குறிப்பான் உணர்த்துவதாகலின், நிதரிசனலங்காரத்திற்கு அதன்கண் அதிவியாத்தி வரும்பிறவெனின்,—திருட்டாந்தாலங்காரம் "வேந்த நீ கீர்த்திமான் வெண்மதியங்காந்திமான்" என்று அங்ஙனம் உவமான உவமேய சாதிருசியம் பேதநெறியான் உணர்த்தும். நிதரிசனலங்காரம் அவ்வாறன்றி அவ்விரண்டன் சாதிருசியம் அபேத நெறியானுணர்த்தும். ஆகலின், நிதரிசனத்திற்கு அதன்கண் அதிவியாத்தி வருமாறு இன்றென்க. கீர்த்தியுங் காந்தியும் பேதமுடையனவாயினும், வெண்மைப்பண்பு இரண்டன்கண்ணும் ஒத்தலின், அவ்வொப்பினானே திருட்டாந்தம் ஆகாநின்றது. மற்று எழுத்தெல்லாவற்றிற்கும் அகரமுதலாதலும் உலகுக்கெல்லாம் ஆதிபகவன் முதலாதலும் அவ்வாறு பேதமுறாது அபேதமாயொத்தலின், நிதரிசனம் ஆகாநின்றது. அற்றேல், முகமதி யென்னும் உருவகமும் அபேத சாதிருசியம் உணர்த்தலின், நிதரிசனத்திற்கு அதன்கண் அதிவியாத்தி வருமெனின்,—அற்றன்று; உருவகமாவது உவமானம் உவமேய வாக்கியங்களினுள்ள ஒவ்வோர் பதமாத்திரையானே அபேத சாதிருசியமுணர்த்துவதாகலானும், நிதரிசனமாவது அவ்வாறன்றி உவமான உவமேய வாக்கிய முழுதுங் கொண்டு அபேத சாதிருசியம் உணர்த்துவதாகலானும் என்க. இனி நிதரிசனலங்காரம், திருட்டாந்தால்ங்காரம்,

ரூபகாலங்காரம், அதிசயோத்தியலங்காரம், உத்பரேட்சாலங்கார மென்று இத்திறத்தனவற்றிற்கு உவமான உறுப்பு உவமேய உறுப்புச் சாதிருசிய தருமமென்பன பொதுவியலாதலும், உவமாலங்காரம் இவற்றிற்கெல்லாம் அடியாதலும் காண்க. இன்னும், இவ்வலங் காரங்களின் இலக்கண நுட்பம் ஈண்டு விரிக்கப்புகிற் பெருகும். குவல யானந்தம் முதலிய வடநூல்களிற் கண்டுகொள்க.

ஈண்டுக்கூறியவாற்றால் சாதிருசிய தருமம் போதித்தற்கண் ஏனைய வற்றை நோக்க எடுத்துக்காட்டுவமை சிறத்தல் இனிது வெளிப்படு தலின், நாயனர் அவ்வுவமை யளவைபற்றி முதற்கடவுளது உண்மை இவ்வாறு சாதித்தருளின ரென்க.

நாதமாவது தூல வுடலின்கண் மன்னும் அருவுடம்பின் உள் ளான பரசரீரத்தினின்றுஞ் சுத்த மாயா விருத்தியாய்த் தோன்றும் வியஞ்சக ஒலி யென்ப. அகரம் அதன் விருத்தியாய் உந்தியினின்றெழு தரும் உதானனென்னும் வாயு வேகத்தினல் தூரக்கப்பட்டுக் கண்ட மருவி முயற்சி விகாரமின்றி இயல்பினனே வைகரியாய்த் தோன்று தலின், அதனை விகாரத்தானன்றி நாதமாத்திரையாகிய இயல்பாற் பிறக்குந் தலைமை யுடைத்தென்ருர். ஆதிபகவன் தனக்கோர் ஆதார மின்றி எப்பொருட்குந் தான் ஆதாரமாய் இயல்பாகவே பாசங்களின் நீங்கி யாங்கணும் நீக்கமின்றி நிறைந்து அனைத்தையுஞ் சுட்டிறந்து ஒருங்கேயறியும் முற்றறிவு உடையனுகலின் அவனைச் செயற்கை யுணர் வினனன்றி இயற்கை யுணர்வான் முற்றுமுணருந் தலைமைப்பாடுடை யன் என்ருர். இங்ஙனங் கூறவே, ஆகாரம் முதலிய எழுத்துக்கள் அந் நீர்தகாரிய விருத்தியுற்று அவ்வாயுவால் தூரப்புண்டு உரம், கண்டம் உச்சி, மூக்கென்னும் இடங்கள் பற்றியும் இதழ் நா, பல், அணம் என் பவற்றின் தொழின்முயற்சி பற்றியும் வேறுபாடுற்று அகரவொலி விராய்த் தோன்றித் தலைமையின்றி நிற்கும். அதுபோல உலகு அனு தியே பாசத்தடையுற்று ஆதிபகவனை ஆதாரமாகக்கொண்டு அவன் ஆணையான் வினைக்கீடாக எய்துந் தனுகரணங்கள் பற்றித் தொடக்குற் றுத் தோன்றி அறிவு இச்சை தொழில் சிறிது விளங்கிச் சிற்றுணர்வுச் சுட்டறிவு உடையவாய்த் தலைமைப்பாடின்றி நிற்குமென்பது தானே போதருமென்க. செயற்கை யுணர்வெனினுஞ் சென்னிய ஞானமெனி னும் ஒக்கும். இயற்கை யுணர்வெனினும் நைசர்க்கிக ஞானமெனினும்

ஒக்கும். முற்றுணர்வெனினுஞ் சர்வஞ்ஞத்துவமெனினும் ஒக்கும். சிற்றறிவெனினுங் கிஞ்சித்ஞத்துவமெனினும் ஒக்கும்.

ஆரியமுந் தமிழுங் கடவுண் மொழிகளாய் நடத்தலின் எல்லா மென்பது பற்றி அவ்விரண்டனையுந் தழீஇயனுரேனும், ஏனைமொழி களின் கண்ணவாகிய எழுத்துக்கள் தாமும், அகர முதலவாய் நடக்கக் காண்டலின், அவையும் எல்லாமென்பதனுன் தழுவப்படுதற்கு ஏற்றவா மென்க. இனி எழுத்தெல்லாம் அகரமுதல என்பதற்குத் தமிழின் கணுள்ள ஆகாரமுதல் ஔகார மீருகக் கிடந்த பதினே ருயிரெழுத் துக்களும், ககரமுதல் னகரமீருகக் கிடந்த பதினெட்டு மெய்யெழுத் துக்களும், அகரத்தை முதலாகக்கொண்டு அதனேடு சிவணி இயங்கு வனவாமென்று பொருள் கோடலுமாம்.

அற்றே லஃதங்ஙனமாக, ககர முதலிய மெய்யெழுத்துப் பதி னெட்டுங் தனித்தியங்கும் ஆற்றலுடையன அன்மையின், அவற்றிற்கு அகரத்தை முதலாகக் கொண்டு அதனேடு சிவணி இயக்கமுறுதல் பொருத்தமாம்; ஆகார முதலிய உயிரெழுத்துக்கள் தனித்தியங்கும் ஆற்றலுடையனவாகலின், அவற்றிற்கு அகரத்தை முதலாகக் கோட லன்றி அதனேடு சிவணி இயக்கமுறுமென்றல் பொருந்தாதாம்;

“மெய்யி னியக்க மகரமொடு சிவணும்”

என ஆசிரியர் தொல்காப்பியனுரும் அத்தன்மை யொன்றுமே கூறி யொழிந்தாரெனின்,—ஆகார முதலிய உயிரெழுத்துக்கள் தனித் தியங்கும் ஆற்றலுடைய வென்றதற்குக் கருத்து மெய்யெழுத்துக் கள்போலச் சடமாதலின்றித் தம்மியல்பின் உயிர்ப்புடையன என்பதே யாம். இனி அவ்வுயிர்ப்பும் அவை தமக்கு அகரத்தொடு சிவணுத லாற்றுனே செம்மையுறுவதாம். யாங்ஙனமெனில்,—காட்டுதும்: இகர ஈகார உகர ஊகாரங்கள் அகரத்துக்குரிய அங்காப்பு முயற்சி யோடு சிவணிப் பிறக்கும். எகர ஏகார ஒகர ஓகாரங்கள் முன் னர் அகரக்கூறும் பின்னர் இகர உகரக்கூறுகளும் இயைந்து பிறக் கும். ஐகாரம் முன்னர் அகரக்கூறும் பின்னர் இகரச்கூறும் இடை யில் யகரமுந் தலைக்கூடிப் பிறக்கும். ஔகாரம் முன்னர் அகரக் கூறும் பின்னர் உகரக்கூறும் இடையில் வகரமுந் தலைக்கூடிப் பிறக் கும். ஆகலின், உயிர் பதினென்றுந் தம்மியக்கத்திற்கு அகரமாகிய

முதலே இன்றியமையாமை கண்டுகொள்க. ஏகாரம் முதலியன அன்ன வாதல் மாபாடியங் கையடங்களிற் காண்க. இகர ஈகார உகர ஊகா ரங்கள் அன்னவாதல் சிவஞான மாபாடியத்துக்காண்க. ஐகார ஔகா ரங்கள் அன்னவாதல்

"அகர விகர மைகார மாகும்"

"அகர வுகர மௌகார மாகும்"

என்னுந் தொல்காப்பியச் சூத்திரங்களானறிக. இது தொல்காப்பியச் சூத்திர விருத்தியினுங் கண்டுகொள்க. இனி ஆசிரியர் தொல்காப் பியனார்

"மெய்யி னியக்க மகரமொடு சிவணும்"

என்று கூறினாற்போலப்

"பதினேருயிரி னியக்கம் அகரமொடு சிவணும்"

என்று கூருராயது, அத்தன்மை பிறர்க்கு உணர்த்துதல் அரிதாதல் நோக்கியேயாம். நச்சினார்க்கினியரும்

"மெய்யி னியக்க மகரமொடு சிவணும்"

என்னுஞ் சூத்திரத்து இவ்வாறே யுரைத்து, "இறைவன் இயங்கு திணைக்கண்ணும் நிலைத்திணைக்கண்ணும் பிறவற்றின்கண்ணும் அவற் றின் தன்மையாய் நிற்குமாறு எல்லார்க்கும் ஒப்ப முடிந்தாற்போல அகரமும் உயிர்க்கண்ணுந் தனிமெய்க்கண்ணுங் கலந்து அவற்றின் தன்மையாயே நிற்குமென்பது சான்றோர்க்கெல்லாம் ஒப்ப முடிந்தது; 'அகரமுதல' என்னுங் குறளான்—அகரமாகிய முதலையுடைய எழுத்துக்க ளெல்லாம், அதுபோல இறைவனாகிய முதலை யுடைத்து உலகு என வள்ளுவனார் உவமை கூறிய வாற்றானும், கண்ணன் 'எழுத்துக்களில் அகரமாகின்றேன் யானே' எனக் கூறியவாற் றானும், பிறநூல்களானு முணர்க" என்று இவ்வாறு விளக்கினார். கண்ணன் எழுத்துக்களில் யானே அகரமாகின்றேன் என்றது, சிவோ கம்பாவனை தலைப்பட்ட ஒற்றுமை பற்றியே யென்பது, சிவஞான மாபாடியத்துக் காண்க.

"அக்கரங்க ளின்ரு மகர வுயிரின்றே
யிக்கிரமத் தென்னு மிருக்கு"

"ஒன்றென மறைக ளெல்லா முரைத்திட வுயிர்க ளொன்றி
நின்றன னென்று பன்மை நிகழ்த்துவ தென்னை யென்னி
னன்றவை பதிதா னென்றென் றறையுமக் கரங்க டோறஞ்
சென்றிடு மகரம் போல நின்றனன் சிவனுஞ் சேர்ந்தே"

"எவ்விடத்து மிறையடியை யின்றியமைந் தொன்றை
யறிந்தியற்றி டாவுயிர்க ளீசன் றானுஞ்
செவ்விதினி னுளம்புகுந்து செய்தியெலா முணர்ந்து
சேட்டிப்பித் தெங்குமாய்ச் செறிந்து நிற்ப
னிவ்வுயிர்க டோற்றம்போ தவனையின்றித் தோற்றா
விவற்றினுக்கம் முதலெழுத்துக் கெல்லாமாய் நிற்கு
மவ்வுயிர்போ னின்றிடுவ னாத லானு
மானடியை யகன்றுநிற்ப தெங்கே யாமே"

என்று அத்துவித சித்தாந்த சைவ சுருதிகள் இவ்வியல்பு தெருட்டு தலுங் காண்க.

அவற்றுள்,

"இகரவீற் றப்பெயர் திரிபுட னுடைத்தே"

என்னுந் தொல்காப்பியச் சூத்திர விதியால், நம்பிக்கொற்றன் நம்பிச் சாத்தன் நம்பிப்பிள்ளை யென்பனபோல ஆதிப்பகவனென வல்லொற்று மிக்குப் புணர்தற்பாலது அங்ஙனம் புணராது ஆதிபகவனென இயல்பு புணர்ச்சியுற்றது வடநூல் விதிபற்றி யென்பது. ஆதிஃ என்னும் இகாராந்தப் புல்லிங்க சத்தம் பகவத் சத்தத்தோடு புணருங்கால் ஆகமம் ஆதேசம் லோபம் என்னுந் திரிபுகளுள் யாதும்பெறாது ஆதிபகவனென அங்ஙனம் இயல்பாய்ப் புணர்தல் வடமொழி வியா கரண வழக்காறும். இனி ஆதிபகவனென்னும் இருபெயரொட்டுப் பண்புத் தொகைக்கண் நிலைமொழியீற்று ஸு (விசர்க்கம்)

'ஸுவொயாதஸுவ்யாதிவஷிகயொஃ'

என்னுஞ் சூத்திர விதியால் லுக்காயிற்று. ஈண்டு லுக்கு அநு விருத்தியான் வந்தியையும். அநுவிருத்தியாவது மேலே போந்த சூத்திரத்தின்கணுள்ள ஓர் ஏகதேச பதங் கீழே போதருஞ் சூத்திரப் பொருட்கு உபகாரமாக வந்தியைவது. மற்றிது அதிகாரமன்றோ

வெனின்,—அன்று. என்னை? அதிகாரம் மேலே போந்த சூத்திரம் முழுதுங் கீழே போதருஞ் சூத்திரவிதிக்கு உபகாரமாகவந்து இயைவதாகலினென்க. ஆதிபகவனென்பது கர்மதாரயசமாசனன்றே; சமாசன் பிராதிபதிகமாமோவெனின்,—

“ க்ருத்தத்திதஸமாஸாஶ்ச ”

என்னுஞ் சூத்திரவிதியால் சமாசனும் பிராதிபதிகமாதல் நேர்ந்தாரென்க. ஈண்டுப் பிராதிபதிகச் சொல்,

“ அர்த்தவததாதுரப்ரத்யய: ப்ராதிபதிகம் ”

என்னும் முற் சூத்திரத்தினின்றும் அனுவிருத்தியான் வந்தியையும். மற்று ஆரிய மொழிகள் தமிழில் வடசொல்லாய்ப் புணர்ச்சியுறுங்கால், தமிழியன் முடிபு பெறுதலன்றி வடமொழியியன் முடிபும் ஓரோவழிப் பெறுமென்று ஆசிரியர் தொல்காப்பியனார் தொல்காப்பிய எழுத்ததிகாரத்துப் புணரியலில் ஓதாமை அந்நூற்குக் குன்றக்கூறலென்னுங் குற்றமாகாதோ வெனின்,—

“ ஈறியன் மருங்கி னிவையிவற் றியல்பெனக்
கூறிய கிளவிப் பல்லா றெல்லா
மெய்த்தலைப் பட்ட வழக்கொடு சிவணி
யொத்தவை யுரிய புணர்மொழி நிலையே ”

என்னுந் தொகைமரபு ஒத்துப் புறனடைச் சூத்திரத்தில் இவ்வாறு வரும் வடநூற் புணர்ச்சி முடிபும் அடங்குதலின், ஆகாதென்க. தொல்காப்பியனார் இன்னோரன்ன வடநூன் முடிபுகளை அமைத்துக் கொள்கவென்று ஆண்டுக் கிளந்தோதாராயினர்,

“ வடசொற் கிளவி வடவெழுத் தொரீஇ
யெழுத்தொடு புணர்ந்த சொல்லா கும்மே ”

எனச் சொல்லதிகாரத்து எச்சவியலில் வடசொன் முடிபெல்லாமடங்க அங்ஙனம் எடுத்தோதுங் கருத்தினரா யென்க. வடசொற் கிளவி வடவெழுத்தொரீஇ யெனவே, சொற்புணர்ச்சி ஆண்டுக்கிடந்த முடிபானும்வந்து எழுத்தொடுபுணர்ந்த சொல்லாமென்பது தானே போதருமென்க.

லோகமென்னும் ஆரியச்சொல் உலகெனத் தற்பவமாயிற்று. அது புவனத்திற்கும் உயிர்களுக்குந் தனித்தனி உரிய பெயராம். உயிர்கள் சேதனப் பிரபஞ்சமும் புவனம் அசேதனப் பிரபஞ்சமுமாக லின், ஆதிபகவன் தமக்கு அருள் வழங்குஞ் சச்சிதானந்த முழுமுதல்வ னென்றறிந்து அவன் ஆணைவழி யொழுகிப் போகமும் வீடுபேறும் பொருந்துங் கிழமை சேதனப் பிரபஞ்சமான உயிர்களுக்கே யுரித்தா மென்பார், முக்கிய விருத்தியால், "உலகு ஈண்டுயிர்கண் மேனின்றது" என்று அவ்வாறுரைத்தார். அங்ஙனம் உரைத்தாரேனும், அசேதனப் பிரபஞ்சமுங் கௌணம்பற்றி உலகென்னுஞ் சொல்லால் ஆண்டுக் கொள்ளப்படுவதேயாம். என்னே? அதன் தோற்றமும், நிலையும், ஒடுக்கமும், ஆதிபகவனான முதல்வன் ஆணையினாற்றானே நிகழ்தலா னென்க. உலகென்னுஞ்சொல் இருவகைப் பிரபஞ்சத்தினையும் இங் ஙனம் உணர்த்திற்றெனவே, அவ்விரண்டும் ஆதிபகவனாகிய முதலை யுடையனவென்று பொருளாய் அகரமுதல வெழுத்தெல்லாமென்றது முற்றுவமமாயிற்றென்க. இஃது என் சொல்லியவாறோ வெனின்,— எழுத்துக்கள் உயிர்மெய்யென இரண்டாய் அகரமுதலவாதல்போலப் பிரபஞ்சமுஞ் சேதனம் அசேதனமென இரண்டாய் ஆதிபகவனாகிய முதலையுடையது என்றவாறுமென்க. உயிரெழுத்து சீவான்மாவிற்கும், மெய்யெழுத்து தத்துவப் பிரபஞ்சத்திற்கும், அகரம் ஆதிபகவற்கும் உவமையாமென்பது.

உலகந்தோன்றி நின்று ஒடுங்கி வருதல் காட்சியளவையான் அறியப்படுதலானும், இறைவனியல்பு அங்ஙனங் காட்சியளவை பற்றி யறியப்படாது கருதலளவையின் வைத்து ஊகித்துணரற்பாலதாக லானும், காணப்பட்ட உடைமையாகிய உலகத்தாற் காணப்படாத உடையானாகிய கடவுளினுண்மை சாதிக்கவேண்டி உலகு ஆதிபகவன் முதற்றே யென்று அவ்வாறு ஓதியருளினர். அவ்வாறோதினும், பசு பாசங்களாகிய உடைப்பொருள்கள் வியாப்பிய ஆதேயவுடைமை யாயும் இறைவன் ஔபச்சிலேடிக வியாபக ஆதாரமுதலுமாகலின், ஆதிபகவன் உலகிற்கு முதல்வனென்பதே நியாய நெறியாம்.

சூனியமே ஆன்மாவென்பாரும், தேகமே ஆன்மாவென்பாரும், இந்திரியமே ஆன்மாவென்பாரும், அந்தக்கரணமே ஆன்மாவென் பாரும், சூக்கும தேகமே ஆன்மாவென்பாரும், பிராணவாயுவே

ஆன்மாவென்பாரும், பிரமப்பொருளே உபாதிவசத்தாற் சீவான்மாவென விவகரிக்கப்பட்டு நிற்குமென்பாரும், பூதமுதலிய தத்துவமனைத்துங் கூடிய சமூகமே ஆன்மாவென்பாருமென ஆன்மாவின் இயல்பு கூறும் வாதிகள் பலதிறத்தர். அவரெல்லாங் கூறுஞ் சூனியான்மவாத முதலிய அனைத்தும் வழியளவையான் விளக்கி ஆன்மா சூனிய முதலியவற்றின் வேறாயுள்ளதெனச் சைவோபநிடதங்களுஞ் சைவாகமங்களும் நிரூபித்துப் பெறுவிக்குமேனும், அவ்வனுமான ஆகமவாராய்ச்சி தோன்றி நின்றொடுங்கி வாராநிற்கும் உலகச் செல்கதியாகிய காட்சி பற்றியே உறுதியுறுதலின், காணப்பட்ட உலகத்தாலென்று அவ்வாறுரைத்தார். இறைவன் சேதனுசேதனப் பிரபஞ்சங்களோடொன்றி அவையேயாய் மறைந்து இப்பெற்றியனென்றுணரவும் உரைக்கவும் வாராத அறிவுருவாய் நிற்றலின், அம்முதல்வனைக் காணப்படாத கடவுளென்று அவ்வாறுரைத்தார். காட்சியளவையெனினும் பிரத்தியக்கப் பிரமாணமெனினும் ஒக்கும். வழியளவையெனினும் அனுமானப் பிரமாணமெனினும் ஒக்கும். உரையளவையெனினும் ஆகமப் பிரமாணமெனினும் ஒக்கும். ஔபச்சிலேடிக வியாபகமாவது--எள்ளின் நெய்போல யாண்டும் நீக்கமற நிறைந்திருத்தல். இறைவற்கு விசுவாந்தரியாமியாம் இயல்பும் விச்சுவாதிகனும் இயல்பும் சொரூப இலக்கணமென வேதாகமங்கள் இரண்டுமொப்ப எடுத்துக்கூறுதலின், இறைவன் உலகிற்கு முழுமுதலாதல் என்றுமுள்ள இயல்பேயாம். என்றுமென்றது—பெத்த முத்தி இரண்டினுமென்றவாறும். விசுவாந்தரியாமியெனினும், விசுவான்மாவெனினும் ஒக்கும்.

"அணோரணீயாநுஹதோஊஹீயா
நாத்ஜாஸ்ய ஜந்தோர்நிஹிதோ குஹாயாம் |
தமக்ரதும் பஶ்யதி வீதஶோகோ
தாதுப்ரஸாதாந்மஹிமாநமீஶம் ||

என்னுங் கடவல்லி மந்திரமும் இவ்வியல்பு இனிது தெருட்டுதல் கண்டுகொள்க. இனி விச்சுவாதிக இயல்பும் விசுவான்ம இயல்புந் துரிய மூர்த்திக்கே யுரிய சிறப்பிலக்கணமென்பது

"ஸுஶைவா த்ஸநுவிஶ்வாயிகஊ தீஜமகஸவைவ்யஊதிவ
ஸூடும்ஸஹாஸுஸைநெவே ஷிஸூஷவிவிவஷம்தைவைதவயா: |
கிஶேஷாம்கஷகஷ்ஹேரா ஹவ்யஸநஹிதம் ஜீவநஶிஷம்
யஷக்தீ:ஶேரா தூணாம் ஶணஶஷிதம் கிஷ்டூதிஸிதி ||"

என்னுஞ் சிவதத்துவவிவேக சுலோக வியாக்கியானத்திற் கண்டு கொள்க.

உலகாயதரும் புத்தரும் மீமாஞ்சகருஞ் சாங்கியரும் என்றித் திறத்தார் முறையே தூல சூக்கும பூதங்களே முதலாம்; ஜீவான்மா, பிரகிருதி முதலாம்; இவற்றிற்கு வேருகப் பரமான்மா என்ருெரு பரம்பொருள் முதலாதல் இல்லையென்ப ராகலின், அவர் கொள்கை மறுத்து முதல்வன் உண்மை நிறுத்தவும், ஏகான்மவாதிகளும் ஐக்கிய வாத சைவருஞ் சிவாத்துவிதசைவரும் பாரமார்த்திகமான முத்திநிலை யில் உயிர்கள் பேதமாதலின்றி முதல்வனேடு ஒன்ருயொழியு மென் றுஞ் சிவசமவாதசைவர் முதல்வனேடு சமமாய் நிற்குமென்றுங் கூறுபவாகலின், அவர் கொள்கை மறுத்து முத்தி நிலையினும் உயிர்க்கு முதலாய் நின்றுபகரிக்கும் முறை இறைவற்கு உண்மை நிறுத்தவும் வேண்டி, "ஆதிபகவன் முதற்றே யுலகு" என்று அவ்வாறு தேற்றே காரங் கொடுத்து ஓதியருளினுரென்க. இங்ஙனம் எடுத்துக்காட் டுவமை யளவையின் வைத்து ஆதிபகவனுகிய இறை முதற்கடவுளும் பசுபாசமாகிய இருவகைச் சேதன சேதன வுலகும் என்னும் முப் பொருளும் இம்முதற் றிருக்குறளால், நாயனுர் விளக்கியருளினுர். அசேதனம்— மலங் கன்மம் மாயையென மூன்றும். இம்மூன்றும் உள்பொருளாமாறு முன்னர்த் தெரிக்குதும்.

ஆதிபகவனுகிய இறைமுதற்கடவுளெனப்படும் பரப் பிரமப் பொருள் போலச் சீவான்மாவும் மாயையும் நித்தியப்பொருள்களாதல்,

'ஜ்ஞாஜ்ஞௌ த்வாவஜாவீஶாநீஶௌ'

'ஶாயாம் து ப்ரக்ருதிம் விஷ்யாக
ஶாயிநம் து மஹேஶ்வரம்'

எனவருஞ் சுவேதாசுவதரோபநிடத வசனங்களா னறிக. இவற்றிற் குப் பொருள் - பரமான்மாவுஞ் சீவான்மாவுமாகிய இருவரும் நித்தியர்;

இவருள் பரமான்மா முற்றறிவுடையோன்; சீவான்மா சிற்றறிவுடையோன்; பரமான்மா ஆளும் ஈசன்; சீவர்ன்மா ஆளப்படும் அநீசன்; மாயையைப் பிரகிருதி யென்றறிக; மாயையுடையவன் மகேசுரனென்றறிக என்பதாம். இப்பொருள் கூறியமுறையாற் கொள்க. இன்னும்

“ 𑌨𑌿𑌤𑍍𑌯𑍋𑌨𑌿𑌤𑍍𑌯𑌾𑌨𑌾𑌂𑌚𑍇𑌤𑌨𑌶𑍍𑌚𑍇𑌤𑌨𑌾𑌨𑌾
𑌮𑍇𑌕𑍋𑌬𑌹𑍂𑌨𑌾𑌂𑌯𑍋𑌵𑌿𑌦𑌧𑌾𑌤𑌿𑌕𑌾𑌮𑌾𑌨𑍍 ।
𑌤𑌮𑌾𑌤𑍍𑌮𑌸𑍍𑌥𑌂𑌯𑍇𑌽𑌨𑍁𑌪𑌶𑍍𑌯𑌨𑍍𑌤𑌿𑌧𑍀𑌰𑌾
𑌸𑍍𑌤𑍇𑌷𑌾𑌂𑌶𑌾𑌨𑍍𑌤𑌿𑌶𑍍𑌶𑌾𑌶𑍍𑌵𑌤𑍀𑌨𑍇𑌤𑌰𑍇𑌷𑌾𑌂 ॥
𑌯 𑌆𑌤𑍍𑌮𑌨𑌿𑌤𑌿𑌷𑍍𑌠𑌨𑍍𑌨𑌾𑌤𑍍𑌮𑌨𑍋𑌽𑌨𑍍𑌤𑌰𑍋𑌯𑌮𑌾𑌤𑍍𑌮𑌾𑌨𑌵𑍇𑌦
𑌯𑌸𑍍𑌯𑌾𑌤𑍍𑌮𑌾𑌶𑌰𑍀𑌰𑌂𑌯 𑌆𑌤𑍍𑌮𑌾𑌨𑌮𑌨𑍍𑌤𑌰𑍋𑌯𑌮𑌯𑌤𑌿
𑌸𑌤 𑌆𑌤𑍍𑌮𑌾𑌨𑍍𑌤𑌰𑍍𑌯𑌾𑌮𑍍𑌯𑌮𑍃𑌤𑌃 ॥
𑌪𑍃𑌥𑌗𑌾𑌤𑍍𑌮𑌾𑌨𑌂𑌪𑍍𑌰𑍇𑌰𑌿𑌤𑌾𑌰𑌂𑌚𑌮𑌤𑍍𑌵𑌾
𑌜𑍁𑌷𑍍𑌟𑌸𑍍𑌤𑌤𑌸𑍍𑌤𑍇𑌨𑌾𑌮𑍃𑌤𑌤𑍍𑌵𑌮𑍇𑌤𑌿 ॥
𑌯𑍋𑌽𑌵𑍍𑌯𑌕𑍍𑌤𑌮𑌨𑍍𑌤𑌰𑍇𑌸𑌞𑍍𑌚𑌰𑌨𑍍
𑌯𑌸𑍍𑌯𑌾𑌵𑍍𑌯𑌕𑍍𑌤𑌂𑌶𑌰𑍀𑌰𑌂𑌯𑌮𑌕𑍍𑌷𑌰𑌂𑌨𑌵𑍇𑌦 ।
𑌏𑌷𑌸𑌰𑍍𑌵𑌭𑍂𑌤𑌾𑌨𑍍𑌤𑌰𑌾𑌤𑍍𑌮𑌾𑌪𑌹𑌤𑌪𑌾𑌪𑍍𑌮𑌾
𑌦𑌿𑌵𑍍𑌯𑍋𑌦𑍇𑌵𑌏𑌕𑍋𑌨𑌾𑌰𑌾𑌯𑌣𑌃 ॥
𑌦𑍍𑌵𑌾𑌸𑍁𑌪𑌰𑍍𑌣𑌾𑌸𑌯𑍁𑌜𑌾𑌸𑌖𑌾𑌯𑌾
𑌸𑌮𑌾𑌨𑌂𑌵𑍃𑌕𑍍𑌷𑌂𑌪𑌰𑌿𑌷𑌸𑍍𑌵𑌜𑌾𑌤𑍇 ।
𑌤𑌯𑍋𑌰𑌨𑍍𑌯𑌃𑌪𑌿𑌪𑍍𑌪𑌲𑌂𑌸𑍍𑌵𑌾𑌦𑍍𑌵𑌤𑍍𑌤𑌿
𑌅𑌨𑌶𑍍𑌨𑌨𑍍𑌨𑌨𑍍𑌯𑍋𑌭𑌿𑌚𑌾𑌕𑌶𑍀𑌤𑌿 ॥
𑌪𑍍𑌰𑌾𑌜𑍍𑌞𑍇𑌨𑌾𑌤𑍍𑌮𑌨𑌾𑌸𑌂𑌪𑌰𑌿𑌷𑍍𑌵𑌕𑍍𑌤𑌃
𑌪𑍍𑌰𑌾𑌜𑍍𑌞𑍇𑌨𑌾𑌤𑍍𑌮𑌨𑌾𑌨𑍍𑌵𑌾𑌰𑍂𑌢𑌃 ॥
𑌅𑌸𑍍𑌮𑌾𑌨𑍍𑌮𑌾𑌯𑍀𑌸𑍃𑌜𑌤𑍇𑌵𑌿𑌶𑍍𑌵𑌮𑍇𑌤𑍍
𑌤𑌸𑍍𑌮𑌿𑌂𑌶𑍍𑌚𑌾𑌨𑍍𑌯𑍋𑌮𑌾𑌯𑌯𑌾𑌸𑌨𑍍𑌨𑌿𑌰𑍁𑌦𑍍𑌧𑌃 ॥
𑌸𑌮𑌾𑌨𑍇𑌵𑍃𑌕𑍍𑌷𑍇𑌪𑍁𑌰𑍁𑌷𑍋𑌨𑌿𑌮𑌗𑍍𑌨𑍋
𑌽𑌨𑍀𑌶𑌯𑌾𑌶𑍋𑌚𑌤𑌿𑌮𑍁𑌹𑍍𑌯𑌮𑌾𑌨𑌃 ।
𑌜𑍁𑌷𑍍𑌟𑌂𑌯𑌦𑌾𑌪𑌶𑍍𑌯𑌤𑍍𑌯𑌨𑍍𑌯𑌮𑍀𑌶

ஃஸ்ருஃஹிஃ நஶேதிவீ தஶொகஃ ॥
ஸகாரணம்காரணாதிபாதிபஃ"

என்றற்றொடக்கத்துப் பிரபல சுருதி வசனங்களும், பரமான்மா சீவான்மா இருவருந் தம்முள் வேறாதலும் நித்தியராதலும் பரமான்மா சீவான்மாவிற்கு அந்தரியாமியாதலும் நியமிப்பவனாதலும் மாயையால் அசேதனப் பிரபஞ்சகாரியஞ் செய்வோனாகலும் பெத்தமுத்தியிரண்டினும் உபகாரியாதலும் வீடுபேறு அருளுவோனாதலும் நன்று நிறுத்துமென்க. அற்றேல், உபநிடதங்கள் "ஏகமே" யென எடுத்தோதியது எற்றிற்கெனின்,—பதிப்பொருளொன்றே யென்னுங் கருத்தால் உபநிடதங்கள் அங்ஙனமோதின. ஆகலின், அது மேற்கூறிய வசனங்களோடு முரணுமாறில்லை யென்பது. "விண்ணுமண்ணுந் தோற்றுவிக்குந்தேவ னொருவனே" "ஒருவனே யுருத்திரன் இரண்டாமுதற் கடவுளில்லை" "பிரமப்பொருளொன்றே" என்றற்றொடக்கத்துச் சுருதிகள்போல "ஏகமே" என்பதூஉம் பதிப்பொருளொன்றென்பது காட்டுதற்கே யெழுந்ததென்பது. அற்றேல், "பிரமப்பொரு ளில்லையாயின் ஒரு பொருளுமில்லை" என்று சுருதி கூறியது என்னையெனின்,—பிரபஞ்சத் தோற்ற நிலை யொடுக்கங்கள் பிரமத்தின் உபகாரத்தை இன்றியமையாமையின், சுருதி அங்ஙனம் ஓதிற்று. இங்ஙனமாகலின், அதுவும் மேல் வசனங்களோடு முரணாதென்க. அற்றேல், உபநிடதங்கள் ஏகமாகிய பிரமத்தை ஏகமென்றல் பொருந்தும்; யாண்டும் அவ்வாறு ஏகமென்னாது, சில விடங்களில் "பிரமம் அத்துவிதம்" என அபேதங் கூறுவதென்னை? அத்துவிதம் இருபொருட் கண்ணதெனக் கொள்ளின், ஒருபொருளை அத்துவிதமென்றல் பொருந்தாதாலெனின்,—ஆண்டுப் பிரமம் அத்துவிதமென்றது பிரமம் உயிர்களின் வேற்றுமையின்றி நிற்பதென்னும் பொருட்டாகலான் அஃது ஏகமென்பதோடு முரணுமாறு இல்லையென்க. நகரம் அப்பிராமணனென வருமொழிப் பொருளின் அன்மையினையும், அப்பிரகாசமென வருமொழிப்பொருளின் இன்மையினையும், அதன்மமென வருமொழிப் பொருளின் மறுதலையினையும் உணர்த்திநிற்கும். அவற்றுள், அத்துவிதமென்னுஞ் சொற்கண்ணதான நகரம் வேறன்மையுணர்த்தி அன்மைப் பொருட்டாம். அற்றேல், ஆசிரியர் பதஞ்சலியார் மாபாடியத்துள் எடுத்தோதிய நகாரப்பொருள்களான தச்சாதிரு

சியமுதலிய ஆறனுள் அன்மைப் பொருள் யாதாமெனின், முதற் கண்ணதான தத்சாதிருசியமா மெனக. அத்துவித சொரூபஞ் சிவ ஞான மாபாடியத்துத் தடைவிடைகளான் விரித்தோதப்பட்டது. ஆண்டு, இன்மை மறுதலைப் பொருள்கள் சுருதி விரோதமாமாறும், அன்மைப் பொருள் சுருதி சம்மதமாமாறும் நன்று நாட்டப்பட்டன. சிவசீவ பேதப்பொருளிரண்டுந் தம்முள் அபேதமாதற்குரிய சம்பந்த விசேடம் உணர்த்துதலே அத்துவிதமென்னுஞ் சொற்குப் பொருளென்பது ஆண்டை முடிபுரையாமென்று உணர்ந்துகொள்க.

இனி ஏகான்மவாதிகளுள் ஒருசாராரான மாயாவாதிகள் மாயையாவது மெய்ப்பொருளென்றுஞ் சொல்லப்படாது, பொய்ப்பொருளென்றுஞ் சொல்லப்படாது, அநிருவசனமாய் நிற்பதொன்றெனவும், அற்றாகலினன்றே மாயையெனப் பெயர் பெற்றதெனவும், அத்தன்மைத்தாகிய மாயையிற் சித்தாகிய பரப்பிரமங் கண்ணாடியின் நிழல்போல அத்தியாசமாய்த் தோன்றுமெனவும், அங்ஙனந் தோன்றியவழிப் பேய்த்தேர் நீராகவுங் கயிறு பாம்பாகவுந் திரிவுக்காட்சியாற் காணப்படுமாறுபோல அத்தோற்றம் மண் புனல் அனல் கான் முதலிய பிரவஞ்சமாய்க் காணப்படுமெனவும், இங்ஙனமாகலிற் சித்தினுடைய விவர்த்தனமே சகமெனவுங் கூறுவர். மெய்ப்பொருளுமன்றிப் பொய்ப்பொருளுமன்றி நிற்பது ஒன்றுண்டென்று எடுத்துக் காட்டுதற்கு ஒரு பொருளின்மையின், வழியளவைக்கு ஏலாமையான், வழியளவைக்கு ஏலாதாகவே உரையளவைக்கும் ஏலாதாகலானும், பேய்த்தேரிற் றோன்று நீர் மாத்திரையே அசத்திய மாவதன்றி உள்பொருளாய்த் தோன்றுவதாகிய பேய்த்தேர் அநிருவசன மாகாமையின் அஃது ஆண்டைக்கு எடுத்துக்காட்டாதல் செல்லாமையானும், மாயை அநிருவசன மென்பது ஒரு சமயத்தார்க்குங் கொள்கை யன்மையானும், அஃதொன்றாக வைத்து மறுக்கற்பாற்று அன்றென்றொழிக. அல்லதூஉம், விவர்த்தனவாதிகள் ஒன்று பிறிதொன்றுபோலத் தோன்றுதல் விவர்த்தன மென்பர். அஃது அசத்தியமேயாம். பிரவஞ்சஞ் சத்திய மென்பது காட்சி முதலிய எல்லா அளவைகளானுந் துணியப்படுதலின், அத்தன்மைத்தாகிய பிரவஞ்சஞ் சித்தினுடைய விவர்த்தன மாமாறு யாண்டையதென்க. இதனானும் மாயை அநிருவசனம் அன்

றென்பது தெற்றென வுணர்க. மாயை அநிருவசனமாயின், அதன் காரியமாகிய பிரவஞ்சஞ் சூனியமாதல் வேண்டு மாகலானென்பது.

அற்றேல், பிரவஞ்சஞ் சத்தியமென்றற்குப் பிரமாணம் என்னை? காட்சியே பிரமாணமெனின்,—அற்றன்று; காட்சியானே நிகழ் காலத்துப் பிரவஞ்சஞ் சத்தியமென்றுணரப் படுமாயினும் முக்காலத்தினும் ஒரு தன்மைத்தாகிய சத்தியப்பொருள் பிரவஞ்சமென்பது அதனுன் உணரப்படாமையின். அன்றியுங் காட்சி யளவையான் இது குடம் இஃது ஆடையென விதிமுகத்தாற் காணப்படுவதன்றி, இஃது ஆடையன்று இது குடமன்றென மறுதலைமுகத்தாற் காணப்படாமையின், அன்மையாதல் உணர்ந்தன்றிப் பேதந் தோன்றுமையின், பேதப் பிரவஞ்ச முண்மைக்குக் காட்சியளவை பிரமாணமன்று. அற்றேல் ஆடை குடத்தின்வேறு குடம் ஆடையின்வேறு என்னுங் காட்சி எல்லார்க்கும் ஒப்பமுடிந்ததாகலிற் பேதப்பிரவஞ்ச வுண்மைக்குக் காட்சியளவை பிராமாணம் அன்றென்றல் பொருந்தாதெனின்,—அற்றன்று; அத்தன்மைத்தாகிய காட்சி சவிகற்பமாகலின், சவிகற்பமெல்லாம் மயக்கமாகலானென்க. பேதப் பிரவஞ்ச வுண்மைக்குக் காட்சியளவை பிரமாணமின்றுகவே, அவினுபாவமாகிய ஏதுவுணர்தற்கு இடமின்மையின், வழியளவை பிரமாணமன்று. அவ்விரண்டிற்கும் மாறுபாடாகிய பொருளின் ஆகமவளவையும் பிரமாண மாகாதென்க. இன்னும், இஃது இதனின் வேறென்னுஞ் சவிகற்பக் காட்சி பிரமாணமென்பார்க்கும் அபேதவுணர்வு நிகழ்ந்தன்றிப் பேத வுணர்ச்சி நிகழாது; எய்தியதற்கன்றி விலக்கின்மையின். அங்ஙனமாகவே, முற்படத் தோன்றும் அபேதவுணர்ச்சி பிரமாணமென்பது ஒருதலையாகக் கோடல்வேண்டும். வேண்டவே, பிற்படத் தோன்றும் பேதவுணர்ச்சி அதனை அவாய்நிற்றலின் பிரமாணமாகாமை யறிக. அபேதவுணர்ச்சி காட்சியளவையானே பெறப்படுதலின் குடம் ஆடையின் வேறன்று; திரவியமாகலால், ஆடைபோலுமென்னும் அனுமானமும், வேற்றுமையின்றிக் கூறும் வேதவாக்கியங்களும், அதற்குப் பிரமாணமாமென்க. ஆகவே, வான் வளி தீ நீர் முதலியனவாக நீ வேற்றுமைபடக்கூறும் வாக்கியங்களெல்லாம் இவ்வளவைகளோடு முரணுதலின், உபசாரமேயன்றிப் பொருள்படா வென்பது கண்டு கொள்க. இங்ஙனம் பேதவுணர்ச்சிக்குப் பிரமாணம் இன்மையிற்

பேதப் பிரவஞ்சமாகிய பிரமேயமின்மையுந் தானே போதரும். அவ் விரண்டும் உளவெனக்கொள்ளினும், பிரமிதிக்கும் பிரமேயத்திற்குஞ் சம்பந்தமென்னை? தாதான்மியமோ? காரண காரியத் தன்மையோ? சையோகமோ? சமவாயமோ? வேறென்றோ? எனக் கடாயினர்க்குத் தாதான்மியமாவது ஒன்றுதானே ஒருவாற்றான் இருவகைப்பட்டுப் பிரிப்பின்றி நிற்றற்கு உரித்தாதலாகலின், அத்தன்மைத்தாகிய தாதான்மிய சம்பந்தங் குடஞானத்திற்குங் குடத்திற்கும் உண்டெனின்,—குடஞானம்போலக் குடமும் அகத்தின்கண் உளதாதல் வேண்டும். குடம் புறத்தின் கண்ணதாகலுங் குடஞானம் அகத்தின் கண்ணதாதலும் எல்லார்க்கும் ஒப்ப முடிந்தமையின், அவற்றிற்குத் தாதான்மியங்கூறல் பொருந்தாமையானும், காரணகாரியத் தன்மையே சம்பந்தமெனின்,—காரண காரியங்களின் ஒன்றுள்வழி ஒன்றின் றுதல் பொருந்தாமையின், கனவின்கண் குடஞான முதலிய உணர் வுண்மையின், குட முதலியனவும் ஆண்டுளவாதல் வேண்டும். அஃதின்மையானும், விடயமும் விடயிப்பதுமாந்தன்மை சம்பந்தமெனின்,—விடயமாவது இதுவென்றறிய வாராமையானும், சம்பந்தமே பெறப்படாமையின், பேதப் பிரவஞ்சம் பிரமிதிக்குப் புலனாகாமையானும், பிரவஞ்சம் அசத்தியப் பொருளேயாகலான், அவற்றிற்குக் காரணமாகிய மாயை அநிருவசனமென்றல் பொருத்தமுடைத்தென்று, இங்ஙனம் மாயாவாதிகள் கடாவிடைகளாற் சாதிப்பராகலின், ஆண்டு இழுக்கென்னையெனின்,—கூறுதும். பிரவஞ்சஞ் சத்தியப் பொருளென்பதற்குக் காட்சியளவையே பிரமாணமாம். கயிற்றை அரவென்க்காணுந் திரிவுக் காட்சியிற்போல மாசறு காட்சியின் வேறுபடுதலின்மையின், நிகழ்காலத்திற் கண்டது முக்காலத்தினும் ஒக்குமாகலானும், நிருவிகற்பக் காட்சியின் விதிமுகத்தாற் பேதமறிய மாட்டாதாயினுங் குற்றியோ மகனோவென்னும் ஐயத்தின் பின்னர் இது குற்றியே மகன் அன்றென எதிர்மறை முகத்தாற் பேதவுணர்வு காட்சிக்குப் புலப்படுதலானும், திரிவுக்காட்சியிற் கயிறு பாம்புபோலவும் மாலைபோலவும் ஒவ்வொருவர்க்கு ஒவ்வொரு காலத்திற் றோன்றும்; அதுபோலன்றி மாசறுகாட்சியின் எல்லார்க்கும் எக்காலத்துங் குடங் குடமேயாய்த் தோன்றுவதல்லது வேறுபடத் தோன்றாமையின் சவிகற்பக்காட்சி பிரமாணமேயாகலானும், அன்றியுங் கயிற்றுக்

கும் அரவிற்குங் கோணி நீண்டுகிடத்தல் முதலிய இலக்கண ஒப்புமையான் ஆண்டு ஒன்றை யொன்றாகத் திரியக்காண்டல் பொருந்தும்; அதுபோலச் சித்தாகிய பிரமத்தைக் குடமுதலிய பொருளாகத் திரியக் காண்டற்குத் தம்முளொப்புமை யின்மையின் அதனையும் அவ்வாறு திரிவுக்காட்சியென்றல் பொருந்தாமையானும், சவிகற்பக் காட்சிக்கு நிருவிகற்பக்காட்சி காரணமாகலின் காரணத்துள்ளதே காரியத்தினுமுண்மையால் பெயர் சாதி குணமுதலிய பேதவுணர்ச்சி நிருவிகற்பக் காட்சியின் இன்றாயின் சவிகற்பக்காட்சியினும் இன்றாய் முடியுமாகலின், நிருவிகற்பக் காட்சியினுஞ் சூக்குமமாய்ப் பேதந்தோன்றுமாகலானும், அதுபற்றி எய்தியதற்கே விலக்காகலிற் பேதமுணர்ந்தன்றிப் பேதமின்மையுணர்தல் கூடாமையின் அபேதஞானமும் பேதஞானத்தை அவாவிநிற்றலின், அபேதஞானம் முற்படத் தோன்றுதல் பற்றிப் பிரமாணமென்றல் பொருந்தாமையானும், ஆடை குடத்திற்கு வேறென்றற் றொடக்கத்துப் பேதவுணர்ச்சி முக்காலத்தினும் வேறுபடாமையின், ஆடை குடத்தின் வேறன்று என்றற் றொடக்கத்து அபேதவுணர்ச்சி எதிர்காலத்தின் வேறுபடுதலின், வேறுபடாமையும் வேறுபடுதலும் பற்றியே பிரமாணமென்றும் அப்பிரமாணமென்றுங் கோடல் பொருத்த முடைத்தாகலானும், காட்சியளவையே பேதவுணர்ச்சிக்குப் பிரமாணமாதலறிக. ஆகவே, அபேதஞ் சாதித்தற்கு முற்கூறிய அனுமானமும் போலியாயவாறு காண்க. அங்ஙனமல்லாக்கால், அவ்வனுமானத்தானே ஆடையெடுக்கச் சென்றான் குடத்தையெடுத்து வருதல் வேண்டுமென்றொழிக. இதனானே அபேதங்கூறும் ஆகமங்களும் உபசாரமென்பது கண்டுகொள்க. இன்னும் பிரவஞ்சம் மித்தையெனத் துணிவதற்குக் கொண்ட பிரமாணம் மெய்யோ? பொய்யோ? எனக் கடாயினர்க்கு, மெய்யெனிற் பிரவஞ்சத்துட்பட்ட பிரமாணம் மெய்யெனவே அம்முறையாற் பிரவஞ்சமும் மெய்யேயாம். பொய்யெனிற் பொய் பிரமாணமாகாமையின் பிரவஞ்சம் மெய்ப்பொருளென்பது தானேபோதரும். அற்றேல், பிரமிதிக்கும் பிரமேயத்திற்குஞ் சம்பந்தமென்னையெனின்,—அறியப்படுவதும் அறிவதுமாகிய விடய விடயித்தன்மையே சம்பந்தமென்றுணர்க. விடய விடயித்தன்மை சம்பந்தம் அன்றென்பையாயின், நீ பிரவஞ்சம் மித்தை யென்றுணரும் உணர்விற்கு அதுவிடய மாகாமையிற் பிரவஞ்சம் மித்தை யன்றெனப்பட்டு உனக்கே வழுவாமென்றொழிக.

அற்றேல், விடயமாவதியாதெனின்,—எவ்வுணர்வு நிகழ்ந்துழி எப்பொருள் விளங்கும் அஃது அதற்கு் விடயமென்க. விளங்குதல், விளங்குதற்கு உரிமையாதல். ஆகவே, இங்ஙனங் கூறியவாற்றாற் பிரமாணமுஞ் சம்பந்தமும் உண்மையிற் பிரமேயமாகிய பிரவஞ்சம் மெய்ப்பொருளேயாகலான் அதற்கு முதற்காரணமாகிய மாயையும் மெய்ப்பொருளாவதன்றி அநிருவசனமாதல் பொருந்தாமை யறிக.

இனி வேதத்துள் ஓரிடத்தும் பிரமப்பொருளை "உபாதானம்" என்னுஞ் சொல்லால் எடுத்தோதக் காணாமையால், பிரமம் பிரவஞ்சத்திற்குப் பரமாதார வியாபக நிமித்த மென்பதே வேதத்துக்குங் கருத்தாமென்க. இன்னும், அவ்வமுதற் காரணங்களின் குணமெல்லாம் அவ்வக்காரியங்கட்கும் உளவென்பது நியமமாதலின், சித்தாகிய பிரமத்திற்றோன்றிய பிரவஞ்சமுஞ் சித்தாதல் வேண்டுமன்றிச் சடமாதல் பொருந்தாதென்க. அற்றேல், பாலிலுண்டாகிய தயிருக்குப் பாலின்குணமும் நெல்லிலுண்டாகிய பதர் பலாலங்கட்கு நெல்லின் குணமுங் கொம்பிலுண்டாகிய புல்லுக்குக் கொம்பின் குணமுஞ் சிலம்பியி லுண்டாகிய நூலுக்குச் சிலம்பியின் குணமுங் கோமயத்தி லுண்டாகிய தேளுக்குக் கோமயத்தின் குணமுங் காணாமையின், காரணத்தின் குணமே காரியத்திற்குங் கோடுமென்னும் நியமம் பொருந்தாதாலெனின்,—அற்றன்று; ஒன்றன்குணம் ஒன்றற்காதல் இன்மையின், காரணத்தின் குணமே காரியத்திற்கும் என்பதற்குத் தாற்பரியம், காரணத்தின் குணங்களோடு ஒத்த குணங்களே காரியத்திற்கு உளவாதலன்றி அவற்றிற்கு மறுதலையான குணங்கள் உளவாகா வென்பதேயாமாகலான், ஈண்டெடுத்துக் காட்டியவற்றுள் நியமத்துக்கு இழுக்கின்மையறிக. சிலம்பியின் நூல் வருதற்குச் சூக்கும காரணஞ் சிலம்பி வயிற்றினுண்மையானுங் கோமயத்திற் றோன்றியது தேளினுடம்பேயாகலானும், இன்னோரன்னவை யெல்லாம் பிறவிப் பேதமாகலானும், ஆண்டு ஐயப்பாடின்மை கண்டுகொள்க.

ஈண்டுக் கூறியவாற்றான் மாயையே பிரவஞ்சத்திற்கு முதற்காரண மென்பதூஉம், அதற்குத் தாரகமாய் விரவிநின்று அதிட்டித்தலான் முதல்வன் நிமித்தகாரணமேயாவனென்பதூஉம், துணிபொருளாயினமை காண்க. "மாயையான் விசேடிக்கப்பட்டு விசிட்டனாய் நின்று முதல்வனும் முதற்காரணமாம்" என்ற நீலகண்ட ஆசிரிய

ரும் பரந்து சென்று முடிவின்கண் இவ்வாறு கோடலே சித்தாந்தமாக வலியுறுத்தினர். அது சென்மாதிகரணத்து இறுதியிற் சிவாதித் தியமணி தீபிகையினுங் காண்க.

அற்றேல், "பிரமத்தையுணர்ந்தோன் எல்லா முணர்ந்தோன்" என்றற் றொடக்கத்து வேத வசனங்கள் பயப்பாடு இலவாமெனின், உடையான் இயல்புணர்ந்தவழி, உடைப்பொருளான உயிர் மாயை கன் மங்களும் அவ்விலக்கணத்துள் அகப்பட்டு வியாப்பியமாய் நிற்றலின், அவையும் இனிது விளங்குமென்பது அவற்றிற்குப் பொருளாதலின், பயப்பாடுடையனவேயாமென்க. கோயில் நான்மணிமாலையில்,

"நுரையுந் திரையு நொப்புறு கொட்பும்
வரையில் சீகர வாரியுங் குரைகடற்
பெருத்துஞ் சிறுத்தும் பிறங்குவ தோன்றி
யெண்ணில வாகி யிருங்கட லடங்குந்
தன்மை போலச் சராசர மனைத்து
நின்னிடைத் தோன்றி நின்னிடை யடங்கும்"

என்றது, முதல்வன் மாயைக்கு ஆதாரமாய் நிற்றல் பற்றி யாகலின், ஆண்டு ஐயப்பாடின்மை யறிக. இது கிழங்கினின்றுந் தோன்றுந் தாம ரையைப் பங்கசம் என்பது போல்வதோர் உபசார வழக்கெனக் கொள்க. மாயைக்குத் தாரகமாய் நிற்றல்பற்றியே அவ்வாறுரைத்த தென்பது உணர்ந்துகோடற்கே, நீரிற் றோன்றியொடுங்கும் நுரை முதலியவற்றை நீர்க்கு இடனாகிய கடலிற்றோன்றி யொடுங்குதல் போலென்று உவமை கூறினா ரென்க. கடலென்றது—நீர்க்கு இடங் கொடுத்து நிற்கும் ஆகாயம். நின்ற திருத்தாண்டகத்தும் பிறண்டும்,

"இருநிலனாய்த்தீயாகிநீருமாகி
யியமானனாய்யெறியுங்காற்றுமாகி
அருநிலையதிங்களாய்ஞாயிறாகி
யாகாசமாயட்டமூர்த்தியாகிப்
பெருநலமுங்குற்றமும்பெண்ணுமாணும்
பிறருருவுந்தம்முருவுந்தாமேயாகி
நெருநலையாயின்றாகிநாளையாகி
நிமிர்புன்சடையடிகணின்றவாறே"

என்பது முதலாக வெழுந்த தமிழ்வேதத் திருவாக்குக்களும்,

"அறிவானுந் தானே யறிவிப்பான் றானே
யறிவா யறிகின்றான் றானே—யறிகின்ற
மெய்ப்பொருளுந் தானே விரிசுடர்பா ராகாச
மப்பொருளுந் தானே யவன்"

என்னும் அம்மை திருவாக்கும், உலகெலாமாகி வேறாய் உடனுமாய் முதல்வன் நிற்றல்பற்றியாகலின், ஆண்டு ஆசங்கையின்மையுங் கண்டுகொள்க. இதனானே, அபேதங்கூறும் வசனங்களும் உபசாரமேயன்றி உண்மையன்றென்பது கண்டுகொள்க. இவ்வாறன்றி முதல்வன் மாயைபோல முதற்காரண மாவனெனின்,—அது மேற்கூறிய குற்றங்கட்கு இடனாதலன்றியும் "நிருவிகாரி" யென்னுஞ் சுருதிகளோடு முரணுதலும் உடைத்தென்க. இங்ஙனங் கூறியவாற்றால்,

"காரிய கார ணங்கண் முதறுணை நிமித்தங் கண்டாம்
பாரின்மண் டிரிகை பண்ணு மவன்முத றுணைநி மித்தந்
தேரின்மண் மாயை யாகத் திரிகைதன் சத்தி யாக
வாரியன் குலால னாய்நின் றாக்குவ னகில மெல்லாம்"

என்னும் அத்துவித சைவசித்தாந்த வழக்கே சுருதியுத்தி அநுபவம் மூன்றற்கும் ஏற்றதாய்த் திருக்குறட் பொருளை வலியுறுத்தற்குரிய மெய்ப் பிரசங்கமாம் என்றறிந்துகொள்க.

அற்றேலஃதங்ஙனமாக, நிமித்த காரணனாகிய முதல்வன் முதற்காரணமாகிய மாயைக்கு ஆதாரமாவனாயின், உவமப்பொருளாகிய குயவனும் மண்ணுக்காதாரமாதல் வேண்டுமாலெனின், — அறியாது கடாயினாய், உவமமெல்லாம் ஒருபுடை யொத்தலேயன்றி முழுவதும் ஒத்தலின்று. முழுவதும் ஒக்குமென்பாரை முதல்வனுக்குரிய வியாபக முதலிய குணங்களுங் குயவனுக்கும் உளவாதல் வேண்டுமெனக் கடாயினர்க்கு விடையென்னையெனக் கூறி மறுக்க. ஒருபுடையொத்தலானன்றே ஒருபொருளுக்கு ஓரோரியல்புபற்றி வேறு வேறு உவமை கூறியதூஉ மென்க. அற்றேல், இவ்வியல்பிற்கு உவமை யாதோ வெனின்,—நன்றே கடாயினாய். குழவியுடம்பின் முதற்காரணமாகிய உதிர சுக்கிலங்களுக்கு ஆதாரம் அதற்கு நிமித்த காரணமாகிய தாய் தந்தையாதலுஞ் சிலம்பி நூலின் முதற்காரணத்துக்கு ஆதாரம் அதற்கு நிமித்தகாரணமாகிய சிலம்பியாதலும் அறிந்தாயன்றே!

இவ்வாறு பலவுளவெனக் கொள்க. பிரமவிவர்த்தன அபேதவாத நிராகரணம் ஆசிரியர் சிவஞானயோகிகள், சிவஞான மாபாடியத்து விரித்து உரைத்தருளினர். சிவஞான போதத்துப் பிரமாணவோத்தின் இரண்டாம் பாதத்து இரண்டாம் அதிகரணத்துட் காண்க.

ஆதிபகவனாகிய முதல்வன் எள்ளின் நெய்போலப் பசுபாசங்களிற் கலந்து நீக்கமற ஔபச்சிலேடிக வியாபகமாய் நிற்குமியல்பினனாகலின், அவன் பிரபஞ்சகாரியம் இயற்றாது இயற்றுதற்குக் குலாலனை அங்ஙனம் உவமையாகக் கூறுதல் கருத்தாவாதல்மாத்திரைக்கேயன்றி வேறில்லையென்பது தெரிந்துகொள்க. இயற்றாது இயற்றுதலாவது கரணத்தானன்றிச் சங்கற்பமாத்திரையாற் செய்தலாம். மற்றுக் குலாலன் சங்கற்பத்தானன்றிக் கரணத்தாற் காரியஞ்செய்யும் வினை முதலாகலின் சங்கற்பத்தாற் காரியஞ்செய்யும் ஆதிபகவனுக்குக் கருத்தா முறைமையினுஞ் சிறிது ஒப்புப்பற்றியே உவமமாகின்றான் என்றுணர்க. ஈண்டுச் சங்கற்பமென்றது,— வியாபக சிற்சத்தி சன்னிதிப் பிரேரகத்தினை. கர்த்திருத்துவம் அங்ஙனம் இருவகையாமாறு,

“ 𑌕𑌰𑍍𑌤𑍃𑌤𑍍𑌵𑌦𑍍𑌵𑌯𑌂 𑌵𑌿𑌪𑍍𑌰𑌾𑌸𑍍𑌸𑌂𑌕𑌲𑍍𑌪𑌾𑌤𑍍𑌕𑌰𑌣𑌾𑌦𑌪𑌿 |
𑌨𑌹𑌿𑌸𑌂𑌕𑌲𑍍𑌪𑌮𑌾𑌤𑍍𑌰𑍇𑌣 𑌕𑍁𑌲𑌾𑌲𑍇𑌨 𑌕𑍍𑌰𑌿𑌯𑌤𑍇 𑌘𑌟𑌃 |
𑌶𑌿𑌵𑌸𑍍𑌸𑌂𑌕𑌲𑍍𑌪𑌮𑌾𑌤𑍍𑌰𑍇𑌣 𑌬𑌂𑌧𑌮𑍋𑌕𑍍𑌷𑌾𑌦𑌿𑌕𑌾𑌰𑌸𑍍𑌸𑌦𑌾 ”

என்னும் பவுட்கராகம வசனத்தானறிக.

இறைவன் எள்ளின் நெய்போலப் பசுபாசங்களிற் கலந்து நீக்கமற ஔபச்சிலேடிக வியாபகமாய் நிறைந்து நிற்குமென்னும் அத்துவித சைவ சித்தாந்த திருவசனவுரையை, இக்காலத்து ஏகான்மவாதிகளுள் ஒருசாராருட்பட்டார், எள்ளின் நெய் கோதிடையுற்றுப் பிரிந்திருக்கக் காண்டலின், உவமேயமாம் முதல்வனும் ஒன்றன் இடையீடுற்றுப்பிரிந்து வியாபகமாகுங்கொலென்று ஆசங்கை நிகழ்த்துவர். ஒருபொருட்கு ஒருபொருள் உவமமாதல் ஒருபுடையொத்தல் பற்றியேயென்பது மேற்கூறினமாகலின், அங்ஙனம் ஆசங்கித்தல் உவமையிலக்கணமறியார் கூற்றேயாமென்றொழிக. பசு பாசங்களில் முதல்வன் கலந்து நீக்கமற வியாபகமாய் நிற்றற்கு எள்ளின் நெய்யை உவமானமாகக் கூறுவது, நெய் எள்ளில் உள்ளும் புறம்புமாய்க் கலந்திருத்தல்

பற்றியேயன்றிப்பிறிதில்லையென்க. இங்ஙனம் ஆசங்கிப்பார் ஆவிரம்பூ, பொன்னோடு ஒக்கும் என்றவழி அஃது உருக்கியடித்து நீட்டவும் படுங்கொலெனவும், இவள்நுதல் பிறைமதிபோலும் என்றவழி, குறைதலும் வளர்தலும் வானூறியங்குதலும் என்றிவையும் இவள்நுதற்கு உளகொலெனவும் ஆசங்கிப்பாராகலின், அவை அவர் வெள்ளறிவு வியாபாரமாமென்று ஒழிக்கப்படுவனவல்லது மறுத்தற்கு ஏற்பனவல்ல என்றறிக. ஈண்டுக் குறைதல் மறைதலும் வளர்தல் வெளியாதலுமாம். இன்னும் அவர் பசுபாசங்கள் மெய்ப்பொருளென்பார் முதல்வன் வியாபகத்துக்கு நூல்நதை கூறுபவராவர். யாதினாலெனின்,—பசுபாசங்களுள்ள இடங்களின் முதல்வனிருப்பு இடையறவுற்று அவன் வியாபகங் குறைவுறுதலால் என்று இங்ஙனம் ஆசங்கை நிகழ்த்தா நிற்பர். இன்னோரன்ன ஆசங்கைகளை அவர் பிராகிருத அவயவ கண்டப் பொருட் பயிற்சியினால் நிகழ்த்துகின்றார். என்னை? அவயவமுடைய கண்டப்பொருளன்றி நிர்அவயவ அகண்டசச்சிதானந்தப் பொருள் மற்றொன்றான் இடையறவுற்றுக் குறைவுறாதாதலானென்க. ஆதிபகவனாகிய இறைவன் நிர்அவயவ அகண்ட சச்சிதானந்த முதற்பொருளாகலின், அவன் அனாதியே தன்போல நித்தியமாய்த் தனக்கு வியாப்பியமான சிதசித்துக்களில் யாண்டுங்கலந்து நீக்கமறத் தன்பூரணத்திற்கு நூல்நதையாதுமின்றி அவையேதானாய் நிற்கும் பெற்றியுடையனாமென்க. இனி அப்பெற்றி உயிர்களால் இற்றென அறியவும் ஓதவும் வாராத் சொரூபமாம். அற்றாகலினன்றே சுருதிகளும் அவன் சொரூபவியல்பு "வாங் மனசாதீத மென்றும்" "அநிர்த்தேசியம்" என்றும் அங்ஙனமெடுத்து முறையிட்டு ஓய்ந்தன வென்பது.

"மாற்ற மனங்கழிய நின்ற மறையோனே"

என்னுந்தமிழ்வேதமும் அக்கருத்தேபற்றி யெழுந்தது. மாற்றம்-வாக்கு. வளி தீ நீர் நிலமென ஒன்றற்கொன்று தூலமாகி நிலைபெறும் பூதங்கள் நான்கிற்குஞ் சூக்கும பூதமான ஆகாயம் இடங்கொடுத்து வியாபகமாய் நிற்கும் பெற்றியே மக்கட்கு உற்றறிதற்கு அரிதாய நுண்பொருளாம். ஆனபின், நிர்அவய அவகண்ட சத்தாயுஞ் சித்தாயும் ஆனந்தமாயும் நிற்கும் பரப்பிரம முதற்பொருள் பசுபாசங்களுக்கு அந்தரியாமியாயும் வியாபியாயும் பூரணமுற்று நிற்குஞ் சொரூபவியல்பை, மாயா தனுகரணங்களாற் கட்டுற்று அவற்றின் உபகாரத்தானுஞ் சுத்தமாயா நாத

விருத்தி காரிய சத்த சமூகமான வேதமுதலிய கலையறிவு மின்மினி விளக்கத்தானுஞ் சிறிதறிவு விளங்கி, அங்ஙனம் விளங்கிய சிற்றறிவு மாத்திரையானே, நாம் பிரமமென்று தருக்கி, இறைவன் திருவருட்கு அயலாய்க் கேவலமுற்றுமுழலும் பசுபோதப் புல்லறிவுயிர்கள், நாம் அறிந்தாமென்று ஒருப்படுதலும், பசுபாசங்கள் மெய்ப்பொருளாயின் அவற்றினிருப்பான் முதல்வன் வியாபகத்திற்கு இடையறவு முட்டுற்று நூல்நுதை புகுதருமென்று பாண்டித்தியம்போல அபிநயித்துக் குதர்க்கநிகழ்த்தலும், புல்லறிவு முதிர்ச்சியாவதல்லது மற்றியாதா மென்க. இதுகாறுங் கூறியவாற்றால் "அகர முதலெழுத்தே ஆகார முதலிய எழுத்துக்களாய்த் தோன்றுநிற்கும். அதுபோலப் பிரமப் பொருளொன்றே அவிச்சையினாற் சிற்சடங்களாய்க் காணப்படும்" என்னும் பிரமவிவர்த்தன ஏகான்மவாதக் கொள்கை, ஆகாய சித்திரம் போல வெறும்போலியாயது, தெளிந்து கொள்க.

ஏகான்மவாதிகள் இன்னுந் தங்கொள்கை நிறுத்தவேண்டி, "அகரம் அங்காத்தன் மாத்திரையானே பிறக்கும். ஏனைய எழுத்துக்களும் அவ்வங்காப்பே காரணமாகக்கொண்டு பிறந்து வேறுபட்டு நடக்கும். அங்காப்பு முயற்சியில்வழி அவற்றிற்குத் தோற்றரவு கூடாதாம். இங்ஙனமாகலின், அவையெல்லாம் அகரமுதற்காரணகாரியமே" என்று இங்ஙனங் கூறுநிற்பர். அகர அக்கரம், நாதகாரியமான ஓர் திரவியம். அங்காப்பு, அண்ணத்தின் தொழில்; என்றது.— கீழ்மேலுதடுகளின் நீக்கவியாபாரம். திரவியமுந் தொழிலும் வேறாகலின், அங்காப்பே அகரமெனக்கொண்டு அவ்வங்காப்பு முயற்சியிற் பிறத்தலின், ஏனையெழுத்துக்களும் அகர காரியமேயாமென்றல் திரவியத்திற்குந் தொழிலுக்கும் வேற்றுமையறியார் கூற்றேயாமென்று மறுக்க. இன்னும், இதனை ஓர் திருட்டாந்தத்தில் வைத்துப் புலப்படக் காட்டுதும். ஒரு வாயில், ஓர் அரண்மனையில் அரசன் புறம் போதரற்கென அமைக்கப்பட்டு, அரசவாயிலென வழங்கப்படும். அவ்வாயிலால் அரசன் புறம்போதரா நிற்பன். அவன் புறம்போதருங்கால் அவற்குரிய ஊர்திப்படைவீரருங் கால்நடைப் படைவீரரும் அவ்வாயிலாற்றானே படையமைந்து உடன்போதராநிற்பர். அங்ஙனம் போதருல்பற்றி அரசன் படைவீரராகான். படைவீரர் அரசன் ஆகார். அதுபோல, அங்காப்பு முயற்சினால் அகரமும் ஏனையெழுத்துக்

களும் பைசந்தி அவத்தையினீங்கி வைகரியாய் வெளிப்படுதல்பற்றி அகரம் ஏனையெழுத்துக்களாகாது. ஏனையெழுத்துக்கள் அகரமாகா. அரண்மனைவாயிற் புதவனீக்கமென்னுந் தொழில் அரசன் புறம்போதற்குச் சிறப்புடைத்தாய்ப் படைவீரர் புறப்போக்கிற்கும் ஏற்புடைத் தாம். அற்றே யுதடுகளின் நீக்கமெனப்படுந்தொழில் அகரம் புலனுதற்குச் சிறந்த முயற்சியாய் ஏனையெழுத்துக்களின் புலப்பாட்டிற்கும் ஏற்கு முயற்சியாம். இதில் அரசன் அகரத்திற்கும் இருவகைப்படைவீரர் ஏனையிருவகை எழுத்திற்கும் வாயிற்புதவங்கள் இரண்டும் மேல் கீழுதடுகள் இரண்டற்கும், அவற்றின் நீக்கம் உதடுகளின் நீக்கத்திற்கும், திருட்டாந்தமாயினமை காண்க. இனி அரசன் வாயிலாற் புறம் போதற்குமுன் அரண்மனையுள் வீற்றிருந்தான். அவன் மெய்க்காவற் படைவீரரும் ஆண்டே அவற்காத்து உடன்நின்றார். அதுபோல, அகரம் உதடுகளின் அங்காப்பினுற் புலனுகுதற்குமுன், நாத தத்துவத்தின்கண் சத்திமாத்திரையாய் வீற்றிருந்தது. ஏனையெழுத்துக்களும் அகரச்சத்தியான் வியாபிக்கப்பட்டு ஆண்டே சத்திமாத்திரையாய் அதற்குரிமையுற்று நிலைபெற்றன. இவ்வெழுத்துச் சத்திகள் நித்தமாதலால், அக்கரமென்று அங்ஙனம் வழங்கப்படும். இதனுனே அகரநாதத்தின்கண் சத்தி மாத்திரையாய் நிற்குஞ் செவ்வியிற்றுனே, அங்ஙனஞ் சத்தி மாத்திரையாய் நிற்கும் ஏனையெழுத்துக்களுக்கு முதலாய் நிறையுயிர் முயற்சியின் நாதமாத்திரையாய் விகாரமின்றி அங்காப்பு முயற்சிபற்றி இயல்பான் வெளிப்படுமென்பதூஉம், ஏனையெழுத்துக்களும் அதன் சத்தியான் அங்ஙனம் வியாபிக்கப்பட்டு நின்றவாறே, நிறையுயிர் முயற்சியால் அதன் தோற்றத்திற்குச் சிறந்த அங்காப்பு முயற்சிபற்றி, அதனுயிர்ப்பானே விகாரமுற்றுத் தோன்றுமென்பதூஉம், அம்முறையானே அகரம் ஏனையெழுத்துக்களின் தோற்ற இயக்கங்களுக்கு நிமித்தமாமென்பதூஉம், எழுத்துக்களுக்கு முதற்காரணம் நாதத்தின்கண்கிடக்கும் அவ்வச்சத்திகளென்பதூஉம், அண்ணத்தின் தொழிலாகும் அங்காப்பு முதலிய முயற்சிகள் எழுத்துக்களின் தோற்றத்திற்குத் துணைக்காரணமென்பதூஉம் கண்டுகொள்க. நாதத்தின்கண் அகர முதலியவெழுத்துச் சத்திகளெல்லாம் வெவ்வேறுயிருத்தலின், அவை வெவ்வேறு பொருளாதலன்றி ஒன்று மற்றொன்றாகித் திரிந்த பொருள்கள் அல்லவென்பதுணர்க.

ஈண்டுக்கூறியவாற்றால், அங்காப்பு முயற்சியேகொண்டு "அகர முதற் காரணமாகி நிற்ப, ஏனையெழுத்துக்க ளெல்லாம் அதன் காரியமாய்த் தோன்றி விளங்காநிற்கும். அதுபோலப் பிரமம் முதற்காரணமாகி நிற்பச் சிற்சடங்களெல்லாம் அதன் காரியமாய்த்தோன்றி விளங்கா நிற்கும்" என்னும் பிரமவிவர்த்தனவாதம் அளவைகட்கன்றிப் பொருந்துமாற்றிற்கும் ஏலாதவாறு கண்டுகொள்க. வடநூலார் பொருந்துமாற்றினை யுத்தியென்பர். உயிர்க்கு அந்தரியாமியாய்நிற்கும் முதல்வன்சிற்சத்தி உயிர்க்கிழவன் சிற்சத்தியினைப் பிரேரிக்க, உயிர்க் கிழவன்சிற்சத்தி நாதத்தினையியக்க, நாதந் தன்விருத்தி ரூபமான அகரத்தினையியக்க, அகரம் ஆகார முதலிய எழுத்துக்களை இயக்கித் தோற்றுவித்தலின், அகரம் ஏனையெழுத்துக்களின் தோற்றத்திற் கெல்லாம் நிமித்த காரணமாமென்று அங்ஙன முரைத்தாம். உண்மை யில் எழுத்துக்களின் தோற்றத்திற்கு அகரம் அவாந்தர நிமித்தமென் றும், பரமநிமித்தகாரணம் முதல்வன் சிற்சத்தியேயாமென்றும், கடைப்பிடித்து உணர்ந்துகொள்க.

நாயனர் ஆதிபகவனுன முதல்வனும் அவனுடைப்பொருள் களான சேதனசேதன இருவகையுலகும் இவ்வாறு மெய்ப்பொருள்க ளென நிதரிசன உவமையளவையான் முதற்கண் நிறுத்தி,

"கற்றதனு லாய பயனென்கொல் வாலறிவ
னற்ருடொழாஅ ரெனின்"

"மலர்மிசை யேகினன் மாணடி சேர்ந்தார்
நிலமிசை நீடுவாழ் வார்"

"வேண்டுதல் வேண்டாமை யிலானடி சேர்ந்தார்க்
கியாண்டு மிடும்பை யில"

"இருள்சே ரிருவினையுஞ் சேரா விறைவன்
பொருள்சேர் புகழ்புரிந்தார் மாட்டு"

"பொறிவாயி லைந்தவித்தான் பொய்தீ ரொழுக்க
நெறிநின்ருர் நீடுவாழ் வார்"

என்று இங்ஙனம் மெய்ப்பொருளான ஆன்மாக்கள் தந்தலைவனுன ஆதி பகவனை அவனருளிய மெய்ந்நூல் கற்றுணர்ந்து மனமுதலிய முக்கா

ணங்களையும் அம்முதல்வன் பணிக்காக்கின், அவன் திருவருட் பேறெய்திப் பேரின்ப வாழ்வு தலைக்கூடு'மென்றும்,

"தனக்குவமை யில்லாதான் றாள்சேர்ந்தார்க் கல்லான்
மனக்கவலை மாற்ற லரிது"

"அறவாழி யந்தணன் றாள்சேர்ந்தார்க் கல்லாற்
பிறவாழி நீந்த லரிது"

"கோளில் பொறியிற் குணமிலவே யெண்குணத்தான்
றாளை வணங்காத் தலை"

"பிறவிப் பெருங்கட னீந்துவர் நீந்தா
ரிறைவ னடிசேரா தார்"

என்று அவ்வாறு வழிபாடாற்றாதவழிப் பிறவிப் பெருங்கடலிற்பட்டு அதனுள் அழுந்துமென்றும், ஒருதலைப்படுத்து, ஆன்மாக்கள் பொருளின்பந் தலைக்கீடாகக்கொண்டு அறஞ்செய்து வீடுபேறு கூடுநெறி உத்தர வேதத்துச் சத்தியமாக எடுத்தருளிச் செய்தாராகலின், சீவான்மாக்களும், அவை வினைப்போகம் புசிக்குமுகத்தாற் பக்குவமெய்தற்குக் கருவியாய் நிற்குஞ் சகமும், வீடுபயக்கும் இறைவழிபாடான சாதகமும், பேறுமென்னும் இவையெல்லாம், வெறுங்கற்பனை யென்று கொண்ட ஏகான்மவாதிகட்கும், இங்ஙனங்கூறும் உத்தரவேதத்திற்கும், யாதுஞ் சம்பந்தமின்றாம். உத்தரவேதமான திருக்குறளும், தேவாரம், திருவாசகம், திருக்கோவை, திருவிசைப்பா, திருப்பல்லாண்டு, திருமந்திரம், நாற்பான்பிரபந்தங்கள், பெரிய புராணமென்னுந் திருமுறைகளும், தங்கொள்கைக்கு முழுமாறாகின்றது கண்டு, அவற்றை அயலாகக்கருதி ஓதுங்கும் நீரரான ஏகான்மவாதிகளுட் பட்டார் சிலர்இக்காலத்து அவற்றின்கணுள்ள திருவாக்குக்களில் ஓரோவொன்றையெடுத்து இங்ஙனம் போலியாகவுரைசெய்து, உரிமைகோடற்குக்காரணம், "உயர்ந்தோரெல்லாம் இத்திராவிடச் சுருதிகள் தெய்வமொழியாதல் தேர்ந்து பாராயணஞ்செய்து திருவருள் தலைக்கூட முயலாநின்றார், நாம் அவற்றைத்தழுவாது ஒதுங்குதலால், நம்மைப் பரமசிவன் திருவருட்கு அயலானவரென்றும், நம் ஏகான்மவாதக் கொள்கை தம் உண்மைநாயன்மார் வைதிகசைவத் திருவருணெறிக்குப் புறம்பாயதென்றும், தமிழுலகம் நம்மனோரைக் காணும்பொழு

தெல்லாம் இகழ்ந்து அவமதித்து அணுகாது செல்கின்றது; உத்தர வேதந் திருமுறை யென்பவற்றின்கணுள்ள ஒரோர் செய்யுட் களையெடுத்து நம்மதமாக்கி யுரைசெய்துபோற்றின், நம்மை இகழாது மதித்து நம்மோடு உரையாடவரும்; அன்னுழி அதனை நம் மதத்தில் ஈர்த்துக் கொள்ளலாம்", எனக் கொண்ட துர் அபிமானமே பிறிதில்லை யென்றறிக.

நாயனார் "கற்றீண்டு மெய்ப்பொருள் கண்டார்" "சிறப்பென் னுஞ் செம்பொருள்" என்று இவ்வாறு ஆதிபகவனாகிய முதற்பொருளை நித்தியசத்தென்று எடுத்தோதியதுபோல, ஆன்மாக்களையும் "மன் னுயி ரோம்பி" "மன்னுயிர்க் கின்னா செயல்" "மன்னுயி ரெல்லாந் தொழும்" "மனநல மன்னுயிர்க் காக்கம்" என்று இங்ஙனம் நித்திய சத்தென்று எடுத்தோதுதலின், உயிர்கள் நித்தியப்பொருள்களென்பது உத்தரவேதத்து வெளிப்படைப் பொருளாமென்க. "மன்னுயி ரோம்பி" என்னுந் திருக்குறளுரையிற் பரிமேலழகியார் "உயிர்க ளெல்லாம் நித்தமாகலின் மன்னுயிரென்றார்" என்று அவ்வாறுரைத் தார்.

"பொருளல் லவற்றைப் பொருளென் றுணரு
மருளானா மாணாப் பிறப்பு"

"எப்பொரு ளெத்தன்மைத் தாயினு மப்பொருண்
மெய்ப்பொருள் காண்ப தறிவு"

என்பன தமக்கு இட்டமாவன என்று கொண்டு, ஏகான்மவாதிகள், அவற்றை யெடுத்துப் படித்துப் பிரவஞ்சம் மித்தையென்பதே நாய னார்க்குங் கருத்தாமென்பர். ஆண்டுப் "பொருளல்ல" என்றதும் "எப் பொரு ளெத்தன்மைத் தாயினும்" என்றதுங் காரியப் பிரவஞ்சத் தினை. தத்துவப்பிரவஞ்சம் மெய்ப்பொருளாயினுங் காரியவவத்தையில் நின்ற அதன் தூலவடிவம் இத்துணைப் பொழுது நிற்குமென நம்மனோ ரால் அறியவாராது நீர்மேலெழுத்தும் கனவும் பேய்த்தேரும்போல் நிலைபெறுவதுபோலத் தோன்றிக் காட்சிப்புலனாய் விரையக்கெட்டு மறைந்துபோதற் சிறப்புடைத்து. அங்ஙனம் மறைந்துபோகும் நீர்மையுடையதனை நிலையுதலுடையதென்று திரியக்கொள்ளுமுணர்வு பிறப்பிற்கேதுவாதலால், அம்மயக்கவுணர்வை மெய்யுணர்வாற் களைந்து

பரம்பொருளோடு ஒற்றுமையுறுதற்கு ஏதுவாகிய உண்மைஞான நிட்டை கூடுகவென்பார்,

"பொருளல் லவற்றைப் பொருளென் றுணரு
மருளானு மாணாப் பிறப்பு"

"எப்பொரு ளெத்தன்மைத் தாயினு மப்பொருண்
மெய்ப்பொருள் காண்ப தறிவு"

என்று அங்ஙனம் ஓதியருளினர். ஆகலின், அத்திருக்குறள்களும் அவைபோல்வனவும் அவர்க்கு இட்டவிகாதஞ்செய்து நமக்கு அநுகூலம் புரிவனவாமென்க. "பொருளல்லவற்றை" "எப்பொரு ளெத் தன்மைத் தாயினும்" என்பவற்றுற் காரியப்பிரவஞ்சமே கருதப்பட்டதென்பது

"நில்லா தவற்றை நிலையின வென்றுணரும்
புல்லறி வாண்மை கடை"

என்னுந் திருக்குறளான் அறியற்பாற்று. "தோற்ற முடையவற்றைக் கேடிலவென்று கருதும் புல்லறிவால் அவற்றின்மேற் பற்றுச்செய்தல் பிறவித்துன்பத்திற்கு ஏதுவாகலின், அது வீடெய்துவார்க்கு இழுக்கென்பது இதனுற் கூறப்பட்டது" என்னும் பரிமேலழகருரையும் இதனைக் கரிபோக்கி நிறுத்துமென்க. இன்னும்,

"இரந்து முயிர்வாழ்தல் வேண்டிற் பரந்து
கெடுக வுலகியற்றி யான்"

என்னுந் திருக்குறளிற்போந்த 'உலகியற்றியான்' என்னும் பிரயோகம் ஆதிபகவன் உலகிற்கு நிமித்த காரணனேயாதலை நன்று நிறுத்திற்று. யாங்ஙனமெனின்,—அது மாயையினுல் இவ்வுலகியற்றியானெனத் துணைக்காரண முதற்காரணங்களின் வேறுபடுத்து வினைமுதலான நிமித்தகாரணத் தன்மை விளக்கி "ஆதிபகவன் முதற்றே யுலகு" என்னும் உபக்கிரமத் திருவாக்கினை வலியுறுத்தலி னென்க. இன்னும், "மாயையைப் பிரகிருதி யென்றறிக" "மாயையுடையவன் மயேசுர னென்றறிக" என நிமித்த காரணத்தையும் முதற்காரணத்தையும் பகுத்து வேறு வேறோதும் உபநிடத வசனங்களும் ஆதிபகவன் உலகிற்கு நிமித்தகாரணனேயாம் என்னும் உத்தரவேத மகா

வாக்கியத்திற்கு உறுசான்றாத லறிக. மாயையைப் பிரகிருதியென்று அறிக என்பது - மாயையை முதற்காரணமென்று அறிக என்றவாறும். பிரகிருதி, முதற்காரணம், உபாதானம், சமவாயிகாரணம் என்பன ஒருபொருட்கிளவி. "மா என்பது ஒடுங்குதல் யா என்பது வருதலாகலின், எல்லாக் காரியங்களுந் தன்பால் வந்து ஒடுங்குதற்குந் தன்கணின்று தோன்றுதற்குங் காரணமாய் நின்றது மாயையெனப்படு மாகலான், ஒன்றற்கொன்று நுண்ணிதிற் செல்லுஞ் சூக்குமங்கட்கு முடிவிடமாய்நின்ற சூக்குமப்பொருள்யாது அதனை மாயையென்றலே பொருத்தமுடைமை யறிக" என்றார் சிவஞானமாபாடியகாரர். இனி முதல்வன் மாயைக்கு ஆதாரமாய் விரவி நிமித்தகாரணனாயினும், மாயையான் விசேடிக்கப்பட்டு விசிட்டனாய் முதற்காரணமுமாவனெனச் சிவாத்துவிதசைவர் கூறுவர். அது பொருந்தாது. என்னை? தோன்றி நின்றழியும் உடம்பொடு கூடியவழி விகாரப்படுதல் பற்றி உடம்பொடு விசிட்டனாய்நின்ற சீவான்மாவும் தோன்றிநின்று அழிவனென்பது பொருந்தும்; அதுபோல மாயையொடு விசிட்டனாய் முதல்வனும் முதற்காரணமா மென்பார்க்கு, விசிட்டமாவது விசேடணமும் விசேடியமும் அவ்விரண்டின் இயைபுமென்னும் அவற்றின் வேறன்மையான் முதல்வனும் அவ்வாறு விகாரியாதல் வேண்டப்படும். படவே, 'நிருவிகாரி' என்னுஞ் சுருதியொடு முரணுயாகலானென்க. விசிட்டமாவது அம்மூன்றற்கும் வேறெனக்கொள்வார்க்கு முதல்வன் முதற்காரணமென்பதே பொருந்தாதாய் முடியுமென்றறிக. அல்லதூஉம் நிமித்தகாரணமே முதற்காரணமென்று எடுத்துக்காட்டுதற்கு ஒரு பொருளின்மையின் அது வழியளவைக்கு ஏலாமையானும், வழியளவையினும் ஆகமவளவை வலியுடைத்தெனின்,--அற்றாயினும், வழியளவை ஆகமவளவையொடு முரணுதாகலானும், ஒரோவழி முரணுமாயின், அதுபற்றி யாண்டுந் துணிவுபெறாமையின், வழியளவை பிரமாணமன்றெனப்பட்டு, அதுபற்றியோதிய நிகமாகம வசனங்கள் பயனிலவாய் முடியுமாகலானும், நிகமாகமப் பொருள்கள் தம்முள் முரணுவனபோலத் தோன்றியவழி அவற்றுள் வன்மை மென்மை யுணர்ந்து பொருள்கோடற்கு வைத்ததே வழியளவையாகலான் அஃது அதனோடு முரணுதல் பொருத்தமின்மையானும், அது விடையன்மை யறிக. இனி இவ்விரண்டும் பொருந்தாமையா

னும், வேறுவிடுக்குமாறு இன்மையானும், மாயையே முதற்காரணம்; அதற்குத் தாரகமாய் விரவிநின்று அதிட்டித்தலான் முதல்வனும் முதற்காரணமெனக் கோடல்வேண்டும். அங்ஙனங்கொள்ளின் விகாரியாதலின்மையான், முதல்வனும் முதற்காரணமா மென்பது வாய்பாடு மாத்திரையேயன்றிப் பொருட்படாமையின், அஃது எமது அத்துவித சித்தாந்தமென் றொழிக. இவ்வாறாகலின், ஏகான்மவாதிகள் பிரவஞ்சம் அசத்தியமென்பது சாதித்தற்கு அத்திருக்குறள்களைத் தமக்கு அனுகூலமாகக்கோடல் வியர்த்தவியாபாரமே யென்பது தெற்றென உணர்ந்துகொள்க.

இனிப் பகவச் சொற்பொருட்பெற்றி சிறிதுபகர்தும். பகமென்பது ஐசுவரியம், வீரியம், புகழ், திரு, ஞானம், வைராக்கியமென்னும் ஆறற்குமாகலின், பகவன் அவ்வறுகுணங்களையும் உடையோனென்றும். பகம் என்பது அவ்வாறற்குமாமாறு,

'ஐஶ்வர்யஸ்ய ஸமக்ரஸ்ய வீர்யஸ்ய யஶஸஶ்ஶ்ரியஃ।
ஜ்ஞாநவைராக்யயோஶ்சைவ ஷண்ணாம் பக இதீரணா॥'

என்னும் விண்டுபுராண வசனத்தான் அறிக. இவ்வாறும் பரமசிவனுக்கு இயற்கைக் குணங்களாகலின், அப்பரப்பிரம முதல்வனே பகவனென்று அவ்வாறு நாயனாரால் உத்தரவேதமுகத்து ஓதப்பட்டானென்க. இவ்வறு குணங்களும் பரமசிவனுக்குள்ளன என்பதற்குப் பிரமாண மென்னையெனின்,— அவற்கு ஐசுவரியம் உண்மைக்கு ஈசுரபதச் சுருதியும், வீரியம் உண்மைக்கு உக்கிரபதச் சுருதியும், புகழுண்மைக்குச் சிவபதச் சுருதியும், திருவுண்மைக்கு இருக்கு வேதமும், ஞானமுண்மைக்குச் சருவஞ்ஞசுருதியும், வைராக்கியம் உண்மைக்குக் காமரிபுபதச் சுருதியும், பிரமாணமா மென்க. "திருவினாற் சிரேட்டர்; திருவை யெய்தும் பொருட்டுப் பரமசிவனது விசித்திரமான லிங்கம் தேவராற் பூசிக்கப்பட்டது" என்று, இவ்வாறு இருக்கு வேதத்து எடுத்தோதப்பட்டது. அதர்வணவேதஞ் சிவாகமங்களுள் பகவன் நாமம் தலைப்பெய்து எடுத்தோதிற்று. சுவேதாச்சுவதரோபநிடதஞ் சிவபிரானைப் 'பகேசன்' என்று எடுத்தோதிற்று. இவற்றானும் பகவன் நாமப் பொருளாயுள்ளோன் பரமசிவனேயென்பது கடைப்பிடிக்க. அரதத்தாசாரியரும் உமாபதிசிவாசாரியருஞ் சதுர்வேத தாற்

பரிய சங்கிரகத்தினும் பவுட்கராகம விருத்தியினும் இங்ஙனம் பகவப் பெயர் சிவபரமாதலை நன்கு விளக்கியிட்டார்.

இனி மெய்யுணர்வெய்திய தேவர் முனிவராதியோரைப் பகவப் பெயரால் வழங்குதல் அவர்மாட்டு விளங்கும் பரமசிவ விபூதி இயைபு பற்றி யாதலின், அஃது உபசாரமேயாமென்க. நாராயணக் கடவுட்குப் பகவன் நாமம் இயற்கை யாகாதோவெனின்,—நாராயணக்கடவுள் பரமசிவனைக்குறித்து அருந்தவமுழந்து ஐசுவரியம் வீரியம் ஞானம் முதலி யன எய்தியவரலாறு, இதிகாச புராணங்களிற் கேட்கப்படுதலின், பகவப் பெயர்வழக்கு அவற்குஞ் செயற்கையானுயதன்றி இயற்கையான் ஆயதன்றென்க. அற்றேல், நாராயணக்கடவுளடியார் பாகவதரெனவும், அவன்பெருமை எடுத்தோதும் புராணம் பாகவதமெனவும், அங்ஙனம் வழங்கப்படுமாறு என்னையெனின்,—ஈசுரனடியார் சிவபாகவதரெனவும், கௌரிமகிமை யெடுத்தோதும் புராணந் தேவிபாகவத மெனவும் வழங்கவுங் காண்டுமாகலின், அவ்வழக்குக் கொண்டுதானே நாராயணக்கடவுட்கு அஃது இயற்கைப் பெயரென்றல் நிரம்பாதென்க. இனி நிகண்டுநூலார்

" பகவனே யீசன் மாயோன் பங்கயன் சினனே புத்தன் "

என்று கூறியது, அது முக்கியவிருத்தியாற் பரமசிவனுக்குங் கவுண விருத்தியான் மாயோன் முதலிய கடவுளருக்கும் வழங்கப்படுதல்பற்றி யாகலின், ஆண்டு ஐயப்பாடில்லையென்க. அது முக்கிய விருத்தியாற் பரமசிவனையே யுணர்த்துமென்பது அறிவித்தற்கே " பகவனேயீசன் " என்று அங்ஙனம் முதற்கண் நிறீஇயினரென்க.

இனி அபரிச்சின்னைசுவரியம் உணர்த்தும் ஈசானப்பெயர் பரமசிவனுக்கு உரியதாகலின், அதுவே பகவப்பெயர் அம்முதல்வன் நாமமென்பதற்கு அமையுஞ் சான்றாமென்க. ஈசுரபதம் ஐசுவரியயோகத்தாற் பொதுப்பெயராம் பிறவெனின்,— அற்றன்று; ஈசுரபதம் யோகம்பற்றிப் பொதுவாயினும், யோகரூடிபற்றிப் பரமசிவன் நாமமேயாமென்க. ஈசுரபதம் பரமசிவனுக்கு யோகரூடியா மென்றற்கண் பிரமாணம் யாதெனின்,—

" ஈஶ்வரஶ்ஶர்வ ஈஶாநஶ்ஶங்கரஶ்சந்த்ரஶேகர: ".

எனவரும் அபிதானகோச மிருதிபரம்பரையே பிரமாணமென்க.

அவயவசத்தி யொன்றேயுடைய தனித்த யோகத்தினும், அவயவ சத்தி சமுதாயசத்தி யென்னும் இரண்டும் ஒருங்குடைய யோகரூடி பிரபலமுடைத்தென்க. இக்கருத்து மீமாம்சை நூலார்க்கும் உடன் பாடாதல் அந்நூலிற் காண்க. அற்றாகலினன்றே பிரமமீமாஞ்சையில்,

"ஶப்³தா³தே³வ ப்ரமித:"

என்னும் அதிகரணத்தில் "அங்குட்ட மாத்திரனை புருடன் புகை யில்லாத அனலையொக்கும்; இறந்த காலத்தும் நிகழ்காலத்து முள்ள பொருள்கட்கு ஈசானன்; அவனே இன்றுமுளன்; நாளையுமுளனும்" என்றெழுந்த கடவல்லி மந்திரத்திற்கு, அங்குட்டமாத்திரனென்ற பரிமாணலிங்கத்தினும் சீவான்மாப் பொருளாதல் நேர்ந்தவழி, ஈசான னென்னும் அபிதானச் சுருதிவடிவான சொல்லுண்மையிற் சீவான்மா ஆண்டுப் பொருளாகானென விலக்கிப் பரமான்மாவே ஆண்டுப்பொரு ளாகற்பாலனுமென்று துணிபு நேர்ந்ததூஉ மென்க. ஈசான பதத்திற் குக் கேவல யௌகிகத்தன்மையே யுளதாயின், பரமான்மாவை உணர்த் துஞ் சிறப்புச்சொல் ஆண்டின்றெனப்பட்டு, இறப்பெதிர்வின் உள்ளன வற்றிற்கு ஈசானனென்னும் இலிங்க மாத்திரையாற் பரமான்மாப் பொருளாதல் துணிவாய்,

"ஶப்³தா³தே³வ ப்ரமித:"

என்னுஞ் சூத்திரம் நின்றுவற்றலாய் முடியுமென்க. இனி 'அமிர்தத் திற் கீசானன்' எனப்புருட சூத்தத்தின் கண்ணும் வருதலின், அதன் கணுள்ள புருடபதமும் பரம்சிவனையே பொருளாகக் கொண்டதென் பது தானே போதரு மென்க. அஃதேல், புருடசூத்தம் "நாராயணம்" என்று அங்ஙனம் வழங்கப்படுமாறு என்னையெனின்,— புருடசூத்தத் திற்கு "நாராயணம்" என்னும் பெயர் நாராயணக்கடவுள் பொருளா தல் பற்றிப் போந்த வழக்கன்று. மற்று யாதுபற்றிப் போந்த வழக் கெனின்,—அவன் இருடியாதல்பற்றிப் போந்த வழக்காமென்க. ஈசான பதம் போலப் புருட பதமுஞ் சிவன் நாமமாதலைச் சிவதத்துவ விவேக நூலுடையார் சிவதத்துவவிவேகத்துஞ் சிவகர்ணாமிர்தத்துந் தடை விடைகளான் மிக விரித்துரைத்தார். கண்ணபிரான் அருச்சுனற்கு,

" தமேவசாத்யம் புருஷம் ப்ரபத்யே
யத: ப்ரவ்ருத்தி: ப்ரஸ்ருதா புராணீ "

என்று கீதையில் எடுத்தருளிச்செய்யு முகத்தால், புருடசத்தத்துக்குப் பொருளாயுள்ளோன் பரமசிவனே யென்பதை நன்று நிறுத்தினன். என்னே? தான் பரமபுருடனாயின், " ஆதிபுருடனை நான் சரணடைகின்றேன் " என்று கண்ணபிரான் அங்ஙனம் ஓதானாகலினென்க. அல்லதூஉம், பாரதம் இலிங்கம் ஆதித்தபுராணம் முதலியவற்றின் ஓதப்பட்ட சிவநாமங்களுள் அடங்காத விண்டு நாமங்களில்லையாகலானும்,

" நாமானி தவ கோவிந்த யானி லோகே மஹாந்தி ச |
தாந்யேவ மம நாமானி நாத்ர கார்யா விசாரணா "

என்றெழுந்த அரிவஞ்சத்தில் " உன்பெயர்களும் மகிமை பொருந்திய பிறர் பெயர்களும் என் பெயர்களேயாம்; இதன்கண் ஆராய்ச்சி வேண்டா " என்று சிவபிரான் கண்ணனை நோக்கிக் கூறியதனாலும், பகவப்பெயர் புருடப்பெயர்கள் பரமசிவ நாமமேயாதல் தெள்ளிதிற் றுணியப்படுமென்க.

இனிப் பிரமன் முதலிய மூவரையும் முறையே " படைப்புக் கடவுள், திதிக்கடவுள், சங்காரக்கடவுள் " என்வும், " சாக்கிரமூர்த்தி, சொப்பனமூர்த்தி, சுழுத்தி மூர்த்தி " எனவுங் கூறி, பரமசிவனைத் ' துரியமூர்த்தி ' என உபநிடதங்களெல்லாம் மூவரின் வேறாகவைத்து ஓதுதலின், அப்பரப்பிரம முழுமுதல்வனே நாயனாரால் " ஆதி பகவன் " என்று அங்ஙனம் விசேடிக்கப்பட்டானென்பது தெற்றென வுணர்ந்துகொள்க. இன்னும் மால் அயன் உருத்திரனென்னு மூவரையும் முறையே சாத்துவிக குணமூர்த்தி, இராசத குணமூர்த்தி, தாமதகுண மூர்த்தி என்று ஓதி, பரமசிவனைக் " குணாதீதன் " என்று அவ்வாறு உபநிடத முதலியன ஓதுதலானும் அம்முழுமுதல்வனே ஆதிசத்தத்தால் விசேடிக்கப்பட்ட பகவனென்பது துணிபாமென்க. இனிச் சங்கார உருத்திரனுஞ் சங்கரித்தற் றொழிலின் பொருட்டுத் தாமதகுணத்தை மேற்கொண்டதல்லது இயல்பாகத் தாமதகுண முடையனல்லன்; தாமதகுணத்தின் காரியமாகிய துயில் மயக்கம் வஞ்சமுதலியன அக்

கடவுண்மாட்டின்மையின். துயில் மயக்கம் வஞ்சமுதலியன மாயோனுக்குளவாதல் புராண இதிகாசங்களிற் கேட்கப்படுதலின், அக்கடவுட்குச் சாத்துவிக குணங்கூறியது காத்தற்றொழில் மாத்திரைக்கேயெனக்கொள்க. இன்னோரன்னவையெல்லாம் பிரமதருக்கத்தவத்துள் விரித்துக் காட்டியவாற்றானறிக. மாயோனுக்குக் காத்தற்றொழிலும் பிருதுவி முதற் பிரகிருதி மாயைகாறும் வியாபித்துநிற்கும் பிரதிட்டாகலை பரியந்தமே யென்க. என்னை? நிவிர்த்தி, பிரதிட்டை, வித்தை, சாந்தி, சாந்தியதீதை யென்னும் ஐங்கலைகளான் வியாபிக்கப்பட்ட தத்துவபுவனங்களுக்கு முறையே பிரமன், மால், உருத்திரன், மகேசுரன், சதாசிவன் என்னும் ஐவரும் அதிகாரிகளென ஆகமங்கள் ஓதுதலினென்க. பிரகிருதிக்கு மேலுந் தத்துவபுவனங்களுண்மை சைவோபநிடதங்களினுங் கேட்கப்படுதலின், அது சைவாகமப்பொருளென்று புறங்கூறுதல் ஏலாதென்க. புராணங்களினும் பாரதத்தினும் மாயோனுக்கும் பிரமனுக்குந் தாழ்வாக உருத்திரப்பெயராற் கூறப்படுவோர் காத்தற்றொழிலும் படைத்தற்றொழிலும் இனிது நடாத்துதற்பொருட்டுச் சங்காரவுருத்திரன் கூறாய் அவர்பாற் றோன்றிய நீலலோகிதன் முதலிய அவதார மூர்த்திகளேயா மென்க. அது பாரததாற்பரியசங்கிரகம் முதலியவற்றுட் காண்க. அதர்வசிகை முதலிய உபநிடதங்களிற் "பரமசிவன் மும்மூர்த்திகளையும் படைத்தான்" என்பது போலக் குணமூர்த்திகளை அங்ஙனங் கூறாது தம்மையொழித்து ஒழிந்த இருவரையும் படைத்தார் எனவே கூறுதலின், அவர் முழுமுதல்வர் ஆகாமை கடைப்பிடிக்க.

"அயனைமுன் படைத்திடு மொருகற்பத்
　　தரியைமுன் படைத்திடு மொருகற்பத்
தயருருத்திரன் றனைமுன்ம் படைப்ப
　　னொருகற்பமற் றொருகற்பந் தன்னின்
முயலுமூவரை யொருங்குடன் படைப்பன்
　　முன்பிறந்தவர் மற்றிருவரையுஞ்
செயலினாற் படைக்கவு மருள்புரிவன்
　　சிவபிரானெனி லேற்றமிங் கெவனோ"

எனக் கூறியதனையும் ஈண்டு விரித்துரைத்துக்கொள்க. பாரதத்தில்

"அளவில் பேரொளிப் பகவனுஞ் சிவனுக் கச்சுத னுன்மாவாம்"

என்றது அபேதம்பட உபசரித்துக் கூறியதாம். ஆண்டு ஆன்மா என்றது அந்தரியாமியென்னும் பொருட்டெனக் கொள்ளின், அளவில் பேரொளிப் பகவனென்று உயர்த்துக்கூறியதனெடு முரணு மாறறிக. பாரதத்தின் மோக்க தருமத்தில்,

"ஆதலாலெனக் கான்மாவே யாமுருத் திரனை முன்னர்க்
காதலாற் பூசிக்கின் றேன்யான்"

எனக் கண்ணன் கூறிய வாக்கியத்திற் சிவபிரானைத் தனக்கு ஆன்மா என்றது அந்தரியாமி யென்னும் பொருட்டேயாம்; தன்னாற் பூசிக் கப்படுங் கடவுளாதற்குரியது அதுவேயாகலானென்க.

இனி வேதத்துட் கருமகாண்டத்து "விண்டு பரமன், அங்கி அவமன், அவ்விருவருக்கும் இடையே எல்லாத்தேவரும்" என்றது, ஆண்டுச் செய்வதொரு வேள்வி விசேடத்தில் அவிப்பாகம் ஏற்கு முறையின் விண்டு முந்தினவன்; அங்கி பிந்தினவன்; அவ்விருவருச்கும் இடையே ஏனைத்தேவ ரெல்லாமென்னும் பொருட்டாகலின், ஆண்டுப் பரமம் அவமமென்பன ஆதியந்தமெனவே பொருள்படுமாறு காண்க. அவ்வாறன்றி ஆண்டு விண்டு பரமனென்றதற்கு விண்டு எல்லாக்கடவு ளருக்கும் மேற்பட்டவனென்றும், அங்கியவமனென்றதற்கு அங்கி யெல்லாக்கடவுளருக்குங் கீழ்ப்பட்டவனென்றும் பொருள் கொள்ளின், "அங்கி கடவுளர்க்கு மேற்பட்டவன்" என்று ஆண்டாண்டுக்கூறுஞ் சுருதி மிருதி புராணங்கள் பலவற்ருேடு முரணுமென் றெழிக. இவ் வாறு முன்பின் முரணுமைப் பொருள்கொள்ள அறியாது "விண்டு ஆன்மா" என்றதுபற்றியும் "விண்டு பரமன்" என்றது பற்றியும் விண்டு வுக்கு முதன்மைகோடல் பொருந்தாமை யறிக. இன்னும் வருவன வெல்லாம் இவ்வாறே ஓர்ந்துணர்க. ஈண்டுக் கூறியவாற்ருலுந் துரிய மூர்த்தியான பரமசிவனே ஆதிபகவனென்று அவ்வாறு ஓதப்பட்டா னென்று தெளிந்துகொள்க.

பாஞ்சராத்திரிகள் இன்னுங் கூறுமாறு: அரசன் உலாப்போதுங் காலைத் தொகுதி தொகுதியாகச் செல்வாருள் அரசனுவான் இவ னென்பது ஆடை அணி யானை குதிரை முதலிய வைபவம் பற்றித் துணியப்படாதாம். என்னை? அவை அமைச்சர் படைத்தலைவர்

முதலியோர்க்கும் பொது; அல்லதூஉம், அரசன் உவகையுற்றுழி அமைச்சர் முதலாயினோர்க்குத் தன்னினும் மிக்க வரிசையளித்தலு முண்டாகலின், அதுபோல வேதத்துட் கூறப்படுங் கடவுளருட் பரப் பிரமப் பொருளாவான் இவனென்பது ஏனைப்பெருமைகளால் துணி யப்படாதாம். மற்றுக் கிரீடங்கவித்து வெண்கொற்றக் குடைநிழற் கீழ் வருதலொன்றேபற்றி அரசனுவான் இவனென்பது துணியப்படு மாறுபோலக் காரணவாக்கியங்களுட் படைப்பு முதலியவற்றிற்குக் காரணமாகக் கூறப்படுதல் ஒன்றேபற்றி அவனே பரப்பிரமமென்பது துணியப்படும். காரணப்பொருளாவான் நாராயணனே யென்பது சுபாலம் முதலிய உபநிடதங்களிற் காணப்படும். அற்றேல், சில உப நிடதங்களிற் காரணப்பொருள் 'சத்து' என்றும் 'பிரமம்' என்றும் 'ஆன்மா' என்றும் அங்ஙனம் பொதுவகையானும், 'இரணியகருப் பன்' என்றும் 'சிவன்' என்றும் 'உருத்திரன்' என்றும் இங்ஙனஞ் சிறப்புவகையானும், வெவ்வேறு பெயரான் எடுத்தோதவும் படுமாலோ வெனின்,— அற்றன்று; சுபாலமுதலியவற்றுட் காரணப்பொருள் நாராயணனென்றது உலகந் தோன்றுமுறைமை யெடுத்துக்கொண்ட வழிக் கூறப்பட்டதாகலான் அதுவே உண்மைப் பொருளெனவுஞ் சத்துப் பிரமம் ஆன்மா என்றற்றொடக்கத்துப் பொதுப்பெயர்கள் சாகபசு நியாயம்பற்றி நாராயணனையே யுணர்த்திநிற்கும்; அங்ஙன மன்றி இடுகுறிப்பெயர் காரணத்தை விலக்குமெனக் கொள்ளினும் ஆகுபெயராய்த்தான், மாயோனுடைய ஆயிரம் பெயர்களுட் சிவன் முதலிய நாமங்களும் எடுத்தோதுதலின் இடுகுறியாய்த்தான், நாரா யணனையே யுணர்த்திநிற்குமெனவுங் கொள்ளப்படும். அற்றேல், நாரா யணன் முதலிய மாயோன் பெயர்களுங் காரணக்குறியாய்ச் சிவனையே யுணர்த்திநிற்குமாகலின், காரணப்பொருள் சிவனென்னும் உபநிடதங் களே வலியுடையவென மாறிக்கொள்ளிற்படும் இழுக்கென்னையெனின்,- அற்றன்று; மாயோன் பெயருள் ஏனையவெல்லாங் காரணப்பெயராய் வேறொரு கடவுளை யுணர்த்துமெனக் கொள்ளினும், நாராயணனென் னும் பெயர் இடுகுறிப்பெயராதலேயன்றி ஏனைய பெயர்கள்போலக் காரணப்பெயர் ஆகுமென்றற்கு ஏலாது, அஃதெங்ஙனமெனின்,—நார மென்புது நீர்; அயனமென்பது இடம்; நாரம் அயனமாகவுடையவன் நாராய்ணனென அன்மொழித்தொகையாய் இருமொழியும் புணர்ந்த

வழி, ரகரத்தின் முன்வந்த நகரம் ஒருமொழிக்கண்ணதாயின், ணகரமாய்த்திரியும்; உயிரெழுத்துக்களும், யகர வகரங்களும், ககர பகர வருக்கங்களும், இடையே நிற்பினும், அங்ஙனந் திரியும்; ரகரநிலை மொழிக் கண்ணதாக நகரம் வருமொழிக் கண்ணதேல், இடுகுறிப் பெயராயின், ணகரமாய்த் திரியுமென்பது, பாணினிசூத்திரமாகலின், நாராயணன் என்பதனைக் காரணக் குறியாக்குவார்க்கு நகரம் ணகரமாகத் திரியுமென்றற்கு ஒத்தில்லையென்பது. அற்றாகலினன்றே சிவன்முதலிய பெயர்போல அவயவப் பொருள்பற்றிக் காரணக்குறியாய் மற்றோர் கடவுளை யுணர்த்துதல் பொருத நாராயணனென்னுஞ் சிறப்புப் பெயராற் சுபால முதலியவற்றில் எடுத்தோதியதூஉமென்று இங்ஙனம் பிதற்றுவர். இவையனைத்துஞ் சுவேதாச்சுவதர முதலிய உபநிடதங்களை ஓதியுணராத மடவோர் கூற்றேயாமென்று மறுக்க. படைப்பு முதலியவற்றிற்குக் காரணமாதலொன்றே பிரமத்திற்குச் சிறந்த இலக்கணமென்பது ஒக்கும். அதுபற்றியன்றே பாப்பிரமப் பொருள் பரமசிவனேயெனத் துணிந்தாமென்க. சுபாலமுதலிய உபநிடதங்கள் உலகந்தோன்றி ஒடுங்குமுறைமை உணர்த்தப்புகுந்தன வன்றிக் காரணப்பொருளை உணர்த்தப் புகுந்தனவல்ல. இடையே இயைபுபற்றிக் காரணப்பொருளும் உடன் கூறப்பட்டது. சுவேதாச்சுவதரத்தின் அவ்வாறன்றிச் சுபால முதலியவற்றுட் பொதுவகையானுணர்ந்த காரணப்பொருளைச் சிறப்புவகையான் உணர்தற்பொருட்டுக் 'காரணமாகிய பிரமம் யாது' என முனிவர் வினவும் வினவை முதற்கண் எடுத்துக்கொண்டு, உபநிடதமுழுவதும் பரமசிவனுக்குரிய சிறப்புப்பெயர்களாற் பரமேசுரன் பெருமை விளங்கக் கூறுதலானும், இவ்வாறு ஏனையுபநிடதங்களுள் முதற்கண் எடுத்துக்கொள்ளாமையானும், ஏனையுபநிடதங்களினுஞ் சுவேதாச்சுவதரம் வலியுடைத்தாகலான், அதனுட்கூறப்படுங் காரணப்பொருளாகிய பரமசிவனே பரப்பிரமமெனவும், ஏனைக் காரணவாக்கியங்களுட்கூறும் பெயர்களெல்லாஞ் சாகபசுநியாயத்தாற் பரமசிவனையே யுணர்த்திநிற்குமெனவும், இரணியகருப்பன் நாராயணன் முதலிய சிறப்புப்பெயர்களும் அவயவப்பொருள்பற்றிக் காரணப்பெயராய்த்தான், அங்ஙனமன்றி ஆகுபெயராய்த்தான், பரமசிவனையே யுணர்த்திநிற்குமெனவும் உணர்க. எல்லாப்பெயரும் பரமசிவன் பெயரென்பதே வேதத்தின் துணிபென்

பது ஆண்டுக்காண்க. நாராயணனென்னும் பெயர் மாயோனுக்கு இடு குறியாகலினன்றே, இயைபுபற்றிப் பரமசிவனையுணர்த்தும்வழி ஆகு பெயரெனக் கொண்டாமென்பது. கங்கையின் இடைச்சேரி என் புழிக் கங்கையென்பது இடுகுறியாய் வெள்ளத்தினை உணர்த்திநிற்ற லானன்றே, கரையை உணர்த்தும்வழி இயைபுபற்றி ஆகுபெயரெனக் கொண்டதூஉமென்க. கரையினை யுணர்த்தும்வழியும் ஆற்றலா னுணர்த்துமாயின், ஆகுபெயரென்றற்கு ஏலாமையறிக. இங்ஙனம் நாராயணனென்பது மாயோனுக்கு இடுகுறிப் பெயராய்நின்றே கங் கையின் இடைச்சேரி யென்புழிப்போல இயைபுபற்றி ஆகுபெயராய்ப் பரமசிவனை உணர்த்துமெனக் கோடலின், ஆண்டு ணகரமாய்த்திரி தற்கு இழுக்கின்மையின், நாராயணனென்னுஞ்சொல் அவயவப் பொருள்பற்றிக் காரணக்குறியாதற்கு ஏலாதெனக் கொண்டவழியும், அவர்கருத்து நிரம்புமாறில்லை யென்க. இவை சிவதத்துவவிவேகத் துஞ் சிவஞானமாபாடியத்தும் ஓதியவாறுபற்றி யுரைக்கப்பட்டன. இன் னுஞ் சிவஞானமாபாடியத்துள் ஆசிரியர் சிவஞானயோகிகள், "உண் மையான் நோக்குங்கால், நாராயணனென்பது அவயவப் பொருள்பற் றிக் காரணக்குறியாய்நின்றே பரமசிவனை யுணர்த்துமென்பது காட்டு தும்" என்றெடுத்துக்கொண்டு, "நாருடையதொகுதி நாரமெனத் 'தொகுதிப் பொருள்பற்றி அண்விகுதிவரும்' என்னும் பாணினி சூத்திரத்தால் அண்விகுதி பெற்றுநிற்ப, அதன்மேல் ஆசாரப்பொரு ளுணர்த்துங் ககரஙகர வித்துக்களையுடைய யகரவிகுதி வந்துதிரிந்து நாராயவென அயல்நீண்டு நாராயவென நின்றவழி, அதுவும் பகுதித் தன்மைப்படுதலின், அதன்மேல் வினைமுதற் பொருளுண்மையுணர்த் தும் லகர டகர வித்துக்களையுடைய யகரவிகுதி யநவெனத்திரிந்து நாராயநனென நின்றவழி, 'வினைப்பெயர் விகுதியினின்ற நகரம் ணகரமாய்த்திரியும்' என்பதனால் அங்ஙனந்திரிந்து, நாராயணனென ஒருமொழியாய் உயிர்த்தொகையையோத்து நிற்பனென்னும் பொருட் டாய்க் காரணக்குறியாயவாறு காண்க. இங்ஙனம் நாராயணனென்பது லகரடகர வித்துக்களையுடைய அகரவீற்றுச் சொல்லாதலினன்றே பெண்பாலில் நாராயணீயென நகரபகர வித்துக்களையுடைய ஈகார விகுதியீற்றான் யாண்டும் வழங்குவதூஉமென்க. அகரவிகுதியீற்றுச் சொல்லெனக் கொள்ளாக்கால், நாராயணீயென ஈகாரவிகுதி பெறு

தற்கு விதியின்மையுணர்க. நாராயணனென்னும் வடமொழிக்கு இங்ஙனம் விகுதிமேல் விகுதிபுணர்த்துச் செய்கை செய்வனவெல்லாம் வடமொழிவியாகரணம் வல்லார்வாய்க் கேட்டுணர்க. இன்னும் விரிக்கிற் பெருகுமென்றொழிக. இத்தாவது - செய்கை செய்தன் முதலியவற்றிற்குக் கருவியாக முதனூலாசிரியனாற் படைத்திட்டுக் கொள்ளப் பட்ட கருவிச்சாரியை. 'இரணியகருப்பன் காரணப்பொருளென்பாரையும் இவ்வாறே கூறி மறுக்க' '' என்று, இவ்வாறு நாராயணநாமம் காரணக்குறியாய்ப் பரமசிவனை யுணர்த்துமாறு சாதித்தார்.

"உயர்கா யத்திரிக் குரியபொரு ளாகலிற்
றசரதன் மதலை தாபித் தேத்தலிற்
கண்ணன் கயிலையி னண்ணிநின் றிரப்பப்
புகழ்ச்சியி னமைந்த மகப்பே றுதவலிற்
றனுது விழியுட னொராயிரங் கமலப்
புதுமலர் கொண்டரி பூசனை யாற்றலின்
ஆங்கவற் கிரங்கி யாழியீந் தருடலின்
ஐங்கணைக் கிழவனை யழல்விருந் தாக்கலின்
அமைப்பருங் கடுவிட மமுதுசெய் திடுதலிற்
றென்றிசைத் தலைவனைச் செகுத்துயிர் பருகலின்
அவுணர் முப்புர மழியவில் வாங்கலிற்
றக்கன் வேள்வி தகர்த்தருள் செய்தலிற்
றனஞ்சயன் றனக்குத் தன்படை வழங்கலின்
மானுட மடங்கலை வலிதபக் கோறலின்
மாயோன் மகவே வாகிய காலைத்
தடமுலை திளைத்துச் சாத்தனைத் தருதலின்
ஆழ்கடல் வரைப்பி னொன்றே ரனேகர்
அன்புமீ தூர வருச்சனை யாற்றலின்
நான்கிரு செல்வமு மாங்கவர்க் கருடலின்
ஐயிரு பிறப்பினு மரியருச் சித்தலின்
இருவரு மன்னமு மேனமு மாகி
அடிமுடி தேட வழற்பிழம் பாகலிற்
பிறப்பிறப் பாதி யுயிர்க்குண மின்மையிற்
றன்கைசூழ் கிடந்த காசிமால் வரைப்பிற்

பொய்புகல் வியாதன் கைதம் பித்தலின்
முப்புர மிறப்புழி முகுந்தப் புத்தேள்
மால்விடை யாகி ஞாலமொடு தாங்கலின்
அயன்சிர மாலை யளவில வணிதலின்
ஞானமும் வீடும் பேணினர்க் குதவலிற்
பசுபதிப் பெயரிய தனிமுதற் கடவுள்
உம்பர்க ளெவர்க்கு முயர்ந்தோன்
என்பது தெளிக வியல்புணர்ந் தோரே"

என அரதத்தாசாரியர் அருளிச்செய்ததனையும் ஈண்டு விரித்துரைத்துப் பரமசிவ பரத்துவம் இனிது தெளிந்துகொள்க. இங்ஙனங் காத்தற் கடவுளாகிய நாராயணனும், படைத்தற்கடவுளாகிய இரணியகருப்பனும் பரமகாரணர் ஆகாமை தெரிக்கவே, இவரோடு ஒருங்கெண்ணப் படுஞ் சங்காரக்கடவுளாகிய உருத்திரனும் பரமகாரணன் ஆகானென்பது தானே போதருமென்க.

இதுகாறுங் கூறியவாற்றான் மூவரையுந் தோற்றுவித்து முத்தொழிலில் நிறுத்தும் பரம காரணக்கடவுளும் மகாசங்கார காரணனுமாகிய பரமசிவனே ஆதிபகவனென்று அங்ஙனங் குறிக்கப்பட்டானென்பது ஒருதலையான் உணர்ந்துகொள்க.

ஆசிரியர் சிவஞானயோகிகள் இப்பெற்றியெல்லாம் ஆராய்ந்து தெளிந்தன்றே,

"சீர்கொளிறை யொன்றுண்டத் தெய்வமீ யென்றொப்பாற்
சோர்விலடை யாற்றெளிந்தோஞ் சோமேசா—வோரில்
அகர முதல வெழுத்தெல்லா மாதி
பகவன் முதற்றே யுலகு"

என்று முதுமொழி வெண்பாவில் அவ்வாறு எடுத்தோதியருளினாரென்க. "அகர முதல வெழுத்தெல்லா மாதி - பகவன் முதற்றே யுலகு" என்னுந் திருக்குறளினையோரின், அதன்கண் பிரயோகிக்கப்பட்ட ஒப்பாற் சீர்கொள் இறை ஒன்றுண்டென்பதூஉம், அடையான் அத்தெய்வமீ யென்பதூஉம், தெளிந்தோ மென்க. ஆண்டு அடையென்றது ஆதி சத்தத்தினை. இதுகாறும் உலகிற்குப் பரமகாரணனாகிய முதற்கடவுள் ஒருவனுளனென்றும், அவன் உலகமும் பல்லுயிரும்

ஒன்றி நிறைந்தோங்கி யிலகும் ஆதிபகவனென்றும் எழுந்த முதற் திருக்குறட் சொற்பொருள் நுட்பம் ஒருவாறு விரித்துரைத்தாம். இனி நாயனர் உத்தரவேதத்து இங்ஙனம் போந்த முதற்கடவுள் திரு வடிசேர்தலென்று எடுத்தருளிச்செய்த வீட்டின்சிறப்பியல்பு சிறிது தெரித்தும்.

நாயனர் முதற்கண் எடுத்தோதிய கடவுள்வாழ்த்துக்கேற்ப உத் தரவேதாந்தமாக நிலையிட்ட நிலையாமை, துறவு, மெய்யுணர்வு, அவா வறுத்தல் என்னும் நான்கதிகாரங்களால் வீடுபேற்றின் சிறப்பியல்பு அறிவுறுத்தவாறு மேற்ரெகுத்தெடுத்து விளக்கினும். நாயனர் அங் ஙனம் நான்கவாகத் தொகுத்த ஞானவதிகாரணத்து,

" பிறப்பென்னும் பேதைமை நீங்கச் சிறப்பென்னுஞ்
செம்பொருள் காண்ப தறிவு "

" சார்புணர்ந்து சார்பு கெடவொழுகின் மற்றழித்துச்
சார்தரா சார்தரு நோய் "

" காமம் வெகுளி மயக்க மிவைமூன்ற
ஞமங் கெடக்கெடு நோய் "

என்னும் மகாவாக்கியங்களிற் " பிறப்பென்னும் பேதைமை நீங்க " என்றதனுற் சகசபந்தமான மூலமலவீடும், " சார்புகெட " என்றத னுற் கருமமலவீடும், " காமம் வெகுளி மயக்கம் இவைமூன்றன் நாமங் கெட " என்றதனன் மாயாமலவீடும் குறித்தருளினர். பேதைமையை விளைக்கும் மூலமலத்தைப் " பேதைமை " என்று உபசரித்தார். இம் மூவகை வாக்கியக்கூறுகள் அம்மும்மலங்களின் மேலவாமாறு பரிமே லழகியார் அவற்றிற்குரைத்த உரைகளானுமறிக. காமவெகுளி மயக்கங்கள் மாயா தனுகரண புவனபோகங்கள் பற்றியே ஆன்மா வின்கண் மிக்குநிகழ்தலின், அவற்றின் நீக்கம் மாயாமல வீடா மென்க. அது, ஆசிரியர் சிவஞானயோகிகள்

" காரிகையா ரைப்பொன்னைக் காட்டவுங்கா மாதிமும்மைச்
சோர்விழந்தய்ந் தாராசர் சோமேசா—வோருங்காற்
காமம் வெகுளி மயக்க மிவைமூன்ற
ஞமங் கெடக்கெடு நோய் "

என்று அவ்வாறு முதுமொழிவெண்பாவில் எடுத்தோதியதனுறு

முணர்க. இதனானே ஆன்மா, பற்றற்ற ஆதிபகவன் பற்றினைப்பற்றி, ஆணவம் கன்மம் மாயையென்னு மும்மலங்களின் நீங்கி, வேண்டுதல் வேண்டாமையிலாத அவ்வாதிபகவன்திருவடிச்சார்பு தலைக்கூடி, ஆனந்த சொரூபியாய் வாழ்தலே வீடுபேற்றின் சிறப்பியல்பென்பது நாயனாருக்குக் கருத்தாயவாறு கண்டுகொள்க. மலம் நித்தியமாகலின் நீங்க வென்றுங் கெடவென்றும் அவ்வாறு அருளிச்செய்தார். நீங்குதலாவது- ஆன்மஞானத்தினைத் தடைசெய்யமாட்டாது தன்சத்தி மடங்குதலாம். கெடுதலும் அப்பொருட்டு. கருமமலமும் மாயாமலமும் ஆகந்துகமாகலின், சகசமலவுபாதி நீக்கத்தின் அவையும் விண்டொழியுமென்பார்,

"சார்தரா சார்தரு நோய்"

என்றும்

"காமம் வெகுளி மயக்க மிவைமூன்ற
னாமங் கெடக்கெடு நோய்"

என்றும் அவ்வாறு அருளிச்செய்தார். இங்ஙனஞ் சிவத்துவாபிவியத்தியுற்று ஆதிபகவனோடு ஏகமாய்நின்ற முத்தான்மாவை மும்மலங்களும் வாதியா என்பது

"அவனே தானே வாகிய வந்நெறி
யேக னாகி யிறைபணி நிற்க
மலமாயை தன்னொடு வல்வினை யின்றே"

என்னுஞ் சிவஞானபோதச் சூத்திரத்தானு மறிக. செம்பொருள் - பரமான்மாவான ஆதிபகவன். "சார்புணர்ந்து" என்புழிச் சார்பும் அது. பரம்பொருள் நிருவிகாரியாய் என்றும் ஒரு பெற்றித்தாதலிற் "செம்பொருள்" என்றும், எப்பொருட்கும் பரமாதாரமாய் நிற்றலிற் "சார்பு" என்றும், அவ்வாறு ஓதப்பட்டது. "செம்பொருள் காண்பதறிவு" "சார்புணர்ந்து". எனவே, முத்திநிலையின் ஞாதிருவான முத்தான்மா ஞேயப்பொருளான செம்பொருட் சிற்சத்தியெனப்படும் ஞானத்தோடு ஒற்றித்து அத்துவிதமாய் நிலைபெறும் என்றவாறாயிற்று. இதனானே பாரமார்த்திகமான முத்தியில் துவம்பதவாச்சியனாகு சீவான்மா, கெட்டுத் தற்பதவாச்சியனான பரமான்மாவாய் ஒழியுமென்னும் ஏகான்மவாதிகள் வீட்டியல்பு நாயனார்க்குக் கருத்தாகாமை தெளிவாயிற்று. அற்றேல், வேதாகமங்கள் "பிரமாகம்"

"சிவோகம்" என்று அங்ஙனம் பாவிக்க ஓதியது என்னை யெனின்,— பசுக்கள் பாசவிமோசனமுற்றுத் தமக்கு அந்தரியாமி யும் வியாபியுமான பரசிவத்துவம் தங்கண் அபிவியத்தியுறும் பொருட்டு உபாசிக்க, வேதாகமங்களில் அங்ஙனம் அத்துவிதபாவனை விதிக்கப்பட் டது. ஆகலின், அதுகொண்டுதானே ஏகான்மவாதஞ்சாதித்தல் சாலா தென்க. "பிரமாகம்" "சிவோகம்" என்னும் அத்துவித பாவனையால் ஆன்மாக்கள் சிவகுணங்கள் தங்கண் விளங்கப்பெற்றுச் சிவமாயிருப்பனவன்றிக் கெட்டொன்றாயொழியா. அரதத்தாசாரி யர்க்கும் இதுவே கருத்தாதல் "வேதத்தில் ஆண்டாண்டுப் பிரமப் பொருளாகிய சிவபிரானுக்கும் ஆன்மாவிற்கும் அத்துவிதபாவனை கூறப் படுமாறென்னையென்று ஆசங்கித் தெடுத்துக்கொண்டு, கருடனும் மாந் திரிகனுந் தம்முள் வேறுதல் வெளிப்படையாயினுங் கருடோகமென் னும் அத்துவிதபாவனை விடநிவிர்த்திப் பொருட்டு வேண்டப்படும்; அது போலப் பிரமப்பொருளாகிய பரமசிவனும் ஆன்மாவுந் தம்முள் வேறு தல் வெளிப்படையாயினும் மலநிவிர்த்திப் பொருட்டு வேதத்தில் அத்துவிதபாவனை கூறப்பட்டது; அதுகொண்டுதானே நிர்உபசரித ஐக்கியங் கூறுதல் சாலாதென்பது" என்று அங்ஙனஞ் சதுர்வேத தாற் பரிய சங்கிரகத்து ஓதியவாற்றா னறிக.

இனிச் செம்பொருளான ஆதிபகவற்குச் சருவஞ்ஞத்துவம் முத லிய எண்குணமுடைமை சொரூபவியல்பெனப்படுஞ் சிவத்துவமாம். இவ்வெண்குண சொரூப சிவத்துவப்பேறே முத்திதசையில் ஆன்மா விற்கு ஆன்மலாபமெனப்படுஞ் சாயுச்சியப் பெரும்பேறாம். ஆதிபக வன் எண்குணமுடையவனாதல்

"கோளில் பொறியிற் குணமிலவே யெண்குணத்தான்
றாளை வணங்காத் தலை"

என்னுங் கடவுள் வாழ்த்துத் திருக்குறளானறிக. அற்றேல், "ஆதி பகவன்" எண்குண சொரூபனாயின், அவன் தன்னை "நிர்க்குணன்" "குணாதீதன்" என்று வேதாகமங்கள் ஓதுதல் பொருந்தா தெனின்,— வேதாகமங்கள் பரமான்மாவை "நிர்க்குணன்" "குணா தீதன்" என்றோதியது, சாத்துவிக இராசத தாமதமென்னும் மாயா குணங்கள் இல்லாதவனென்னுங் கருத்துப்பற்றியல்லது முற்றறிவு

முதலிய சிற்குணங்கள் இல்லாதவனென்னுங் கருத்துப்பற்றி யன்ருகலின், அது பொருந்துவதாம்; மற்றுப் பொருந்தாமை யாண்டைய தென்க. இச்சிற்குணங்களும் இல்லாவியல்பே அவனுக்குச் சொரூப்மெனின்,— சத்தாகை சித்தாகை ஆனந்தரூபமாகையுஞ் சருவஞ்ஞத்துவ முதலியவற்றை அகப்படுத்து நிற்குஞ் சிற்குணங்களாகலின் ஆதிபகவனுன பரப்பிரமப்பொருள் அவற்றை யிலக்கணமாக உடைத்தென்றலுஞ் சொரூபவியல் ஆகாதாம். அதுவேயுமன்றி அங்ஙனம் வேண்டுவார் பிரமப்பொருள் ஓரியல்புமில்லா வெறும் பாழென்ருராய் நிரீச்சுரவாதிகட்குச் சகபாடிகளாயும் ஒழிவரென்க. எண்குணங்களாவன: சருவஞ்ஞத்துவம், திருத்தி, அனுதிபோதம், சுவதந்திரம், அலுத்தசத்தி, அனந்தசத்தி, நிராமயான்மா, விசுத்ததேகமென்பன. திருத்தியெனினும் பூர்த்தியெனினும் ஒக்கும். அனுதிபோதம் அநாதிமுத்தத்துவமெனவும் வழங்கப்படும். இவையே இறைவற்குச் சிவத்துவமெனப்படும் எண்குணமாமாறு :

“ஸவஜ்ஞதா த்ருப்திர நாதிபோதஃ ஸ்வதந்த்ரதா நித்யமலுப்தஶக்திஃ|
அநந்தஶக்திஶ்ச நிராமயாத்மா விஶுத்ததேஹஶ்ஶிவஶப்தவாச்யஃ”

என்னுஞ் சருவஞ்ஞானேத்தராகம வசனத்தா னறிக. இவ்வெண்குணங்களுள், நிராமயான்மாவை அனுதிபோதத்திலும், விசுத்த தேகத்தினை அலுத்த சத்தியினுமடக்கி அறுகுணங்களாகவும் ஓதுப. இவ்வறுகுணங்கள் சத்துச் சித்து ஆனந்தமென மூன்ருயடங்குமாறு ஓர்ந்துணர்க. இனி நின்மலமான பரப்பிரமப்பொருள் அவிச்சையாற் கட்டுண்டு சீவான்மாவெனநின்று, பிரமாகம் பாவனை பேணி, மறித்தும் பிரமமாமெனின்,— நின்மலமான பிரமப்பொருளை அவிச்சையான மலங் கட்டுறுத்தமாட்டாது. கட்டுறுத்துமெனின், அது நின்மல பரப்பிரமப் பொருளாமாறில்லை. அன்றியும், சீவற்கு வீடுபேறுளதாயவழியும் அஃது அதனைக் கட்டுறுத்து மெனப்பட்டு வீடுபேறென்பது போலியாய் முடியுமென்க. அற்றேல், நிராலம்பஞ் சருவசாரமுதலிய ஒருசார் உபநிடதங்கள் அங்ஙனம் ஓதியவாறென்னையெனின்,— சுவேதாச்சுவதரம் முதலிய சைவோபநிடதங்கள் சீவான்மா, பிரமம்போல அனுதி நித்தியப் பொருளென்றும், அப்பிரமம் தனக்கு அந்தரியாமியாயும் வியாபியாயும் நின்றுபகரிக்க அனுதிமல

வினைக்கீடாகப் பிறப்பு இறப்புற்று வினைப்போகம் புசிக்குமுறையில் மலபரிபாகமெய்திப் பரமசிவன் திருவருளுற்றுக் கட்டுநீங்கி முற்றறி வெய்தி மெய்யுணர்ந்து மலவாசனையும் நீங்கிச் சிவபரப்பிரமப்பொரு ளோடு அத்துவிதமாய்நின்று முடிவுகாண்கில்லாப் பேரின்பத்தினை நுகராநிற்குமென்றும், எடுத்து ஒருதலைப்படுத்தோதுதலின், நிராலம் பஞ் சருவசார முதலிய உபநிடதங்களிற் பிரமசத்தத்தால் எடுத்தோ தப்பட்ட சித்துப் பரசித்தான பரப்பிரமமன்று. அபரசித்தான ஆன் மாவே அவிச்சையாற் பந்தமுற்றுச் சாதகமுறையிற் பிரமோபாசனை பேணிப் பிரமமாமென்று அவ்வுபநிடதங்களால் அங்ஙனம் ஓதப்பட் டது. இங்ஙனமாகலின், அவ்வுபநிடதங்களும் உத்தரவேதமுந் தம் முள் அரணுற்று நடப்பனவன்றி முரணுற்றுக் கிடப்பனவல்ல என்றும் அறிந்துகொள்க. அற்றேல் லஃதாக; அபரசித்தான ஆன் மாவைப் பரசித்தினுக்குரிய பிரமசத்தத்தால் அவை எடுத்தோதுதல் சாலுமோவெனின்,— பரசித்தான பரப்பிரமம் அபரசித்தான ஆன் மாவுக்கு அந்தரியாமியாய் அதுவேதானாய் நின்றுபகரித்தலின், அவ்வொற்றுமைபற்றிப் பரப்பிரம நாமத்தாற் சீவான்மாவை அங்ங னம் அவை யுபசரித்து வழங்கின. ஆகலின், அது சால்பேயாமென்க. கீதாசாரியனாகிய கண்ணன் பரப்பிரமமான சிவன் அருட்பெற்றியைச் சிவோகம்பாவனை யொற்றுமைபற்றி, "நானே சடசித்தெல்லா மானேன்" என்று தன் பெற்றியாகக் கொண்டு கூறியதூஉம், இதற்கு உறுசான்றாமென்க.

அற்றேல் லஃதங்ஙனமாக;

"எப்பொரு ளெத்தன்மைத் தாயினு மப்பொருண்
மெய்ப்பொருள் காண்ப தறிவு"

என்னுந் திருக்குறளுரையில், "கோச்சேரமான் யானைக்கட்சேஎய் மாந்தரஞ்சேரல் இரும்பொறை என்றவழி, அரசனென்பதோர் சாதி யும், சேரமான் என்பதொரு குடியும், வேழநோக்கினையுடையான் என்ப தொரு வடிவும், சேயென்பதோர் இயற்பெயரும், மாந்தரஞ்சேரலிரும் பொறை யென்பதோர் சிறப்புப்பெயரும், ஒரு பொருளின்கட் கற் பனையாகலின், அவ்வாறுணராது நிலமுதல் உயிரீறாகிய தத்துவங் களின் றொகுதியென வுணர்ந்து, அவற்றை நிலமுதலாகத் தத்தங் கா

ணங்களின் ஒடுக்கிக்கொண்டு சென்றால், காரணகாரியங்கள் இரண்டு மின்றி முடிவாய் நிற்பதனை யுணர்தல் மெய்யுணர்வாம்'' என்று இவ்வாறு பரிமேலழகியார் உரைத்தது தமக்கு அனுகூலமென்று இக்காலத்து ஏகான்மவாதிகளுள் ஒருசாரார் கூறுபவாலெனின்,—சாதி, குடி, வடிவு, பெயர் என்பன மாயாகாரியமான உடம்பைப் பற்றிய கற்பனை வழக்காதலின், அது பொதுவியலென்றுணர்ந்து கைவிட்டுச் சீவான்மாவைத் தத்துவங்களின் வேருகக்காண்டல் ஒருவற்கு மெய்யுணர்ச்சியாமென்பதே அவ்வுரைக் கருத்தாகலின், அது அவர் ஏகான்மவாதக் கொள்கைக்குப் பிரதிகூலமாவதன்றி யாதும் அனுகூலம் பயக்குமாறில்லை யென்க. ஆண்டு நிலமுதல் உயிரீருகிய தத்துவத்தொகுதி யென்றதனால், புருடனும் உபாதியாகிக் கழிக்கப்படும் பிறவெனின்,—

"சுவையொளி யூறோசை நாற்றமென் றைந்தின்
வகைதெரிவான் கட்டே யுலகு''

என்னுந் திருக்குறளுரையிற் பரிமேலழகியார் "மாபூத மைந்து, அவற்றிற்கு முதற்காரணமான தன்மாத்திரை எனப்படுஞ் சூக்குமபூத மைந்து, அவற்றின் கூறுன ஞானேந்திரிய கன்மேந்திரியங்கள் பத்து, மான் அகங்காரம் மனமென்னும் அந்தக்கரணம் மூன்று, இவற்றிற்கெல்லாம் முதலாகிய பிரகிருதியொன்று, இவற்றின்கணின்று போகநுகரும் புருடன் ஒன்றெனத் தத்துவம் இருபத்தைந்து சாங்கியர் கூறுப'' என்றெடுத்து, "புருடன் தான் ஒன்றிற் ரோன்ருமையானுந் தன் கண் தோன்றுவன இன்மையானுங் காரணமுமாகான் காரியமுமாகான்'' என்றுரைக்கு முகத்தால், அவன் உபாதிமானன்றி உபாதியாகானென்பது நேர்ந்தாராகலின், புருடனை உபாதியான தத்துவத்துள் ஒன்றென வைத்துக் கழித்தல் அவர்க்குக் கருத்தன்றென்க. மற்றுப் புருடனைத் தத்துவங்களோடு சேர்த்துத் தொகைகொண்டது, புருடன் தத்துவ சரீரத்தோடு விரவிநின்று அதனாற் பயன்கொள்ளும் பெற்றிநோக்கி யென்க. "எப்பொரு ளெத்தன்மைத் தாயினும்'', என்னுந் திருக்குறளிற் "காரண காரிய மிரண்டுமின்றி முடிவாய் நின்றதனை யுணர்தல்'' என்றதூஉம், புருடன் தன்னுண்மை யுணர்தலையே யாம், புருடன் இங்ஙனந் தன்னுண்மை யுணர்வுழிச் செம்பொருள் தனக்காதாரமாம் உண்மையினையுந் தெளியுமாகலின், தன்னுண்மை யுணர்வே அவற்கு மெய்யுணர்வுமாமென்க. "சிறப்பென்னுஞ் செம்

பொருள் காண்பது" "சார்புணர்ந்து சார்புகெட வொழுகின்" எனப் பின்னர்ச் சீவன்முத்தியிற் காண்பானுங் காணப்படு பொருளுமாக வைத்து மெய்யுணர்வு ஒருப்படுத்தியதே, இதற்கு உறுசான்றுமென்க. சாங்கியர் நிரீச்சுரவாதிகளாகலின், நிலமுதற் புருடன்காறுந் தத்துவ மெடுத்தோதினரென்றும், அவர் கொண்டபுருடன் சீவான்மாவென்றும் உணர்க. அற்றே லஃதாக; பரிமேலழகியார் நிரீச்சுரவாதம் நிகழ்த் துஞ் சாங்கியநூல்பற்றித் திருக்குறளில் தத்துவவாராய்ச்சி செய்யப் புகுந்தது என்னையெனின்,— சாங்கியம் வைதிக சாத்திரமாய் நின்று பிரகிருதி மாயையைச் சத்தான முதற்காரண மெனக்கொண்டு பிரவஞ் சம் மற்றதன் யதார்த்த காரியமாமென்று எடுத்தோதுதலின், பரிமே லழகியார் தத்துவ வாராய்ச்சிக்கு அதனை ஓர் கருவியாகக் கொண்டார்;

"எப்பொருள் யார்யார்வாய்க் கேட்பினு மப்பொருண்
மெய்ப்பொருள் காண்ப தறிவு"

என்னும் உறுதிக்கட்டுரை மேற்கொண்டென்க. அற்றேல், சாங்கியர் கூறுந் தத்துவகாரண காரியவாதம் ஒப்பிக்கொண்டார், அவர் கூறும் அத்தியாசவாதமும் ஒப்பிக்கோடற்பாலரெனின்,— சாங்கியர் பிர கிருதிமாயை முதற்காரணத்தில் வித்தின்மரம்போலப் பிரவஞ்சஞ் சத்திமாத்திரையாய்ச் சூக்குமமுற்றிருந்து தூலமாய் வெளிப்படு மெனக்கொண்டது சற்காரியவாதமாகலின், அதனை ஒப்பிக்கொண்டார். அவர் கூறும் அத்தியாசவாதஞ் சுருதியொடு முரணுதலானும், யுத்தி விரோதமென்று எல்லாச்சமயத்தாராலும் இகழப்படுதலானும், அதனை ஒப்பிக்கொண்டிலர். அத்தியாசவாதஞ் சுருதியுத்தி விரோத மாமாறு மேலுரைத்தாம்; கடைப்பிடிக்க.

இனிப் "பிறப்பென்னும் பேதைமை" என்ற மூலமலத்தின் இயல்பு சிறிது காட்டுதும். மூலமலமாவது பிராந்தி ஞானமே பிறி தில்லையென்பர் ஒருசாரார். ஒரு சாரார் ஞானாபாவமென்பர். ஒரு சாரார் தமோகுணமென்பர். ஒருசாரார் மூலப்பகுதியிற் றோன் றும் அவிச்சையென்பர். ஒருசாரார் மாயை கன்மங்களென்பர். ஒரு சாரார் சிவசத்தியென்பர். ஒருசாரார் ஆன்மாவின் குணமென்பர். மலமாவது இவையனைத்தினும் வேறாய், ஒன்றாய், நித்தமாய், வியாபக மாய், ஞானதிரோதகமாகிய திரவியமென்பது தொகுத்துக் காட்டுதும். மேற்கூறிய அளவைகளால் ஆன்மா, தோற்றக் கேடின்றி நித்தமாய்

வியாபகமாய் நிற்பதென்பது துணிபாம். இனி ஆன்மாவுக்குத் தோற்றக் கேடுகளுளவாயின், செய்தவினை நசிப்பச் செய்யாதவினை யுண்டாமெனப்பட்டு வினையிலக்கணத்தோடு முரணும். ஈன்றணிய குழவி தாய்முலைப்பால் பசிப்பிணிதீர்க்கும் மருந்தென்றறிந்து அதன்கண் முயலுதல் காண்டும். அஃது உம்மைப்பயிற்சி வயத்தானுளதாகிய வாசனையில்வழிக் கூடாது. இனி நித்தப்பொருளை அவயவமுடைத்தெனப்பட்டு அழிவெய்துவதாகிய ஏகதேசமென்றல் கூடாமையின், ஆன்மா வியாபியென்பதும் பெற்றாம். பெறவே, அவ்வக்குணங்கள் அவ்வக் குணிகளின் வேறன்மையின், ஆன்மாவின் குணமாகிய ஞானமும் அவ்வாறே நித்தவியாபகமாதல் பெறப்பட்டது. அறிவாவது ஒன்றனை விடயித்தலே பிறிதன்றாகலின், அங்ஙனம் விடயிப்பதாகிய அறிவு ஒருகால் நிகழ்ந்தும் ஒருகால் நிகழாதுங் காலத்தானும் இடத்தானும் ஏகதேசமாய் நிகழ்தலுங் காண்டும். அவ்வறிவு செயற்கையான் இங்ஙனம் நிகழ்தற்குக் காரணமுண்டென்பது பெறப்படுதலின், அது பிராந்திஞானம் முதலியவற்றுள் ஒன்றென்றல் கூடாமையின், பாரிசேடிய அளவையான் அவற்றின் வேறாகிய சகசமலம் அத்தன்மைத்தாய் உண்டென்பது பெற்றாம்.

அற்றேல், காரணம் பிராந்திஞானம் முதலியவற்றினொன்றே யாக; அவற்றின் வேறுண்டென்பதற்குப் பிரமாணம் என்னையெனின்,—கூறுதும். கயிற்றை அரவெனக்காணும் பிராந்தி கண்ணின்கண் யாதானுமோர் குற்றமில்வழி நிகழாமையின் அதுபோலத் தேகமே ஆன்மாவென்று அறிதற்றொடக்கத்துப் பிராந்திஞானமும் ஆன்மாவின்கண் ஒருகுற்றமில்வழி நிகழாமையின், அக்குற்றமாகிய சகசமலம் பிராந்திஞானத்தின் வேறாயுண்டென்பது பெறப்படும். இனி ஞானபாவமே அதுவெனின்,— ஞானத்தின் என்றும் அபாவத்திற்கும் அழிவுபாட்டுஅபாவத்திற்கும் ஒன்றினொன்று அபாவத்திற்கும் ஒருகாலும் அழிவின்மையான் முத்தியென்பதொன்று இல்லையாய்முடியும். வீடுபேறுண்மை வேதாகமங்களிற் பெறப்படுதலின், அவற்றொடு முரணாமைப்பொருட்டு ஞானபாவமாவது ஞானத்தின் முன்னபாவமெனக் கோடல்வேண்டும். வேண்டவே, நித்தமாகிய ஞானம் முன்னில்லாதொழிதற்கு வேறுகாரணம் உண்டெனப் பெறப்படுதலின், அதுவே சகசமலம் எனப்படுமென்க. இனித்

தமோகுணம் முதலிய ஒன்றன்காரியமாய் இடையேதோன்றி அழிவனவாகலின், அவை அனாதியே ஞானதிரோதகமாய் ஆன்மாவைப் பந்திக்கமாட்டாமையின், சுத்தமாய்நின்ற ஆன்மாவை இடையே பந்தித்து நின்றனவெனின், அவை இடையே பந்தித்தற்குக் காரணம் வேண்டும். காரணமின்றிப் பந்திக்குமெனில், முத்திபெற்ற வழியும் பந்திக்குமென்பது முடியுமாகலின், அவற்றின் வேறாய் அனாதியே பந்திப்பதாகிய சகசமலம் உண்டென்பது பெறப்படும். இனி மூலப் பகுதியிற் றோன்றும் அவிச்சையே அதுவெனின்,— மூலப்பகுதியிற் றோன்றும் அவிச்சை அனாதியில் ஆன்மஞானத்தினைப் பந்தித்த தென்றல் ஏலாமையானும், அது மாயாகாரியமாகலின், ஞானவியஞ்சக மாவதல்லது ஞானதிரோதக மாகாமையானும், அனாதியே ஆன்ம ஞானத்தினைத் தடைசெய்துநிற்குஞ் சகசமலம் வேறுண்டென்பது பெறப்படும். இனி மாயை கன்மங்கள் ஆன்மாவின் வேறுமாய்ச் சடமுமாய்ப் பந்தமுஞ்செய்து நிற்றலின், அவையே அமையும்; வேறு மோர் சகசமலம் உண்டெனக்கோடல் மிகையாமாலோவெனின்,— அவை அங்ஙனமாயினும், ஞானதிரோதகமல்ல வாகலான், ஞான திரோதகமாகிய மூலமலம் வேறுண்டென்க. இனிச் சிவசத்தி ஞான திரோதகமாய் நிற்குமெனின்,— சித்தாகிய சிவனது சத்தியுஞ் சித்தாவதன்றிச் சடமாதலின்மையால் தனக்குப் பகையாகிய சடப்பொருள் சித்தைப் பந்தமுறுத்துவதன்றிச் சித்துப்பொருள் சித்தைப் பந்த முறுத்துமாறு இன்மையானும், உறுத்துமெனின், முதல்வனது பெருங்கருணைக்கு இழுக்காகலானும், சடப்பொருளாய்ப் பந்தமுறுவிக்குஞ் சகசமலம் வேறுண்டென்பது பெறப்படும். இனி மலஞ் சடமாய் நிற்றலின், ஆன்மாவின் குணமெனக்கோடலே பொருத்தமுடைத்தெனின்,— அறியாது கூறினாய்; குணமாயின் இடையே நீங்குதல் கூடாமையானும், ஆன்மா அறிதற் குணமுடைத்தாகலின், அறியாமையும் அறிவுமாகிய இரண்டு மறுதலைக்குணம் ஒருபொருட்குக் கூடாமையானும், அஃது ஆன்மாவின் வேறாயதோர் அகவிருளாகிய திரவியமென்பது தெற்றென உணர்ந்துகொள்க. சிவாதித்தமணி தீபிகையுடையாரும் முதலதிகரணத்து இறுதியிற் பயன்கூறும்வழி, ஞானபாவமே அஞ்ஞானமென்பாரை மறுத்து, மலம் திரவியமென்றும், அனாதிப்பொருளென்றும், மலசத்திகள் பலவென்றும், முத்தி

யில் மலசத்திக்குக் கேடன்றி மலத்துக்குக் கேடின்மையின் அனுதிப் பொருளாதற்கு இழுக்கில்லையென்றும், கடாவிடைகளான் விரித்துக் கூறியவாறு ஆண்டுக்காண்க.

அஞ்ஞானமென்னும் அகவிருள் ஞானபாவமாகாதென்று இவ்வாறு மறுக்கப்படவே, அந்தகாரமென்னும் புறவிருள் ஆலோகத்தின் அபாவமென்பதூஉம் மறுக்கப்பட்டவாறாயிற்று. அதுவுஞ் சிறிது காட்டுதும். ஆலோகத்தின் அபாவமே அந்தகாரமென்பார்க்கு, அம்முறைபற்றிச் சுகத்தின் அபாவமே துக்கம்; தன்மத்தின் அபாவமே அதன்மம்; சையோகத்தின்அபாவமே விபாகமென்று இவ்வாறு கோடல் வேண்டும். அங்ஙனங் கொள்ளாமையால் அவர்க்கும் அது கருத்தன்று போலுமென மறுக்க. அன்றியும், ஆண்டு ஒளியில்லை இருளுள்ளதென, ஒளியின்மையின்வேறாய் இருளென்னுமுணர்வு நிகழ்தலானும், யாட்டின் கழுத்தில் தூங்கும் மூலையோடொக்கும் அபாவத்தாற் செய்யக்கடவதொன்று யாண்டுமின்மையானும், கண்ணொளியைத் தடைசெய்து நிற்பதாகிய இருளை அபாவமென்றல் கூடாமை யறிக. இவ்விருளினது உண்மை வெள்ளிடையின் அலர விழித்து நோக்கியவழியும் மறைத்தற்றொழில் நிகழ்தல்பற்றிப் பாரிசேடிய அளவையான் அறியப்படும். அற்றேல், நீலவடிவிற்றாய்த் தோன்றுதலின் இருள் காட்சிப்பொருளென்றாற்படும் இழுக்கென்னை யெனின்,— அற்றன்று; துன்னிய இருளின்கண் விழித்துழிப் போலக் கண்ணிமை யிறுக மூடியவழியும் ஒருதன்மைத்தாய்த் தோன்றுதலின், வேற்றுமை யின்மையான், அது மயக்கவுணர்வேயாமென்பது போதருதலின், விழித்துழி அவ்வாறுதோன்றுவதும் அதுபோல மயக்கவுணர்வாவதன்றி, இருளின் தோற்றம் அன்றென்பது அனுபவத்தாற் கண்டுகொள்க.

உலகாயதர் செவிமுதலிய இடங்களே இந்திரியம் என்பராகலின், கண்ணென்னும் இடத்தின் வேறாக ஒளிப்பொருளாகும் இந்திரியம் உண்டென்பதற்குப் பிரமாணமென்னையெனின்,— செவிடனுக்குச் செவியுளதாகவும் ஓசை கேளாமையின், அது கேளாமைக்குக் காரணஞ் செவியென்னும் உறுப்பின் வேறாய் அதனை அதிட்டித்து நிற்கும் இந்திரியம் இல்லாமையேயன்றிப் பிறிதின்மையாற் செவியென்னும் உறுப்பு இந்திரியமாகாமை எல்லார்க்கும் விளங்கக் கிடந்

தது. இதுபற்றி ஏனை இந்திரியங்களும் அவ்வவ்விடங்களின் வேறு தல் கண்டுகொள்க. ஞானேந்திரியங்களைந்தும் அறிதற் கருவிகளாக லின், சாத்துவிகாகங்காரத்தில் தோன்றியனவாம். கண்ணிந்திரியம் ஒளிக்கருவியாகலின், உருவத்தை யறிவதாம். இது ஆன்மாவின் ஞானசத்தியால் அதிட்டிக்கப்பட்டுப் பொருள்களை விசேடண விசே டிய இயல்புபற்றி அறியுமாறின்றி நிருவிகற்பமாய் அறியுங்கருவி யென்றுணர்க. இது ஏனை ஞானேந்திரியங்களுக்கும் ஒக்கும். காட்டு மொளியின் வேறாய்க் கண்ணுக்கு ஒளிக்குணம் உண்டென்றற்கு ஏது வென்னை? கண்ணுக்கு ஒளிக்குணமுண்டெனின்,— மின்மினித் துணையாயினுந் தானேவிளங்குதல் வேண்டுமாலெனின்,— ஆகாயத் தின் கண்ணதாகிய சத்தகுணம், முரசு, குணில், சையோகம் முதலிய வியஞ்சகங்களான் விளக்கப்பட்டுழிவிளங்கி அல்லுழி விளங்கா தொழிதலேயன்றித் தினைத்துணையாயினுந் தானென விளங்குமாறு இன்றென்பதுபற்றி வியஞ்சகத்தின் எதிரொலி வடிவாற் றோன்றும் அவ்வோசையை ஆகாயத்தின் குணமன்றென்பார் யாருமில்லை. அது போலக் கண்ணின் கண்ணதாகிய ஒளியும் வியஞ்சகமாகும் ஞாயிற்றி னொளி முதலிய உள்வழி விளங்கி அல்லுழி விளங்காமை மாத் திரையே பிறிதில்லையாகலான், அதனைக் கண்ணின் குணமன்றென் றல் அறிவில்லார் கூற்றேயாமெனவும், அக்கண்ணொளி தன்னை விளக்குதற்குரிய வியஞ்சகப்பொருள் ஏகதேசமாயின், ஏகதேசத்து விளங்கியும் வியாபகப் பொருளாயின் வியாபகமாய் விளங்கியும் நிற்கும் இயல்பிற்றெனவும் உணர்க. இனிக் கண்ணுக்கு ஒளியில்லை, ஞாயிற்றி னொளி முதலியனவே கண்ணின்கணின்று காண்டல்வியாபாரம் நிகழ்த்துமெனின்,— அங்ஙனமாயின், ஞாயிற்றினொளி முதலியன கண்ணின்கணின்றே காண்டல்வியாபாரம் நிகழ்த்துமென்னும் நியமம் வேண்டா; உடம்பினுள் யாண்டாயினும் ஓரிடத்தைப்பற்றி நின்றுங் காண்டல்வியாபாரம் நிகழ்த்துமென்றொழிக. அற்றேல், அவ்வாறு ஒளியுடைத்தாகிய கண்ணிந்திரியந் தன்தொழிற்பாடு நிகழ்தற்குப் பிறிதோர் ஒளியின் உபகாரத்தை இன்றியமையாதவாறு என்னை யெனில்,— அங்ஙனமாயினுங் கண்ணிந்திரியந் துலவொளியாகலின், தமோகுண சாரமான இருளென்னும் பகைப்பொருளின் சத்தியால் மடங்கி, காண்டல் வியாபாரம் நிகழ்த்துதற்கு அங்கியென்னும் பூதத்

தின் கூறுன ஞாயிற்றினெளி விளக்கொளி முதலிய சூக்குமவொளி உப காரத்தை வேண்டற்பாலதாகின்றது என்றுணர்க. ஆசிரியர் சிவஞான யோகிகள் சிவஞானமாபாடியத்துக் கண்ணிந்திரிய இயல்பும் அதன் குற்ற சக்சமான இருளியல்பும் அதன் தோற்றமுறையும் வாதி கள் கூறும் பூர்வபக்கங்களெந்தும் மிக விரித்துரைத்தார். அது சிவ ஞானபோதத்துப் பிரமாணவோத்தின் இரண்டாம்பாதத்து இரண் டாம் அதிகரணத்துக் காண்க. அத்துவித சைவசித்தாந்த ஆசாரியர் கள் இப்புறவிருளே அகவிருளிற்குங் கண்ணே ஆன்மாவிற்கும் ஞாயிற் றினைச் செம்பொருளாகிய சிவத்திற்கும் உவமானமாக எடுத்தோதி அம்முப்பொருள் மெய்ப்பெற்றி தெருட்டுவர். அது சிவஞானபோதம் முதலியவற்றுட் காண்க.

இனி நாயனர் காமத்துப்பாலில்,

"தாம்வீழ்வார் மென்றோட் டுயிலி னினிதுகொ
ருமரைக் கண்ணா னுலகு"

என்று ஓதியருளினர். பரிமேலழகியார், "தாமரைக் கண்ணா னுலகு" என்பதற்குத் "தவயோகிக ளெய்துஞ் செங்கண்மா லுலகம்" என்று பொருளுரைத்தார். இதனுனே செங்கண்மால் உலகெய்தி வாழ் தலே வீடுபேறென்பது நாயனர் கருத்தாகாதோ வெனின்,— ஆகாது; என்னை? செங்கண்மா லுலகு விரசைநதியடுத்து மேற்பதங்களுள் ஒன் ருய்விளங்கும் ஏகதேச இடமாகலானும், மாயாகாரியமாகலானும், அஃது காமிய கன்ம தவயோகமுழப்பார் உறும் பதமுத்தியாவதல் லது, நிட்காமிய மெய்ஞ்ஞான முடையாரெய்தும் நித்தவியாபக பர வீடுபேறு ஆகாமையின். செங்கண்மால் குணமூர்த்திகளுள் ஒருவ ஞய் நிவிர்த்திகலையில் அடங்கிய தத்துவபுவனங்களைக் காக்குங் கடவு ளென்பது மேற்காட்டியவாற்றுன் இனிது விளங்குதலின், அக்கடவுள் ஓர்வகைப் பரபோகமருளுங் குணமூர்த்தியன்றி நிர்க்குண சொரூப வீடுபேறருளும் பரப்பிரம முதற்பொருளாகானென்க. அல்லதூஉம், பாஞ்சராத்திரிகள் செங்கண்மால் அப்பிராகிருத மங்கல திவ்விய தேகியாய் மேலுலகில் உறைவனென்று கூறுதலின், மாயாகாரியமான பஞ்சகோசமும் நீங்கிய சின்மய நித்த வியாபக சொரூபானந்த வீடு பேற்றினை அவன் அருளுவனென்றல் சிறிதும் இயையாதென்க. இனி "நிரதிசய வின்பத்திற்குரிய நீ இச்சிற்றின்பத்திற்கு இன்னையா

தல் தகாதென்ற பாங்கற்குத் தலைவன் சொல்லியது" என்று அத் திருக்குறளுக்குப் பரிமேலழகியார் கருத்துரைத்தது, இவ்வுலகவின் பத்தினை நோக்க அச்செங்கண்மால் உலகவின்பம் நிரதிசயமென்ற வாறேயாம். பரமுத்திப்பேறு, உருவ அருவ உலகெல்லாம் வெறுத்த சிதானந்த வாழ்வென்பது,

" குறித்தடியி னின்றட்ட குணமெட்டுச் சித்தி
கோகனகன் முதல்வாழ்வு குலவுபத மெல்லாம்
வெறுத்துநெறி யறுவகையு மேலொடுகீ ழடங்க
வெறும்பொயென நினைந்திருக்க மேலொடுகீ ழில்லா
னிறுத்துவதோர் குணமில்லான் றன்னையொரு வருக்கு
நினைப்பரியா னென்றுமிலா னேர்படவந் துள்ளே
பொறுப்பரிய பேரன்பை யருளியதன் வழியே
புகுந்திடுவ னெங்குமிலாப் போகத்தைப் புரிந்தே"

என்னும் அத்துவித சைவசித்தாந்தத் திருவாக்கினான் அறிக. இதுவே பரிமேலழகியார்க்கும் உடம்பாடாமாறு,

" மலர்மிசை யேகினான் மாணடி சேர்ந்தார்
நிலமிசை நீடுவாழ் வார்"

என்னுந் திருக்குறளில் "நிலமிசை" என்பதற்கு, "எல்லா வுல கிற்கும் மேலாய வீட்டுலகின்கண்" என்றுரைத்தவாற்றான் உணர்க. சின்மய வீடுபேற்றினை வீட்டுலகென்றது, இறைவனருள் சேர்தலை "இறைவனடி சேர்தல்" என்றது போல்வதோர் உபசாரவழக்கு.

இதுகாறுங் கூறியவாற்றால் ஏகான்மவாதிகள் கூறும் நிர்உபசரித ஐக்கியமும், பாஞ்சராத்திரிகள் கூறும் நாராயணசாரூபமும், நாயனார் கருதிய வீடுபேறாகா என்பதூஉம், அத்துவித சித்தாந்திகள் கூறுஞ் சிவனடிசேர்தல் என்னும் உபசரித ஐக்கிய சிவசாயுச்சியமே அவர் கருதிய வீடுபேறென்பதூஉம், துணிபொருளாயினமை காண்க. தெய் வத்திருவருள் கைவந்து கிடைத்துப் பரமஞானானுபூதி கைகண்ட சமயாசாரியர் நால்வரும்,

" சொற்றுணைவாழ்க்கை துறந்துன் றிருவடியேயடைந்தோம்"

" கோமாற்கோநாமென் றுமீளாவாளாய்க்
கொய்ம்மலர்ச்சேவடியிணையேகுறுகினோமே"

" இவன்மற்றென்னடியானெனவிலக்குஞ்
சிந்தையால்வந்துன்றிருவடியடைந்தேன் "

" நின்னருட்பெய்கழற்றாளிணைக்கீழ்
மறிவறியாச்செல்வம்வந்துபெற்றார் "

" தையலிடங்கொண்டபிரான்றன்கழலேசேரும்வண்ண
மையனெனக்கருளியவாறு "

" கரணங்களெல்லாங்கடந்துநின்றகறைமிடற்றன்
சரணங்களேசென்றுசார்தலுமே "

" காட்டாதனவெல்லாங்காட்டிச்சிவங்காட்டித்
தாட்டாமரைகாட்டித்தன்கருணைத்தேன்காட்டி "

என்று இங்ஙனம் அருளிச்செய்யும் முகத்தாற் சுத்தாத்துவித சைவ சித்தாந்த உபசரித ஐக்கிய சிவசாயுச்சியமே மெய்வீடுபேறென்பது நேர்ந்தருளினா ரென்க.

" ... ..செவ்வேற் சேஎய்
சேவடி படருஞ் செம்ம லுள்ளமொடு "

என்று அருளிச்செய்தலின், நக்கீரனார்க்கும் அதுவே கருத்தாயவாறு காண்க.

இக்காலத்து ஏகான்மவாதிகளுட் சிலர்,

" நவமாயசெஞ்சுடர்நல்குதலுநாமொழிந்து
சிவமானவாபாடி "

" சித்தமலமறுவித்துச்சிவமாக்கியெனையாண்ட - வத்தன் "

" சென்றுசென்றணுவாய்த்தேய்ந்துதேய்ந்தொன்றாந்
திருப்பெருந்துறையுறைசிவனே "

" அனாதி சிவரூப மாகிய வாறே "

" ஏகனாகி யிறைபணி நிற்க "

" ஏகமாய் நின்றே யிணையடிக ளொன்றுணா "

என்றற்றொடக்கத்து உபசரித சுத்தாத்துவித ஐக்கிய சிவசாயுச்சியங் கூறுஞ்சுருதிகள், தமது ஏகான்மவாத நிர்உபசரித கேவலாத்துவித ஐக்கியம் பேசினவென்று பிதற்றுவர். பரமசிவன் பெத்தம், முத்தி

இரண்டினும் ஆன்மாவிற்கு நாயனென்றும் ஆன்மாப் பரமசிவனுக்கு என்றும் மீளாவடிமை யென்றுங்கூறி, இருளும் வெளியும் போலும் பேதமும், பொன்னும் அணியும் போலும் அபேதமும், சொல்லும் பொருளும்போலும் பேதாபேதமும் பூர்வபக்கமாக ஒதுக்கி, முத்திறமுந் தன்கண் அடங்கக்கொண்டு அத்துவிதஞ் சாதிக்கும் வைதிக சைவசித்தாந்தச் சுருதிகள், தமக்கனுகூலமாமென்று அவர் அவை தம்மைத் தம்முட்கொண்டு போற்றல்,

"மெய்ச்சோதி தங்கு சிறுகொள்ளி தன்னை விரகின்மை கொண்ட குருகார்
கச்சோத மென்று சுருதிக் குடம்பை தனிலுய்த்து மாண்ட கதையாய்"

முடியுமென்க. மேலும் விரிக்கிற் பெருகும். முதற்றிருக்குறள் விருத்தி ஒருவகையான் முடிந்தது.

## திருக்குறட் பாகுபாடு

உத்தரவேதம் பாயிரமுளப்பட அறத்துப்பால், பொருட்பால், காமத்துப்பாலென நான்கு பகுதித்தாம்.

அவற்றுள், **பாயிரம்** - கடவுள்வாழ்த்து, வான்சிறப்பு, நீத்தார் பெருமை, அறன்வலியுறுத்தல் என்னும் நான்கு அதிகாரங்களுடைத்து.

**அறத்துப்பால்** - இல்லறவியல், துறவறவியலென இரண்டியல்களுடைத்து. இல்லறவியல்-இல்வாழ்க்கை, வாழ்க்கைத்துணைநலம், புதல்வரைப்பெறுதல், அன்புடைமை, விருந்தோம்பல், இனியவை கூறல், செய்ந்நன்றியறிதல், நடுவுநிலைமை, அடக்கமுடைமை, ஒழுக்கமுடைமை, பிறனில்விழையாமை, பொறையுடைமை, அழுக்காறாமை, வெஃகாமை, புறங்கூறாமை, பயனிலசொல்லாமை, தீவினையச்சம், ஒப்புரவறிதல், ஈகை, புகழ் என்னும் இருபஃது அதிகாரங்களுடைத்து. புகழ் இல்லறத்தார்க்குளதாம் இம்மைப்பயனாகலின், இல்லறவியலின் இறுதிக்கண் தந்தோதப்பட்டது. **துறவறவியல்**—விரதம், ஞானமென இரண்டாம். **விரதம்**—அருளுடைமை, புலான் மறுத்தல், தவம், கூடாவொழுக்கம், கள்ளாமை, வாய்மை, வெகுளாமை, இன்னாசெய்யாமை, கொல்லாமை என்னும் ஒன்பது அதிகாரங்களுடைத்து. **ஞானம்** - நிலையாமை, துறவு, மெய்யுணர்தல், அவாவறுத்தல் என்னும் நான்கு அதிகாரங்களுடைத்து. **ஊழ்**-அறத்

துப்பாலின் இறுதிக்கண்ணதாகிய ஓர் அதிகாரம். இது பொருள் இன்பங்கள் இரண்டற்கும் பொதுவாய் ஒன்றனுள் வைக்கப்படாமையானும் மேற்கூறிய அறத்தோடு இயைபுடைமையானும் அறத்துப் பாலின் இறுதிக்கண் வைக்கப்பட்டது.

பொருட்பால்—அரசியல், அங்கவியல், ஒழிபியலென மூன்றியல்களுடைத்து. அவற்றுள், அரசியல்—இறைமாட்சி, கல்வி, கல்லாமை, கேள்வி, அறிவுடைமை, குற்றங்கடிதல், பெரியாரைத் துணைக்கோடல், சிற்றினஞ்சேராமை, தெரிந்துசெயல்வகை, வலியறிதல், காலமறிதல், இடனறிதல், தெரிந்துதெளிதல், தெரிந்து வினையாடல், சுற்றந்தழால், பொச்சாவாமை, செங்கோன்மை, கொடுங்கோன்மை, வெருவந்த செய்யாமை, கண்ணோட்டம், ஒற்றாடல், ஊக்கமுடைமை, மடியின்மை, ஆள்வினையுடைமை, இடுக்கணழியாமை என்னும் இருபத்தைந்து அதிகாரங்களுடைத்து. அங்கவியல்—அமைச்சு, சொல்வன்மை, வினைத்தூய்மை, வினைத்திட்பம், வினைசெயல்வகை, தூது, மன்னரைச் சேர்ந்தொழுகல், குறிப்பறிதல், அவையறிதல், அவையஞ்சாமை, நாடு, அரண், பொருள்செயல்வகை, படைமாட்சி, படைச்செருக்கு, நட்பு, நட்பாராய்தல், பழைமை, தீநட்பு, கூடாநட்பு, பேதைமை, புல்லறிவாண்மை, இகல், பகைமாட்சி, பகைத்திறந்தெரிதல், உட்பகை, பெரியாரைப் பிழையாமை, பெண்வழிச்சேறல், வரைவின் மகளிர், கள்ளுண்ணாமை, சூது, மருந்து என்னும் முப்பத்திரண்டு அதிகாரங்களுடைத்து. ஒழிபியல்—குடிமை, மானம், பெருமை, சான்றாண்மை, பண்புடைமை, நன்றியில்செல்வம், நாணுடைமை, குடிசெயல்வகை, உழவு, நல்குரவு, இரவு, இரவச்சம், கயமை என்னும் பதின்மூன்று அதிகாரங்களுடைத்து.

காமத்துப்பால்--களவியல், கற்பியல் என இரண்டாம். களவியல்-தகையணங்குறுத்தல், குறிப்பறிதல், புணர்ச்சிமகிழ்தல், நலம்புனைந் துரைத்தல், காதற்சிறப்புரைத்தல், நாணுத்துறவுரைத்தல், அலரறிவுறுத்தல் என்னும் ஏழதிகாரங்களுடைத்து. கற்பியல்-பிரிவாற்றாமை, படர்மெலிந்திரங்கல், கண்விதுப்பழிதல், பசப்புறுபருவரல், தனிப்படர்மிகுதி, நினைந்தவர்புலம்பல், கனவுநிலையுரைத்தல், பொழுதுகண்டிரங்கல், உறுப்புநலனழிதல், நெஞ்சொடுகிளத்தல், நிறையழிதல், அவர்வயின்விதும்பல், குறிப்பறிவுறுத்தல், புணர்ச்சிவிதும்பல், நெஞ்

சொடுபுலத்தல், புலவி, புலவிநுணுக்கம், ஊடலுவகை என்னும் பதி னெட்டு அதிகாரங்களுடைத்து.

## பரிமேலழகர் உரைமாட்சி

இதற்கு உரை பலவுளவேனும், பரிமேலழகியார் இயற்றிய உரையே அவற்றினுளெல்லாஞ் சிறந்து திருக்குறள் மெய்ப்பொருள் தெரிப்பதாம். பரிமேலழகியார் திருக்குறளுரை அக்குறள்போலச் சொற்சுருங்கிப் பொருள்விளங்கி உள்ளுந்தோறும் உள்ளொளி பெருக் குவதாம். பரிமேலழகியார் வடமொழிக்கடலுந் தென்மொழிக்கடலும் நிலைகண்டுணர்ந்து மதிநுட்பம் வாய்ப்பப் பொருந்தி உலகம் கைக் கொண்டுபோற்றத் திருக்குறளுக்கு மெய்யுரை கண்டார்.

"ஆயுந் தொறுந் தொறு மின்பந் தருங்கலை"

என்னும் உறுதிக்கட்டுரைக்குப் பரிமேலழகியார் இயற்றிய திருக்குற ளுரை சிறந்த நிதரிசனமாம். தமிழாசிரியர் உரைகளுட் பரிமேலழகியார் உரைக்கொப்பாவன முன்னோருரைகளுள் நக்கீரனுருரையும் பின்னோ ருரைகளுள் சிவஞானயோகிகள் உரைகளுமாம். ஆசிரியர் சிவஞான யோகிகள் யாண்டும் பரிமேலழகர் உரைக்கருத்துத் தம்முரைகளுட் போற்றி ஆளுமுகத்தால், அவ்வுரை மேன்மை அறிவுறுத்திட்டார். ஆயினும், பாயிரவிருத்தியினும், சூத்திரவிருத்தியினும், அவர் சொன் முடிவு பொருண்முடிவுகளுள் ஓரோவொன்றை எடுத்து ஆசங்கித்துத் தங்கருத்து வேறு நிலையிட்டனர். அவை ஈண்டுக் காட்டலுறின் விரியும். பாயிரவிருத்தியினுஞ் சூத்திரவிருத்தியினுங் காண்க. பரிமேலழகி யாருரை இவ்வாறு சிறத்தலினன்றே,

"பாலெல்லா நல்லாவின் பாலாமோ பாரிலுள்ள
நூலெல்லாம் வள்ளுவர்செய் நூலாமோ - நூலிற்
பரித்த வுரையெல்லாம் பரிமே லழகன்
றெரித்தவுரை யாமோ தெளி"

என்று ஆன்றோர் அதன்பெருமை அவ்வாறு எடுத்துப் போற்றினர் என்பது.

## திருவள்ளுவ மாலை

திருவள்ளுவ மாலை— திருக்குறளின் சிறப்புப் பாயிரம். இது அசரீரி, நாமகள், இறையனர், உக்கிரப் பெருவழுதியார், கபிலர்,

பரணர், நக்கீரர், மாமூலனார், கல்லாடர், சீத்தலைச் சாத்தனார், மருத்துவன் தாமோதரனார், நாகன்தேவனார், அரிசிற்கிழார், பொன்முடியார், கோதமனார், நத்தத்தனார், முகையலூர்ச் சிறுகருந்தும்பியார், ஆசிரியர் நல்லந்துவனார், கீரந்தையார், சிறுமேதாவியார், நல்கூர்வேள்வியார், தொடித்தலைவிழுத்தண்டினார், வெள்ளி வீதியார், மாங்குடி மருதனார், எறிச்சலூர் மலாடனார், போக்கியார், மோசிகீரனார், காவிரிப்பூம் பட்டினத்துக் காரிக்கண்ணனார், மதுரைத் தமிழ்நாயகனார், பாரதம் பாடிய பெருந்தேவனார், உருத்திரசன்ம கண்ணர், பெருஞ்சீத்தனார், நரிவெருத்தலையார், மதுரைத் தமிழாசிரியர் செங்குன்றூர்க் கிழார், மதுரை யறுவைவாணிகர் இளவேட்டனார், கவிசாகரப் பெருந்தேவனார், மதுரைப் பெருமருதனார், கோவூர்க்கிழார், உறையூர் முதுகூற்றனார், இழிகட்பெருங்கண்ணனார், செயிர்க்காவிரியார் மகனார் சாத்தனார், செயலூர்க் கொடுஞ்செங்கண்ணனார், வண்ணக்கஞ் சாத்தனார், களத்தூர்க்கிழார், நச்சுமனார், அக்காரக்கனி நச்சுமனார், நப்பாலத்தனார், குலபதி நாயனார், தேனீக்குடிக் கீரனார், கொடிஞாழன் மாணிபூதனார், கவுணியனார், மதுரைப் பாலாசிரியனார், ஆலங்குடி வங்கனார் என்னும் ஐம்பத்துமூவருந் தனித்தனி இயற்றியருளிய ஐம்பத்துமூன்று திருவெண்பாக்களுடையது.

இவ்வைம்பத்து மூவருள், அசரீரி-யாண்டும் நீக்கமறநிறைந்து நிற்கும் முதற்றெய்வம். நாமகள் - சகலகலா ரூபியான வாணி. இறையனார் - ஆலவாயின் அவிர்சடைக் கடவுள். உக்கிரப்பெருவழுதி - கடைச்சங்கஞான்று அரங்கிருந்து திருக்குறள் கேட்ட பாண்டியன். கபிலர் எழுவாயாக ஆலங்குடி வங்கனார் இறுவாயாக நின்றோர் கடைச் சங்கப்புலவர் நாற்பத்தொன்பதின்மர். நக்கீரனார் களவியலுரையுட் கடைச்சங்கமிருந்து தமிழாராய்ந்தார் நாற்பத்தொன்பதின்மர் என்றுரைத்து எடுத்தோதிய சேந்தம்பூதனார், பெருங்குன்றூர்க்கிழார், இளந்திருமாறனார், மருதனிளநாகனார் என்னும் இயற்பெயருடையார் திருவள்ளுவமாலையிற் காணப்படாமை ஒரு மாறுபாடு போலுமென்று மலையற்க; இவ்வியற் பெயருடையாரே ஆண்டு வேறியற்பெயரால் அங்ஙனம் வழங்கப்படுகின்றமையின்.

## முதுமொழி வெண்பா

இது உத்தரவேத அதிகாரங்களிலுள்ள ஒவ்வோர் திருக்குறள் முதுமொழிகளுக்கு எடுத்துக்காட்டிலக்கியமாக இயற்றப்பட்டமையின், முதுமொழி வெண்பா என்னும் பெயர்த்தாயிற்று. இது சோமேசரை முன்னிலையாக்கிப் பாடப்பட்டமையின் சோமேசர் முதுமொழி வெண்பா என்றும் வழங்கப்படும். இஃது இயற்றினார் ஆசிரியர் சிவஞானயோகிகள். இதனுள் திருக்குறள் முதுமொழிகளும் எடுத்துக் காட்டிலக்கியங்களும் தம்முள் ஒத்தொழுகும் நேர்ச்சி, திருவள்ளுவ நாயனாரே மறித்தும் அவதரித்துத் திருக்குறளுக்கு எடுத்துக்காட்டிலக்கியம் அருளிச்செய்தாரென்று வியக்கத்தக்கதாம். இனி "இரங்கேசர் வெண்பா," "முருகேசர் வெண்பா" என்று பெயரிட்டுச் சிலர் பாடியன, திருக்குறளும் எடுத்துக்காட்டுந் தம்முள் இயைபுபெறாது, வெற்றெனத் தொடுத்தலாயும் மற்றொன்றாய் விரிந்தும் நிற்றலின் போலிநூல்களாம்.

இனி ஆத்திசூடி, கொன்றைவேந்தன், வாக்குண்டாம், நல்வழி என்னுஞ் செந்தமிழ்நூல்கள் திருக்குறள்போல நீதியுரைக்கும் பொய்யாமொழிகளாதலின், அதனோடு ஒன்றெனவைத்துப் போற்றற்பாலனவாம். இவை ஔவையார் திருவாய்மொழிகள்.

## (உ) கடைச்சங்க இலக்கியம்

நற்றமிழ்ப் பாண்டிநன்னாட்டு நான்மாடக்கூடன் மாநகரில் அங்கயற்கண்ணியோடு அமர்ந்து வீற்றிருக்குந் திங்களங்கொழுந்தணிந்த சிவபிரானருளிய சங்கப்பலகை வீற்றிருந்து தமிழாராய்ந்த நக்கீரனார் முதலிய நல்லிசைப் புலவரும் அவர்ப்பொருவுறாஉம் பிறரும் இயற்றிய நற்றமிழ் நூல்கள்: பத்துப்பாட்டு, எட்டுத்தொகை, பதினெண் கீழ்க்கணக்கென்று இப்பாரில் வழங்கப்படும். நக்கீரர் முதலிய கடைச்சங்கப்புலவர் அகத்தியமென்னும் முதல்நூலினையுந் தொல்காப்பியம் முதலிய அதன் வழிநூல்களையும் விழிகளாகக்கொண்டு முத்தமிழ் நன்றாராய்ந்து செந்தமிழ் இலக்கியம் பலசெய்திட்டார். அவரியற்றிய சங்கச் செந்தமிழ் இலக்கியங்கள் சொல்வளம் பொருள்வளந் துறுமிக் கற்போர் நெஞ்சங் கவர்ந்து மேல்நிலத்தோறும் விளையும் நானிலச் செவியமிர்

தாய் இகபரம்நல்கி மிகவிளங்குவன. பிற்காலத்து நூலுமுரையுந் தமிழுலகம் பெட்புறச்செய்து தமிழாசிரியர் பெருமை பெறுதற்குச் செந்தமிழ்ப் பிரமாண வரம்பாய் நிலவாநின்றன இந்தச் சந்தச் செந்தமிழ் இலக்கியங்களெனின்,— அவற்றின் தெய்வச் சொற்பொருட் சிறப்பு இப்பரிசிற்றென்று முற்றவெடுத்து இயம்பல் எளிதன்று.

## பத்துப்பாட்டு

திருமுருகாற்றுப்படை, பொருநராற்றுப்படை, சிறுபாணாற்றுப்படை, பெரும்பாணாற்றுப்படை, முல்லைப்பாட்டு, மதுரைக்காஞ்சி, நெடுநல்வாடை, குறிஞ்சிப்பாட்டு, பட்டினப்பாலை, மலைபடுகடாம் என்பன பத்துப்பாட்டாம். திருமுருகாற்றுப்படை முதலிய இப்பத்தும், அறம், பொருள், இன்பம், வீடு என்னும் உறுதிப்பொருள் நான்கனுள் ஒரோவொன்று நுதலியனவாயும், நல்லிசைப்புலவர் நாட்டியனவாயும், அகவற்பாவிலக்கணம் ஒத்தனவாயும் ஒற்றுமையுறுதலின், அவற்றைச் சங்கத்தார் பத்துப்பாட்டெனக் கோத்து ஒன்றாக்கினர். இவற்றுள், திருமுருகாற்றுப்படை உறுதிப்பொருள் நான்கனுள் இறுதிக்கண்ணதாய்ச் சிறந்த வீடுபேறு நுதலுதலின், அதனை ஏனை ஒன்பது பாட்டுக்குஞ் சிரத்தானமாக்கி, முதற்கண் கோத்திட்டார். திருமுறை செய்தருளிய நம்பியாண்டார்நம்பி இது வீடுபேற்றுறுதிப் பெரும்பயன் கூறுந் தெய்வப்பாட்டாதல் நோக்கிப் பதினொராந் திருமுறையில் எடுத்துக்கோத்துப் போற்றினர். இது கோத்தார் சங்கப்புலவரென்பது, நச்சினார்க்கினியர் மலைபடுகடாத்துள் "தீயினன்ன வொண்செங் காந்தள்" என்னுந் தொடர்க்கு எழுதிய் உரையான் அறிக.

(க) திருமுருகாற்றுப்படை—இது குமரவேளை மதுரைக் கணக்காயனார் மகனார் நக்கீரனார் பாடியருளியது; வீடுபேறு வேண்டினான் ஓரிரவலனை வீடுபெற்றான் ஒருவன் முருகக்கடவுள்பால் ஆற்றுப்படுத்தலைப் பொருளாகக் கொண்டது. முருகாற்றுப்படை என்பது முருகனிடத்து ஆற்றுப்படுப்பது என்றும். முருகு என்னும் பண்புமொழி பண்பிமேல் நின்றது. ஆண்டை - ஐ - வினைமுதல் விகுதி. இது முருகக்கடவுள் திருப்பரங்குன்றம், திருச்சீரலைவாய், திருவாவினன்குடி, குன்றுதோறாடல், திருவேரகம், பழமுதிர்சோலை என்னும்

ஆறு படைவீடுகளினும் 'ஊரூர் கொண்ட சீர்கெழு விழவு' முதலியவற்றினும் வீற்றிருப்பனெனக்கூறி அக்கடவுள்பால் ஆற்றுப்படுக்கும். இது புறத்திணையியலுள் " தாவி னல்லிசை " என்னுஞ் சூத்திரத்துள்

" ஆற்றிடைக் காட்சி யுறழத் தோன்றிப்
பெற்ற பெருவளம் பெறாஅர்க் கறிவுறீஇச்
சென்று பயனெதிரச் சொன்ன பக்கமும் "

என்பதனாற் கந்தழியைப் பெற்றானொருவன், அதனைப் பெறல்வேண்டினான் ஒருவனுக்கு, பெறுமாறு வழிப்படுத்துக் கூறுமென்பது பற்றிச் செய்யுள் செய்தவாறு. கந்தழியாவது ஒரு பற்றுமற்று அருவாய்த் தானே நிற்குந் தத்துவங்கடந்த பொருள். அது

" உற்றவாக்கையினுறுபொருணறுமலரெழுதருநாற்றம்போற்
பற்றலாவதோர்நிலையிலாப்பரம்பொருள் "

என அதனை யுணர்ந்தோர் கூறியருளியவாற்றா னறிக.

மாயிருஞாலத்து மறைமுதற் கடவுள் பூசையின் மனம்பேதுற்ற ஒன்றொழிந்த ஆயிரவரை மலைக்குகையிற் றொகுத்து அன்னதிறமுடையன் இன்னும் ஒருவனைத்தேடித் தன்னை அன்னனாகக்கண்டு ஆண்டு அவரோடு சிறைப்படுத்துப் பட்டினிதீர்ந்துண்ண நீராடுவான்புக்க, பூதத்தின் தப்பித் தாமும் பிறரும் உய்யல்வேண்டி, நக்கீரனார் இத் திருமுருகாற்றுப்படையினைப் பாட, முருகக்கடவுள் இப்பாட்டு உவந்து கொண்டருளிச் செவ்வேல்விடுத்து அப்பூதத்தினைச் செற்று நக்கீரருள்ளிட்டார் அனைவரையும் உய்யச் செய்தருளினர். இவ்வரலாறு காளத்திமான்மியத்து நக்கீரச்சருக்கத்துக் காண்க. இதனைப் புறந்தூய்மை அகந்தூய்மைபேணிச் சிறந்துழியிருந்து முருகக்கடவுளைச் சித்தாசனத்திலேற்றி அப்பிரான் திருவடிக்கண் பிரிவறப்பொருந்திய சித்தத்தோடு நித்தலும் பாராயணஞ் செய்வார், பகையும் பிணியும் மிடியும் பாற்றலும், கொழிதமிழ்ப்புலமை வளமுறக்கெழுமலும், பாச வைராக்கியம் பகரொணாஞானம் மாசறப்பெறுதலும், அம்முருகக் கடவுள் மலரடிக்கீழ்ப் பரமானந்தவாழ்வு தலைக்கூடுதலும் ஒருதலையாக எய்துவர். இது தேவர் மக்கள் எனப் பகுத்த இருவகைப் பாடாண்டிணையுள் பிறப்பில் பெற்றிமையுடைய கொடிநிலை, கந்தழி, வள்ளி யென்ற மூன்றனுள், நடுநின்ற கந்தழியியல்பு கூறினமையின், தேவர்

பகுதியான பாடாண்பாட்டென்று அறிக. கொடிநிலை—கீழ்த்திசை யின்கண்ணே நிலைபெற்றுத்தோன்றுஞ் செஞ்சுடர் மண்டிலம். கந்தழி யிலக்கணம் மேற்கூறப்பட்டது. வள்ளி— தண்கதிர் மண்டிலம். இம்மூவகைத் தெய்வமுந் தேவர் பகுதியாய்ப் பாடாண்டிணைக்கு உரியவாமாறு,

"கொடிநிலை கந்தழி வள்ளி யென்ற
வடுநீங்கு சிறப்பின் முதலன மூன்றுங்
கடவுள் வாழ்த்தொடு கண்ணிய வருமே"

என்னும் புறத்திணையியற் சூத்திரத்தானறிக. வடுநீங்கு சிறப்பு— பிறப்பு இறப்பில் பெற்றி.

(உ) பொருநராற்றுப்படை—இது சோழன் கரிகாற் பெருவளத்தானை முடத்தாமக் கண்ணியார் பாடியது; பரிசில் பெறல் வேண்டிய பொரு நன் ஒருவனைப் பரிசில் பெற்றானொருவன் சோழன் கரிகாற் பெரு வளத்தானிடத்து ஆற்றுப்படுத்தலைப் பொருளாக வுடையது. பொருநர்-ஏர்க்களம் பாடுவோர், போர்க்களம் பாடுவோர், பரணி பாடு வோரெனப் பலதிறத்தார். அவருள் ஈண்டுக் கூறியோன் போர்க்களம் பாடுவோன். இப்பாட்டுக் கரிகால்வளவன் கொடை, பிரதாபம், நாட்டுவளம், நதிவளங்களை மீக்கூறும். இப்பாட்டுள்

"அறாஅ யாண ரகன்றலைப் பேரூர்ச்
சாறுகழி வழிநாட் சோறுநசை யுறாது
வேறுபுல முன்னிய விரகறி பொருந"

என முன்னிலை ஒருமையானெடுத்து,

"வெண்ணிற் றாக்கிய வெருவரு நோன்றாட்
கண்ணார் கண்ணிக் கரிகால் வளவன்
றாணிழன் மருங்கி லணுகுபு குறுகித்
தொழுதுமுன் னிற்குவி ராயின்"

என முன்னிலைப் பன்மையான் முடித்தது,

"முன்னிலை சுட்டிய வொருமைக் கிளவி
பன்மையொடு முடியினும் வரைநிலை யின்றே
யாற்றுப்படை மருங்கிற் போற்றல் வேண்டும்"

என்னும் எச்சவியற் சூத்திர விதிபற்றி யென்பது. இங்ஙனம் பொருநர், பாணர், விறலியர் என்றிவரை யாற்றுப்படுத்தற்கு விதி,

" கூத்தரும் பாணரும் பொருநரும் விறலியு
மாற்றிடைக் காட்சி யுறழத் தோன்றிப்
பெற்ற பெருவளம் பெறாஅர்க் கறிவுறீஇச்
சென்றுபய னெதிரச் சொன்ன பக்கமும் "

என்பது. இதன்கண், " ஆசிரிய நடைத்தே வஞ்சி " என்பதுபற்றி வஞ்சி மிகவும் வந்தன. இது பரிசில் வேண்டிய பொருநனைப் பரிசில் பெற்றானொருவன் அது வழங்குதற்குரியான் இன்னனென்று ஆற்றுப் படுத்தலின், மக்கட் பகுதியாகிய பாடாண் பாட்டென்று உணர்க.

(௩) சிறுபாணாற்றுப்படை—இது ஏறுமாநாட்டு நல்லியக்கோடனை இடைக்கழிநாட்டு நல்லூர் நத்தத்தனார் பாடியது. பரிசில்பெறவேண்டிய பாணனொருவனைப் பரிசில்பெற்றானொருவன் ஏறுமாநாட்டு நல்லியக்கோடன்பால் ஆற்றுப்படுத்துதலைப் பொருளாகக் கொண்டது. பாணனெனினும், பாடுவோனெனினும் ஒக்கும். பாணர்-இசைப்பாணர், யாழ்ப்பாணர், மண்டைப்பாணர் எனப் பலதிறத்தர். இப்பாட்டில்,

" பொன்வார்ந் தன்ன புரியடங்கு நரம்பி
னின்குரற் சீறியா ழிடவயிற் றழீஇ
நைவளம் பழுநிய நயந்தெரி பாலை
கைவல் பாண்மகன் கடனறிந் தியக்க
வியங்கா வையத்து வள்ளியோர் நசைஇத்
துனிகூ ரெவ்வமொடு துயராற்றுப் படுப்ப
முனிவிகந் திருந்த முதுவா யிரவல "

என வருதலின், இவன் யாழ்ப்பாணனென அறிக. இப்பாட்டு நல்லியக்கோடன் விதரணமும், அவன் நகர்களின் வளமும், அவன் அரண் சிறப்பும், அவன் கொலுவீற்றிருப்பும், எழுவகை வள்ளல்களின் வரலாறும், பிறவும் மீக்கூறும். இது பரிசில் வேண்டிய பாண்மகன் ஒருவனைப் பரிசில்பெற்றானொருவன் அது வழங்குதற்குரியன் இன்னனென்று ஆற்றுப்படுத்தலின், மக்கட்பகுதியான பாடாண்பாட்டென்று அறிக.

(௪) பெரும்பாணாற்றுப்படை—இது தொண்டைமான் இளந்திரையனைக் கடியலூர் உருத்திரங்கண்ணனார் பாடியது; பரிசில் வேண்டிய பாணனொருவனைப் பரிசில் பெற்றானொருவன் தொண்டைமான் இளந்

திரையனிடத்து ஆற்றுப்படுத்தியதைப் பொருளாக வுடையது. இவன் தொண்டைக் கொடியால் யாத்து விடப்பட்டுத் திரையால் தரப்படுதலின், தொண்டைமான் இளந்திரையன் எனப்பட்டான். அது,

"இருநிலங் கடந்த திருமறு மார்பின்
முந்நீர் வண்ணன் பிறங்கடை யந்நீர்த்
திரைதரு மரபி னுரவோ னும்பல்"

என இப்பாட்டுள் வருதலான் அறிந்துகொள்க. 'புறங்கடை'யெனப் பாடம் ஓதுவாரு முளர். இப்பாட்டுத் தொண்டைமான் இளந்திரையன் நாட்டு நானில ஐந்திணைப் பகுதிகளின் நீர்மையும், அவன் காஞ்சிநகர் வீற்றிருப்பும், வண்மையும் மீக்கூறும். மேலதைச் சிறுபாணாற்றுப் படை என்றும் இதனைப் பெரும்பாணாற்றுப்படை என்றும் வழங்கினர், அடிகளின் சிறுமை பெருமை நோக்கி யென்க. இது பரிசில் வேண்டிய பாண்மகனொருவனைப் பரிசில் பெற்றானொருவன் அது வழங்குதற்குரியன் இன்னனென்று ஆற்றுப்படுத்தலின், மக்கட்பகுதி யான பாடாண்பாட்டென் றறிக.

(ரு) முல்லைப் பாட்டு—இது காவிரிப்பூம்பட்டினத்துப் பொன்வணிகனார் மகனார் நப்பூதனார் பாடியது; தலைமகள் பகைமேற்சென்ற தலைவன் வருங்காறுங் கற்பாற்றி யிருந்தாட்குத் தலைமகன் வந்ததுகண்ட தோழிமுதலிய வாயில்கள் தம்முட் கூறுதலைப் பொருளாக வுடையது. இது தலைவி தனித்திருக்கும் பெற்றியுங் கார்ப்பெற்றியும் பகைவர் துயர்ப்பெற்றியுந் தலைமகன் விறலும் மீக்கூறும்.

"செலவிடை யழுங்கல் செல்லாமை யன்றே
வன்புறை குறித்த றவிர்ச்சி யாகும்"

என்ற தொல்காப்பியர் கருத்திற்கேற்ப நப்பூதனார் இச்செய்யுள் செய்தார் என்றுணர்க. இது அன்புறு தகைப்பாட்டியான தலைவியை வன்புறை குறித்துப் பிரிதலொழுக்கங் கூறுதலின், கற்பென்னுங் கைகோண் மேலதாய் முல்லைபற்றி யெழுந்த பாலைப்பாட்டென்று உணர்க.

(சு) மதுரைக்காஞ்சி.—இது மாங்குடிமருதனார் தலையாலங்கானத்துச் செருவென்ற பாண்டியன் நெடுஞ்செழியனைப் பாடியது. வீடுபேறு குறித்து நிலையாமை செவியறிவுறுத்தலைப் பொருளாக வுடையது. இது பாண்டியன் முன்னோர் பெருமையும், பாண்டிநாட்டின்கணுள்ள

நானில ஐந்திணை வளனும், மதுரைமாநகர்ச் சிறப்பும், அவன் வீரமும், பிறவும் மீக்கூறும். இது நெடுஞ்செழியற்கு வீடுபேறு ஏதுவாகச் சான்றோர் பல்வேறு நிலையாமை அறைதல் உணர்த்துதலின், பெருந்திணைப் புறனுயெழுந்த காஞ்சிப் புறப்பாட்டென்று உணர்க.

(எ) நெடுநல்வாடை—இது பாண்டியன் நெடுஞ்செழியனை மதுரைக் கணக்காயனார் மகனார் நக்கீரனார் பாடியது; கொற்றவையைப் பரவுவாள், செருவென்ற பாண்டியன் நெடுஞ்செழியனைத் தணந்து வருந்துந் தலைவிக்கு வருத்தந்தீரிய உன்தலைவன் பகைவென்று விரைந்து வருகவென்று பரவுதலைப் பொருளாக வுடையது. இது கூதிர்க்கால இயல்பும், தமியளானதலைவி வருத்த மிகுதியும், படைவீட்டில் தலைவனிருக்கும் இயல்பும் மீக்கூறும். இது நெடுஞ்செழியன் மண்ணசையாற் சென்று பொருதலின், முல்லைப் புறனுயெழுந்த வஞ்சிப்புறப் பாட்டென்றும் வஞ்சிக்குக் கொற்றவை நிலையுண்மையின், இதன்கண் கொற்றவையை வெற்றிப் பொருட்டுப் பரவினுளென்றும் உணர்க.

(அ) குறிஞ்சிப்பாட்டு-இது கபிலர் ஆரியவரசன் பிரகத்தனைத் தமிழ் அறிவுறுத்தற்குப் பாடியது. தலைவியினது வேற்றுமை கண்டு வருந்திய செவிலிக்குப் பாங்கி அறத்தொடுநிற்றலைப் பொருளாக வுடையது. இது மலைவளனும், இல்லறநெறியும், தம்பதி தம்முட் பேணும் அன்பின் நீர்மையும், கற்பின் சிறப்பும் மீக்கூறும். இது களவென்னுங் கைகோள்பற்றியெழுதலிற் குறிஞ்சிப்பாட்டென்று உணர்க.

(கூ) பட்டினப் பாலை—இது சோழன் கரிகாற் பெருவளத்தானைக் கடியலூர் உருத்திரங்கண்ணனார் பாடியது. வேறுபுலஞ்சேறல் நாடிய தலைவன் தலைவியைப் பிரிந்து வாரேனென்று தன்னெஞ்சுக்குச் செலவழுங்கிக் கூறுதலைப் பொருளாக வுடையது. இது சோணுட்டினையும், காவிரியையும், காவிரிப்பூம்பட்டினத்தையும், ஆண்டுவைகுங் கரிகாற் பெருவளத்தான் பெருவிறலையும், அவன் செங்கோலினையுஞ் சிறப்பித்து உரைக்கும். இது அன்புறு கற்பாட்டியான தலைவியை வன்புறை குறித்துப் பிரிதலொழுக்கங் கூறுதலின், கற்பென்னுங் கைகோண் மேலதாய் எழுந்த பாலைப்பாட்டென்று உணர்க.

(கய) மலைபடுகடாம்-இது இரணியமுட்டத்துப் பெருங்குன்றூர்ப் பெருங்கௌசிகனார் பல்குன்றக்கோட்டத்துச் செங்கண்மாத்துவேள்

நன்னன்சேய் நன்னனைப் பாடியது. இது பரிசில்பெறச் சமைந்த கூத்தனொருவனைப் பரிசில்பெற்றானொருவன் அன்னனிடத்து ஆற்றுப் படுத்தியதைப் பொருளாக வுடையது. இவ்வாற்றான் இதனைக் கூத்தர் ஆற்றுப்படையெனவும் வழங்குப. இது நன்னன்பாற்செல்லும் வழி யின் இயல்பும், அவ்வழியிடத்துள்ள உணவின்திறனும், அவன் மலை இயல்பும், சோலையியல்பும், வண்மையும், ஆற்றலும், சுற்றத்தொழுக்க மும், நாளோலக்கமும், மற்றவன் நவிரமென்னுமலையில் வீற்றிருக்குங் காரியுண்டிக்கடவுண் மகிமையும், அவன் முன்னோர் பெருமையும் மீக் கூறும். மலையை யானைக்கும் மலையோசையை அதன் கடாத்திற்கும் ஒப்பித்து, மலைபடுகடாமென்று இப்பாட்டிற்குப் பெயர் கூறியவாறு இதனுட் காண்க. இது பரிசில் பெறவேண்டிய பொருநனொருவனைப் பரிசில் பெற்றானொருவன் அது வழங்குதற்குரியான் இவனென்று நன்னனிடத்து ஆற்றுப்படுத்தலின், மக்கட்பகுதியாகிய பாடாண்பாட் டென்று உணர்க.

பத்துப்பாட்டிற்கு மதுரையாசிரியர் பாரத்துவாசி நச்சினார்க்கினி யர் உரையியற்றினர். இவ்வுரை, பத்துப்பாட்டின் பதப்பொருள் மிகத் தெளித்துப் பாட்டின் உட்கோள் இனிதுவிளக்கிச் சிறப்புமிக வுறுகின்றது. பத்துப்பாட்டாசிரியர்கள், ஆண்டாண்டு மாட்டேற்று உறுப்பான் யாத்த தொடர்களை உரையாசிரியர் யாற்றொழுக்காக்கிப் பொருள் புலப்படுத்தும் வித்தகம் கல்வித்துறைபோய சொல்விற் பன்னர்கள் மிகவியந்து ஏத்தற்பாலது.

## எட்டுத் தொகை

நற்றிணை, குறுந்தொகை, ஐங்குறுநூறு, பதிற்றுப்பத்து, பரி பாடல், கலித்தொகை, அகநானூறு, புறநானூறு என்பன எட்டுத் தொகையாம்.

(க) நற்றிணை—இது கபிலர் முதல் ஆலங்குடி வங்கனார் இறுதியா னோரால் இயற்றப்பட்டது. இதன் கடவுள் வாழ்த்துச் செய்தார் பாரதம்பாடிய பெருந்தேவனார். கடவுள் வாழ்த்து உளப்பட ஒன்று தலையிட்ட நானூறு செய்யுளுடையது. அகப்பொருட் பகுதிகளை மிகத் தெளித்துரைப்பது. இது தொகுப்பித்தான் பன்னாடுதந்த பாண்டியன் மாறன்வழுதி.

(உ.) குறுந்தொகை-இது திப்புத்தோளார் முதல் அம்மூவனார் இறுதியானோரால் இயற்றப்பட்டது. இதன் கடவுள் வாழ்த்துச் செய்தார் பாரதம்பாடிய பெருந்தேவனார். கடவுள் வாழ்த்துளப்பட இரண்டு தலையிட்ட நானூறு செய்யுளுடையது. இது அகப்பொருட்பகுதிகளை மிகத் தெளித்துரைப்பது. இத்தொகை முடித்தான் பூரிக்கோ. இத்தொகையின் முன்னூற்றெண்பத்திரண்டு செய்யுட்களுக்குப் பேராசிரியர் உரைகண்டாரென்பதும், ஏனை இருபது செய்யுட்களுக்கு நச்சினார்க்கினியர் உரைகண்டாரென்பதும்,

"நல்லறி வுடைய தொல்பே ராசான்
கல்வியுங் காட்சியுங் காசினி யறியப்
பொருடெரி குறுந்தொகை யிருபது பாட்டிற்
கதுபொரு ளென்றவ னெழுதா தொழிய
விதுபொரு ளென்றதற் கேற்ப வுரைத்தும்"

என்று நச்சினார்க்கினியர் உரைச்சிறப்புப் பாயிரத்தான் அறியப்படும்.

(ங.) ஐங்குறுநூறு—இதன் கடவுள்வாழ்த்துச் செய்தார் பாரதம் பாடிய பெருந்தேவனார். முதல்நூறு செய்தார் ஓரம்போகியார். இரண்டாம்நூறு செய்தார் அம்மூவனார். மூன்றாம்நூறு செய்தார் கபிலர். நாலாம்நூறு செய்தார் ஓதலாந்தையார். ஐந்தாம்நூறு செய்தார் பேயனார். இது மருதம்முதல் முல்லையீறாக ஐந்திணைகளையும் பொருளாகவுடைய தென்பது,

"மருதமோ ரம்போகி நெய்தலம் மூவன்
கருதுங் குறிஞ்சி கபிலர் - கருதிய
பாலையோ தல்லாந்தை பன்முல்லை பேயனே
நூலையோ தைங்குறு நூறு".

என்பதனானறிக. இது தொகுத்தார் புலத்துறை முற்றிய கூடலூர்க் கிழார். தொகுப்பித்தான் யானைக்கட்சேய் மாந்தரஞ்சேரலிரும் பொறை.

(ச) பதிற்றுப்பத்து—இது பப்பத்தாகச் சங்கப்புலவர் பதின்மர் சேரவேந்தர் பதின்மரைப் பாடியது. இதுபற்றியே இத்தொகை பதிற்றுப்பத்தென வழங்கப்படுகின்றது.

(ரு) பரிபாடல்—இது ஒருவகைப் பாவிசேடமாய் நூலுக்குப் பெயராயிற்று. இது எழுபது பாக்களை யுடையதாய் முறையே திருமால், செவ்வேள், கார்கோள், வையை, மதுரை மேலதாதல்,

“ திருமாற் கிருநான்கு செவ்வேட்கு முப்பத்
தொருபாட்டுக் கார்கோளுக் கொன்று - மருவினிய
வையையிரு பத்தாறு மாமதுரை நான்கென்ப
செய்யபரி பாடற் றிறம் ”

என்பதனான் அறிக.

(சு) கலித்தொகை—இஃது இயற்றினர் ஆசிரியர் நல்லந்துவனர். அது “ புரிவுண்ட புணர்ச்சியுள் ” என்னும் நெய்தற் கலியுரையில்

“ ‘ சொல்லொடுங் குறிப்பொடு முடிவுகொ ளியற்கை
புல்லிய கிளவி யெச்சமாகும் ’

என்பதனாற் சொல்லெச்சமுங் குறிப்பெச்சமுமாகத் தம்பேரறிவு தோன்ற ஆசிரியர் நல்லந்துவனர் செய்யுட் செய்தார் ” என்று நச்சினார்க்கினியர் எடுத்தோதிய வாற்றானறிக. இது நல்லந்துவர் ஒருவராற்றானே இயற்றப்படினும், கலியின் பகுதிகள் ஒருவயிற் சேர்தலின் தொகை யெனப்பட்டது. இது நூற்றைம்பது கலிப்பாக்களை யுடையது. முறையே பாலை, குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல் என்னும் ஐந்திணைப்பொருளும் அறிவுறுப்பது. இதற்கு நல்லுரைகண்டார் நச்சினார்க்கினியர். நச்சினார்க்கினியர்,

“ ஒலித்திரைத் தலத்தி னுணர்ந்தோ ருரைக்குங்
கலித்தொகைக் கருத்தினைக் காட்சியிற் கண்டதற்
குள்ளுறை யுவமமு மேனை யுவமமுந்
தெள்ளிதிற் றெரிந்து திணைப்பொருட் கேற்ப
வுள்ளுறை யுவமத் தொளித்த பொருளைக்
கொள்பவர் கொள்ளக் குறிப்பறிந் துணர்த்தி
யிறைச்சிப் பொருளுக் கெய்தும் வகையைத்
திறப்படத் தெரிந்து சீர்பெறக் கொளீஇத்
துறைப்படு பொருளொடு சொற்பொருள் விளக்கி
முறைப்பட வினையை முடித்துக் காட்டிப்
பாட்டிடை மெய்ப்பாடு பாங்குறத் தெரித்துப்
பாற்பட நூலின் யாப்புற வுரைத்த

நாற்பெயர் பெயரா கடப்பக் கிடத்திப்
போற்ற வின்னுரை பொருள்பெற விளம்பிய ''

மதிநுட்பம், புலவருள்ளங் கவர்ந்துகொள்ளும் மேதகவு மிகவுடைத்து.

(எ) அகநானூறு-இதன் கடவுள்வாழ்த்துப் பாடினர் பாரதம்பாடிய பெருந்தேவனர். ஏனைச் செய்யுட்கள் மாமூலனர்முதல் உலோச்சனர் ஈறுனரால் இயற்றப்பட்டன. ஒன்று தலையிட்ட நானூறு அகவற் பாக்களை யுடையது. அகப்பொருட் பகுதிகளை மிகத் தெளித் துரைப்பது. இதன் முதற்கணுள்ள நூற்றிருபது பாக்கள் களிற்றி யானை நிரையெனவும், இடைக்கணுள்ள நூற்றெண்பது பாக்கள் மணிமிடைபவளமெனவும், இறுதிக்கணுள்ள நூறுபாக்கள் நித்திலக் கோவை யெனவும் வழங்கப்படும். இது தொகுத்தான் மதுரை உப்பூரிகுடிகிழார் மகனுவான் உருத்திரசன்மன். தொகுப்பித்தான் உக்கிரப் பெருவழுதி. இது அகமெனவும், அகப்பாட்டெனவும், நெடுந் தொகையெனவும் வழங்கப்படும்.

(அ) புறநானூறு—இதற்குக் கடவுள்வாழ்த்துப் பாடினர் பாரதம் பாடிய பெருந்தேவனர். ஏனைச் செய்யுட்கள் செய்தார் முரிஞ்சியூர் முடிநாகராயர்முதற் கோவூர்க்கிழார் இறுதியாயுள்ளார். இது நானூறு அகவற்பாக்களையுடையது. இது புறப்பொருட் பகுதிகளை மிகத் தெளித்துரைப்பது. இது புறமெனவும் புறப்பாட்டெனவும் வழங் கப்படும்.

## கல்லாடம்

இது கல்லாடனரால் இயற்றப்பட்டு அப்பெயர்த்தாயிற்று. விநாயகக்கடவுள் வாழ்த்து, முருகக்கடவுள் வாழ்த்துளப்பட நூற்றிரண்டு அகவற்பாக்களுடையது. அகப்பொருட் பகுதிகளை மிகத் தெளித்துரைப்பது.

“ கல்லாடர் செய்பனுவற் கல்லாட நூறுநூல்
வல்லார்சங் கத்தில் வதிந்தருளிச் - சொல்லாயு
மாமதுரை யீசர் மனமுவந்து கேட்டுமுடி
தாமசைத்தார் நூறு தரம்''

என்னும் முன்னோர்செய்யுள் இதன் பெருமைக்கு உறுசான்றும். இந்நூற்கு மயிலேறும்பெருமாள் பிள்ளை எழுதியவுரை முப்பத்தேழு அகவன் மாத்திரையின் விளக்கமுறுகின்றது.

இன்னும் பெருந்தேவனார் பாரதம், தகடூர் யாத்திரை முதல் கடைச்சங்க இலக்கியம் பிறவுமுள.

### பதினெண் கீழ்க்கணக்கு

பதினெண் கீழ்க்கணக்கின் வகை :

“ நாலடி நான்மணி நானாற்ப தைந்திணைமுப்
பால்கடுகங் கோவை பழமொழி - மாமூல
மின்னிலைய காஞ்சியுட னேலாதி யென்பவே
கைந்நிலைய வாங்கீழ்க் கணக்கு ”

என்பதனான் அறிக. ‘ இன்னிலைசொல்காஞ்சி ’ என்பதூஉம் பாடம்.

## (ங) காவிய இலக்கியம்

தமிழ்க்காவியம் சிந்தாமணி, சிலப்பதிகாரம், மணிமேகலை, குண்டலகேசி, வளையாபதி, சூளாமணி, இரகுவமிசம், நைடதம் முதற் பலவுள. இக்காவியங்கள் தொல்காப்பிய இயல்வழிப்பட்டு மேற் கூறிய சங்கத்தமிழ்ச் சொற்பிரயோகம் பெரும்பாலும் மருவி நவ ரசங்களுட் சிலவும் பலவுந் தங்கண் அடங்கக்கொண்டு உலகவியல், நீதி, வைராக்கியம் முதலியவைகளை நன்று அறிவுறுத்துவன.

### சிந்தாமணி

இது சைனகாவியம். இந்நூலாசிரியர் சைனமுனிவரான திருத் தக்கதேவர். இவர் சைவராயிருந்து ஆருகதராயினரென்பர் சிலர். அது பொருந்தாமை “ வைதிககாவிய தூடணமறுப்பிற் ” காண்க. இக் காவியத்தலைவன் சீவகனென்னும் ஓரரசன். இக்காவியம் அவன் பிறப்பு எழுவாயாகக் கதிகூடியது இறுவாயாகவுள்ளகதை கூறுவது. இது கடவுள் வாழ்த்து, அவையடக்கம், பதிகமென்பவற்றோடு நாமகள் இலம்பகம், கோவிந்தை யிலம்பகம், காந்தருவதத்தை யிலம்பகம், குணமாலை யிலம்பகம், பதுமை யிலம்பகம், கேமசரி யிலம்பகம், கனகமாலை யிலம்பகம், விமலை யிலம்பகம், சுரமஞ்சரி யிலம்பகம், மண்மகளிலம்பகம், பூமகளிலம்பகம், இலக்கணை யிலம்பகம், முத்தி யிலம்பகமென்னும் பதின்மூன்று இலம்பகங்களுடைத்து.

கடவுள் வாழ்த்து— சித்தசரணம், அருகசரணம், சாதுசரணம், தன்மசரணம் நுதலுவது.

பதிகம்— சீவகன் கதையைத் தொகுத்துக் கூறுவது.

நாமகள் இலம்பகம்—சச்சந்தன் ஏமாங்கத நாட்டில் இராசமாபுரத்தில் உதித்துச்செங்கோல் செலுத்தி விசையையென்னும் பட்டத்தரசி காமக்கடற்படிந்து கட்டியங்காரனென்னும் அமைச்சனை அரசு நடாத்த நிறுவி அவனாற் கொலையுண்டதூஉம், சீவகன் அவனுக்கு அவன் மனைவி விசையைபாற் றோன்றித் தெய்வத்திறத்தான் உய்ந்து வளர்ந்து பலகலைகற்று நிலவியதூஉம் கூறுவது. இது சீவகன் நாமகளைக் கூடிய வரலாறு தெரித்தலின், நாமகள் இலம்பகமென்றாயிற்று. நாமகளைக் கூடினதென்றது அவன் கலைப்பயிற்சி தலைக்கூடியதென்றவாறும்.

கோவிந்தை இலம்பகம்—சீவகன் நிரைமீட்டு வெற்றிமாலைசூடித் தன்தோழன் பதுமுகனுக்குக் கோவிந்தையென்னும் நந்தகோபன் மகளை மணஞ்செய்வித்த வரலாறு கூறுவது.

காந்தருவ தத்தை இலம்பகம்—சீவகன் வித்தியாதர வேந்தனான கலுழவேகன்மகள் காந்தருவ தத்தையை வீணையால் வென்று அவளது மணமாலைசூடி, அதுபொறாத அரசரைப் போரிற் புறங்கண்டு அவளை மணந்த வரலாறு கூறுவது.

குணமாலை இலம்பகம்—சீவகன், பொழிலாட்டிற் குணமாலையின் சுண்ணம் புகழ்ந்து அவள் அசனிவேகமென்னும் கட்டியங்காரன் பட்டக்களிறு கோட்பட்டுழி அதன் எதிரேறிச் செருக்கடக்கி விலக்கி அவளை மணஞ்செய்த வரலாறு கூறுவது.

பதுமை இலம்பகம்—சீவகன் சுதஞ்சணனென்னுந் தேவனாற் கட்டியங்காரன் யாப்புறுத்த காவலில் தப்பிப் பல்தேய யாத்திரை போந்து பல்லவதேயத்துச் சந்திராப நகர்க்கு அரசனான தனபதிமகள் பதுமையைப் பாப்புவிடமகற்றி அவள் அன்பிற் கோப்புண்டு அவளை மணந்த வரலாறு கூறுவது.

கேமசரி இலம்பகம்—சீவகன் தக்கநாட்டிலுள்ள கேம மாபுரம் புக்கு அந்நகர் வணிகன் சுபத்திரன் மகள் கேமசரி ஆடவற்பேணாளை ஆண்மையிற் பேதுறுத்து மணஞ்செய்த வரலாறு கூறுவது.

கனகமாலை இலம்பகம்—சீவகன் மத்திம தேயத்து ஏம மாபுரமெய்தி அப்புராதிபனான தடமித்திரன் குமாரர்க்கு விற்கலை கற்பித்து

அவ்வித்தகங் காரணமாக அவன் மகள் கனகமாலையைக் கலியாணஞ் செய்த வரலாறு கூறுவது.

விமலை இலம்பகம்—சீவகன் தண்டகாரணிய மெய்தித் தாய் விசையையைத் தரிசித்து அவள் வரம்பெற்றுத் தன்னகர் ஏமாங்கத நாட்டு இராசமாபுரத்தின் ஓர்பாற் செல்லுழி ஆண்டுள்ள சாகரதத்தன் மகள் விமலை கண்வலைப்பட்டு அவளை மணந்த வரலாறு கூறுவது.

சுரமஞ்சரி இலம்பகம்—சீவகன், தன்சுண்ணம் பழித்தலிற் பரிந்து ஆடவர்ச் சினந்து அவர்க்கூடல் ஓம்பேன் என்று விரதஞ் சாதித்தாள் சுரமஞ்சரியை வேடமறைந்து புக்குக் கீதநாடகங் காட்டி மயக்கி வதுவையாற்றிய வரலாறு கூறுவது.

மண்மகள் இலம்பகம்—சீவகன் மறலியை வரவழைத்தல் போலத் தன்மாமனை வரவழைத்த கட்டியங்காரன் ஓலைகண்டு அவற் பொருது கோறற்கு இது வாய்த்தபொழுதென்று எண்ணித் தம்பியர் தோழர் தம்மோடுகூடி நால்வகைப் படையமைந்து போந்து இராசமாபுரத்து ஓர்பால் வைகியதூஉம், மாதுலன் கோவிந்தன் சூழ்ச்சி வலையின் வந்தகப்பட்ட கட்டியங்காரனென்னும் மதக்களிற்றின்முன் சிங்கவேறுபோல வெளிநின்று அவன் படையறப்பொருது அவற் கொன்று மண்மகளுரிமை எய்தியதூஉம் கூறுவது.

பூமகள் இலம்பகம்—சீவகன் இராசமாபுர அரண்மனை புகுந்து, வேத்தவை சார்ந்து, சிங்காதனமேறி, மணிமுடிசூடி, மன்பதை புரந்த வரலாறு கூறுவது.

இலக்கணை இலம்பகம்—சீவகன் காந்தருவதத்தை, குணமாலை முதலிய தேவிமாரோடு பதுமை முதலிய தேவிமாரையும் இராசமாபுரத்து அரண்மனையிற் றலைக்கூட்டி, தன்மாமன் மகள் இலக்கணையை மணந்து, இம்மாதராரோடு இன்புற்றிருந்து அரசாண்டு, தற்புரந்தார்க்கெல்லாம் வளனும் வரிசையுமுதவி, அங்கண்மாஞாலம் உவப்பச் செங்கோல் செலுத்திய வரலாறு கூறுவது.

முத்தி இலம்பகம்—சீவகன் தத்தை முதலிய உத்தம பத்தினிமார் வயின் சற்புத்திரர்ப்பெற்றுச் சோலைவிளையாட்டின் மேவி ஆட்டயர்ந் திருப்புழி, கடுவன்குரங்கு தன்காதன் மந்திக்குப் பொற்றிரளென்ன் வயங்கும் பலாவின் நற்சுளைகீறி நல்காநிற்பச் சோலைகாப்பான்

போந்து அக்கனியைக் கவர்ந்து கடுவனை மந்தியோடோட்டிச் சிந்தை மகிழ்ந்துண்பது கண்டு, வெறுக்கையில் வெறுக்கைவைத்து, "கைப் பழமிழந்த குரங்கு நாடுகாவலிழந்த கட்டியங்காரனை யொத்தது; இக்காவலன் அவனைக்கொன்று அரசினையெய்திய என்னையொத்தான்; வலியார் வசத்ததாய் மாறிமாறிச் செல்லும் மாண்பிற்றாய அரசு போற்றேன் என்று துறந்து அருகன் திருவடியடையும் அறம்பேணிக் கதியடைந்த வரலாறு கூறுவது.

இதற்கு நல்லுரைகண்டார் மதுரையாசிரியர் பாரத்துவாசி நச்சி னார்க்கினியர். இவ்வுரை செய்யுட்களின் பொழிப்புத்திரட்டிச் சொன் முடிபு விளக்கி மேற்கோள்காட்டிப் பொருள்நுட்பந் தெளித்துக் கவி இருதயந்தோற்றிச் சிந்தாமணிக்கு நந்தா விளக்காம்.

## சிலப்பதிகாரம்

இது முத்தமிழ் இலக்கியமான ஓர் சைனகாவியம். கடைச்சங் கத் தமிழ்ப்புலவரான சீத்தலைச்சாத்தனார் உளப்பாடுகொண்டு இளங் கோவடிகளியற்றி அவரைக் கேட்பித்த காவியமென்பது, இந்நூற் பதிகத்தான் உணரப்படும். காவியத்தலைவன் கோவலன். கோவலன் கண்ணகி யென்பாளைவேட்டு இல்லறஞ் செய்யுநாளில் மாதவியென்னும் நாடகக்கணிகையின் மயல்கோட்பட்டுச் செல்வமிழந்து தமரறிவுறாமே தன்மனைக்கிழத்தியாகிய கண்ணகியோடு மதுரைமாநகரை யெய்தி ஆண்டிருந்து பொருள்செயல்வேண்டிக் கடிமனைக்கிழத்தி அடிமணிச் சிலம்பு விற்பான்புக்கு ஆண்டைத் தட்டானொருவன் சூழ்ச்சிவலையிற் பட்டானாய்ப் பாண்டியன் காவன்மீளியர் வாளிற்கு இலக்காகிய வண்ண மும், கண்ணகி காதற்கொழுநன் வாளிற்கு இலக்காகிய கடுந்துயரால் மதுரை தீயிட்ட வண்ணமும், கோவலனை மலைநாட்டுத் திருச்செங் குன்றில் தெய்வவடிவிற்கண்டு தலைக்கூடிச் சுவர்க்கம்புக்க வண்ண மும், செங்குட்டுவன் அவ்வதிசயங்கேட்டு அவட்குக் கோவில்கண்டு அவளுருப் பதிட்டைசெய்து வழிபட்ட வண்ணமும், பிறவும் கூறும். இக்கதை புகார்க்காண்டம், மதுரைக்காண்டம், வஞ்சிக்காண்டமென மூன்று வகைப்படுத்துக் கூறப்படும். இது சிலம்பை முக்கிய விடய மாகக் கொண்டெழுந்த காவியமாகலின், சிலப்பதிகாரமெனப்பட்டது. இதன் புகார்க்காண்டம் மதுரைக்காண்டங்கட்கு நல்லுரைகண்டார்

அடியார்க்கு நல்லாரென்பவர். அடியார்க்குநல்லார் முத்தமிழ் இலக்கணமரபு வழாது சொற்றிறம் பொருட்டிறம் விளங்க உற்றுநாடி இதற்கு உரை உலகமுவப்ப எழுதினர்.

## மணிமேகலை

இது மதுரைக்கூலவாணிகன் சாத்தனர் இயற்றிய ஒரு பௌத்த காவியம். இக்காவியத்தலைவி மாதவிமகள் மணிமேகலையாகலின் அப்பெயர்த்தாயிற்று. இது மணிமேகலை தந்தையாகிய கோவலற்குந் தாயாகிய கண்ணகிக்கும் முந்தையூழ் வினைப்பயன் விளைந்த முறை கேட்டு வைராக்கியமெய்தித் துறந்து தவத்திறம்பூண்டு புத்ததருமங் கேட்டுப் பவத்திறம் அறுகென நோற்றதைப் பொருளாகவுடையது. இது விழாவறைகாதை, ஊரலருரைத்தகாதை, மலர்வனம்புக்ககாதை, பளிக்கறைபுக்ககாதை, மணிமேகலாதெய்வம் வந்து தோன்றியகாதை, சக்கரவாளக்கோட்ட முரைத்தகாதை, துயிலெழுப்பியகாதை, மணிபல்லவத்துத் துயருற்றகாதை, பீடிகைகண்டு பிறப்புணர்ந்தகாதை, மந்திரங்கொடுத்தகாதை, பாத்திரம்பெற்றகாதை, அறவணர்த்தொழுதகாதை, ஆபுத்திரன்திறமறிவித்தகாதை, பாத்திரமரபு கூறிய காதை, பாத்திரங்கொண்டு பிச்சைபுக்ககாதை, ஆதிரைபிச்சையிட்ட காதை, உலகவறவி புக்ககாதை, உதயகுமரன் அம்பலம்புக்ககாதை, சிறைக்கோட்டம் அறக்கோட்டமாக்கியகாதை, உதயகுமரனை வாளாலெறிந்தகாதை, கந்திற்பாவை வருவதுரைத்தகாதை, சிறைசெய் காதை, சிறைவிடுகாதை, ஆபுத்திரன் நாடடைந்தகாதை, ஆபுத்திரனோடு மணிபல்லவமடைந்தகாதை, வஞ்சிமாநகர் புக்ககாதை, சமயக்கணக்கர் தந்திறங்கேட்டகாதை, கச்சிமாநகர்புக்ககாதை, தவத்திறம் பூண்டு தருமங்கேட்டகாதை, பவத்திறமறுகெனப் பாவைநோற்ற காதையென முப்பான் பகுதித்தாம். அற்றே லஃதாக; பொய்யடிமையில்லாத புலவரான சீத்தலைச்சாத்தனர் இவ்வவைதிக பௌத்த புறச்சமயப் பொருள்பற்றிக் காவியஞ்செய்த தென்னையெனின்,— மணிமேகலை வண்ணங்கண்ட புலவராகலானும், அப்பொழுதைக் காவலர் இது பாடியருளுகவென வேண்டுதலானும், மணிமேகலை யாக்கைநிலையாமை மேலிட்டு வைராக்கியந் தவம் பேணிய வரலாறும் பிறவும் உலகுக்கு உணர்த்தல் வேண்டுமென்னுங் கருத்துத் தம்மைத் தூரத்தலினனும்

சாத்தனர் இது யாத்தனரென்க. மற்றுச் சாத்தனர் பௌத்தம் மெய் யென்று காட்டல்வேண்டி இது யாத்திலரென்பது.

> " நுதல்விழி நாட்டத் திறையோன் முதலாப்
> பதிவாழ் சதுக்கத்துத் தெய்வமீ றாக
> வேறுவேறு சிறப்பின் வேறுவேறு செய்வினை
> யாறறி மரபி னறிந்தோர் செய்யுமின் "

என்று சிவபரத்துவமும் இதனுட் சாத்தனர் எடுத்தோதினர்.

## குண்டலகேசி

இது பௌத்தகாவியம். இந்நூற்செய்யுட்களில் ஓரோவொன்று சிவஞானசித்திப் பரபக்கவுரையிலும் பிறண்டும் உரையாசிரியர்கள் எடுத்தோதிடக் காண்கின்றுமன்றி நூன்முழுதும் வழங்கக் காண் கின்றிலம்.

## வளையாபதி

இதில் ஒவ்வோர் கூறு மேற்கோளாய் முன்னோர் உரைகளில் வந்திடக் காண்கின்றுமன்றி நூன்முழுதும் வழங்கக் கண்டிலம்.

## சூளாமணி

இது சைனகாவியம். தோலாமொழித்தேவர் இயற்றியது. இக் காவியத்தலைவன் பயாபதி. இவன் சங்கவண்ணன் மேகவண்ண னென்னும் புத்திரர் இருவரைப் பயந்தவரலாறும், இவருள் இளையோ னை திவிட்டனென்னும் மேகவண்ணன் மாயச்சீயத்தை வதைசெய்த பராக்கிரம வரலாறும், இரதநூபுர விஞ்சையர் வேந்தன் மகள் சயம் பவையென்னும் பொற்கொடியை வேட்டவரலாறும், அவன் அச்சுவ கண்டன் முதலிய பகைமன்னரைப் போரில் அடர்த்து வென்றிமாலை சூடிய வரலாறும், தன்மகட்குச் சுயம்வரம் நாட்டிய வரலாறும், பயாபதி நிலையாமை நோக்கி அரசுரிமை துறந்து அருகன் அறநெறி தேர்ந்த வரலாறும், அருகசரணுகதி யெய்திய வரலாறும், இது மீக்கூறும்.

## இரகுவமிசம்

இது வைதிககாவியம், ஈழநாட்டு யாழ்ப்பாண நல்லூர்க்கு அரச னை பரராசசேகரன் மருகன் அரசகேசரி இயற்றியது; வடமொழியில்

மகாகவியான காளிதாசர் இயற்றிய இரகுவமிச காவியத்தை மூல மாகவுடையது. காவியத்தலைவர் இரகுபூபதியும் அவன் வழித்தோன் றல்களும். இது சூரியகுலத்திற் பிறந்த இட்சுவாகு குலத்தோன்ற லான திலீபன் தேனுவழிபாடாற்றி இரகுபூபதியைப் புத்திரனாகப் பெற்றுப் பரிமேதமியற்றிக் கதியடைந்த வரலாறும், இரகு திக்கு விசயங்கொண்ட வரலாறும், அவற்கு மகனாக உதித்த அயன் படை யொடெழுந்து போய்ப் பஃறேய மன்னர் திறைகொண்டு விதர்ப்ப அரசன் மகள் இந்துமதி மாலையிடப்பெற்று அவளைக் கடிமணம் புணர்ந்து அதுபொறாது எதிர்ந்த பகைவேந்தரைப் புறங்கண்டு தன் னகரெய்திய வரலாறும்,இரகுபூபதி கதியுற்றவரலாறும்,இந்துமதி தன் நாயகனோடு சோலை விளையாட்டயர்ந்துழி அந்தரத்தியங்கும் நாரதன் வீணைமீது கிடந்த கற்பகப்பூந்தார் மெய்ப்பட்டுப் பிறப்பு நீங்கிய வர லாறும், அவனுக்கு இந்துமதி வயிற்றிற்றோன்றிய சுந்தரப்புதல்வனான தசரதன் வேட்டம்போய் முனிசாபமேற்ற வரலாறும், அவன் புத்திரவேள்வி புரிந்து சிராமசந்திரன் முதலிய நால்வரையும் பெற்ற வரலாறும், சீதை வனம்புக்க வரலாறும், இலவணன், சம்புகன் வதை யுண்ட வரலாறும், இராமன் பரிவேள்வி செய்த வரலாறும், குசன் அயோத்தி யெய்திய வரலாறும், அவன் நாகராசன் தந்த வாகுவலயங் கொண்டு நாககன்னிகையை மணந்து முடிசூடி உலகாண்ட வரலாறும் பிறவும் எடுத்தோதும்.

## நைடதம்

இது வைதிககாவியம்.இந்நூல்செய்தான் அதிவீரராமபாண்டியன். காவியத்தலைவன் நளச் சக்கிரவர்த்தி. இந்நளோபாக்கியானம் வியாச பாரதத்தில் ஓதப்பட்டது. இது நளன் குணமாட்சியும், அவன் விதர்ப்ப நாட்டரசன் மகள் தமயந்தியைச் சுயம்வரத்தாற் கூடிய வர லாறும், அதுகண்டு பொறாது பொரவெதிர்ந்த சுராதிபரையும் நராதி பரையும் போரிற் புறங்கண்ட வரலாறும், புட்கரனோடு சூதாடி நாடுநகரிழந்து தமயந்தியோடு காடுசென்ற வரலாறும், ஆண்டுத் தீவினையால் அவள் தணந்த வரலாறும், பின் நல்வினையால் அவள் தாதையூரில் அவளைத் தலைக்கூடிய வரலாறும், மீட்டும் அரசுரிமை யெய்திய வரலாறும் நாட்டியுரைக்கும்.

## (ச) புராண இலக்கியம்

கந்தபுராணம், உபதேச காண்டம், வாயுசங்கிதை, பிரமோத்தர காண்டம், காசிகண்டம், கோயிற்புராணம், காஞ்சிப்புராணம், திருத் தணிகைப் புராணம், பிரபுலிங்கலீலை முதற்புராணஇலக்கியங்கள் பல வுள. இப்புராண விலக்கியங்கள், தொல்காப்பிய இயற்றமிழாணை யிற் றூன்றிச் சங்கச்செய்யுட் பிரயோகம் பழைய காவியப் பிரயோ கம் ஆண்டாண்டுப் பொருந்தி வடசொன் மிகவிராய் வேதாகமப் பொருளுட்கொண்டு அலங்காரவகை பலதழீஇ நடப்பனவாம்.

### கந்த புராணம்

இது கச்சியப்ப சிவாசாரியரால் இயற்றப்பட்டது. இது வட மொழிக் காந்தபுராணத்துச் சங்கரசங்கிதையிலுள்ள அறுமுகக் கடவுள் சரித்திரமோதுதலின், கந்தபுராணமெனப்பட்டது. இது உற்பத்திகாண்டம்,அசுரகாண்டம்,மகேந்திரகாண்டம், யுத்தகாண்டம், தேவகாண்டம், தக்ககாண்டமென ஆறு காண்டங்களுடையது. இதன் செய்யுட்கள் பதினுயிரத்தின் மிக்கன. இது அறுமுகக்கடவுள் திரு வவதார வரலாறும், சூரபன்மன் காசிபமுனிவற்கு மாயைபாற் றூன்றி வீரவேள்விசெய்து சிவபிரான்பால் ஆயிரத்தெட்டண்டம் நூற்றெட்டுகங்காறும் ஆளும் பெருவரம்பெற்றுத் தேவரைச் சிறை செய்து அரசுபுரிந்த வரலாறும், அவனை அறுமுகக்கடவுள் பொருது வென்று ஆட்கொண்ட வரலாறும், தேவர் சிறைநீக்கி அவரை விண்குடி யேற்றிய வரலாறும், அறுமுகக்கடவுள் தெய்வயானை, வள்ளிநாயகி திருமணம் புரிந்தருளிய வரலாறும், இந்திரகுமாரனுன சயந்தனுக்கு வியாழப்புத்தேள் அசுரர் சிறைப்பட்டதற்குக் காரணங்கூறிய வர லாறும், பிறவும் கூறும். இது அறுமுகக்கடவுண் மகிமையெல்லாம் அங்கை நெல்லிக்கனிபோல எடுத்து விரித்துரைக்குந் திவ்விய புராண மாய்த் தமிழ்ப் பெருங்காப்பியமாய் நிலவுவது. இதன் செய்யுட்கள் திராட்ச, கதலி, இட்சு, நாளிகேர பாகங்கள் கொண்டன. இது நவி ன்றூறும் நவின்றூறும் நாநயம் பயப்பது; பயின்றூறும் பயின்றூறும் அறுமுகக்கடவுள் திருவடிப் பத்திஞானம் விளைப்பது. கச்சியப்ப சிவாசாரியர் சாலிவாகன சகாப்தம் எழுநூற்றில் இதனையியற்றி அரங் கேற்றினர். அரங்கேற்றுழித் "திகடசக்கர"மென்னுந் தலைச்செய்யுள்

முதற்கண்ணதான 'திகழ்' என்னுஞ் சொல்லிறுதி ழகரந் தகரவல்லெழுத்தின்முன் டகரமாய்த் திரிந்ததற்குவிதி தொல்காப்பியத்தில் இல்லையென்று அவ்வரங்கிலுள்ள புலவரொருவர் தடை நிகழ்த்தினரென்றும் கச்சியப்ப சிவாசாரியர் "இத்தடை நியாயமாயினுங் குமரகோட்டத்தடிகள் அவ்வாறு எடுத்தருளிச்செய்ய நாம் முதற்கொண்டு பாடினமாகலின் இதன்கண் குற்றமாராய்தல் முறையன்று" என்று விடை நிகழ்த்தினரென்றுஞ் சிலர் கூறுப. ஆண்டு ழகரந் தகரத்தின் முன் டகரமாகத் திரிந்தது 'விகட சக்கரன்' என்னும் எதுகை நோக்கியாகலின், அது தொல்காப்பிய விதியாமன்றி விரோதமாகாதென்க. இன்னோரன்ன செய்யுட்டிரிபுகள்,

"கிளந்த வல்ல செய்யுளுட் டிரிநவும்"

என்னும் அதிகாரப் புறனடையால் அமைத்துக் கோடற்பாலனவென்க. இங்ஙனமாகலின், அங்ஙனம் புலவர் தடை நிகழ்த்தினரென்பதூஉம், கச்சியப்ப சிவாசாரியர் இங்ஙனம் விடை நிகழ்த்தினரென்பதூஉம் பொருந்தாமை யறிக. இப்பொருந்தாமையை மேலுந் தடைவிடைகளால் விரிக்கிற் பெருகும்.

## உபதேச காண்டம்

இது சங்கரசங்கிதையின் ஏழாவது காண்டம். சூரன் முதலியோர் முன்னை வரலாறும், விபூதி ருத்திராக்க மகிமைகளும், சிவநாம மகிமையும், பிறவும் எடுத்தோதுவது. இதனை மொழிபெயர்த்துப் பாடினார் கோனேரியப்பர்.

## வாயு சங்கிதை

இது சிவபுராணம் பத்தனுள் முதற்கண்ணதான சைவபுராணத்துள்ளது. சைவபுராணம் வித்தியேசுவர சங்கிதை முதல் வாயு சங்கிதை யீறாகப் பன்னிரண்டு சங்கிதைகளுடைத்து. பன்னிரண்டுள் இறுதிக் கண்ணதாய் நிலவும் இவ்வாயுசங்கிதை குலசேகர வரகுணராமபாண்டியனால் தமிழில் மொழிபெயர்த்துப் பாடப்பட்டது. இது பூர்வகாண்டம், உத்தரகாண்டமென இரண்டு காண்டங்களுடைத்து. இதிற் சிவபரத்துவமும், சிவோபாசனையும், சிவாகம மகிமையும், சிவதீக்கைப் பெருமையும், சைவாசாரியாபிடேகமுறை முதலியனவும் நன்கு உரைக்கப்படும்.

## பிரமோத்தர காண்டம்

இது சிவபுராணம் பத்தனுள் ஓதப்பட்ட பஞ்சாக்கர மகிமை, சிவராத்திரி மகிமை, பிரதோட மகிமை, சோமவாரவிரதமகிமை, சிவயோகி மகிமை, விபூதி மகிமை, உமாமகேசுரபூசை மகிமை, உருத்திராக்க மகிமை, சீருத்திர மகிமை முதலியவைகளை எடுத்துரைப்பது. இதனைத் தமிழின் மொழிபெயர்த்து இயற்றினோன் வரதுங்கராம பாண்டியன்.

## காசி கண்டம்

இது காந்தத்துட்பட்ட காசிகண்ட மகிமை நுதலுவது. பூர்வ காண்டம், உத்தர காண்டமென இரண்டு காண்டங்களுடைத்து. இதில் வாராணசிச் சிறப்பும், கங்கையின் மகிமையும், மகளிர் இலக்கணமும், அவர் கற்பொழுக்கமும், பிரமசரியநெறியும், இல்லறநெறியும், பொது வானவைதிகாசாரமும், யோகவொழுக்கமும், முத்திமண்டப வரலாறும், பிறவும் எடுத்தோதப்படும்.

## கோயிற் புராணம்

இது சிதம்பரமான்மியம் நுதலுவது. கோயிலெனினுஞ் சிதம்பரமெனினும் ஒக்கும். இது வியாக்கிரபாதமுனிவர், பதஞ்சலிமுனிவர் ஆனந்ததாண்டவந் தரிசித்து உய்யல்வேண்டி அருந்தவம் புரிந்தமையும், அவரைப் பரமசிவன் சிற்சபையில் விளங்கி அருள்நடந் தரிசிப்பித்து உய்யக்கொண்டமையும், சிங்கவன்மன் சிவகங்கை மூழ்கி இரணியவன்மனுய் முனிவரிருவர் உபதேசமும் பெற்றுத் தாண்டவங் கண்டு நடராசருக்குத் திருக்கோயிலெடுத்து நித்திய நைமித்திக பூசை விழாச் செய்தமையும், நடராசர் திருவடித் தொழும்பாற்றி மூவுலகும் ஒரு குடைக்கீழாண்டு வீடுபெற்றமையும் எடுத்தோதும். இதனைத் தமிழின் மொழிபெயர்த்துப் பாடியருளினர் உமாபதி சிவாசாரியர். இதன்கண் சைவசித்தாந்த நுண்பொருள்கள் உள்ளுறையாக ஓதப் பட்டன ஆண்டாண்டுப் பலவுள.

## காஞ்சிப் புராணம்

இது காந்தத்துச் சனற்குமார சங்கிதையிற் காளிகாகண்டத்திற் போந்த காஞ்சிமான்மியம் நுதலுவது. இதனைத் தமிழின் மொழி

பெயர்த்துப் பாடினார் ஆசிரியர் சிவஞான யோகிகள். இது சொற் சுருங்கிப் பொருள்விளங்கி நவின்றோர்க்கினிதாய்த் திருமுறைகளி னுஞ் சங்கவிலக்கியங்களினுமுள்ள நன்மொழி புணர்ந்து வேதாகம விழுப்பொருள் பயந்து வைதிகசைவ காவிய அரசாய் வயங்குவது. தொல்காப்பிய இயற்பிரயோகஞ் செய்யுட்கள்தோறுந் துலக்குவது. அகத்திணைமரபும், புறத்திணைமரபும் மிகத் துறைப்படுத்து உரைப்பது. வைதிகசைவ ஒழுக்கம் மெய்பெறக் கிளப்பது. சைவசித்தாந்தத் தனிப் பொருள் செவ்விதிற் றெரிப்பது. பிற்காலத்து நல்லிசைப்புலவர் நாடுநகரச் சிறப்பும், வைதிகசைவ மரபும், சிவசரியை கிரியை யோக ஞானவொழுக்கும், பாடிப் பெருமை பெற்றது, இந்நூலின் நாடுநகரச் சிறப்பும் வைதிகசைவமரபுவாய்பாடுஞ் சரியை கிரியை யோக ஞான வுபதேச நுண்பொருளும் அடிப்படையாகக்கொண்டெனின், இதன் பெருமை அலகிட்டுரைத்தல் புலவர்க்கு எளிதன்று.

திருத்தணிகைப் புராணம்

இது காந்தத்துட்பட்ட சங்கரசங்கிதையின் பிற்கூற்றிற் போந்த தணிகைமான்மியம் நுதலுவது. சொல்லானும் பொருளானுந் தோமற நல்லிசைப்புலவர் நாட்டிய காவியங்கட்கு நடுநாயகமாவது. வைதிக மரபுஞ் சைவமரபும் வல்லவாற்றானெல்லாம் விளக்குவது. புறத் திணையும், அகத்திணையும் புலங்கொளப் போதிப்பது. முருகக்கடவுள் அருள்விளையாடல் முற்றவெடுத்து மொழிகுவது. சரியை கிரியா யோக ஞான நாற்பாதப்பொருளும் பாற்படவெடுத்துப் பகருவது. இதன் செய்யுட்களெல்லாம் இட்சுபாகம், நாளிகேரபாகம் நண்ணி நல்ல சொல்லணியும், பொருளணியும் எல்லையின்றி விளங்க இருப்பன. இஃது இயற்றினார் ஆசிரியர் சிவஞானயோகிகள் முதன்மாணாக்கரான கச்சி யப்ப முனிவர். இந்நூலாசிரியராகிய கச்சியப்பமுனிவர் விநாயகபுரா ணம், பேரூர்ப்புராணம், திருவானைக்காப்புராணம் என்னுஞ் செந்தமிழ் இலக்கியங்களுஞ் செவ்விதின் இயற்றியிட்டார்.

பிரபுலிங்க லீலை

இது உருத்திரன் கூறாய் விளங்கிய அல்லமதேவன் உமையின் கூறாய்விளங்கிய மாயையோடாடி மற்றவள்வலி புறங்கண்ட வரலாறும், வீரசைவ மாகேசுரர்களான சரணர்பலர்க்கு அவன் ஞானோபதேசம்

அருளிய வரலாறும், பிறவும் எடுத்தோதும். இஃது ஓர் ஐக்கியவாத சைவ புராணம். இஃது இயற்றினர் துறைமங்கலச் சிவப்பிரகாச முனிவர். இஃது சொல்லணி, பொருளணி நிரம்பியதோர் நல்ல காவியரத்தினம்.

இன்னுஞ் செந்தமிழ் இலக்கியமாயுள்ள புராணங் கூர்மபுராணம், இலிங்கபுராணம், சூதசங்கிதை, சேதுபுராணம், திருவிளையாடற் புராணமுதற் பலவுள.

## (ரு) இதிகாச இலக்கியம்

இதிகாசங்கள் இராமாயணம், பாரதமென இரண்டாம்.

### இராமாயணம்

இது வடமொழியில் ஆதிகவிராசனென்று உலகம் போற்றும் வான்மீகி யென்னும் முனிபுங்கவனால் இயற்றப்பட்டது. அது தமிழ்ப் புலவரான கம்பனால் தமிழில் மொழிபெயர்த்து அப்பெயரானே பாடப்பட்டது. இது சீராமசந்திரன், தசரதசக்கிரவர்த்தி புத்திரனாய் அவதரித்துச் சீதாபிராட்டியை மணந்தவரலாறும், அச்சீராமசந்திரன் மந்தரை சூழ்ச்சி வழிப்பட்டுக் கைகேசிசெய்த சூழ்வினையான் நாடிழந்து காடுசென்ற வரலாறும், ஆண்டு இலங்கை வேந்தனை இராவணன் மாயம்புணர்த்தெய்திச் சீதாபிராட்டியை வவ்விப்போகத் துயருழந்து கிட்கிந்தை தலைக்கூடிய வரலாறும், ஆண்டு வாலியைக் கொன்று சுக்கிரீவன் நட்பெய்தி அனுமானைத் தூதிற்போக்கிச் சீதாபிராட்டியைத் தேடுவித்த வரலாறும், அனுமான் சீதாபிராட்டியை இலங்கையிற்கண்டு உருக்காட்டிச் சூள்ாமணிநல்கி ஆற்றுவித்து அரக்கரை முருக்கி இராமசந்திரன்பால் மீண்டு சீதைஅறந்தலை நின்றமர்ந்தது கூறிய வரலாறும், இராமசந்திரன் குரக்கரசினத்தோடு படையமைந்து சேதுபந்தனமியற்றி அதன்வழியால் இலங்கை தலைக்கூடி இராவணன் முதலியோரை வதைத்துச் சீதாபிராட்டியைச் சிறையின் நீக்கி மீண்டு அயோத்தி தலைக்கூடித் திருமுடிசூடி உலகாண்ட வரலாறும், பிறவும் கூறும். வடமொழி இராமாயணம் வான்மீகி நவரச புஞ்சமாக இயற்றிய உத்தம காவியமாகலின், கம்பனர் அம்மூல ராமாயணச் சுலோகமதாரம் நன்றுதழீஇ ஒன்பான்சுவையும் ஒன்றினென்று அதிகமென்று இம்பர்மாநிலக்கவிகள் எடுத்தேத்த இஃது

இயற்றியிட்டார். கம்பனார் தமிழ் நன்குணர்ந்த கவிஞர்சிகாமணியாகலின், தமிழ் இராமாயணத்தில் ஆண்டாண்டு நாடுநகர வர்ணனை, பொழில் வர்ணனை, காலவர்ணனைகளும், உலகநீதிகளும், பிறவுந் தாமே மேவரக்கொண்டு கவிகள் செய்திட்டார். இதன் செய்யுள் பெரும்பான்மையான் இட்சுபாகம், நாளிகேரபாகம் நண்ணிநடப்பன. இது வடமொழி இராமாயணம்போலப் பாலகாண்டம், அயோத்தியாகாண்டம், ஆரணியகாண்டம், கிட்கிந்தாகாண்டம், சுந்தரகாண்டம், யுத்தகாண்டமென ஆறு விபாகங்களாகப் பகுக்கப்பட்டுப் பதினாயிரத்தின் மிக்க செய்யுளுடைத்தாய்ப் பெருங்காப்பியமென வழங்கப்படும் பெருமையுடையது. இதன் உத்தரகாண்டம் ஒட்டக்கூத்தரால் தமிழின் மொழிபெயர்த்துப் பாடப்பட்டது. இது இராமசந்திரன் முடிசூடிப் பரிவேள்வியாற்றியதும், பிறவும் கூறும்.

பாரதம்

இது வடமொழி வியாச மாபாரதப் பொருள் நுதலுவது. வில்லிபுத்தூராராலும்,நல்லாப்பிள்ளையாலுந் தமிழின் மொழிபெயர்த்து அப்பெயரால் இயற்றப்பட்டது. இது ஆதிபருவமுதற் சுவர்க்காரோகண பருவம் இறுதியாகப் பதினெட்டுப் பருவங்களுடையது. அவற்றுள் ஆதிபருவம், சபாபருவம், ஆரணிய பருவம், விராடபருவம், உத்தியோக பருவம், வீட்டுமபருவம், துரோண பருவம், கன்ன பருவம், சல்லியபருவம், சௌப்திகபருவ மென்னும் பத்தும் வில்லிபுத்தூராராலும், சீபருவம், சாந்திபருவம், அனுசாசனிகபருவம், அசுவமேதப்பருவம், ஆச்சிரமவாசபருவம், மௌசலபருவம், மகப்பிரத்தானிகபருவம், சுவர்க்காரோகணபருவ மென்னும் எட்டும் நல்லாப்பிள்ளையாலும் மொழிபெயர்க்கப்பட்டன. இது நான்கு வேதார்த்தங்களையுஞ் சரித்திரங்கள் மேலிட்டு அறிவுறுத்தலின், ஐந்தாம் வேதமென வழங்கப்படும். இதன்கண் பலகலைகளின் சாரங்களும் புருடார்த்தங்களும் நன்று வெளியிடப்படும். இதுவுந் தமிழ்ப் பெருங்காப்பியமாகச் சான்றோராற் போற்றப்படுகின்றது.

## (௬) பலவகைப் பிரபந்த இலக்கியம்

கலிங்கத்துப்பரணி,நளவெண்பாப் போலும் முன்னோர் பிரபந்தங்களும், குமரகுருபர முனிவர் இயற்றிய பிரபந்தங்களும், சிவப்பிரகாச

முனிவர் இயற்றிய பிரபந்தங்களும், சிவஞான யோகிகள் இயற்றிய பிரபந்தங்களும், அவர் நன்மாணுக்கர் இயற்றிய பிரபந்தங்களும், இவை போல்வன பிறவுஞ் செந்தமிழ்ப் பிரபந்த இலக்கியங்களாம்.

குமரகுருபர முனிவர் பிரபந்தங்கள் :— திருச்செந்தூர்க் கந்தர் கலிவெண்பா, மீனாட்சியம்மை பிள்ளைத்தமிழ், மீனாட்சியம்மை குறம், மீனாட்சியம்மை இரட்டைமணிமாலை, மதுரைக்கலம்பகம், நீதிநெறி விளக்கம், திருவாரூர் நான்மணிமாலை, முத்துக்குமாரசுவாமி பிள்ளைத் தமிழ், சிதம்பர மும்மணிக்கோவை, சிதம்பரச் செய்யுட்கோவை, சிவகாமியம்மை இரட்டைமணிமாலை, பண்டார மும்மணிக்கோவை, காசிக்கலம்பகம் என்றித் திறத்தன.

சிவப்பிரகாச முனிவர் பிரபந்தங்கள் :— நால்வர் நான்மணிமாலை, திருச்செந்திலந்தாதி, பழமலையந்தாதி, நன்னெறி, திருவெங்கைக் கோவை, திருவெங்கைக் கலம்பகம், திருவெங்கையுலா, சோண சைலமாலை, சிவநாம மகிமை என்றித்திறத்தன.

சிவஞானயோகிகள் பிரபந்தங்கள் : — அமுதத்தாசாரியர் சுலோக பஞ்சக மொழிபெயர்ப் பகவல், சிவதத்துவ விவேகம், சோமேசர் முதுமொழி வெண்பா, குளத்தூர்ப்பதிற்றுப்பத்தந்தாதி, இளசைப் பதிற்றுப்பத்தந்தாதி, கலசைப்பதிற்றுப்பத்தந்தாதி, செங்கழுநீர் விநாயகர்பிள்ளைத்தமிழ், அமுதாம்பிகைபிள்ளைத்தமிழ், திருவேகம் பரந்தாதி, திருமுல்லை வாயிலந்தாதி, திருவேகம்பர் ஆனந்தக்களிப்பு, அகிலாண்டேசுவரிபதிகம், திருத்தொண்டர்திருநாமக்கோவை என் றித் திறத்தன.

சிவஞானயோகிகள் மாணுக்கர் பிரபந்தங்கள் :—தணிகையாற்றுப் படை, துறைசைக்கோவை முதலியன. இவற்றுள், தணிகையாற்றுப் படை கச்சியப்ப முனிவராலும், துறைசைக்கோவை சுப்பிரமணிய முனிவராலும் இயற்றப்பட்டன. இவை தொல்காப்பியனார் ஆணை இயற்றமிழ் இலக்கியமாய், சங்கச்செய்யுட்பிரயோகம் யாண்டும் பயின்று, சொல்லணி பொருளணி துறுமி விளங்கும் நல்ல தமிழ்ப் பிர பந்தங்களாம். இவற்றுள், குமரகுருபர முனிவர் பிரபந்தங்களுஞ் சிவ ஞானயோகிகள் பிரபந்தங்களும் வேதாந்தத்தெளிவாஞ் சைவசித்தாந்த நுண்பொருள் விளக்குங் கொழிதமிழ்க் கவிகளுடையனவுமாம்.

---

## ௪. சாத்திர மரபியல்

---

### அட்டாதச வித்தை

வித்தை பதினெட்டாவன: வேதம்நான்கும், சிக்கை, கற்பசூத்திரம், வியாகரணம், நிருத்தம், சந்தோபிசிதி, சோதிடமென்னும் அங்கம் ஆறும், புராணம், நியாயநூல், மீமாஞ்சை, மிருதியென்னும் உபாங்கம் நான்கும், ஆயுள்வேதம், வில்வேதம், காந்தருவவேதம், அருத்தநூலென்னும் இவை. இவற்றுள், வேதநான்கும் பிரமகாண்டமும், பிரமஞானத்திற்கு நிமித்தமான கருமகாண்டமும் உணர்த்துவனவாம். சிவாகமங்களும் பிரமகாண்டமாய் அடங்கு மென்ப. வேதாகமங்கள் பரமசிவன் வாய்மொழியென்று சுருதியும் புராணமுஞ் சிவாகமும் ஓதுதலானும், பஞ்சப்பிரமம், பிரணவம், பஞ்சாக்கரம், பிராசாதம் முதலிய மந்திரங்களும், பதி, பசு, பாசம் முதலிய பொருள் வழக்கமும், திருநீற்றின் உத்தூளனம், திரிபுண்டரம், உருத்திராக்கந் தரித்தல், சிவலிங்க பூசை முதலிய கருமங்களும், பிறவும் இரண்டன்கண்ணு மொப்பச் சுருக்கமாகவும் விரிவாகவுஞ் சொல்லப்படுதலானும், வேத சத்தத்தில் சிவாகமமும் அடங்குமெனக்கொண்டு வித்தை பதினெட்டென்று உண்மை நூல்கள் அங்ஙனம் ஓதின. நீலகண்டவாசிரியர்,

> " வயந்து வேதஶிவாகமயோர்பேதம் ந பஶ்யாம:
> வேதோऽபி ஶிவாகம: "

" வேத சிவாகமங்கட்குப் பேதங்காண்கின்றிலம்; வேதமுஞ் சிவனாற் செய்யப்படுதலின் ஆகமமெனப்படும் " என்றும், சிவஞானயோகிகள் " வேதம் பொருள் பலபடத் தோன்றுஞ் சூத்திரமும் சிவாகமம் அதனை அவ்வாறாக வொட்டாது தெளித்துரைக்கும் பாடியமும் போலப் பரமசிவனாற் செய்யப்பட்டமையின், அவை முறையே பொதுநூல் சிறப்புநூலெனப்பட்டுச் சூத்திரமும் பாடியமும்போல வேறுவைத்து எண்ணப்பட்டன " என்றும், தத்தம் பாடியவுரைகளிற் கூறியருளிய வாற்றானும், இது கடைப்பிடித்து உணர்ந்து கொள்க.

> " ஸர்வாகமமயஶ்ஶிவ: "

என்னுஞ் சுருதியும் இவ்வுண்மைக்குச் சான்றாம். வேதமென்னுஞ்

சொல் அறிதற்கருவியெனப் பொருள்பட்டுச் சதுர்வேதங்களுக்குக் காரணஇடுகுறியாயுஞ் சைவாகமங்களுக்குக் காரணக்குறியாயும், ஆகமமென்னுஞ் சொல் பரமசிவன்பால் நின்றும் வந்ததென்னும் பொருட்டாய்ச் சைவாகமங்களுக்குக் காரண இடுகுறியாயும் சதுர் வேதங்களுக்குக் காரணக்குறியாயும், வடமொழி தென்மொழி நூலுரைகளில் வழங்கப்படுமாறுந் தெரிந்துணர்ந்துகொள்க. ஒருசார் வைதிகர் இவ்வுண்மை பகுத்துணரமாட்டாது, அட்டாதச வித்தையிற் சிவாகமம் படிக்கப்படாமையின், அது பிரமாண நூலாகாதென்று தமக்கு வேண்டியவாறு பிதற்றுப. இனிச் சைவாகமங்கள் வேதச் சொல்லிலடங்கி அட்டாதச வித்தையாதல் அதன் பெருமைக்குக் குறைவாமென்று கூறுவாரைச் சதுர்வேதங்கள் ஆகமச் சொல்லினடங் கிப் பிரமாணமாதல் மற்றவற்றின் பெருமைக்குக் குறைவாகாதோ வென்று கடாவி மறுக்க.

இனி, வேதம் "சுயம்பு" என வழங்கப்படுவதூஉம், "அபௌருஷேயம்" என வழங்கப்படுவதூஉம், சுயம்புவான பரமசிவனாற் செய்யப் பட்ட காரியமாதல்பற்றியும், பசுக்களாகிய புருடராற் செய்யப்பட்டது அன்றென்னுங் கருத்துப் பற்றியுமேயாம். ஆகலின், அவ்வழக்கே கொண்டு அது இறைவன் வாய்மொழி அன்றென்றல் பொருந்தாது என்க. சங்கத்தார்

"செய்யா மொழிக்குந் திருவள் ளுவர்மொழிந்த
பொய்யா மொழிக்கும் பொருளொன்றே"

என்றதூஉம், பசுக்களான தேவர், முனிவர் முதலியோராற் செய்யப் படாத மொழியென்னுங் கருத்துப் பற்றியேயாம்.

இனி, வேதங்களை எடுத்தல், படுத்தல் முதலிய இசை வேறுபாட் டான் உச்சரிக்குமாறு உணர்த்துவது சிக்கை. வேதங்களிற் கூறுங் கருமங்களை அனுட்டிக்கும் முறைமை உணர்த்துவது கற்பசூத்திரம். வேதங்களின் எழுத்துச் சொற்களது இயல்பு உணர்த்துவது வியா கரணம். வேதங்களின் சொற்பொருள் உணர்விப்பது நிருத்தம். வேத மந்திரங்களிற் காயத்திரி முதலிய சந்தங்களின் பெயரும் அவ்வ வற்றிற்கு எழுத்து இனைத்தென்றலும் உணர்த்துவது சந்தோபிசிதி. வேதத்திற் செய்யப்படுங் கருமங்கள் செய்தற்குரிய கால விசேடங்

களை உணர்த்துவது சோதிடம். இங்ஙனமாகலின், இவையாறும் வேதத்திற்கு அங்கமெனப்பட்டன. பரமசிவன் உலகத்தைப் படைக்குமாறு முதலாயின கூறும் வேதவாக்கியப் பொருள்களை வலி யுறுத்து விரித்துணர்த்துவது புராணம். இதிகாசமும் ஈண்டு அடங்கும். வேதப்பொருளை நிச்சயித்தற்கு அனுகூலமான பிரமாணம் முதலிய வற்றை உணர்த்துவது நியாயநூல். வேதப்பொருளின் தாற்பரியம் உணர்த்துதற்கு அனுகூலமான நியாயங்களை ஆராய்ச்சிசெய்து உணர்த்துவது மீமாஞ்சை. அது பூர்வமீமாஞ்சை, உத்தரமீமாஞ்சை யென இருவகைப்படும். அவற்றுள் முன்னையது மீமாஞ்சையெனவும், வேதமெனவும், பின்னையது வேதாந்தமெனவும் வழங்கப்படும். அவ் வவ்வருணங்கட்கும் நிலைக்குமுரிய தருமங்களை யுணர்த்துவது மிருதி நூல். புராணம் முதலிய நான்கும் வேதத்திற்கு உபாங்கமெனப் படும். எல்லாம் அனுட்டித்தற்குச் சாதனமான யாக்கையை நோயின்றி நிலைபெறச்செய்வது ஆயுள்வேதம். பகைவரால் நலிவின்றி உலகங் காத்தற்கு வேண்டப்படும் படைக்கலம் பயிறலை யுணர்த்துவது வில் வேதம். எல்லாக் கடவுளர்க்கும் உவகைவரச்செய்யும் இசை முதலிய வற்றை உணர்விப்பது காந்தருவ வேதம். இம்மைக்கும், மறுமைக்கும் ஏதுவாகிய பொருள்களையீட்டும் உபாயம் உணர்விப்பது அருத்தநூல். இவை நான்கும் உபவேதம் எனப்படும் என்றுணர்க.

## வைதிக சாத்திரம்

இனி, மீமாஞ்சை, நியாயம், வைசேடிகம், சாங்கியம், யோகம், வேதாந்தமென்னும் ஆறும் வைதிகசாத்திர மெனப்படும். இவை தரிசன மெனவும் பெயர் பெறும். இவற்றுள் இறுதிக்கண்ணோதிய வேதாந்தம் உத்தரமீமாஞ்சை, பிரமமீமாஞ்சை யெனவும் வழங்கப்படும். மீமாஞ்சைநூல் செய்தார் சைமினி முனிவர். இது பாட்டம், பிரபாகர மென இரண்டாம். நியாயநூல் செய்தார் கௌதம முனிவர். இவர் அக்கபாதரெனவும் பெயர்பெறுவர். வைசேடிகநூல் செய்தார் கணாத முனிவர். இவை இரண்டுந் தருக்கநூல்களாம். சாங்கியநூல் செய்தார் கபில முனிவர். யோகநூல் செய்தார் பதஞ்சலி முனிவர். வேதாந்தநூல் செய்தார் வியாச முனிவர். இது மாயாவாதம், பாற்கரிய வாதம், கிரீடாப்பிரமவாதம், சத்தப்பிரமவாதமென நான்காம். இவ

ரெல்லாம் வேதத்தைப் பொதுவகையான் மூலமாகக்கொண்டு அதனுட் சிலபொருளைச் சமுத்திரகல்ச நியாயம்பற்றி ஆண்டாண்டு எடுத்துக் கொண்டு அரனருளால் ஒவ்வோரதிகாரிகளின் பொருட்டு அவர் அறிவளவிற்கேற்பத் தொகுத்தும் விரித்தும் இந்நூல்கள் செய் தாராகலின், இவை முதனூல், வழிநூல், சார்புநூலென்னும் மூன்ற னுள் ஒன்றற்கேலாதனவாய் வைதிக சாத்திரமெனவேறாய் நிலை பெற்றன. அற்றேல், முதல், வழி, சார்பு நூலென நிலைபெறுவன யாவையெனின்,--வேதாகமங்கள் பரமசிவனாற் செய்யப்பட்டு ஏனைநூல் கூறும் பொருளியல்புகளெல்லாந் தங்கண் அடங்கக்கொண்டு வியாபக மாய் நிற்றலின் அவை முதனூலாம். முதல்வனால் தரப்படும் முதல் நூலை ஒன்றாக வைத்தெண்ணாமல் இங்ஙனம் இருவகைப்படுத்து எண்ணிய தென்னையெனின்,— இதற்குச் சமாதானம்: முதல் நூல் "மூன்றுவருணத்திற்கு உரிமையாதலும் நான்குவருணத்திற்கு உரிமை யாதலும்பற்றி, முறையே வேதாகமமென இருபகுதியாக வைத் தெண்ணப்பட்டது" என்பர் நீலகண்டவாசிரியர்.

"வேதநூல் சைவநூ லென்றிரண்டே நூல்கள்
வேறுரைக்கு நூலிவற்றின் விரிந்த நூல்க
ளாதிநூ லனாதியம லன்றருநூ லிரண்டு
மாரணநூல் பொதுசைவ மருஞ்சிறப்பு நூலா
நீதியினா லுலகர்க்குஞ் சத்திநிபா தர்க்கு
நிகழ்த்தியது நீண்மறையி னொழிபொருள்வே தாந்தத்
தீதில்பொருள் கொண்டுரைக்கு நூல்சைவம் பிறநூ
றிகழ்பூர்வஞ் சிவாகமங்கள் சித்தாந்த மாகும்"

எனவும்,

"உலகியல் வேதநூ லொழுக்க மென்பதும்
நிலவுமெய்ந் நெறிசிவ நெறிய தென்பதும்"

எனவுங் கூறுபவாகலின், அங்ஙனந் நூலாருந்ததிமுறைபற்றிக் கூறு தலின் இருபகுதிப் பட்டதெனவே யாம்கோடும்" என்பர் சிவஞான மாபாடியகாரர். இவ்விரு சமாதானங்களுள் இட்டமாயது கொண்டு அமைக. இனி மிருதி, புராணம், கலைகள், உபாகமம் முதலாயின வெல்லாம் வேதாகமப்பொருளை உள்ளவாறுணர்ந்தோர் அவற்றைப் பிறர்க்கினிது விளக்குதற் பொருட்டு நால்வகை யாப்பினுள் ஒன்றான்

வழிப்படுத்துச்செய்த நூல்களாகலான், அவை வழிநூலெனப்படும். சிக்கை, கற்பசூத்திரம் முதலிய வேதாங்கங்களும் காருடம், தக்கிணம் முதலிய ஆகமாங்கங்களும் முறையே அவ்விரண்டினையும் உள்ளவாறு உணர்தற்குச் சார்பாய்ப் புடைபட்டு நிகழ்தலின், அவை சார்புநூல் எனப்படுமென்று அறிந்துகொள்க.

மீமாஞ்சை முதலிய சாத்திரங்களாறும் அன்னவாயினும், அவற்றுள் மீமாஞ்சைநூல் வேதத்துள்விதித்த கருமத்தை ஆராய்ச்சி செய்தற்கு உபகாரமாயும் எல்லாநூலார்க்கும் உபகாரமாகும் நியாயங்கள் எடுத்தோதுவதாயும் நிலவுதலானும், வைசேடிக நையாயிக நூல்கள் எல்லாநூற்கும் உபகாரமாகுந்தருக்கமுறையெடுத்தோதுதலானும், சாங்கியம் மூலப்பகுதியையும் புருடனையும் பகுத்துணரும் விவேகமுந் தத்துவ சற்காரியவாதமும் எடுத்தோதுதலானும், யோகம் எண்வகை உறுப்பிற்றாகிய யோகமுறை தெரித்தலானும், உத்தர மீமாஞ்சையெனப்படும் வேதாந்தம் பலதுறைப்பட்டுக் கிடக்கும் உபநிடத வாக்கியங்களை அவ்வப்பொருட் பெற்றிக்கேற்ப ஒருதுறைப் படுத்துப் பரமேசுரவுபாசனை கடைப்பிடித்துச் செய்ய விதித்தலானும், வேதாகமம் முதலிய சாத்திரவாராய்ச்சிக்கு இன்றியமையாத கருவிகளாக வேண்டப்பட்டு நிலவுமென்க. இச்சாத்திரங்களாறும் கூறும்பொருளும் அவற்றுட் பிரயோசனப்படுவனவும் பூர்வபக்க மாவனவும் ஆசிரியர் சிவஞானயோகிகள் சிவஞானமாபாடியத்துள் எடுத்துவிளக்கினர்.

இனிப் பூர்வமீமாஞ்சைநூலார் சுருதி, இலிங்கம், வாக்கியம், பிரகரணம், தானம், சமாக்கியையென்னும் ஆறும் வன்மை மென்மை பற்றிச் சொற்பொருள் துணிவிக்குங் கருவிகளென்று எடுத்தோதுவர்; உத்தரமீமாஞ்சைநூலார் அங்ஙனம் உபக்கிரமஉபசங்காரம், அப்பியாசம், அபூர்வதை, பலம், அருத்தவாதம், உபபத்தி யென்னும் ஆறும் வன்மை மென்மைபற்றிச் சொற்பொருள் துணிவிக்குங் கருவியென்று எடுத்தோதுவர். அவையெல்லாந் தமிழ்வேத வேதாந்த சித்தாந்த நூல்களின் சொற்பொருள் துணிதற்கும் இன்றியமையாத கருவி களேயாம். அவற்றுள், சுருதியாவது: வேறொன்றனை அவாவாது தான் கருதிய பொருளைத் தானே தெரிவிப்பது. இலிங்கமாவது: ஆற்றலாற் பொருளை யுணர்த்துவது. வாக்கியமாவது: இங்ஙனஞ்

சுருதியும் இலிங்கமுமன்றிச் சொற்றொடர்பற்றி உணரவருவது. பிரகரணமாவது: "சோதிட்டோமம் வேட்க" என்றாற்போலும் விதிவாக்கியங்களாற் பொதுப்படவுணர்ந்து சிறப்பான் அறியப்படாத கன்மங்களான் அவாவப்பட்டு இவ்வாறு செய்யற்பாற்றென வகுத்துக் கூறுவது. தானமாவது: நிரல்நிறையிடமும், அண்மையிடமுமென இருவகைப்படும். சமாக்கியையாவது: காரணத்தான் வரும்பெயர். உபக்கிரமவுபசங்காரங்களாவன: எழுவாயுரை இறுவாயுரையோடொத்து ஒன்றுதலின், மற்றிந்நூல் நுதலும்பொருள் இதுவேயாமென்று துணிந்துரைத்தற்கருவியாய் நிற்பன. அப்பியாசமாவது: நூலிற் பயின்றுவருதலின் இதற்கிதுவே பொருளெனக்கொண்டு துணிந்துரைத்தற் கருவியாய் நிற்பது. அபூர்வதையாவது: இது மற்றொரு நூலான் அறிவுறுத்தப்படாத விடயமாகலின், இதற்குச் சிறந்தபொருள் இதுவெனக்கொண்டு துணிந்துரைத்தற் கருவியாயுள்ளது. பலமாவது: இந்நூலிற்கு இதுசிறந்த பிரயோசன மாகற்பாலதெனக்கொண்டு துணிந்துரைத்தற் கருவியாய் நிற்பது. அருத்தவாதமாவது: நூலுட் புனைந்துரை வகையாற் சிறந்ததொரு பொருளை அறிவுறுத்து நிற்பது. உபபத்தியாவது: இப்பொருள் உத்திக்கு மிக இயைவதாமெனக் கொண்டு உரைத்தற் பயத்ததாய் வருவது. தமிழின்கணுள்ள வேதாந்த சித்தாந்த சாத்திரமரபு இனிது தெளிதற்கு உபகாரமாக, இதுகாறும் வடமொழி அட்டாதச வித்தையின் மரபும், வைதிக சாத்திரமரபும், சிறிது ஈண்டு முதற்கண் தொகுத்து ஓதினும்.

வடமொழிச் சாத்திரங்களுக்கு வேதாகமங்கள் முதலாய் நிற்றல் போலத் தென்மொழிச் சாத்திரங்களுக்குத் தமிழ்வேதங்கள் முதலாய் நிற்பனவாம். தமிழ் வேதோற்பத்தியும் அவை வேதாகமங்களின் சாரமான திருமுறைகளாதலும் பிறவுந் திருமுறையிலக்கிய வரலாற்றிற் பிரமாணத்தாற் சாதித்துப் போந்தாம். அற்றேலஃதாக; தேவாரந் திருவாசக முதலியன தலையாய சாத்திரத் தமிழோத்துக்களாதலின், அவற்றின் மரபு ஈண்டே தெரிக்கற்பாலதெனின்,—அஃதொக்குமன்னுயினும், தேவாரம், திருவாசகம் முதலிய திருமுறைகளும் உத்தரவேதமுந் தெய்வஇலக்கியமுமாய் நிற்றலின், தமிழ் இலக்கியங்கட்கெல்லாஞ் சிரத்தானமாய் வைத்து அவற்றின்மரபு ஆண்டுத்தெரிக்கக் கடவமாயினேமென்று உணர்ந்துகொள்க. மற்றுச் செந்தமிழ்ப்

புராண இதிகாசமரபு ஆண்டுத் தெரித்ததூஉம் அவை செந்தமிழ்ப் பேரிலக்கியமாதல் நோக்கியேயாம். தமிழ்ப்புராண இதிகாச இலக்கியங்கள் தமிழ் வேதத்திற்கு வழிநூலாய்த் தமிழ்வேத இலக்கியத்தின்பின் வைக்கற்பாலனவாயினுந் தமிழ்ச்சங்க இலக்கியங்களுந் தமிழ்க்காவிய இலக்கியங்களுட்பலவுந் தோற்றத்தான் அவைதமக்கு முற்படுதல்நோக்கி அவற்றின் பின்வைத்து மற்றவற்றின் மரபு தெரித்தா மென்பது.

தமிழ்வேத வேதாந்த சித்தாந்த ஆராய்ச்சிக்கு எண்ணும் எழுத்துமென்னும் இரண்டும் இரண்டுகண்ணாம். எண் - தருக்கம்; எழுத்து - இயற்றமிழான இலக்கணம். இவை வேதாந்த சித்தாந்த உறுதிப்பொருள் ஆராய்ச்சிக்கு இன்றியமையாத கருவி யென்பார், நாயனார்

"எண்ணென்ப வேனை யெழுத்தென்ப விவ்விரண்டுங்
கண்ணென்ப வாழு முயிர்க்கு"

என்றவ்வாறு எடுத்தோதியருளின ரென்பது: எண் - கணிதத்திற்குமாம். கணிதம் கருவியும் செய்கையுமென இருவகைப்படும். அவை ஏரம்பம் முதலிய நூல்களுட் காண்க. தருக்கமும் இயற்றமிழென்னும் இலக்கணமும் உறுதிப்பொருள்நுதலும் முதனூல் ஆராய்ச்சிக்குக் கருவியாதல்,

"ஆதி முதலொழிய வல்லா தனவெண்ணி
னீதி வழுவா நிலைமையவான்-மாதே
யறமார் பொருளின்பம் வீடென் றிவற்றின்
றிறமாயோ வெண்ணிறந்தாற் செப்பு"

"எழுத்தறியத் தீரு மிழிதகைமை தீர்ந்தான்
மொழித்திறத்தின் முட்டறுப்பா னாகு-மொழித்திறத்தின்
முட்டறுத்த நல்லோன் முதனூற் பொருளுணர்ந்து
கட்டறுத்து வீடு பெறும்"

இவற்றானறிக. இவற்றுள் இயற்றமிழ் என்னும் இலக்கணம் தமிழ்ச் சுதந்திர நூலாம். அது முத்தமிழ் முதல்நூலான அகத்தியமாம். தொல்காப்பியம், பன்னிருபடலம் முதலியன அதன் வழிநூல்களாம்.

அவற்றின் வரலாறெல்லாம் இலக்கணமரபியலில் எடுத்தோதினும் மற்றுத் தருக்கம் வடநூலிற் கூறியவாறே தமிழின் மொழி பெயர்த்து இயற்றப்பட்டு விளங்கும். அவை தருக்கசங்கிரகமும், அதன் உரையான அன்னம்பட்டீயமும், தருக்க பரிபாடையும் போல்வன. அவற்றுள் தருக்கசங்கிரகமும் அன்னம்பட்டீயமும் தமிழின் மொழிபெயர்த்து இயற்றினர் ஆசிரியர் சிவஞானயோகிகள். தருக்கபரிபாடை தமிழின் மொழிபெயர்த்து இயற்றினர் துறைமங்கலச் சிவப்பிரகாசமுனிவர். தருக்கபரிபாடை, தருக்கசூடாமணியென்வும் வழங்கப்படும். இருவகைப்படுந் தருக்கத்துள் தருக்கசங்கிரகம் கணாதர் செய்த வைசேடிகநூலின் வழித்தாயது. தருக்கபரிபாடை கௌதமர் செய்த நியாயநூலின் வழித்தாயது. தருக்கசங்கிரகமும் அன்னம் பட்டீயமும் வடமொழியில் இயற்றினர் அன்னம்பட்டர். தருக்க பரி பாடை வடமொழியில் இயற்றினர் சிவகேசவமிசிரர். தருக்கசங்கிரகம் ஏழுபதார்த்தமுந் தருக்கபரிபாடை பதினாறு பதார்த்தமுங் கூறும். பதார்த்தம் ஏழாவன: திரவியம், குணம், கருமம், சாமானியம், விசேடம், சமவாயம், அபாவமென்பன. பதார்த்தம் பதினாறுவன: பிரமாணம், பிரமேயம், சம்சயம், பிரயோசனம், திருட்டாந்தம், சித்தாந்தம், அவயவம், தருக்கம், நிண்ணயம், வாதம், சற்பம், விதண்டை, எத்துவாபாசம், சலம், சாதி, நிக்கிரகத்தானம் என்பன.

## வேதாந்த சாத்திரம்

தமிழ் வேதாந்த சாத்திரங்கள் வடமொழி உபநிடதங்களை மூல மாகக்கொண்டு தோன்றி நடப்பன. தமிழ் வேதாந்த சாத்திரங்கள்: கைவல்லியம், வேதாந்த சூடாமணி, வாசிட்டம், ஈசுரகீதை, பகவற் கீதை, பிரமகீதை, பிரபோத சந்திரோதயம் முதலியனவாம். வட மொழி உபநிடதங்கட்குச்சுத்தாத்துவிதமாகவும், சிவாத்துவிதமாகவும், கேவலாத்துவிதமாகவும், விசிட்டாத்துவிதமாகவும், துவைதமாகவும் உரைகளும் நூல்களுந் தத்தங் கொள்கைக்கேற்ப வடமொழி வல்ல ஆசாரியர்கள் பல செய்திட்டார். அவருட் சுத்தாத்துவிதக் கொள்கை பற்றி வழிநூலுரைசெய்தார் அரதத்தாசாரியர் முதலாயினோர். சிவாத்துவிதக்கொள்கைபற்றி நூலுரைசெய்தார் நீலகண்டவாசிரியர், அப்பய தீக்கிதயோகிகள் முதலாயினோர். கேவலாத்துவிதக் கொள்கை

பற்றி வழிநூலுரை செய்தார் சங்கராசாரியர், வித்தியாரணிய முனிவர் முதலாயினோர். விசிட்டாத்துவிதக் கொள்கைபற்றி வழி நூலுரை செய்தார் இராமானுசாசாரியர், வேதாந்ததேசிகர், தாதாசாரியர் முதலாயினோர். துவைதக்கொள்கைபற்றி வழிநூலுரை செய்தார் ஆனந்த தீர்த்தாசாரியர் முதலியோர்.

இவற்றுள் முற்கூறிய தமிழ் வேதாந்தநூல்கள் சங்கராசாரியர் அபிமதமான கேவலாத்துவித ஏகான்மவாதம் நுதலுவன. ஏகான்ம வாதத்துட்பட்ட பிரமவிவர்த்தன மாயாவாதமாவது - சச்சிதானந்தமாய், நித்தமாய், வியாபகமாய் நிற்பது பிரமம்; பரமார்த்தத்தில் அஃதொன்றே மெய்ப்பொருள்; ஏனையவெல்லாம் பிரமத்தின் விவர்த்தனமாய் இப்பியில் வெள்ளிபோல அவிச்சையினாற் காணப்படுவனவாகலின் பொய். இங்ஙனந் தோன்றும் உலகத்திற்கு முதற்காரணமாகிய மாயை பிரமம்போலச் சத்துமின்றி முயற்கோடுபோல அசத்துமன்றி அநிருவசனமாயிருக்கும். அநிருவசனமென்பது - சொல்லொணாதது என்னும் பொருட்டு. இந்தமாயைக்கு வேறாகிய பிரமரூபமே யானென வேதாந்த ஞானத்தால் அறிவதே முத்தியென்பதாம். பாற்கரியமாவது-முற்கூறப்பட்ட பிரமமே சடமுஞ் சித்துமாகிய உலகங்களாய்ப் பரிணமித்தது. அங்ஙனம் பரிணமித்து விகாரப்பட்டமையை அறியாமையாற் பந்தமாயிற்று. பரமார்த்தத்தில் ஒருபொருளே. வேதாந்த ஞானத்தால் உடம்பிற்கு வேறாகிய ஆன்மரூபம் விளங்கும். அதுவே பரப்பிரமமென்றறிந்து அதன்கண் நிலையித்தலே முத்தியென்பதாம். கிரீடாப்பிரம வாதமாவது - முற்கூறப்பட்ட பிரமமே நான்; யான் ஒருபடித்தன்றிப் பலவேறு வகைப்பட்ட விகாரப் பொருள்களோடுகூடிப் பலவாற்றால் விளையாடுகின்றேன்; இவ்வாறு அறிவதே முத்தியென்பதாம். சத்தப் பிரமமாவது - காரணமாகிய பிரமம் இறுதிக்காலத்திற் சத்தவடிவிற்றாயிருக்கும்; அஃது அவிச்சையினாற் சடமுஞ் சித்துமாகிய உலகங்களாய் விரியும்; முடிவின்கண் சத்தமாத்திரையே யுள்ளதென்று இங்ஙனம் அறிவதே முத்தியென்பதாம். இங்ஙனம் நால்வேறு வகைப்பட்ட ஏகான்மவாதநூல் செய்தார் வியாசமுனிவர்.

## கைவல்லியம்

இது தாண்டவமூர்த்தியாரால் செய்யப்பட்டது. இது தத்துவ விளக்கப்படலம், சந்தேகந் தெளிதற்படலம் என இரண்டு படலங்களுடைத்து.

## வேதாந்த சூடாமணி

இது சங்கராசாரியர் வடமொழியில் இயற்றிய விவேகசிந்தாமணி யென்னும் நூல் மொழிபெயர்ப்பு. இது மொழிபெயர்த்தார் துறைமங்கலச் சிவப்பிரகாசமுனிவர். இது சிறப்புப்பாயிரம், பொதுப் பாயிரம் முன்னர்த்தோற்றித் திருக்குவிவேகம், திருசியவிவேகம் என்னும் இரண்டு விபாகங்களுடைத்தாய் நிலைபெறுவது. இதன்கண் திருக்கென்பது அறிவுருவான பிரமம். திருசியமென்பது அப்பிரம விவர்த்தன மாயாகாரியமாய் அறியப்படும் அசேதனப் பிரவஞ்சம். இந்நூல் ஏகான்மவாத கேவலாத்துவித வேதாந்த பரிச்சேதப் பொருள் நன்குணர்த்துவது.

## ஞான வாசிட்டம்

இது வைராக்கியப் பிரகரணம், முமுட்சுப்பிரகரணம், உற்பத்திப் பிரகரணம், நிருவாணப்பிரகரணமென்று இப்பிரகரணங்களாற் சீவ காருண்ணியம், பாசவைராக்கியம், ஈசுரபத்தி, பிரமஞானம் என்பவற்றிற்கு இலக்கணங்கூறி அவ்வவற்றிற்கு எடுத்துக்காட்டிலக்கியமாகக் கதை பலகூறி அவற்றின் இயல்பு விளக்குவது. இஃது இயற்றினர் வீரையாளவந்தார்.

## ஈசுர கீதை

இது பரமேசுரன் சனற்குமாரன் முதலிய முனிவர்கணங்கட்கு அருளியது. இதன்கண் சாங்கியயோகம், பரபத்தி, விசுவரூபம், சிவசத்தி, தத்துவநிசம்விபூதி, பிரவஞ்சம், தத்துவ தரிசனம், யோகம் என்பன எடுத்தோதப்படும். இதனைத் தமிழின் மொழி பெயர்த்துப் பாடினர் தத்துவராய முனிவர்.

## பகவற் கீதை

இது பகவனான கண்ணன் அருச்சுனற்குச் செவியறிவுறுத்தியது. இது அருச்சுனன் சீவகாருண்ணியம் நாடிப் போர்துறந்து சோக

முற்றதுகண்டு கண்ணன் அவன் சோகம் நீங்கி உய்வண்ணம்நாடி, கருமயோக ஞானவரலாறும், பிரவஞ்ச குணவிகாரம் முதலியவற்றின் வரலாறும் உரைத்ததைப் பொருளாகவுடையது. இதனைத் தமிழின் மொழிபெயர்த்துப் பாடினர் சிபட்டர்.

### பிரம கீதை

இது பிரமன் முனிவர்கணங்கட்கு அருளியது. இது, ஐதரேயம், தைத்திரியம், கேனம், சாந்தோக்கியம், முண்டகம், கைவல்லியம், பிரகதாரணியம்,கடவல்லி, சுவேதாச்சுவதரம் என்னும் உபநிடதங்களின் பொருள் அறிவுறுப்பது. இதனைத் தமிழின் மொழி பெயர்த்துப் பாடினர் தத்துவராய முனிவர்.

### பிரபோத சந்திரோதயம்

இது வேதாந்தப் பொருளை நாடகமுறையிற் பிரவிர்த்தி,நிவிர்த்தி யென இரண்டுபாலாக வகுத்து,மோகன் முதலியோரைப் பிரவிருத்திப் படைத்தலைவராகவும், விவேகன் முதலியோரை நிவிர்த்திப்படைத் தலைவராகவும் நிறுவி, அவர் போர்த்தொழில் கிளக்குமுகத்தால், நித்தியா நித்தியவஸ்து விவேகம் வெளிப்படுத்துவது.

### ஐக்கியவாத சைவ சாத்திரம்

வைராக்கிய சதகம், வைராக்கிய தீபம், அவிரோத வுந்தியார், சிவஞான தீபம், சித்தாந்த சிகாமணி, அத்துவித வெண்பா என்பன ஐக்கியவாத சைவக்கொள்கை போதிப்பன. ஐக்கியவாத சைவம் அகப்புறச் சமயத்தின் பாலதாய் அகச்சமயம் ஆறற்கும் அயலாய் நிற்பதோர் சமயம். அஃதாவது :—

“ இன்மைபல மாயைகன்ம மென்றிரண்டே யிறைதா
னிலங்குபல வுயிர்களுமுன் புரிந்தவிரு வினையின்
றன்மைகளா லெவர்களுக்குந் தனுகரண புவனந்
தந்திடுமிங் கிதனாலே யிருபயனுஞ் சார்ந்து
கன்மமெல்லா நேராக நேராதன் மருவக்
கடவுளரு ளாலெவையுங் கழித்திடுவ னதனாற்
பின்மலமா னவையணுகா பெருகொளிமுன் புளதே பெற்றிடும் ”

என்பதாம். இந்நூல்கள் செய்தார் சாந்தலிங்க முனிவர், சிவப்பிரகாச முனிவர், சிவப்பிரகாச தேசிகர் முதலியோர்.

## ஒழிவிலொடுக்கம்

இது செய்தார் கண்ணுடைய வள்ளல். இது, பொதுவிலுபதேசம், சத்திநிபாதத்து உத்தமரொழிவு, யோகக்கழற்றி, கிரியைக் கழற்றி, சரியைக்கழற்றி, விரத்தி விளக்கம், துறவு, அருளவத்தைத் தன்மை, வாதனைமாண்டார் தன்மை, நிலையியல்பு எனப் பத்திப்பல்களுடையது. இது, ஆன்மாப் பாசோபாதியின் நீங்கி அருளில் அழுந்தித் தூய்மையுறுதற்குக் கருவியான ஒரு ஞானநூல். வேதாந்த சித்தாந்தம் இரண்டையுந் தம்முள் முரணுதவாறு அவ்விரண்டன் பொருள் பெரும்பான்மையான் ஒருப்படுத்துரைப்பது. இது அறுவகை அகச்சமயங்களுள்வைத்துச் சிவாத்துவிதம் போதிப்பது. சித்தாந்த சைவத்துக்கு அயன்மை பூண்டு நிற்பது. மற்றிது சுத்த சைவநூல் என்பாருமுளர். சுத்த சைவத்திற்குஞ் சிவாத்துவித சைவத்திற்குந் தம்முள் வேறுபாடு சிவஞானமாபாடியத்துட் காண்க.

## சித்தாந்த சாத்திரம்

இனி,

"புறச்சமயத் தவர்க்கிருளா யகச்சமயத் தொளியாய்ப்
புகலளவைக் களவாகிப் பொற்பணிபோ லபேதப்
பிறப்பிலதா யிருள்வெளிபோற் பேதமுஞ்சொற் பொருள்போற்
பேதாபே தமுமின்றிப் பெருநூல் சொன்ன
வறத்திறனல் விளைவதா யுடலுயிர்கண் ணருக்க
னறிவொளிபோற் பிறிவருமத் துவித மாகுஞ்
சிறப்பினதாய் வேதாந்தத் தெளிவாஞ் சைவ
சித்தாந்தத் திறனிங்குத் தெரிக்க லுற்றாம்"

ஈண்டுப் புறச்சமயத்தவரென்றது, முக்கூற்றுப் புறச்சமயத்தவரெனக்கொள்க. அவரெல்லாஞ் சித்தாந்த சைவத்தோடொப்ப

"ஏக னனேக னிருள்கரும மாயை யிரண்டு"

என்னும் அறுபதார்த்தங்களுங் கொள்ளாமையின், அவ்வறுவகைப் பதார்த்தங்களின் இயல்பைக்கொளுத்தினும் கொள்ளமாட்டா ரென்

பார், "புறச்சமயத் தவர்க்கிருளாய்" என்றார். சங்கற்ப நிராகரணத்திற் கூறப்படும் அகச்சமயத்தவராகிய பாடாணவாத சைவர் முதலியோர் சித்தாந்த சைவத்தோடொப்ப ஏகன்முதலிய ஆறு பதார்த்தங் கொண்டமையின், அவ்வாறு பதார்த்தங்கட்கும் பொதுவியல்பு சிறப்பியல்பு கூறும் ஆகமங்களின் தாற்பரியம் இதுவே யென்று எடுத்துக்காட்டிச் சித்தாந்த சைவப் பொருளுண்மையைக் கொளுத்திற் கொள்ள வல்லுநரென்பார், "அகச்சமயத் தொளியாய்" என்றார். கொளுத்திற் கொள்ளவல்லுநரெனவே அகச்சமயத்தவருந் தாமே கொள்ளமாட்டாரென்பது கருத்தாகலின்

"...சிவாத் துவிதாங் தத்துட்
குலவின ரளவ ளாவாக் கொள்கைய தாகி."

என்பதனேடு முரணுமை அறிக. சிவாத்துவிதமாவது - நிமித்த காரண பரிணமவாதம்.

"சிவாத் துவிதாங் தத்துட்
குலவின ரளவ ளாவாக் கொள்கைய தாகி"

என இறுவாய் எண்ணும் முறைமைக்கண் நின்ற சுத்தசைவரை யொழித்து ஒழிந்த சமயத்தாரை யெல்லாம் விலக்கவே, சுத்தசைவர் இந்நூல் கேட்டதுணையானே தாற்பரியம் இனிதுணர்ந்து சித்தாந்தப் பொருள் கைக்கொள்வரென்பது பெறப்பட்டது. அத்துணை அணிமை யராகலான்றே சித்தாந்தசைவத்தைச் சாரவைத்தாரென்பது. இக் கருத்து அறியாதார் "சிவாத்துவிதாந்தத்து" என்றமையின் சிவாத் துவிதமாவது-இறுதிக்கணெடுத்து ஓதப்படுஞ் சுத்த சைவம் போலு மென மயங்குப. நிமித்த காரணமாகிய முதல்வன் மாயையோடுங்கூடி முதற்காரணமுமாய்ப் பரிணமிப்பனென்பதே சிவாத்துவித சைவர் கொள்கை யென்க. இது சுத்தசைவர்க்கு ஏலாமையுமறிக. இனித் தார்க்கிகர்முதலியோர் காட்சிமுதலிய பிரமிதிக்குப் பொறிமுதலியனவே பிரமாணமென்பர். பிரமாணம் பிரமேயப்பொருளாதல் செல்லாமையின் பொறி முதலாயினவும் ஏனையபோலப் பிரமேயமாய் அளந்தறியப் படும் பொருளேயாகலின், அவற்றைப் பிரமாணமென்றல் பொருந்தாது; மற்றுச் சிவஞானமுணர்த்த வுணர்வதாகிய ஆன்மசிற்சத்தியே அவர் பிரமாணமெனப் புகலும் இந்திரியம் முதலியவற்றையும்

அளந்தறியும் பிரமாணமாம். பொறி முதலியன அதற்கு வாயிலாதல் பற்றிப் பிரமாணமென்று உபசரித்துக் கூறப்படுவனவேயாமென்பது சைவசித்தாந்த மென்பார், "புகலளவைக் களவாகி" என்றார். சைவ சித்தாந்தத்தின் எய்துதற்கு அருமைகூறுவார் "பெருநூல் சொன்ன அறத்திறனல் விளைவதாய்" என்றார். எனவே, அஃதில்வழி விளையாதென்பதாம். "உடலுயிர் கண்ணருக்கன் அறிவொளிபோற் பிறிவரும் அத்துவிதமா" மாறு மேலுரைத்தாம். அத்துவிதமென்னுஞ் சொற்குப் பொருள் கூறுவார், "பிறிவருமத்துவிதம்" என்று உடம் பொடு புணர்த்தோதினர். இஃது ஏனையோர் கூறும் பொருள்போ லன்றிச் சிறந்ததென்பார் "சிறப்பினதாய்" என்றார். வேதாந்தமுஞ் சித்தாந்தமும் வேறென்பாரை மறுத்துப் பலபொருள்படுஞ் சூத் திரத்தை அங்ஙனம் படாமைத் தெளித்துரைக்கும் பாடியம்போல வேதாந்தத்தைத் தெளித்துரைப்பதே சைவசித்தாந்த மென்பார், மகுடாகமம் முதலியவற்றுள் ஓதியவாறே "வேதாந்தத் தெளிவாஞ் சைவசித்தாந்தத் திறன்" என்றார். ஈண்டு வேதாந்தமென்றது வேதத்தின் முடிபுகளாகிய உபநிடதங்களை. வேதாந்தமெனப் பெயர் பெற்ற ஏகான்மவாத நூலை அன்றெனவுணர்த்துதற்கு

"வேதத் தலைதரு பொருளாய்"

என இறுதியினுங் கூறினாராகலின், அது கூறியது கூறலன்மையுணர்க. திறன் - பொது, உண்மை யென்னும் வகை. இங்கு - இந்நூலின். முதனூல் வழிநூல்களில் "பொதுவுண்மை" என வகுத்துக் கொண்டோதினும் எடுத்தோதாமையால், அவ்வகை தெரிவரிதாகலான் அது தெரியுமாறு "பொது வுண்மை" என்றெடுத்தோதி அந்நூல்களின் கருத்து ஈண்டுத் தெரியச்செய்துமென்பார், "சைவ சித்தாந்தத் திறனிங்குத் தெரிக்கலுற்றாம்" என்றார். சைவசித்தாந்த மென்றது - சுத்தசைவம் முதலியவற்றிற் செல்லாமைப் பொருட்டு.

## சித்தாந்தசாத்திர நாற்பாதத் தெளிவு

வேதத்திற் கூறுங் கருமகாண்டப் பொருட்கு இன்றியமையாது வேண்டப்பட்டு எஞ்சி நின்றனவாய பொருள்களையும் வேதமுடிபாய உபநிடதத்தின் சாரமாயுள்ள பொருள்களையும் வேறெடுத்துக்கொண்டு இனிது விளக்குதலின், சிவாகமஞ் சித்தாந்த சாத்திரமென்று வழங்கப்

படும். இச்சித்தாந்த ஆகமங்கள் சரியாபாதம், கிரியாபாதம், யோக பாதம், ஞானபாதமென நான்கு பாதங்களுடையனவாம்.

இவற்றுள், சரியாபாதத்துள் பிராயச்சித்த விதியும், பவித்திர விதியும், சிவலிங்க இலக்கணமும், நந்திமுதலிய கணநாதர் இலக்கணமும், செபமாலை, யோகபட்டம், தண்டம், கமண்டலம் முதலியவற்றின் இலக்கணமும், அந்தியேட்டி விதியும், சிரார்த்தவிதியும் கூறப்படும்.

கிரியாபாதத்துள் மந்திரங்களினது உத்தாரணம், சந்தியாவந்தனம், பூசை, செபம், ஓமங்களும், சமயம், விசேடம், நிருவாணம், ஆசாரியாபிடேகங்களும், புத்தி, முத்திகளுக்கு உபாயமான தீக்கையும் கூறப்படும்.

யோகபாதத்துள் முப்பத்தாறு தத்துவங்களும், தத்துவேசுரரும், ஆன்மாவும், பரமசிவனும், சத்தியும், சகத்திற்குக் காரணமான மாயை மாமாயைகளைக் காணும் வல்லமையும், அணிமாவாதி சித்திகளுண்டாம் முறைமையும், இயமம், நியமம், ஆசனம், பிராணாயாமம், பிரத்தியாகாரம், தாரணம், தியானம், சாமாதிகளினுடைய முறைமையும், மூலாதாரம் முதலிய ஆதாரங்களின் முறையும் கூறப்படும்.

ஞானபாதத்துள் பரமசிவனுடைய சொரூபமும், விஞ்ஞானகலர், பிரளயாகலர், சகலர் என்னும் ஆன்மாக்களின் சொரூபமும், ஆணவம், கான்மியம், மாயேயம், வைந்தவம், திரோதானசத்தி என்னும் பாசங்களின் சொரூபமும், சத்தியின் சொரூபமும், சிவதத்துவமுதற் பிரகிருதிதத்துவம் வரை முப்பத்தாறு தத்துவங்களினது உற்பத்தியும், இவை ஆன்மாக்கள் போகம் புசிக்கைக்குக் கருவியாம்முறையும், புவனங்கள்புவனேசுவரர் சொரூபங்களும்,புவனங்களின் யோசனைப் பிரமாணங்களும், அதமப்பிரளயம், மத்திமப்பிரளயம், மகாப்பிரளயங்களின் சொரூபங்களும், அதமப் பிரளயங்களின் பின்னர்ச் சிருட்டியாம் முறைமையும், பாசுபதம், மாவிரதம், காபாலிகம் முதலிய மதங்களின் சொரூபங்களும் கூறப்படும். இந்நாற்பாதப் பொருள்கள் சிவஞான மாபாடியத்துத் தெளித்தெடுத்துச் சுருக்கி யுரைக்கப்பட்டன.

இனி, வினை - பசுநல்வினை, சிவநல்வினையென இரண்டாம். பசுநல்வினை - உலகவினையும், வேதவினையுமென வேறு இரண்டாம். சிவநல்வினை - பொதுவுஞ் சிறப்புமென வேறு இரண்டாம்.

உலகவினை—தண்ணீர்ப்பந்தர், அன்னசாலை, கூவல், குளம் முதலியன அமைத்தலாம்.

வேதவினை - கட்புலனுன பசு, பார்ப்பார், தாய், தந்தை முதலாயினுரை வழிபடுதலும், கட்புலனுகாத அரி, அயன், இந்திரன் முதலிய தேவர்களை வழிபடுதலுமாம். அற்ருயினும் வேள்வி முதலிய வைதிக வினைகள் தண்ணீர்ப்பந்தர் முதலிய உலகவினை போலன்றிச் சிவனை நோக்கி அவிப்பாகங் கொடுத்தலும் வழிபடுதலு முடைமையின், அவை சிவபுண்ணியமா மென்றற்கு இழுக்கென்னையெனின்,— ஆண்டுச் சிவபிரானுக்கு அவிப்பாகங்கொடுத்தலும், வழிபடுதலும், பசுக்களாகிய ஏனைக்கடவுளரோடொப்பவைத்துச் செய்தலேயன்றிப் பொதுநீக்கிப் பசுபதியென்னுங் கருத்தாற் செய்தலின்மையின், அவையெல்லாஞ் செய்வோர் கருத்து வகையாற் பசுநல்வினையேயாம்; சிவநல்வினை ஆகாவென்க. இனி வேள்வி முதலிய வைதிகவினைக்கண் சிவபுண்ணியமும் அபுத்திபூர்வமாய் நிகழ்தலின் அது புத்திபூர்வமாய் இனிச்செய்யக்கடவனவாகிய சிவபுண்ணியங்கட்கு ஏதுவாதல் மாத்திரையிற் பயன்படுதலுடைத்தென்க. வேள்வி முதலியவுஞ் சிவபிரானைநோக்கிப் பொதுநீக்கிச்செய்யின், அஃது ஏனையபோலப் பசுபுண்ணிய மாதலின்றிப் பொதுச் சிவபுண்ணியமாமெனக் கொள்க. இஃது உலகவினைக்கண்ணும் ஒக்கும். இவ்வைதிக வினையான பொதுச்சிவபுண்ணியஞ் சிவாகம நல்வினையான பொதுச்சிவபுண்ணியம் போலச் சிறப்புச் சிவபுண்ணியத்திற்கு அங்கமாகிப் பயன்படுத லுடைத்தென்க.

பொதுச் சிவநல்வினையாவது சிவதீக்கையென்னும் அங்கமின்றி அவ்வாறு செய்வது. சிறப்புச் சிவநல்வினையாவது சிவதீக்கையென்னும் அங்கமுடையராய் அவ்வாறு செய்வது. இவ்விரண்டும் பத்திகாரணமாக உண்மையாகச் செய்வதும், புகழ் முதலிய உலகப்பயனை நோக்கிச் செய்வதுமென வெவ்வேறு இருவகைப்படும். இவற்றுள், சிறப்புச் சிவபுண்ணியம் இரண்டுஞ் சரியையுங் கிரியையும் யோகமும் அவற்ருன் நிகழும் ஞானமுமென ஒரோவொன்று நந்நான்காய் அந்நான்கினுள்ளுஞ் சரியையிற் சரியை கிரியை யோகம் ஞானம், கிரியையிற் சரியை கிரியை யோகம் ஞானம், யோகத்திற் சரியை கிரியை யோகம் ஞானம், ஞானத்திற் சரியை கிரியை யோகம் ஞானமென, ஒரோவொன்று நந்

நான்காய் முப்பத்திரண்டு வகைப்பட்டு விரியால் இன்னும் பலதிறப் படும் என்றுணர்க.

அவற்றுள், திருக்கோயில் அலகிடல், மெழுகல் முதலியன சரியை யிற் சரியை. ஐயைந்து மூர்த்திகள், விநாயகக்கடவுள் முதலிய ஆவரண மூர்த்திகளில் ஒருமூர்த்தியைப் பூசித்தல் சரியையிற் கிரியை. நெஞ்சின்கண் உருத்திரக்கடவுளைத் தியானஞ்செய்தல் சரியையில் யோகம். அத்தியானபாவனையின் உறைப்பினால் ஓரனுபவ வுணர்வு நிகழ்தல் சரியையில் ஞானம்.

சிவபூசைக்கு வேண்டப்படும் உபகரணங்களெல்லாஞ் செய்து கோடல் கிரியையிற் சரியை. சிவாகமத்தில் விதித்தவாறே ஐவகைச் சுத்தி முன்னாகச் சிவலிங்கவடிவிற் செய்யும் பூசனை கிரியையிற் கிரியை. அகத்தே பூசை, ஓமம், தியானம் மூன்றற்கும் மூவிடம் வகுத்துக் கொண்டு செய்யப்படும் அந்தரியாகங் கிரியையில் யோகம். அவ்வந் தரியாக உறைப்பின்கண் நிகழும் ஓரனுபவ வுணர்வு கிரியையில் ஞானம்.

இயமம், நியமம், ஆசனம், பிராணாயாமம் என்னும் நான்கும் யோகத்திற் சரியை. பிரத்தியாகாரமும், தாரணையும் யோகத்திற் கிரியை. தியானம் யோகத்தில் யோகம். சமாதி யோகத்தில் ஞானம். இந்த யோகம் சகள நிட்களங்களைப்பற்றி நின்று செய்யுஞ் சாலம்பயோக மும், நிட்களத்தைப்பற்றிநின்று செய்யும் நிராலம்பயோகமும் என்று இருவகைப்படும்.

இனிக்கேட்டல் முதலிய நான்கனுள், கேட்டல்—ஞானத்திற் சரியை. சிந்தித்தல்—ஞானத்திற் கிரியை. தெளிதல்—ஞானத்தில் யோகம். நிட்டை கூடுதல்--ஞானத்தில் ஞானம் என்று உணர்ந்துகொள்க.

இனிப் புகழ்முதலிய உலகப்பயனை நோக்கிச் செய்யும் உபாயச் சரியையிற் சரியை முதல் உபாயஞானத்தின் ஞானமீறாகிய பதினாறு வகையினின்றும் பல வேறுவகைப்பட விரியுஞ் சிவபுண்ணியங் களுக்கெல்லாம்பயன்—அவ்வவற்றிற்கேற்பக் காலாக்கினியுருத்திரர் முதற் குணதத்துவ மத்தகத்தில் சீகண்டருத்திரர் புவனத்தின் கீழுள்ள உருத்திரரீறான அவ்வப்புவனபதிகள் உலகத்தில் சாலோகம் முதலியவற்றைப் பெறுதலாம். பத்திகாரணமாகச் செய்யப்படும்

உண்மைச் சரியையிற்சரியை முதல் உண்மையோகத்தின் ஞான மீறுகிய பன்னிரு வகையினின்றும் பலவேறு வகைப்பட்டு விரியுஞ் சிவபுண்ணியங்களுக்கெல்லாம் பயன்—அவ்வவற்றிற்கேற்பச் சீகண்ட புவனமுதற் சுத்தவித்தைக்குக் கீழுள்ள அவ்வப் புவனபதிகளுடைய சிவலோகத்துச் சாலோகம் முதலிய அபரமுத்திகளைப் பெறுதலாம். உண்மை ஞானத்திற்சரியை முதலிய மூவகையினின்றும் பலவேறு வகைப்படுஞ் சிவபுண்ணியங்களுக்கெல்லாம் பயன்—அவ்வவற்றிற் கேற்பச் சுத்தவித்தை முதலிய அதிகாரதத்துவ போகதத்துவங் களில் வைகும் மந்திரர், மந்திரமகேசர் முதலியோர் புவனத்துச் சாலோகம் முதலிய அபரமுத்தியைப் பெறுதலாம். இனிப் பலவேறு வகைப்பட விரியும் ஞானத்தின் ஞானங்களுண் முடிவாகிய ஞானத் திற்குப் பரமுத்தியே பயனென உணர்ந்து கொள்க.

சரியை முதலியவற்றின் இயல்பாவன யாவையெனின், கூறுவாம். அகண்டாகார நித்த வியாபக சச்சிதானந்தப் பிழம்பாகிய சிவபிரான் சிவசத்திநிபாதமுடைய உயிர்கள் சோபான முறையினால் உணர்ந்து உய்யும்பொருட்டுத் தூலமாகவுஞ் சூக்குமமாகவும் அதிசூக்கு மமாகவும் வடிவங்கொண்டருளி, அவ்வடிவங்களில் வழிபடுமுறை களையும் வேதாகமங்களில் வகுத்தருளிச்செய்தான். இம்மூவகை வடிவங்களுள், சகளமாகிய தூலவடிவத்தை மாத்திரம் பொருளென்று உணர்ந்து காயத்தொழின் மாத்திரையால் ஆகமத்தின்விதிப்படி வழி படுவது சரியை.

அது அடிப்பட்டு வரவர நிகழும் பக்குவ விசேடத்தால் நுண்ணுணர்வுடையராய்ச் சகள நிட்களமாகிய சூக்குமவடிவமே பொருள், சகளவடிவம் அதனை வழிபடுதற்கு இடமாகிய திருமேனி யாமென்று இவ்வாறறிந்து புறத்தொழிலானும் அகத்தொழிலானும் விதித்தவாறே வழிபடுவது கிரியை.

அது அடிப்பட்டு வரவர நிகழும் பக்குவ விசேடத்தால், அதி நுட்ப வுணர்வுடையராய் நிட்களமாகிய அதிசூக்கும வடிவமே பொருள், சகளமுஞ் சகளநிட்களமும் அதனை வழிபடுதற்கிடமாகிய திருமேனியென்று இவ்வாறறிந்து அகத்தொழின் மாத்திரையால் ஆண்டைக்கு விதித்தவாறே வழிபடுவது யோகம்.

சரியை, கிரியை, யோகம் மூன்றும் இவ்வாறு முறையே அடிப்பட்டு வரவர நிகழ்ந்து பக்குவமுதிர்ச்சியினாலே உள்ளபடியுணர்வு விளங்கி, அகண்டாகார நித்த வியாபக சச்சிதானந்தப் பிழம்பே சொரூபம், மற்றைச் சகளம் முதலிய மூன்றுந் தூலாருந்ததி நியாயமாக அதனை யுணர்தற்பொருட்டும் வழிபடுதற் பொருட்டுங் கொண்ட திருமேனிகளாமென்று இவ்வாறறிந்து, காயத்தொழில் மனத்தொழில் இரண்டையுங் கைவிட்டு, கேட்டல், சிந்தித்தல், தெளிதல், நிட்டையென்னும் அறிவுத்தொழின் மாத்திரையால் வழிபடுவது ஞானம்.

ஞானிகள் ஞானம்முதலிய நால்வகைத்தொழிலுஞ்செய்தற்குரியர். யோகிகள் யோகம் முதலிய மூவகைத் தொழிலுஞ் செய்தற்குரியர். கிரியையாளர் கிரியை சரியை யென்னும் இருவகைத் தொழிலுஞ் செய்தற்குரியர். சரியையாளர் சரியைத்தொழில் ஒன்றுமே செய்தற்குரியர்.

ஏகதேசமாகக் குறித்தலின்றிச் சிவலிங்கம் முதலிய தாவரத்திருமேனியில் அன்பினால் வழிபாடுசெய்யும் ஞானிகட்குப் பரமசிவன் கன்றை நினைந்த புனிற்றாவின் முலைப்பால் போலக் கருணைமிகுதியினால் அவ்வன்பே தானாய் எப்போதும் ஆண்டு வெளிப்பட்டுநின்று அருள்செய்வன்.

சிவலிங்கம் முதலிய திருமேனியிற் சாத்திய மந்திரங்களால் வழிபாடுசெய்யும் யோகிகட்குப் பரமசிவன் கறந்த வழித் தோன்றும் பால்போல அம்மந்திரங்களால் அவர் விரும்பிய வடிவாய்த் திருமேனிகளில் அப்பொழுது அப்பொழுது தோன்றிநின்று அருள் செய்வன்.

அருவப்பொருளாகிய பரமசிவன் ஈசானாதி மந்திரங்களாற் சிவலிங்கம் முதலிய திருவுருக் கோலினானெனக்கருதி மந்திரநியாசத்தால் ஆண்டு வழிபடுங் கிரியையாளர்க்குப் பரமசிவன் அம்மந்திரங்களால் விரும்பிய வடிவாய்த் திருமேனிகளில் அப்போதப்போது தோன்றிநின்று அருள்செய்வன்.

பகுத்துணர்தலின்றிச் சிவலிங்கம் முதலிய திருமேனியே சிவமெனக்கண்டு வழிபடுஞ் சரியையாளர்க்குப் பரமசிவன் ஆண்டு வெளிப்படாதிநின்று அருள் செய்வன்.

இனி, அறிதல் ஒப்புமையாற் சரியை முதலிய நான்கும் ஞானமேயாம். ஆயினும், அரும்பு மலர் காய் கனியாதல்போலச் சோபான முறையாகிய தம்முள் வேறுபாட்டால் முறையே ஒன்றுக்கொன்று அதிகமாய் நான்காம் எண்ணுமுறைக்கண் நின்றஞானமே முடிவாகிய ஞானமாம். ஆகவே இந்நான்கினும் அறிவு நுணுகி வரவர அறியாமையாகிய ஆணவமலமும் அம்முறையே தேய்ந்துதேய்ந்து வரும். இனிச் சரியைக்குப் பயன் சாலோகமாம். கிரியைக்குப் பயன் சாமீபமாம். யோகத்துக்குப் பயன் சாரூபமாம். இவை மூன்றும் அபரமுத்திகளாம். ஞானத்துக்குப் பயன் மலநீக்கமுஞ் சிவசாயுச்சியமுமாம். இதுவே முடிவாகிய பரமுத்தியாம். இம்முத்தி நிலையில் ஆன்மாத் துவிதபாவனை நீங்கி அறிவு மாத்திரையாய்ச் சிவத்தோடு கூடிச் சிவமாய் அகம்புறமெங்கும் வியாபித்துத் தற்றரும தருமியாய் முழுதும் வியாபகமாய்நின்று அறிவதாகிய முற்றுணர்வுடையனாய்ச் சுத்தாத்துவித கேவலமாய் நின்று முடிவுகாண்கில்லாப் பேரின்பத்தைப் பெறுவன். பரவீடெனப்படுஞ் சுத்தாத்துவித சாயுச்சிய இயல்பு இதுவேயாம்.

இனி அபரமுத்திகளுள் முதலதான சாலோகமாவது—அவ்வப் புவனபதி உலகங்களிலெய்தி ஒருவர் மனையிற் பணிசெய்யும் அகத்தொண்டர்க்குளதாகிய உரிமைபோல அவ்வவுலகத்துள் யாண்டுந் தடையின்றி இயங்கி அவ்வப்போகங்களை நுகர்ந்து வாழ்வது.

சாமீபமாவது—அவ்வளவினன்றி மைந்தர்க்குளதாகிய உரிமைபோல அவ்வப்புவனபதிகளுக்கு அணுக்கராய் வைகி அவ்வப்போக விசேடங்களை நுகர்ந்து வாழ்வது.

சாரூபமாவது—அவ்வளவினன்றித் தோழர்க்குரிய உரிமைபோல அவ்வப்புவன பதிகளோடொத்த வடிவமும் ஒத்தஅணிகலனும் ஒத்த போகநுகர்ச்சியும் பெற்றுவாழ்வது.

இனி இம்மூன்றும் உரிமை விசேடம்பற்றி முறையே தொண்டர், மைந்தர், தோழரென்பார் இயல்பை ஒத்தலால் இவற்றை அடைவிக்கும் நெறியாகிய சரியை தாதமார்க்கமென்றும், கிரியை புத்திரமார்க்கமென்றும், யோகஞ் சகமார்க்கமென்றும் பெயர் பெற்றிடும்.

இனிச் சரியை கிரியா யோகமென்னும் மூன்று பாதங்களை உணர்த்துஞ் சைவநூல்கள் : ஞானாமிர்தம், சிவதருமோத்தரம், சைவ சமயநெறி, நித்தியகருமநெறிக்குறள், பர மத திமிர பானு, தத்துவப் பிரகாசம் முதலாயின.

### ஞானாமிர்தம்

இது நிறைந்தநாயனார் சந்தானத்துப் பரமானந்தமுனிவர் அருள் பெற்ற வாகீசர் அருளிச்செய்தது. இது "வெண்டிரைக் கருங்கட லேழும் விண்டொட" என்னுஞ் செய்யுண் முதலாக, "ஆறுக்கூறிய வத்துவாமற்று" என்பதீறாக எழுபத்தைந்து அகவற்பாக்களுடை யது. இந்நூல் பதிமுதலிய பதார்த்தங்கள் இலக்கணந் தருக்க முறையில் தடத்தமாக எடுத்து இனிது விளக்குவது. பாநெறியிற் சங்கச்செய்யுள் முறையால் நடப்பது. இது பெரும்பான்மையுஞ் சோமசம்பு சிவாசாரியர், ஞானசிவாசாரியர் இயற்றிய பத்ததிகளின் மொழிபெயர்ப்பாய் நிலவினும், அப்பத்ததிகளுக்கு முதலான சைவாக மங்களின் கருத்துக்களையுந் தழுவிநடப்பது. ஆசிரியர் சிவஞான யோகிகள் சிவஞானபோதப் பொதுவதிகாரத்திற்கு இயற்றிய சிவ ஞானமாபாடியவுரையில் இந்நூற் செய்யுட் பகுதிகளை ஆண்டாண்டு மேற்கோளாக எடுத்துக் காட்டியருளினார்.

### சிவதருமோத்தரம்

இஃது இயற்றினார் மறைஞானசம்பந்தர். இவர் வடமொழிச் சிவதருமோத்தராகமத்தை அப்பெயரானே மொழிபெயர்த்துத் தென் மொழியான் இயற்றியருளினார். சிவதருமோத்தரம் அறுமுகக்கடவுள் அகத்திய முனிவற்கு அருளிச்செய்ததோர் உபாகமம். இது பரம தருமாதியியல், சிவஞானதானவியல், ஐவகையாகவியல், பலவிசிட்ட காரணவியல், சிவதருமவியல், பாவவியல், சுவர்க்கநரகவியல், சனன மரணவியல், சுவர்க்க நரகசேடவியல், சிவஞானயோகவியல், பரிகார வியல், கோபுரவியலெனப் பன்னிரண்டு இயல்களுடைத்து.

### சைவ சமயநெறி

இஃது இயற்றினார் மறைஞான சம்பந்தர். இது ஆசாரியர் இலக் கணம், மாணாக்கர்இலக்கணம், பொதுஇலக்கணமென மூன்று விபாகங்

களுடைத்து. இம்மூன்றுஞ் சிவாகமச் சரியை கிரியா யோகபாதப் பொருள் தொகுத்தெடுத்து விளக்கும் நூல்கள். இவை இம்மூன்றுமே யன்றி ஞானபாதத் தடத்தப்பொருள் சிலவும் எடுத்தோதும்.

### சித்தாந்தசைவ ஞானசாத்திரம்

இனிச் சைவாகமங்களிலுள்ள ஞானபாதப் பொருளுணர்த்துந் திராவிட சித்தாந்த ஞானசாத்திரங்கள் திருவுந்திமுதற் சங்கற்பநிரா கரணம் இறுதியாகவரும் பதினன்குமாம்.

" உந்தி களிறு வுயர்போதஞ் சித்தியார்
பிந்திருபா வுண்மைப் பிரகாசம்—வந்தவருட்
பண்புவினு போற்றிகொடி பாசமிலா நெஞ்சுவிடு
வுண்மைநெறி சங்கற்ப முற்று "

என்னும் வெண்பாவினல் அப்பதினன்கின் பெயரும் முறையும் அறிந்துகொள்க.

### திருவுந்தியார்

இது திருவியலூர் உய்யவந்ததேவநாயனர் அருளிச்செய்தது. பதிமுதலிய முப்பொருள்களின் சொரூபவியல்பு தொகுத்தெடுத்து உணர்த்துவது.

### திருக்களிற்றுப்படியார்

இஃது இயற்றினர் திருக்கடவூர் உய்யவந்த தேவநாயனர். இவர் மேற்கூறிய உய்யவந்த தேவநாயனர் மாணக்கர். இந்நூல், திருவுந்தி யின் கருத்து இனிது விளக்க எழுந்து அதற்கு வழிநூலாய் நிலவுவது. இந்நூலாசிரியர், இந்நூலின் தெய்வத்தன்மை விளக்கவேண்டி, இந் நூலைத் திருவம்பலத்தின் கண்ணதான திருக்களிற்றுப் படியினேற்றி இறைஞ்ச, அத்திருக்களிற்றுக்கை நிமிர்ந்து இதனைவாங்கி நடராசர் திருவடியிற் சேர்த்தலின், திருக்களிற்றுப்படியென்று இதற்குத் திரு நாமஞ் செப்பினரென்க.

### சிவஞானபோதம்

சைவாகமங்களில் உளவாகிய நாற்பாதங்களுள்வைத்து ஞான பாதத்தோதிய பொருளினை ஆராயும் ஆராய்ச்சி இந்நூலின்கண் எடுத் துக்கொள்ளப்பட்டது. இவ்வாராய்ச்சிக்குப் பயன் யாதோவெனவும்,

இது கேட்டற்குரியார் யாவரெனவும், இதனல் நுதலப்படும் பொருள் யாதெனவும், இதனைப் பயப்பிக்குங் கருவியாய் இதற்குமுன் ஒருதலை யான்உணர்தற்பாலது யாதெனவும், இதனை வழங்குதற்கு இட்டபெயர் யாதென்வும், இஃது யாண்டு வழங்குவதெனவும், இதன் முதனூல் யாதெனவும், இந்நூல்செய்தார் யாவரெனவும், பலவாற்றான் ஆசங்கை நிகழுமன்றே ; அவ்வாசங்கை நீங்கி மனவெழுச்சி சேறற் பொருட்டு இந்நூன்முகத்து உரைக்கப்படுவதாகிய

சிறப்புப்பாயிரம் : "மலர்தலை யுலகின் மாயிரு டமியப்
பலர்புகழ் ஞாயிறு படரி னல்லதைக்
காண்டல் செல்லாக் கண்போ லீண்டிய
பெரும்பெயர்க் கடவுளிற் கண்டுகண் ணிருடீர்ந்
தருந்துயர்க் குரம்பையி னன்மா நாடி
மயர்வற நந்தி முனிகணத் தளித்த
வுயர்சிவ ஞான போத முரைத்தோன்
பெண்ணைப் புனல்சூழ் வெண்ணெய்ச் சுவேதவனன்
பொய்கண் டகன்ற மெய்கண்ட தேவன்
பவநனி வன்பகை கடந்த
தவரடி புனைந்த தலைமை யோனே"

எனவரும்.

உயர் சிவஞானபோதமென்றது, ஏனை மூன்று பாதத்தை ஆராயும்நூல்கட்கு மேற்பட்ட சிவஞானபோத மென்றவாறு. எனவே, அந்நூல்கள் உணர்ந்தபின்னர் இந்நூல் கேட்கற்பாற்றென்பது பெற்றாம். பெறவே, முன்னர்த் தீக்கையுற்றுச் சிவாகமங்களை ஓதி அதன்பின் ஏனை மூன்றுபாதங்களை ஆராயும் நூன்முறையே கேட்டு அவ்வாறொழுகி மனந்தூயராய் நித்தியாநித்திய உணர்வு தோன்றிப் பிறவிக்கு அஞ்சி வீடுபேற்றின் அவா மிக்குண்டாயவழி, அவர்க்கு இந்நூல் உணர்த்துகவென்பது போந்ததெனக் கொள்க.

இப்பாயிரப்பொருள் நூலிறுதியில் "எந்தை சனற்குமரன்" என்னும் வெண்பாவாற் பெறப்படுதலின், ஈண்டுங்கூறுதல் கூறியது கூறலாம் பிறவெனின்,—ஆகாது ; "எந்தைசனற் குமரன்" என்பதனாற் பெறப்பட்டதனையே மாணாக்கர்க்கு நூன்முகத்து உணர்த்துதற் பொருட்டு ஈண்டுத் தந்துரைத்ததாகலான் என்பது. மிருகேந்திரத்து

இறுதியிற் கூறும் வரலாற்றினை நாராயணகண்ட ஆசிரியர் நூன் முகத்துத் தந்துரைத்ததூஉம் இக்கருத்தேபற்றி யென்க.

இந்நூல் நந்தியெம்பெருமான் பெறுதற்கு வரலாறென்னை யெனின்,— கூறுதும். மாசங்கார முடிவின்கண் உலகங்களை மீளப் படைத்தற்பொருட்டுப் பரமான்மாவாகிய பரமசிவத்தினுடைய பரா சத்தி குடிலையை நோக்கியவழி, வேதாகமங்கள் குடிலையினின்று நாத வடிவாயும், அதன்பின் விந்துவடிவாயும், அதன்பின் அக்கர வடிவாயும் முறையே தோன்றின. பின் அவற்றைச் சொற்றொடர்ப்படுத்துச் செய்யுளாக்கிப் பிறர்க்கு அருளிச்செய்தற்பொருட்டு, பரமசிவன் ஈசானம் முதலிய பஞ்சப்பிரம மனுக்களாகிய சத்திகளை திருமுடி முதலிய அவயங்களாகச் சகளநிட்களத் திருமேனிகொண்டருளிச் சதாசிவ மூர்த்தியாய்நின்று, தற்புருடம் முதலிய நான்கு திருமுகங் களான் வேதங்களைத் தோற்றுவித்து, வேதங்களை அனந்ததேவர் வழி யானே பிரமனுக்கு அருளிச்செய்து, சிவாகமங்களைப் பிரதிசங்கிதை முறையானே பிரணவர் முதலிய பதின்மரும் மகாருத்திரர் முதலிய பதினெண்மருமாகிய இருபத்தெண்மருக்குஞ் சிவபேதம் உருத்திர பேதமெனப்பகுத்து ஒரோவொன்று ஒவ்வொருவருக்கு அருளிச் செய்து, பின்பு மகவுகமுறையானே அவ்விருபத்தெட்டினையும் வித்தி யேசர் எண்மரின் முதல்வராகிய அனந்ததேவர்க்கு அருளிச்செய்தான். அவற்றை அனந்ததேவர் நூற்றுப்பதினெட்டு உருத்திரரின் முதல்வ ராகிய சீகண்டருத்திரருக்கு அருளிச்செய்தார். அவற்றைச் சீகண்ட ருத்திரர் கணங்கட்குந் தேவர்க்கும் முனிவர்க்கும் அளித்தற்பொருட்டு முதற்கண் நந்தியெம்பெருமானுக்கு அருளிச்செய்தார்.

அங்ஙனம் ஆகமங்களெல்லாங் கேட்டருளிய நந்தியெம்பெருமான் சீகண்ட முதல்வரை வணங்கி நின்று; "சிவாகமந்தோறுஞ் சரியை முத லிய நாற்பாதங்களுஞ் சிறுபான்மை வேறுவேறாகக் கூறப்பட்டன. அவற்றுள், உண்மையாவது இதுவென்றருளிச் செய்யவேண்டும்," என்று இரந்துவிண்ணப்பஞ் செய்துவினவியவழி, சீகண்டருத்திரமுதல் வர் கருணைகூர்ந்து "நன்றேவினவினாய்; அனந்ததேவர் எமக்கருளிச் செய்தவாறே கூறுகின்றோம்; கேட்பாயாக" என்றருளி, கற்பந் தோறும் படைப்பு வேறுபாடுங் கேட்போர் கருத்து வேறுபாடும் பற்றி அவற்றிற்கு இயையச் சரியைமுதலிய மூன்றுபாதங்களும் ஆக

மங்களில் வெவ்வேறாகக் கூறப்பட்டன. ஆகலான், அவற்றுள் எவ்வாகமத்தின் வழி யார் தீக்கைபெற்றார், அவ்வாகமத்தின்வழி அவரொழுகற்பாலர்.

இனி, ஞானபாதமாவது பொருட்டன்மை உணர்த்துவ தாகவின், அது பலதிறப்படுதல் பொருந்தாமையின், அவையெல்லாந் தூலாருந்ததி முறைபற்றிக் கூறப்பட்டனவன்றி மாறுகோளல்ல வென்பது வகுத்துணர்த்துதற்பொருட்டு, இரௌரவாகமத்துட் பன்னிரு சூத்திரத்தாற் கூறப்பட்டது சிவஞானபோதம் என்பதோர் படலம். அது கேட்டார்க்கு எல்லாவாகமப் பொருள்களும் மாறுகோளின்றி இனிது விளங்குமெனக்கூறி, அச்சிவஞானபோதத்தை நந்தியெம்பெருமானுக்கு அருளிச்செய்தார்.

நந்தியெம்பெருமானும் அதுகேட்ட துணையானே எல்லா ஐயமும் நீங்கி மெய்ப்பொருள் தெளிந்து பின்னர்த் தம்மாணாக்கர் பல்லோருள்ளுஞ் சிறந்த சனற்குமார முனிகட்கு அருளிச்செய்தார். அவர் தம் மாணாக்கர் பல்லோருள்ளுஞ் சிறந்த சத்தியஞானதரிசனிகளுக்கு அருளிச்செய்தார். அவர் தம்மாணாக்கர் பல்லோருள்ளுஞ் சிறந்த பரஞ்சோதி மாமுனிகட்கு அருளிச்செய்தார். அவர் தமிழ்நாடு செய்த தவத்தானே திருவெண்ணெய் நல்லூரில் அவதரித்தருளி மெய்யுணர்வின் முற்றுப்பேறுடையராய் எழுந்தருளியிருந்த மெய்கண்டதேவர்பால் வந்து, சிவஞானபோதத்தை நல்கி, "இதனை ஈண்டுள்ளோர் உணர்ந்து உய்தற்பொருட்டு மொழிபெயர்த்துச் செய்து பொழிப்புரைக்க" என்றருளி, பொழிப்புரைக்குமாறுஞ் சத்தியஞான தரிசனிகள்பால் தாங்கேட்டவாறே வகுத்தருளிச்செய்து நீங்க, அவரும் அவ்வாறே மொழிபெயர்த்துப் பொழிப்புரையுஞ் செய்தருளி, தம்முடைய மாணாக்கர் பல்லோருள்ளுஞ் சிறந்த அருணந்திகுரவர்க்கு அளித்தருளினர். இஃது இந்நூல் வந்த வரலாறெனக் கொள்க.

பொழிப்புரையை வடநூலார் வார்த்திகமென்பர். பொழிப்பெனினுங் காண்டிகையெனினும் ஒக்கும். பொழிப்புரை பிண்டப்பொழிப்பெனவும், கண்ணழித்துரைக்கும் பொழிப்புரையெனவும் இருவகைப்படும். அவற்றுள், இது கண்ணழித்துக் கடாவிடைகளான் உரைக்கும் பொழிப்புரையென உணர்ந்துகொள்க. இனி, ஆசிரியர்

வார்த்திகப்பொழிப்பு உரைச்செய்யுளானும் பாச்செய்யுளானுஞ் செய்யப்படுமென்னும் வடமொழிமதம்பற்றி ஈண்டுக் கருத்துரையும், மேற்கோளும், ஏதுவும் உரைச்செய்யுளான் உரைத்தார்; உதாரணம் பாச்செய்யுளான் உரைத்தார்.

இச்சிவஞானபோதத்து முன்னாறு சூத்திரங்களானே பெத்தத்தில் நின்ற நிலைபற்றி இலக்கணங் கூறுதலின், அவை பொதுவியல்பெனவும், பின்னாறு சூத்திரங்களானே முத்தியில் நின்ற நிலைபற்றி இலக்கணங் கூறுதலின், அவை சிறப்பியல்பெனவுமாம். இனிப் பொதுவியல்பு உணர்த்தும் நூல்கள் பொதுவெனவுஞ் சிறப்பியல்பு உணர்த்தும் நூல்கள் சிறப்பெனவுங் கூறப்படும். சிறப்பியல்பு சகசமாயுள்ளதாகலின், உண்மையெனவும் படும். பொதுவியல்பு அளவைமுகத்தானும் இலக்கண முகத்தானுங் கூறப்பட்டுக் கேட்டல் சிந்தித்தலென்னும் இருதிறத்தான் உணரப்படும். சிறப்பியல்பு சாதனமுகத்தானும் பயன் முகத்தானுங் கூறப்பட்டுக் கேட்டல், சிந்தித்தல், தெளிதல், நிட்டையென்னும் நான்கு திறத்தான் உணரப்படும். கேட்டல், சிந்தித்தல், தெளிதல், நிட்டைகளே வடநூலார் முறையே சிரவணம், மனனம், நித்தியாசனம், நிட்டை என்ப. "பல் பொருட்குப் பொதுவாகிய விலக்கணம் பொதுவியல்பு" என்றும் "ஒரு பொருட்கே யுரிய விலக்கணஞ் சிறப்பியல்பு" என்றும், அளவை நூலாற் கூறப்படும் பொதுவியல்பு சிறப்பியல்பு வேறு; "தடத்தலக்கணஞ் சொரூபலக்கணம்" என்னும் வடசொற்குப் பரியாயப் பெயராய் ஈண்டுக் கூறப்படும் பொதுவியல்பு சிறப்பியல்பு வேறெனத் தெரிந்துணர்ந்துகொள்க. இவ்விருவேறு வகைக்குஞ் சொல்லொருமை மாத்திரையே பற்றி மயங்கற்க.

சிவஞானபோதம் இங்ஙனம் பொதுவியல்புஞ் சிறப்பியல்பும் ஒருங்கு உணர்த்தலின், முழுமுதல்நூலாம். இனிச் சிவஞானசித்தி, சிவப்பிரகாசம் என்பன முறையே இவ்விலக்கணம்பெற்ற வழிநூலும் புடைநூலுமாம். மொழிபெயர்த்துக்கூறும் நூல்களில் ஞானமிர்தம் முதலிய பெரும்பாலும் பொதுவியல்பு மாத்திரையே கூறுதலிற் பொதுநூலாம். திருவுந்தி, திருக்களிற்றுப்படி முதலியன சிறப்பியல்பு மாத்திரையே கூறுதலின் உண்மை நூலாமென்பது. வடமொழியினும் பவுட்கரம், மிருகேந்திரம் முதலிய சிவாகமங்கள் பெத்

தத்தில் நின்ற நிலைபற்றி இலங்கணங் கூறுதலின், அவை பொது நூலாம். சருவஞானோத்தரம் முதலிய சிவாகமங்கள் முத்தியில் நின்ற நிலைபற்றி இலக்கணங் கூறுதலின், அவை உண்மைநூலாம். உபநிடதங்களினுஞ் சுபாலம் முதலிய உபநிடதம் உலகந் தோன்றி யொடுங்கும் முறைமையுந் தோற்றியொடுக்குதற்கு ஒருகருத்தா உண் டென்னும் மாத்திரையும் போல்வன உணர்த்துதலின் பொதுவெனப் படும். சாந்தோக்கியம் முதலிய உபநிடதங்கள் இருவகையுங் கூறு தலின் பொதுவுஞ் சிறப்புமாம். அதர்வசிகை, அதர்வசிரம், சுவேதாச்சுவ தரம் முதலிய உபநிடதங்கள் முத்திநிலையேபற்றிச் சாதனமும் பயனுங் கூறுதலின், உண்மையெனப்படும். அதர்வசிகை முதலிய உப நிடதங்களிற் கூறும் பொருள்களுஞ் சிவாகமப்பொருளை நோக்கும் வழிச் சூத்திரமும் பாடியமும் போலத் தூலாருந்ததி முறையாம். இக்கருத்துப் பற்றியே வேதம் பொதுநூலெனவும் ஆகமஞ் சிறப்பு நூலெனவுந் திருமந்திரம் முதலியவற்றிற் கூறப்பட்டன என்றுணர்க. "வேதாந்தத் தெளிவாஞ் சைவசித்தாந்தத் திறனிங்குத் தெரிக்க லுற்றாம்'' என்றதூஉம், இம்முறை தெரிந்து கோடற்கென்க. இவ் வுண்மையுணர்ந்து பொருள்கோடலே உரைகோள் முறையாம். இனி இவ்வுண்மையுணர்ந்து பொருள் கொள்ளமாட்டாதார் உபநிட தங்கள் ஒன்றோடொன்று முரணுமெனவும், உபநிடதமுஞ் சிவாகமமுந் தம்முள் முரணுமெனவும், சிவாகமத்துள்ளும் ஒன்றோடொன்று முரணுமெனவும் மயங்கி, ஒன்றன் பொருளைபற்றி ஏனையவற்றை இகழ் வர். அற்றேலஃதங்ஙனமாக; வேதாந்த சித்தாந்த நூல்கள் அங்ஙனம் இருவேறு வகைப்படுத்துக் கூறவேண்டியதென்னை? சிறப்பியல்பு ஒன்றே கூறவமையுமாலோவெனின்,— அமையாது; ஆன்மாக்கள் அங்ஙனந் தத்தமக்குரிய சோபான முறையின் அறிந்துவருந் தன் மைக்கேற்பத் தூலாருந்ததி நியாயமாக உணர்த்தவேண்டுமாகலின் என்க.

"புறச்சமய நெறிநின்று மகச்சமயம் புக்கும்
புகன்மிருதி வழியுழன்றும் புகலுமாச் சிரம
வறத்துறைக ளவையடைந்து மருந்தவங்கள் புரிந்து
மருங்கலைகள் பலதெரிந்து மாரணங்கள் படித்துஞ்

சிறப்புடைய புராணங்க ளுணர்ந்தும் வேதச்
சிரப்பொருளை மிகத்தெளிந்துஞ் சென்றூற் சைவத்
திறத்தடைவ ரிதிற்சரியை கிரியா யோகஞ்
செலுத்தியபின் ஞானத்தாற் சிவனடியைச் சேர்வர்"

என்றதூஉம் இவ்வியல்பு நோக்கியே யென்க.

இங்ஙனம் இவ்விருவகை இயல்பும் வேறுவேறு கூறும் ஆகமங்களின் பொருளொருமை உணரமாட்டாது, ஒரோவொன்றேபற்றி ஐக்கியவாதம்முதற் பலதிறத்தான் வேறுபட்டுத் தம்முள் மயங்குவார்க்கு அங்ஙனம் மயங்காது, அவற்றின் பொருளொருமை உணர்த்துதற்கெழுந்தது இச்சிவஞானபோதம் என்றறிக. இஃதறியாதார் எல்லா ஆகமப்பொருளையும் பன்னிருசூத்திரத்தால் தொகுத்து விளக்குதற்கு எழுந்தது இந்நூலென்றுரைப்ப. மிருகேந்திரத்தின் முதற்கண்ணதாகிய ஒரு சூத்திரத்தானே எல்லாவாகமப் பொருளுந் தொகுத்தெடுத்து விளக்கப்பட்டனவென்பது ஆண்டே அறியக்கிடத்தலானும், மற்றும் அங்ஙனந் தொகுத்துக்கூறும் ஆகமங்கள் பலவுளவாதலானும், அதுபற்றி இதன்கண் போந்த விசேட மின்மையானும், "நாடிக்கண்டு மயர்வற வளித்த சிவஞானபோதம்" என்பதற்குத் தாற்பரியம் அதுவாகாமையானும், அவர் உரைப்பனவெல்லாம் போலி யென்றொழிக. "சிவஞானபோதம்" என்பதும் இக்காரணத்தாற் பெற்ற பெயர். அஃதெவ்வாறென்னில்,—

"......உயர்ஞான மிரண்டா மாறு
மலமகல வகலாத மன்னு போதத்
திருவருளொன் றென்றதனைத் தெளிய வோதுஞ்
சிவாகமமென் றுலகறியச் செப்பு நூலே"

என்பவாகலின், பரஞானம் அபரஞானம் என்றிரண்டுஞ் சிவஞானமெனப்படும். அவற்றுள் பரஞானத்தைப் போதிப்பது எல்லா ஆகமங்கட்கும் பொதுவாகலின், ஈண்டுச் சிவஞானமென்றது—அவ்வபரஞானமாகிய சிவஞானமேயாம். போதித்தல் - அவற்றின் நிச்சயப் பொருள் இதுவென உணர்த்துதலாம். ஆகவே, சைவாகமங்களின் பொருள் நிச்சயம் உணர்த்துவது சிவஞானபோதமெனக் காரணக் குறியாயிற்றென்று உணர்க. இப்பொருள் வடமொழிச் சிவஞான போதத்துப் பன்னிரண்டாஞ் சூத்திரத்தின் பிற்பாதியிற் கூறியவாறு

பற்றி உரைக்கப்பட்டது. சிவஞானமெனப் பொதுப்படக் கூறினுந் தலைமைபற்றி ஞானபாதமே கொள்ளப்படும். ஞானபாதத்திற்குத் தலைமை

"கிரியையென மருவுமவை யாவு ஞானங் கிடைத்தற்கு நிமித்தம்"

என்பதனாலறிக.

அற்றேல், ஏனை மூன்றுபாதப் பொருள்களை ஆராயும் நூல்கள் யாவையெனின்,—அவை சோமசம்பு சிவாசாரியர் செய்த கிரியாகாண்டக் கிரமாவலி முதலியவாமென்க. அற்றேல், ஞான பாதப் பொருளாராய்ச்சி நூலும் பிற்காலத்து ஆசிரியன்மாரே கூறவமையும்; ஆகமத்துக் கூறவேண்டாம் பிறவெனின்,—ஆசிரியன்மார் அவை அனுட்டிக்குமுறை ஆராயப் புகுந்தாரன்றி அவற்றிற்குப் பொருளொருமைகூறப் புகுந்தாரல்லர்; "அவை சிறுபான்மை தம்முள் வேறுபாடுடைய" என்றும், "யார் யார் எவ்வாகமத்தின் முறையே தீக்கைபெற்றார் அவரவர் அவ்வாகமத்தின் முறையே அநுட்டிக்க" என்றும், "எக்கோயில் எவ்வாகமத்தின் முறை பிரதிட்டை செய்யப்பட்டது, அக்கோயிலுக்கு அவ்வாகமத்தின் முறையே பூசை விழா முதலிய நடாத்துக" என்றும், "மாறிச் செய்யிற் குற்றம்" என்றும், ஆகமங்களே கூறுதலின், அவற்றிற்குப் பொருளொருமை காட்டலாகாமையின். கற்பபேதத் தானும், ஆன்மாக்கள் கருத்து வேறுபாட்டானும், அவ்வவற்றிற்கு ஏற்பச் சிறுபான்மை தம்முள் வேறுபடக் கூறுதல் பொருத்தமுடைத்தென்பதுபற்றி அவற்றைக்கூறும் ஆகமங்கள் சிறுபான்மை அங்ஙனம் வேறுபட நிகழ்ந்தன.

இனி, ஞானபாதமாவது பொருட்டன்மை புணர்த்துவதாகலின், ஆண்டு வேறுபடுதல் பொருந்தாதாயினும் ஆன்மாக்களின் மலபரிபாக தாரதம்மியத்திற்கேற்பத் தூலாருந்ததி முறைமைத்தாக உணர்த்துதல் மரபென்பதுபற்றி, அங்ஙனம் கூறும் ஆகமங்களை நோக்குவோர், அவை ஒன்றேடொன்று முரணுவனபோலக் கருதி மயங்குவர். அங்ஙனம் மயங்காமைப்பொருட்டு ஞானபாதப் பொருள்களையெல்லாம் பொது, உண்மையென இருவகைப்படுத்து, ஆராய்ச்சிசெய்து ஒருதலையானுணர்த்த வேண்டுதலின், அஃது ஏனையோரால் ஆகாமை

யின், வேண்டுமென்க. அங்ஙனம் முரணுவனபோலத் தோன்றுவன யாவையெனின்,--சுவாயம்புவம் முதலியவற்றின் பதார்த்தம் ஏழென்றலும், பவுட்கரம் முதலியவற்றின் ஆறென்றலும், பாராக்கியை முதலியவற்றின் ஐந்தென்றலும், சருவஞானோத்தரம் முதலியவற்றின் நான்கென்றலும், இரவுரவம், மிருகேந்திரம் முதலியவற்றின் மூன்று என்றலும் போல்வனவாமென்க. அவையெல்லாம் மூன்று என்றதனுள் அடங்குதலின், முப்பொருளென்றலே எல்லா ஆகமங்கட்குந் துணிபெனக்காட்டுதல் போல்வன பொருளொருமை கூறுதலாமென்பது.

மங்கலவாழ்த்து:—"காமிகம் முதலிய சைவாகமங்களுள் ஞான பாதப்பொருளின் இகலறுத்து அவற்றின் பொருளுண்மை போதித்தற்கு இரவுரவாகமத்தினெழுந்த சிவஞானபோத நூலினைத் தமிழுலகம் உய்தற்பொருட்டு மொழிபெயர்த்துச்செய்து பொழிப்புரைப்பான் எடுத்துக்கொண்ட ஆசிரியர் சாக்கிரத்தே அதீதத்தைப் புரியுந் தமக்கு இடையூறு சிறிதும் அணுகாமை அறிந்தாராயினும் ஆன்றோர் ஆசாரம் பாதுகாத்தற் பொருட்டும், மாணுக்கர்க்கு அறிவுறுத்தற் பொருட்டும், முதற்கண் இடையூறு நீக்குதற்குரிய கடவுளை வாழ்த்துவதாகிய மங்கலவாழ்த்துக் கூறுகின்றார். வாழ்த்தும், வணக்கமும், பொருளியல்பு உணர்த்தலுமென மங்கலவாழ்த்து மூவகைப்படும். இது பொருளியல்பு உரைத்ததெனக் கொள்க.

" கல்லா னிழன்மலை
வில்லா ரருளிய
பொல்லா ரிணைமலர்
நல்லார் புனைவரே "

நந்தி பெருமானுக்கு இந்நூல் அறிவுறுத்தருளிய முதலாசிரியரென்பது உணர்த்துதற்குக் 'கல்லால்நிழல்' என இடங்கூறினர். ஆண்டெழுந்தருளியிருந்து சிவாகமப்பொருள்கள் ஒன்றோடொன்று முரணுவனவாக மலைந்து வினவிய நந்தி பெருமானுக்கு இந்நூலான் மலைவு தீர்த்தருளினரென்பார் 'மலைவில்லார்' என்றார். இல்லார்-இல்லாகச் செய்தாரெனப்பண்படியிற் பிறந்த வினைப்பெயர். இனி 'மலை வில்லார்' என்பது மேருவை வில்லாக வுடையாரெனக்கொண்டு, கல்லால் நிழலின் எழுந்தருளியிருந்து வீடுபேறும், மலையை வில்லாக வளைத்துப்

பகைவரை வென்று போகமும் அளித்தருளியோரெனினும் அமையும். எனவே ஐந்தொழிற்கும் வினைமுதலென்ற வாறாயிற்று.

'அருளிய' என்பது செய்யியவென்னும் வாய்பாட்டு வினையெச்சம்; "உண்ணியபுகின் " என்றாற்போல. அது 'புனைவர்' என்னும் பிற வினை முதல் வினைகொண்டு முடிந்தது. அருளுதல்-புனைந்தமைபற்றிக் கல்லால் நிழலில் வீற்றிருந்து மலைவு தீர்த்தருளிய ஆசிரியர் கருணை மீக்கூர்தல். அருளிய பொல்லாரெனப் பெயரெச்சமுடிபாக வைத்துரைத்தலும் ஒன்று. பொள்ளார் பொல்லாரென மரீஇயிற்று; சுயம்புமூர்த்தி யென்றதாம்.

இணைமலர் - பண்புத்தொகை நிலைக்களத்துப் பிறந்த அன் மொழித்தொகையாய்த் திருவடியை உணர்த்திற்று. இணையென் பதனைத் திருவடிக்கடையாக்கி இருபெயரொட்டாகுபெயர் என்றலு மொன்று. இவற்றியல்பெல்லாஞ் சூத்திரவிருத்தியின் உரைத்தாம்; ஆண்டுக் காண்க. புனைவரென்பதற்கேற்பத் திருவடியை மலராக உருவகஞ் செய்தாரென்றலும் ஒன்று. நல்லார் - கேட்டுச் சிந்தித்துத் தெளிந்து முதிர்ந்தோர். புனைதல் - தாடலை போலடங்கி நிற்றல். ஏகாரம் ஈற்றசை; தேற்றமெனினும் அமையும்.

இப்பாட்டு வஞ்சித்துறை. இது 'கல்' என்பது முதல் 'ஏ' என்பது இறுவாய்ப் பன்னிருசொற்களாற் கூறவே, இந்நூல் பன்னிரு சூத்திரத் தாற் செய்யப்பட்டதெனவும், அவற்றுள் மும்மூன்று சொற்கள் ஒவ்வோரடியாக வைத்து நான்கடியாகக் கூறவே, இந்நூலும் அவற்றுள் மும்மூன்று சூத்திரம் ஒவ்வோரியலாக வைத்து நான்கியலாற் செய்யப் பட்டதெனவும், அவற்றுள் முன்னீரடியும் ஒருவினைமுடிபும் பின்னீரடி யும் பிறிதோர் வினைமுடிபுமாக இருவகைப்படுத்துச் செய்யவே, முன் னாறுசூத்திரம் ஓரதிகாரமும் பின்னாறுசூத்திரம் வேறோர்அதிகாரமு மாக இந்நூல் இரண்டதிகாரத்தாற் செய்யப்பட்டதெனவும், குறிப் பான் உணர்த்தியவாறு காண்க. இரண்டாம் ஒத்தின் முதற்சூத்திரம் "இதுவுமது" என முதலோத்தின் இறுதிச் சூத்திரத்தோடு மாட் டெறியப்படுவதென்பதுஉணர்த்துதற்கு 'மலைவு'என்பதனை ஈரடியினுஞ் சாரவைத்தார். 'கல்லால் நிழல்' என முதலடியின் இடங்கூறவே முத லோத்துப் பிரமாணங் கூறுவதென்பதூஉம், இரண்டாமடியில் 'மலை

வில்லா ரருளிய' எனச் செய்கை கூறவே இரண்டாம் ஒத்திலக்கணங் கூறுவதென்பதூஉம், மூன்றாமடியிற் 'பொல்லார் இணைமலர்' எனத் திருவடிகூறவே மூன்றாம்ஒத்துச் சாதனங் கூறுவதென்பதூஉம், நாலாமடியில் 'நல்லார் புனைவரே' எனப் பேறுகூறவே நாலாம்ஒத்துப் பயன் கூறுவதென்பதூஉம், குறிப்பாற் பெறப்படும். பிறவும் இவ்வாறு ஓர்ந்துணர்க. இங்ஙனம் நூல்நுதல் பொருளெல்லாங் குறிப்பான் தன்னகத்தடக்கி நிற்றல் மங்கலவாழ்த்து இலக்கணமென்று உணர்க. இவ்வாறு நால்வகைப்படுத் தோதியது இந்நூலென்பது,

> "ஈண்டளவும் பொருளியல்பும் வேண்டுஞ் செய்தி
> முறைமைகளும் பெத்தமொடு முத்தி யெல்லாம்"

என வழிநூலாசிரியர் வகுத்தோதிய வாற்றானுங் கண்டுகொள்க."

அவை யடக்கம் : தம்மை யுணர்ந்து தமையுடைய தன்னுணர்வா
ரெம்மை யுடைமை யெமையிகழார் — தம்மை
யுணரா ருணரா ருடங்கியைந்து தம்மிற்
புணராமை கேளாம் புறன்.

"இவ் வவை யடக்கத்தானே அவ்விறைவனால் இயம்பப்படும் நூலுணர்ந்தாரது உயர்வும் ஏனைச் சமயநூலுணர்ந்தாரது இழிவும் உணர்த்தப்பட்டன. ஈண்டுத் 'தம்மை யுணர்ந்து தமையுடைய தன்னுணர்வார்' என்றது, அத்துவித சித்தாந்த சைவரை. 'தம்மை யுணரார்' என்றது அகம், அகப்புறம், புறம், புறப்புறமென்னும் நால்வேறுவகைப் பரசமயத்தாரை.

அவர் 'உடங் கியைந்து தம்மிற் புணராமை'யாவது :— பிறவிக் குருடர் பலர் குழீஇக்கொண்டு வேழங் காண்டல்விருப்பான், அது நின்றுழிச் சென்று கையினால் ஒவ்வோர் உறுப்பினைத் தைவந்து வேழமாவது முறம்போல்வது என்றும், உரல்போல்வது என்றும், உலக்கைபோல்வது என்றும், மலைபோல்வது என்றும், தம்முள் மாறுகொண்டு ஒருவரையொருவர் மறுத்துக் கலாம்விளைத்தல்போல, சித்தாந்த சைவநெறிநின்று ஆசான் திருவருள்பெறாதார் தத்தம் உணர்விற்கேற்பச் சமய நூல்களின் ஒவ்வொன்றினை ஆராய்ந்து அவற்றிற் கூறும் ஏகதேசப் பொருள்களைபற்றி ஒருவரையொருவர் மறுத்துத் தம்முள் மாறுகொண்டு கலாம்விளைத்தல். அங்ஙனம் கலாய்க்கின்றுழிக்

கண்ணுடையான் ஒருவன்நோக்கி, இவர் செவிமுதலிய ஒவ்வோர் உறுப்புக்களைபற்றிக் கூறிக் கலாம் விளக்கின்றாரெனவும் வேழத்தின் இயல்பு வேறெனவுந் தெரிந்துணர்ந்து, அவர்க்கு அதனை யுணர்த்தலுறின், கொடிறும் பேதையும் போலத் தாம்கொண்டதேபற்றி அவனையுந் தம்முள் ஒருவனாக வைத்து இழித்துக்கூறி மாறுகொண்டிடலேயன்றிப் பொருளெனக் கொள்ளமாட்டார். அதுபற்றி அவன் வெகுளாது இவர் இயல்பு இதுவென நகையாடி ஒழிந்துவிடும். அதுபோல ஒவ்வொரு சமய நூல்பற்றி அங்ஙனம் பிணங்குவாரை அவையெல்லாம் ஒவ்வோர் ஏகதேச இயைபுபற்றிக் கூறினவாகலான், அவைபற்றிப் பிணங்கற்க எனவும் பொருட்டன்மை வேறெனவும் யாம் இந்நூலான் உணர்த்தப்புகின், அவர் அதனைக் கொள்ளமாட்டாத பயிற்சி வயத்தான் தாம் கொண்டதேபற்றி எம்மையுந் தம்முளொருவராக வைத்து இகழ்ந்து உரைப்பாராகலின், அவ்வழி அவர்வெள்ளறிவு அதுவென்று ஒழிவதேயன்றி அதனைக் கொள்ளாமென்பார் 'கேளாம்புறன்' என்றார். கேட்டல்—பொருளாகக் கோடல். "அது ஊறுகேளாது" என்பதனுனும் "கேளாரும் வேட்ப மொழிதல்" என்பதனுனும் அறிக.

புறன்-புறச்சமயம்பற்றி இகழ்ந்துரைக்கும் மொழியும் புறங்கூற்றுமொழியும் என்பது இரட்டுற மொழிதலாற் கொள்க. புறங்கூற்றுமொழியாவது—புறச்சமயிகளல்லாத பாடாணவாதசைவர் முதலியோர் முன்னன்றிப் புறத்தேயிகழ்ந்து கூறும் மொழி."

மலர்தலையுலகிற் பிறவிருளின் நீக்கிப் பொருள்களை கண்ணுக்குக் காட்டுதற்குப் பன்னிருவகைத்தாய ஞாயிறுபோல அனாதி மூல மல இருளின்நீக்கிச் சிவபரம்பொருளை ஆன்மாவிற்குக் காட்டி அனுபூதியின் நிலைபெறுவித்தற்குப் பன்னிருசூத்திர ஞானஞாயிறாய் எழுந்தது இம்முதல்நூலென்க. முழுமுதற் பொருளாய்ப் பரமவாத்தனான பரமசிவன் திருவாய்மொழியாய் ஆரிய வேதோபநிடத சாரமனைத்தும் ஒருங்குதிரண்டதூஉம், காமிகம் முதலிய சைவாகம ஞானபாத சாரமனைத்தும் ஒருங்கு திரண்டதூஉம், தமிழ்வேத சாரமனைத்தும் ஒருங்கு திரண்டதூஉமாகி, இறை, உயிர், மலமென்னும் முப்பொருளின் தடத்த சொரூப இயலெல்லாம் ஐயவிபரீதமகற்றி அங்கை நெல்லிக்கனிபோல விளக்குதலின் தானே தனக்கு ஒப்பாய் நிற்பது இச்சிவஞானபோத முதல்நூல். அது,

"வேதம் பசுவதன்பான் மெய்யா கமநால்வ
ரோதுந் தமிழதனி னுள்ளுறுநெய் - போதமிகு
நெய்யி னுறுசுவையா நீள்வெண்ணெய் மெய்கண்டான்
செய்ததமிழ் நூலின் றிறம்"

என்னும் ஆன்றோர் திருவாக்கானுமறிக. இது எல்லாச் சமயங்களையுந் தாரதம்மியமாகச் சோபான முறையான் தன்னகத்தடக்கி அத்துவித சைவசித்தாந்தம் போதிப்பது. இது கூறும் அத்துவிதஞ் சுத்தாத்து விதம்.

"பொய்கண்டார் காணாப் புனிதமெனு மத்துவித
மெய்கண்ட நாதனருண் மேவுநா ளெந்நாளோ"

என்றார் தாயுமான யோகியாரும். பொய்கண்டார் என்றது - உபநிட தங்களின் முடிவு கேவலாத்துவித மெனவும், விசிட்டாத்துவித மெனவும், பாவனாத்துவித மெனவுங் கண்ட ஏனையாசாரியர்களை.

சிவஞான போத வியாக்கியானம்

வடமொழிச் சிவஞானபோத நூற்கு வடமொழி வல்ல ஆசிரியர் பலர், வடமொழியில் வியாக்கியானங்கள் பற்பல செய்திட்டார். வடமொழியிற் சிவாக்கிரயோகிதேசிகர் இயற்றிய இதன் வியாக்கி யானம் மிக விரிந்தது. ஏனையோர் செய்த வியாக்கியானங்கள் மிகச் சுருங்கின. இதன் வடமொழிச் சூத்திர பதார்த்தங்களைச் சிவசம வாதசைவருஞ் சிவாத்துவிதசைவரும் ஆண்டாண்டு நலிந்து பொருள்கொண்டு தத்தஞ்சமய முடிபாக்கிச்செய்த வியாக்கியானங் களுஞ் சிலவுள. அவை போலி வியாக்கியானங்களாதலை ஆசிரியர் சிவஞானயோகிகள் சிவஞானமாபாடியத்துள் ஆண்டாண்டு எடுத்து விளக்கினர்.

சிவஞான மாபாடியம்

செந்தமிழ்நாட்டிற் பொதியமலைச்சார்பின் கண்ணதாய் விளங்கும் பாவநாசத் திருப்பதிப்பாலதான விக்கிரமசிங்கபுரத்தில் அகத்திய முனிவர் வரத்தால் திருவவதாரஞ்செய்து திருக்கயிலாயபரம்பரை மெய்கண்டசிவாசாரியர் சந்ததிக்கோர் ஞானபானுவாய் விளங்குந் திருவாவடுதுறை நமச்சிவாயதேசிக பரம்பரை தழைத்து இனி

தோங்க, அக்குருபரம்பரையில் விளங்கிய வேலப்பதேசிக ஞான் சாரியர்பாற் சிவஞானபோத ஞானோபதேச அனுக்கிரகம் பெற்று, வடமொழி தென்மொழி மாப்பெருங் கடலெலலாம் நிலைகண்டுணர்ந்து, அத்துவித சிவஞானானுபூதி கைகண்டு, மெய்கண்ட சிவஞானபோதப் பிரதிட்டாசாரிய சுவாமிகளாய் விளங்கிய சிவஞான யோகிகள், தென் மொழிச் சிவஞானபோத நூற்குச் சிற்றுரையெனப்படும் லகுவியாக்கி யானமுஞ் சிவஞானபாடியமெனப் பெயரிய மாபாடியமும் அருளிச் செய்தார். சிவஞானயோகிகள் சிவஞானபோதத்தின் உள்ளுறை உண் மைக் கருத்துக்களெல்லாம் நாடிக்கண்டு மலைவறத் தெள்ளித்தெளித் துச் சிவஞானமாபாடியம் அருளிச்செய்தலின், இம்மாபாடியத்திற் பொருளெனக் கொள்ளப்பட்டன வெல்லாம் மெய்ப்பொருளாய்ப் பொருளல்லவெனத் தள்ளப்பட்டன வெல்லாம் பொய்ப்பொருளாய் ஒழிதல் ஒருதலையென்க.

சிவஞானமாபாடியகாரர் சிவஞானபோத உபோற்காதம் முதலிய பிரகரணங்களினும் சூத்திர அதிகரணங்களினும் ஆண்டாண்டு இயைபுபற்றி எடுத்துத் தடைவிடைகளான்மிகவிரித்தருளிய பலவகைத் தத்துவ நுண்பொருட் பகுதிகளும், பலகலைப் பகுதிகளும், அலகில வென்க. "தன்னாற் கூறப்படும் பொருளும், அதன்கண் ஐயப்பாடும், அதற்குப் பிறர்கூறும் பக்கமும், அதனை மறுத்துரைக்குஞ் சித்தாந்தத் துணிபும், இயைபுமென்னும் இவற்றது நிலைக்களம் ஈண்டு அதிகரண மெனப்படும். இவற்றுள், இயைபு-நூலியைபும், அதிகாரவியைபும், ஒத்தியைபும், பாதவியைபும், அதிகரணவியைபுமென ஐவகைப்படும்." இவ்வியைபினை வடநூலார் சங்கதியென்பர்.

### சிவஞான சித்தியார்

இது சிவஞானபோத முதல்நூற்பொருள் பிற்காலத்தார்க்கு இனிது விளங்குமாறு விரித்தல் யிப்பாற் சகலாகம பண்டிதர் என்னுங் காரணப்பெயருடைய அருணந்திசிவாசாரியர் இயற்றிய வழிநூல். இவ்வருணந்தி சிவாசாரியர் மெய்கண்ட சிவாசாரியர் முதன்மாணக்கர்; இது மேலும் உரைத்தாம்.

சிவஞானசித்தி சிவாகமார்த்தங்களுக் கெல்லாம் உரையாணியாய் நிலைபெறுவது. "சிவத்துக்குமேற் றெய்வமில்லை; அதுபோலச் சிவ ஞானசித்திக்குமேற் சாத்திரமில்லை" எனவும்,

"பார்விரித்த நூலெல்லாம் பார்த்தறியச் சித்தியிலே
யோர்விருத்தப் பாதி போதும்"

எனவும், ஆன்றோர் எடுத்துப் போற்றுவராயின், இதன்பெருமை முடிய எடுத்துரைத்தல் யார்க்கும் அரிதென்க. இது பரபக்கஞ் சுபக்கமென இருவகைப்படும்.

அவற்றுள், பரபக்கத்தில் உலகாயதன், சௌத்திராந்திகன், யோகாசாரன், மாத்தியமிகன், வைபாடிகன், நிகண்டவாதி, ஆசீவகன், பட்டாசாரியன், பிரபாகரன், சத்தப்பிரமவாதி, மாயாவாதி, பாற்கரியன், நிரீச்சுரசாங்கியன், பாஞ்சராத்திரி என்னும் பரசமயத்தோர் மதங்களும், அவற்றின் மறுப்புக்களும் கூறப்படும். இவருள் உலகாயதன் சார்வாகன். சௌத்திராந்திகன், யோகாசாரன், மாத்தியமிகன், வைபாடிகனென்னும் நால்வரும் புத்த நூலோர். நிகண்டவாதி, ஆசீவகனென்னும் இருவரும் அருகனூலோர். இவரெல்லாம் வேதபாகியமான புறப்புறச் சமயத்தோர். பட்டாசாரியன்,பிரபாகரனென்னும் இருவரும் மீமாஞ்சை நூலோர். சத்தப்பிரமவாதி, மாயாவாதி, பாற்கரியனென்னும் மூவரும் ஏகான்மவாதம் போதிக்கும் வியாசநூலோர். நிரீச்சுரசாங்கியன் கபிலநூலோன். பாஞ்சராத்திரி வாசுதேவநூலோன். இவரெல்லாம் வைதிகத்துட்பட்ட சமயத்தோர்.

இனி இதன் சுபக்கத்துக்கு உரைகண்டார் மறைஞான சம்பந்த தேசிகர், சிவாக்கிரயோகி தேசிகர், ஞானப்பிரகாச முனிவர், ஆசிரியர் சிவஞானயோகிகள், நிரம்பவழகிய தேசிகர், சுப்பிரமணிய தேசிகர் முதலியோர். ஸ்வபக்கம் - சுபக்கமென்றாயிற்று.

மறைஞானதேசிகர் உரைமுதற் சுப்பிரமணிய தேசிகர் உரையீறாய் உள்ளனவெல்லாம் மூலத்திற்கேற்பச் சித்தாந்த சைவப் பொருள் போதிப்பனவாம். ஞானப்பிரகாச முனிவருரை மூலத்தோடு மாறுபடப் பொருள்கொண்டு சிவசமவாதம் போதிப்பதாம். ஞானப்பிரகாச முனிவருரை இங்ஙனம் மூலத்திற்கேலாதவாறு சிவசமவாதம் போதித்தல்கண்ட ஆசிரியர் சிவஞானயோகிகள் "சிவசமவாதவுரை மறுப்பு" என அதற்கோர் நியாயகண்டனம் இயற்றியிட்டார். அக்கண்டன வரலாறு சிவசமவாதவுரை மறுப்பின் வரலாற்றின் விளக்கியிட்டாம்; கடைப்பிடிக்க. ஆசிரியர் சிவஞானயோகிகள் இயற்றிய

சிவஞான சித்திப் பொழிப்புரை முதனூற்சூத்திர அதிகாரணக்கூறுபாடு முறையாகத் தெரித்து மூலத்தின் மெய்ப்பொருள் விளக்கி, ஏனேருரைகளை அளக்கும் அளவையாய் நிற்பது. சிவஞானசித்தி யுரைகளுள் இஃதொன்றே மிக அரிதின் உணர்தற்பாலது. சுப்பிரமணியதேசிகர், மெய்கண்டசந்ததிக்கோர் பானுவான திருவாவடுதுறை நமச்சிவாய தேசிகர் மரபின்வந்த ஞானசாரியர். இக்குரவர் தம்மரபிற்குரிய ஞானயோகியாய் விளங்கிய சிவஞானயோகிகள் பொழிப்புரையின் கருத்து இனிது புலப்படுமாறு அவ்வுரைத் திறங்களைத் தழுவிச் சிவ ஞானசித்திக்குப் பதவுரை வரைந்தருளினர்.

## இருபா விருபஃது

இந்நூல் அருணந்திசிவாசாரியார் தமக்குச் சிவஞானபோத உபதேசந் தந்தருளி மலமகற்றி நிட்டை மேவுவித்தருளிய மெய்கண்டதேவர் திருவருள்வண்ணம் உலகங் கைகண்டுய்ய அருளிச்செய்தது. இஃது வெண்பா, அகவல் என்று இருதிறத்தாற் பப்பத்தாய் மெய்ப்பொருள் விரித்தலின், "இருபாவிருபஃது" எனத் திருநாமம் பெற்றது.

## உண்மை விளக்கம்

இந்நூல் மெய்கண்டசிவாசாரியர் மாணக்கருள் ஒருவரான திருவதிகை மனவாசகங்கடந்தார் திருவாய்மலர்ந்தருளியது. இது ஆசிரியரை முன்னிலையாக்கி, சித்தாந்தநூல் கூறுந் தத்துவ ரூபாதிகளின் திறஞ்செப்புவது.

## சிவப்பிரகாசம்

இது மெய்கண்ட சிவாசாரியர் முதன்மாணக்கரான ஆசிரியர் சகலாகம பண்டிதர்பாற் சிவஞானபோதஞ் சிவஞானசித்தி தேர்ந்து சிவானுபவ நிட்டையுற்ற மறைஞானசம்பந்த சிவாசாரியர் உபதேசத்தாற் சிவஞானபோதஞ் சிவஞானசித்தி கைவரப்பெற்ற கொற்றவன்குடி உமாபதி சிவாசாரியர், முதல்நூலான சிவஞானபோதம் வழிநூலான சிவஞானசித்தியென்னும் நூல்களிரண்டின் பொருள் இனிது விளங்குமாறு அவ்விரண்டிற்கும் புடையாக எடுத்தருளிச்செய்தலின், அவற்றின் புடைநூலாய், தன்னை ஓதியுணர்ந்த பக்குவர் அறிவிற் சிவம் பிரகாசிக்கச்செய்தலிற் சிவப்பிரகாசமென்னும் பெயர்த்தாய்

நிலவுஞ் சித்தாந்த ஞானநூல். உமாபதிசிவாசாரியர் தில்லைவாழ் அந்தணர்.

> " அடியார்க் கெளியன்சிற் றம்பலவன் கொற்றங்
> குடியாற் கெழுதியகைச் சீட்டுப் - படியின்மிசைப்
> பெற்றான்சாம் பானுக்குப் பேதமறத் தீக்கைசெய்து
> முத்தி கொடுக்க முறை "

என அம்பலத்தெம்பெருமான் விடுத்த திருமுகங்கொண்டு, திருவருளை வியந்து தொழுது, பெற்றான்சாம்பானுக்கு முத்திகொடுத்தருளிய வித்தக ஞானாசாரியர். வடமொழியிற் பவுட்கராகமவிருத்தி, சதரத்தினாவலி முதலியவும், தென்மொழியில் திருவருட்பயன் முதலிய சித்தாந்த சாத்திரங்களும் திருவாய்மலர்ந்தருளிய திருவருட்செல்வர். இன்னும் இவர் ஞானானுபூதி அற்புத வரலாறுகள் பலவுள.

### திருவருட்பயன்

இது கருவிருட்பந்தந் தீர்ந்து உலகம் திருவருட்பயன் மேவ உமாபதி சிவாசாரியர் கடைப்பிடித்து இயற்றிய சித்தாந்த ஞானநூல். இது பதிமுதுநிலை, உயிரவைநிலை, இருண்மலநிலை, அருளதுநிலை, அருளுருநிலை, அறியுநெறி, உயிர்விளக்கம், இன்புறுநிலை, ஐந்தெழுத்தருணிலை, அணைந்தோர் தன்மையென அதிகாரங்கள் பத்துடைத்தாய் விளங்கும்.

### வினாவெண்பா

இது உமாபதிசிவாசாரியர் தமது ஞானாசாரியரான மறைஞான சம்பந்த சிவாசாரியரை முன்னிறீஇ வினாவுரையாற் பாசம்விடுறவுந் திருவருள்நேசந் தலைக்கூடிடவும் நாடிச் செய்தருளியதோர் சித்தாந்த ஞானநூல்.

### போற்றிப் பஃறொடை

இது பந்தமும் வீடும் முந்தன் அருளால் உயிர்க்கு நிகழும் முறையினைப் படியின்நல்லோர் தெளிந்துய்ய உமாபதிசிவாசாரியர் போற்றிப் பஃறொடையிற் சாற்றியருளியதோர் சித்தாந்த ஞானநூல்.

### கோடிக்கவி

இது மாயாமலவிருளின் ஓயாதுகுளிக்கும் மன்னுயிர், அருள் கண்டு முன்னவன் சொரூபந்துன்னி ஒன்றாகிச் சொல்லொணாவின்ப

அருள்வாரிதி திளைக்குமாட்சி அஞ்செழுத்தின் நேர்பெறவெடுத்து நின்மல வென்றிக்கொடியாய் விளங்கக் கொற்றவன்குடி உமாபதி சிவாசாரியர் நாட்டியருளிய சித்தாந்த ஞானநூல்.

## நெஞ்சுவிடு தூது

இது மருட்பந்தமுறுத்தும் மாயோபாதியும், மாண்பின் முப்புறச் சமயவுபாதியும் போக, செப்புதற்கரிய திருவருளாளனை திருக் கடந்தை மறைஞானசம்பந்த தேசிகன் வெம்பந்தம் போக்கும் விரை மலரடிநீழற் றிருவோலக்கங்கூடி, எந்தாய்! தையல் வருத்தந் தீராய்; செங்கமலப் பூந்திருத்தாள் தாராய் எனப் பலகாற் றாழ்ந்திறைஞ்சி, அவன் பூங்கொன்றை வாங்குதியென்று, நெஞ்சைத் தூதுவிடுத் தலைப் பொருளாகக் கொண்டு உமாபதி சிவாசாரியர் செய்தருளிய சித்தாந்த ஞானநூல்.

## உண்மைநெறி விளக்கம்

இது சத்திநிபாதத்து உத்தமர் தத்துவரூபம், தத்துவதரிசனம், தத்துவ சுத்தி, ஆன்மரூபம், ஆன்மதரிசனம், ஆன்மசுத்தி, சிவரூபம், சிவதரிசனம், சிவயோகம், சிவபோகமென்னுந் தசகாரியமும் நாடிக் கண்டும் அயர்வற்றுச் சிவானுபூதி கூடுமாறு உமாபதி சிவாசாரியர் அருளிச்செய்த சித்தாந்த ஞானநூல்.

## சங்கற்ப நிராகரணம்

இந்நூல் செய்த காலம், களன், காரணம் முதலியன,

"பெருங்கட லுதவுங் கருங்கடு வாங்கிக்
கந்தரத் தமைந்த வந்தமில் கடவுள்
பாலரை யுணர்த்து மேலவர் போலக்
கேட்போ ரளவைக் கோட்படு பொருளா
லருளிய கலைக ளலகில வாலவை
பலபல சமயப் பான்மைத் தன்றே
யஃதா லந்நூற் றன்மை யுன்னிய
மாந்த ரிதுவே பொருளென் றதனிலை
யறைதலின் வேற்றோர் பனுவ லேற்றோர்க்
கிசையா மாறுபாடு கூறுவ ரதனாற்

புறச்சம யங்கள் சிறப்பில வாகி
யருளின் மாந்தரை வெருளுற மயக்கி
யலகைத் தேரி னிலையிற் றீரு
மீங்கிவை நிற்க நீங்காச் சமய
மூவிரு தகுதி மேவிய தாமு
மொன்றே டொன்று சென்றுறு நிலையி
லாறு மாறு வீறடைத் திவற்று
ளெவ்வ மில்லாச் சைவநற் சமயத்
தலகி லாகம நிலவுத லுளவவை
கனக மிரணியங் காஞ்சன மீழந்
தனநிதி யாடகந் தமனிய மென்றிப்
பலபெயர் பயப்பதோர் பொருளே போலப்
பதிபசு பாச விதிமுறை கிளக்கும்
வாய்ந்த நூல்க ளாய்ந்தன ராகி
யாசா னாகி வீசிய சமத்துட
னேழஞ் சிருநூ றெடுத்த வாயிரம்
வாழுநற் சகன மருவா நிற்பப்
பொற்பொது மலிந்த வற்புத னுனி
யாளும் விழவிற் பொற்றே ராலயத்
தேரு வெண்மர் நிரையி லிருப்ப
மயங்கு வாத மாயா வாதி
முயங்கிட வொருதலை முதுவெதிர் மணிசேர்
பெண்ணை சூழ்ந்த வெண்ணெயம் பதிதிகழ்
மெய்கண் டவனருள் கைகண் டவர்களி
லொருவ ரொருதலை மருவி யிருப்ப
வஞ்சப் பிறவிக் கஞ்சிவந் தொருவ
னேதிறை யருளென வீதெனு மாயா
வாதியை யயலினர் மறுதலைத் தருடா
மற்றவ ரயலின ரவருரை மறுத்துச்
சொற்றர வயலின ரவருந் தொலைவுற்
றின்னே யெவரு முன்னே கழியுழி
யாங்கமை யிருந்த வருளின ரழகிது
நீங்கள் சங்கற்ப நிராகரித் தமையென
மற்றவ ருரைத்த சொற்றரு பொருள்கொடு

வாத செற்ப விதண்டையு மேதிவு
மோது நால்வகை யுவமையுந் திகழ்தா
வருள்சேர் மாந்தர் வெருள்சே ராமற்
றர்க்க மும் விடயமுங் கற்க
நற்கவி மாந்தர் நகநவிற் றுவனே"

என்னும் நூன்முகத்தான் அறிக.

இது இயற்றியருளினர் உமாபதி சிவாசாரியர். இது மாயாவாதி, ஐக்கியவாதி, பாடாணவாதி, பேதவாதி, சிவசமவாதி, சங்கிராந்த வாதி, ஈசுர அவிகாரவாதி, நிமித்தகாரண பரிணாமவாதி, சைவவாதி யென்பார் சங்கற்பங்கூறி அளவை மூன்றானும் பொருந்துமாற்றா னும் நிராகரித்துச் சித்தாந்த மேன்மை தெருட்டுஞ் சித்தாந்த ஞான நூல். இவ்வாதிகளுள் மாயாவாதி வைதிகசாத்திரத்து உட் பட்டோன். ஐக்கியவாதி அகப்புறச் சமயத்தோன். ஏனை எழுவரும் அகச்சமயத்தோர். இறுதிக்கண் ஓதிய சைவவாதி சுத்தசைவன். சுத்தசைவன் சொரூபவிலக்கணஞ் சித்தாந்தசைவத்திற் சிறிது வேறுபடக் கூறுதலின், வேறு வைக்கப்பட்டான். ஆகலின், சுத்த சைவத்தைச் சித்தாந்தத்துள் அடக்கிப் பாடாணவாதி முதல் நிமித்த காரணவாதி யீறாக எண்ணி அகச்சைவசமயம் ஆறுதல் கண்டுகொள்க. நிமித்தகாரண பரிணாமவாதியெனினுஞ் சிவாத்து வித வாதியெனினும் ஒக்கும்.

## ௫. ஒழிபியல்

மேற்கூறிய நான்கியல்களின் ஒழிபாகவெடுத்துத் தமிழிலக்கண இலக்கிய சாத்திரப் புலமைகளை நிரப்புமாறும், அப்புலமைகளானே இகபர வீடுபேறுகளைச்சாதித்து எய்துமாறும் ஈண்டுக் கூறலுற்றாம்.

### கல்விச் சிறப்பு

இவ்வுலகத்துக் காணப்படும் உயிர்வருக்கங்களுள், ஐம்புல உணர்வோடு நல்லதன்நலனுந் தீயதன்தீதும் பகுத்துணரவல்ல மனவுணர்ச்சியுமுடையராய் மேம்படுமக்கள், கர்த்திருத்துவ போத்திருத்துவம் நன்குறுதற்கு வேண்டுஞ் சவிகற்பஞானம் பயக்கும் வியஞ்சக ஞானகரணமாய் விளங்குவது வித்தையாம். வித்தையெனினுங் கல்வியெனினும் பொருந்தும். மக்கள் இயல்பாக மனர்வுணர்வுடையராயினும், சுத்தமாயா நாதகாரிய சத்தப்பிரம ரூபமாகும் வித்தையின் உபகாரமின்றிச் சவிகற்பஞான வியாபாரமெய்த மாட்டார். மக்கள் இயற்கையான மனக்கருவியினால் நிருவிகற்பஞானச் செய்தியுஞ் செயற்கையான கல்வியறிவினாற் சவிகற்பஞானச் செய்தியும் எய்துகின்றார். நிருவிகற்பக் காட்சியாவது - பெயர், சாதி, குணம், கன்மம், பொருள் என்றிவற்றாற் பகுத்தறிதலின்றி இஃதொன்று தோன்றாநின்றதெனப் பொருளுண்மை மாத்திரையே அறியும் ஞானசத்தி. சவிகற்பக் காட்சியாவது - பெயர், சாதி, முதலியவற்றாற் பொருளை உள்ளவாறு உணரும் ஞானசத்தி. அவையாமாறு காட்டுதும். மாவென்பது ஒன்றன் பெயர். அதற்கு மாத்தன்மை சாதி. வண்ணம், வடிவு முதலியன அதன்குணம். நிற்றல், தளிர்த்தல், பூத்தல் முதலியன அதன் கன்மம். மரமென நிலைபெறுதல் பொருளாகை. ஒருசாத்தன் தன் கண்ணுக்குப் புலப்படாநிற்கும் ஒன்றைக் கண்ணோடு கூடிய இயல்பான மனக்கரணத்தால் இஃதொன்று தோன்றாநின்றதெனப் பெயர் சாதி முதலியவற்றாற் பகுத்தறிதலின்றிப் பொருளுண்மை மாத்திரையின் முன்னறியா நிற்கும். அங்ஙனம் அறிவுறாநின்ற அவன் அப்பொருளை இஃது யாதோவென ஐயுறுதலும் அதனை வேறொன்றாக

மயங்கி நிச்சயித்தலுஞ் செய்து, பின்னர் அப்பொருட்கண் மிக்குத் தோன்றும் மாவென்னும் பெயர்முதலிய ஐந்துங்கொண்டு எழுத்தான் இயன்ற சொல்லால் விகற்பித்து அதனைப் புலப்படவறியும். இங்ஙன மாகலின், மக்கட்குச் சவிகற்பஞானங் கலாரூபமான சொல்லான் நிகழ்தல் அனுபவசித்தமாம். சாத்தன் பிறர் செவிக்குப் புலனாக உச்சரிக்குஞ் சொல்லின்றியும் இவ்வைந்தானும் பொருளைத் தன்னுள் விகற்பித்தறியுமாலெனின்,—அறியாது கூறினாய்; சொற்கள் உந்தியிற் சூக்குமையாயும் நெஞ்சின்கண் பைசந்தியாயுங் கண்டத்தின்கண் மத்திமையாயும் விளங்கித் தன்செவிக்குப் புலப்படுஞ் சூக்குமவைகரியாய், இறுதியிற் பிறர்செவிக்குப் புலப்படுந் தூலவைகரியாய் வெளிப்படுமாகலின், சாத்தன் பிறர்செவிக்குப் புலனாகாமல் உள்ளே செய்யுஞ் சவிகற்ப வியாபாரமுஞ் சொல்லான்நிகழும் ஞானச்செய்தியே என்க.

கல்விமாட்சி,

"இம்மை பயக்குமா லீயக் குறைவின்றாற்
றம்மை விளக்குமாற் றாமுணராக் கேடின்றா
லெம்மை யுலகத்தும் யாங்காணேங் கல்விபோன்
மம்ம ரறுக்கு மருந்து"

"அறம்பொரு ளின்பமும் வீடும் பயக்கும்
புறங்கடை நல்லிசையு நாட்டு - முறுங்கவலொன்
றுற்றுழியுங் கைகொடுக்குங் கல்வியினூங் கில்லைச்
சிற்றுயிர்க் குற்ற துணை"

"தொடங்குங்காற் றுன்பமா யின்பம் பயக்கும்
மடங்கொன் றறிவகற்றுங் கல்வி"

"𑌵𑌿𑌦𑍍𑌯𑌾𑌨𑌾𑌮𑌨𑌰𑌸𑍍𑌯𑌰𑍂𑌪𑌮𑌧𑌿𑌕𑌂𑌪𑍍𑌰𑌚𑍍𑌛𑌨𑍍𑌨𑌗𑍁𑌪𑍍𑌤𑌂𑌧𑌨𑌂
𑌵𑌿𑌦𑍍𑌯𑌾𑌭𑍋𑌗𑌕𑌰𑍀𑌯𑌶𑌃𑌸𑍁𑌖𑌕𑌰𑍀𑌵𑌿𑌦𑍍𑌯𑌾𑌗𑍁𑌰𑍂𑌣𑌾𑌂𑌗𑍁𑌰𑍁𑌃 ।
𑌵𑌿𑌦𑍍𑌯𑌾𑌬𑌨𑍍𑌧𑍁𑌜𑌨𑍋𑌵𑌿𑌦𑍇𑌶𑌗𑌮𑌨𑍇𑌵𑌿𑌦𑍍𑌯𑌾𑌪𑌰𑌾𑌦𑍇𑌵𑌤𑌾
𑌵𑌿𑌦𑍍𑌯𑌾𑌰𑌾𑌜𑌸𑍁𑌪𑍂𑌜𑍍𑌯𑌤𑍇𑌨𑌹𑌿𑌧𑌨𑌂𑌵𑌿𑌦𑍍𑌯𑌾𑌵𑌿𑌹𑍀𑌨𑌃𑌪𑌶𑍁𑌃"

என்பனவற்றான் அறிக.

இன்னும், சாதி உடலோடு அழியும். கல்வி உயிரோடு செல்லும். ஆகலால், சாதி உயர்ச்சியினுங் கல்வியுயர்ச்சியே மிக மேம்பட்டது. அது,

"மேற்பிறந்தா ராயினுங் கல்லாதார் கீழ்ப்பிறந்துங்
கற்ரு ரனைத்திலர் பாடு"

"வேற்றுமை தெரிந்த நாற்பா லுள்ளுங்
கீழ்ப்பா லொருவன் கற்பின்
மேற்பா லொருவனு மவன்கட் படுமே"

"கடைநிலத்தோ ராயினுங் கற்றணர்ந் தோரை
தலைநிலத்து வைக்கப் படும்"

என்பனவற்ருன் உணர்க. கற்ருேர்க்கு எந்நாடும் எவ்வூருந் தம்போலுற்றுப் பொருட்கொடையும் பூசையும் உவந்து செய்தற்கு ஏதுவாம். ஆதலின், கல்விபோலச் சிறந்த நற்பொருள் பிறிதில்லை. அது,

"யாதானு நாடாமா லூராமா லென்னெருவன்
சாந்துணையுங் கல்லாத வாறு"

என்பதனனறிக. அரசனுக்குத் தன்றேயத்திற்ருனே சிறப்புண்டு. கற்றவனுக்கு அவன் சென்ற விடமெல்லாஞ் சிறப்புண்டு. ஆதலால், மன்னனினுங் கற்ருேனே சிறப்பு மிகவுடையன். அது,

"மன்னனு மாசறக் கற்ருேனுஞ் சீர்தூக்கின்
மன்னனிற் கற்ருேன் சிறப்புடையன் - மன்னனுக்குத்
தன்றேச மல்லாற் சிறப்பில்லை கற்ருேற்குச்
சென்றவிட மெல்லாஞ் சிறப்பு"

என்பதனன் அறிக. ஒருவயிற் றுதித்தோருள்ளும் ஒருகுடிப் பிறந்தோருள்ளுங் கற்ருேனே சிறப்புடையன். அரசனுங் கற்ருேன் காட்டிய வழியே செல்லும் நீரன். அது,

"பிறப்போ ரன்ன வுடன்வயிற் றுள்ளுஞ்
சிறப்பின் பாலாற் றயுமனந் திரியு
மொருகுடிப் பிறந்த பல்லோ ருள்ளு
மூத்தோன் வருக வென்னு தவரு
ளறிவுடை யோனு றரசுஞ் செல்லும்"

என்பதனு லுணர்க. கல்விப்பொருள் இம்மிக்கரோடு தலைப்பெய்து அறியாதனவெல்லாம் அறிந்தோமென்றும், யாண்டு பலவாக நரையிலம் ஆயினமென்றும் உவத்தற்கு ஏதுவாம். அது

“ யாண்டு பலவாக நரையில வாகுதல்
யாங்கா கியரென வினவுதி ராயின்
மாண்டவென் மனைவியொடு மக்களு நிரம்பினர்
யான்கண் டனையரென் னிளையரும் வேந்தனு
மல்லவை செய்யான் காக்கு மதன்றலை
யான்றவிந் தடங்கிய கொள்கைச்
சான்றோர் பலர்யான் வாழு மூரே ”

என்பதனான் உணர்க. செல்வப்பொருள் ஒருவனுக்கு ஈட்டும் அப் பிறப்பிற்றானே உதவுதலுடைத்து. கல்விப்பொருள் எழுமையினுஞ் சென்று உதவுதலுடைத்து. அது

“ ஒருமைக்கட் டான்கற்ற கல்வி யொருவற்
கெழுமையு மேமாப் புடைத்து ”

என்பதனான் அறிக. இத்தனை மாட்சியெல்லாமுடைய கல்வியினை நல்லாசிரியரை யடுத்து அவற்கு உற்றுழியுதவியும் உறுபொருள் கொடுத்துங் கற்றல்வேண்டும். இங்ஙனங் கற்றோர் தலையாயர். அந் நிலைக்கு நாணிக் கல்லாதார் என்றுங் கடையாயர். அது

“ உற்றுழி யுதவியும் உறுபொருள் கொடுத்தும்
பிற்றைநிலை முனியாது கற்றனன்றே ”

“ உடையார்மு னில்லார்போ லேக்கற்றுங் கற்றார்
கடையரே கல்லா தவர் ”

என்பனவற்றான் அறிக.

இனி அறியவேண்டுவன அறிதற்குரிய நன்மகனைப் பெற்ற தந்தை அவனைக் கற்றோரவையின்கண் அவரினும் மிக்கிருக்குமாறு கல்வியறிவுடையன் ஆக்குதல் வேண்டும். அதுவே நன்மகனுக்குத் தந்தை செயற்பாலதாம் உபகாரம். அது

“ தந்தை மகற்காற்று நன்றி யவையத்து
முந்தி யிருப்பச் செயல் ”

“ ஈன்று புறந்தருத லென்றலைக் கடனே
சான்றோ னாக்குத றந்தைக்குக் கடனே
வேல்வடித்துக் கொடுத்தல் கொல்லற்குக் கடனே
நன்னடை நல்கல் வேந்தற்குக் கடனே
யொளி றுவா ளருஞ்சம முருக்கிக்
களிறெறிந்து பெயர்தல் காளைக்குக் கடனே ”

" எச்சமென வொருவன் மக்கட்குச் செய்வன
விச்சைமற் றில்லை பிற "

என்பனவற்ருன் அறிக. தம்மக்களது அறிவுடைமை தம்மினும் மாநிலத்து மன்னுநின்ற கற்ருர்க்கெல்லாம் மிக இனிதாம். அது,

" தம்மிற்றம் மக்க ளறிவுடைமை மாநிலத்து
மன்னுயிர்க் கெல்லா மினிது "

என்பதனுலறிக.

விலங்குகளுக்கு இங்ஙனஞ் சொல்லான் விகற்பித்தறியுங் கரண மின்மையால், அவை எதிர்கின்ற விடயங்களை நிருவிகற்பமாகவே அறியும் நீர்மை யுடையனவாம். இனி விலங்குகளைக்காட்டிலும் மக்க ளெத்துணை வேறுபாடு உடையரோ அத்துணை வேறுபாடு கல்லாத மக்களைக்காட்டிலுங் கற்றறிந்த மக்கள் உடையரென்பது.

" விலங்கொடு மக்க ளனைய ரிலங்குநூல்
கற்ருரோ டேனை யவர் "

என்னும் திருக்குறளும் இதனை நிலையிடுதல் காண்க. கல்லாத மக்களும் ஒட்பமுடையராய் நிலவக் காண்டுமாலெனின்,—கல்லாத மக்கள் மாட்டுளதாம் ஒட்பம் நீர்மேல் எழுத்துப்போல்வதோர் விழுக் காடாய் விரையக்கெட்டுப் பயப்பாடின்றி யொழிதலின், அது ஒருசார் விலங்கின் ஒட்பம்போலக் கொள்ளப்படுதலல்லது நுண்மாண் நுழை புலமாகக் கொள்ளப்படாதாம் என்க.

" கல்லாதா னொட்பங் கழியநன் ருயினுங்
கொள்ளா ரறிவுடை யார் "

என்னுந் திருக்குறளும் இது தேற்றுமாறு காண்க. கல்வியறிவில்லா தார் மெய்ப்பொருள் காணமாட்டாரென்பதும், அஃதுடையாரே மெய்ப்பொருள் காண வல்லுனரென்பதும்,

" கல்லா நெஞ்சி
னில்லா னீசன் "

" கற்றவர் விழுங்குங் கற்பகக் கனியைக் கரையிலாக் கருணைமா கடலை
மற்றவ ரறியா மாணிக்க மலையை "

என்றற்ரொடக்கத்துத் திருவாக்குக்களான் அறிக.

"நுண்ணிய நூல்பல கற்பினு மற்றுந்தன்
னுண்மை யறிவே மிகும்".

என்றருளிச்செய்தது, தீவினைப்பாலர்பால் உளதாங் கல்வி நல்வினைப் பாலர்பால் உளதாங்கல்விபோல நன்குசெய்தற்கு உபகாரமாக மாட்டாது; தீவினைப்பயன் விளைவிற் பின்னிருந்து இரங்குதற்கு உபகாரமா மென்ற குறிப்பாகலின், அது கல்வி மெய்யுணர்விற்குச் சாதகமாகும் என்பதனோடு முரணாதென்க.

"காதன் மிக்குழிக் கற்றவுங் கைகொடா"

என்னுஞ் சிந்தாமணியும் அப்பொருட்டு.

கல்வியுடைமை பொருளுடைமையென்று இரண்டுஞ் செல்வமாயினும், கல்வி இம்மை மறுமை வீடுபேறுகள் மூன்றற்குஞ் சாதகமாகலின்,

"நற்பொருள் செய்வார்க் கிடம் பொருள் செய்வார்க்கு மஃதிடம்"

என்றார் சிந்தாமணி நூலார். ஆண்டு நற்பொருளென்றது கல்விப் பொருளை. கல்விப்பொருளின் உயர்ச்சி

"கேடில் விழுச்செல்வங் கல்வி யொருவற்கு
மாடல்ல மற்றை யவை"

என்பதனானும் அறிக. விலங்கொடு மக்களென்னும் பொதுச்சொல்லாற் பெண்பாலாருங் கற்றற்குரிய ரென்பது கொள்க.

"குஞ்சி யழகுங் கொடுந்தானைக் கோட்டழகு
மஞ்ச ளழகு மழகல்ல - நெஞ்சத்து
நல்லம்யா மென்னு நடுவு நிலைமையாற்
கல்வி யழகே யழகு"

என விதந்தெடுத்து ஓதுதலானும், கல்வி ஆண்பாலார் பெண்பாலார் இருவருக்கும் பொதுவாதல் தெளிக. மற்று

"நுண்ணறி வுடையராய் நூலொடு பழகினும்
பெண்ணறி வென்பது பெரும்பே தைமைத்தே"

என்றது என்னைகொலெனின், —பெண்பாலார் இயல்பின் மனத்திடம் பெரிதில ராதலின், அவர்கட்படுங் கல்வி ஆண்பாலார்கட்படுங் கல்வி

போலப் பெரிதும் நன்மைக்கு ஏதுவாகாதென்ற கருத்தால் அங்ஙனங் கூறினு ராதலின், அதுகொண்டே அவர் கற்பிக்கப்பாலரல்லர் என்பது முடியாதென்க. இத்துணேயும், சவிகற்பஞானங் கல்வியான் எய்தற் பால தென்பதும், அதன் சிறப்பும், அது ஆண்மக்கள் பெண்மக்க ளென்னும் இருபாலார்க்கும் பொதுப் பொருளென்பதும், தந்தை மக்கட்குச்செய்யும் முக்கியவுதவி அவரைக் கல்வி யறிவுடையராக்குதல் என்பதும் சொல்லப்பட்டன.

> "கற்க கசடறக் கற்பவை கற்றபின்
> நிற்க வதற்குத் தக"

கல்வி, கற்பிக்க வல்ல நல்லாசிரியரும் கற்றற்குரிய நன்மாணுக்க ரும் எய்தினல்லது பயன்படாமையின், கற்பிக்கவல்ல நல்லாசிரியர் இலக்கணமும், கற்கும் நன்மாணுக்கர் இலக்கணமும், முன்னரெடுத் தோதிக் கற்குமாறும், கற்கப்படும் நூன்முறையும், பின்னர் எடுத்து ஓதுதும்.

### கற்பிக்கும் நல்லாசிரியர் இயல்பு

உயர்குடிப்பிறப்பும், மனத்தூய்மையும், நல்லொழுக்கமும், பல கலைப்பயிற்சியும், வாய்மையும், மாணுக்கர்மாட்டு அன்புடைமையும், பொருள் அவாவின்மையும், நடுவுநிலைமையும் என்னும் எண்வகை இலக்கணங்க ளுடையராய்க் கொடையும், ஊக்கமும், உலகியலறிவும், நிலைபெற்ற தோற்றமும், பொறையும், நிறையும், மறப்பின்மையும், அறிவும், உருநலனும், ஆற்றலும், புகழும், சொல்வன்மையும், மாணுக்க ரால் விரும்பப்படும் நீர்மையும், தொன்னெறியாற் பொருந்தினோர் கற்பிக்கும் நல்லாசிரியராதற்கு உரியரென்று அறிக. அது

> "வலம்புரி முத்திற் குலம்புரி பிறப்பும்
> வான்யா றன்ன தூய்மையும் வான்யாறு
> நிலம்படர்ந் தன்ன நலம்பட ரொழுக்கமுந்
> திங்க ளன்ன கல்வியுந் திங்களொடு
> ஞாயி றன்ன வாய்மையும் யாவது
> மஃகா வன்பும் வெஃகா வுள்ளமுந்
> துலைநா வன்ன சமனிலை யுளப்பட
> வெண்வகை யுறப்பின ராகித் திண்ணிதின்

வேளாண் வாழ்க்கையுந் தாஅ ளாண்மையு
முலகிய லறிதலு நிலைஇய தோற்றமும்
பொறையு நிறையும் பொச்சாப் பின்மையு
மறிவு முருவு மாற்றலும் புகழுஞ்
சொற்பொரு ளுணர்த்துஞ் சொல்வன் மையுங்
கற்போர் நெஞ்சங் காமுறப் படுதலு
மின்னோ ரன்ன தொன்னெறி மரபினர்
பன்னருஞ் சிறப்பி னல்லா சிரியர் ''

என்பதனான் அறிக. குலம்புரி பிறப்பு - உயர்குலத்தோர் விரும்பும் பிறப்பு. திங்கள் உவாமதி. திங்களும் ஞாயிறும் பொங்கிரு ளகற்றிப் பொருள்களைப் புலப்படக்காட்டும் பொற்பினவாதல்போல வாய்மை யுடையார் பொருள்களை ஐய விபரீத மகற்றி மெய்யுணர்த்தும் நீர்மை யுடைய ரென்பார், திங்களொடு ஞாயிறன்ன வாய்மையும் என்றார். இது தொழிலுவமம். நிலை இய தோற்றமாவது—எஞ்ஞான்றுஞ் சலியா வேற்ற நீர்மை. ஆற்றல் - அறிவுத்திட்பம், காயத்திட்பம் என்றிவை ; அது அறிவும்,உருவும், ஆற்றலுமென அவ்விரண்டனையுஞ் சாரவைத்து ஓதியதனான் அறியப்படும். காயத்திட்பம்-மனவலி, வாக்குவலி, உடல் வலியென மூன்றும். அறிவுத்திட்பம்-இயற்கை அறிவுவலி, செயற்கை அறிவுவலியென இரண்டாம். புகழ்—தங்கல்வி நிறைவு, மதிநுட்பம், நல்லொழுக்கம் என்றிவை காரணமாகத் தாமுளராய ஞான்றும் பிற்றை ஞான்றும் உயர்ந்தோர் வாய்ப்பட்டுநிகழ்ந்து எங்கும் பரந்து நிலவும் நன்குமதிப்புச் சொல்விளக்கம். சொற்பொரு ளுணர்த்துஞ் சொல்வன்மை - வாக்படுத்துவம். குலனருள் தெய்வங் கொள்கை மேன்மை, கலைபயில் தெளிவு கட்டுரை வன்மை என்புழிக் கட்டுரை வன்மையும் அது. கட்டுரைவன்மை - கேட்பார்ப்பிணிக்குஞ் சொல் வன்மை. கட்டுதல் - பிணித்தல். அது

"கேட்டார்ப் பிணிக்குந் தகையவாய்க் கேளாரும்
வேட்ப மொழிவதாஞ் சொல் ''

என்பதனானும் அறிக. கட்டுரை-வினைத்தொகை. இதற்குப் பிறரெல் லாந் தொடுத்துச் சொல்லும் உரைவலியென நோக்கின்றி யுரைத்தார். இனிக் கட்டென்பது காலங்கரந்த பெயரெஞ்சுகிளவி முதனிலையாத லின், அதனைக் கட்டியென வினையெஞ்சுகிளவி யாக்குதல் இடர்ப்பாடு

மாம். ஆசிரியர் இவ்வியல்புடையராயிருந்து நூல்கற்பிப்பின் மாணாக்கர் உறுதிப்பொருள் கசடறக்கற்றுக் கைக்கொண்டு நல்லொழுக்க மெய்தி மெய்யுணர்ந்து இகபரவீடுபேற்று உறுதிப் பயன்களைத் தப்பாது தலைக்கூடுப. இவ்வியல்பில்லார் ஆசிரியராய்க் கற்பிக்கப்புகின் மாணாக்கர் நூற்பொருள்களை ஐயமும் மருட்கையும் உறுதாக்கொண்டு துணிவிலராய்ப் போலியொழுக்கமேவிப் பஃறலைப்பட்ட விவேக கதியுடையராய் இகபர வீடுபேற்று உறுதிப் பயன்களை நன்குறமாட்டார்.

## கற்கும் நன்மாணாக்கர் இயல்பு

ஆசிரியன் கற்பிக்கும் நூற்பொருளைக் கற்பித்தவாறு உணர்தலும், கற்பித்தபொருள் பற்றுகக்கொண்டு சூழ்ந்து வேறு நற்பொருள் உணர்தலும், தம்போலக் கற்பவர்க்கு உபகாரிகளாதலும், தந்தை, தாய், ஆசிரியர் முதலியோர் செய்ந்நன்றியறிதலும், தீய சிற்றினச் சார்பின்மையும், சோம்பு, தடுமாற்றம், மானம், மறவி, கடுநோய், வெகுளி, களவு, காமம் என்றிவை இலாதலும், ஆசிரியனையடைந்து வழிபடுதலும், தருமநெறி தவறாமையும், ஆசிரியன் குறிப்பறிந்து நடத்தலும், கேட்ட நூற்பொருளைச் சிந்தித்தலும், பாடத்தை மறவாமற் காத்தலும், மீட்டும் ஆசிரியனையடைந்து கேட்ட நூற்பொருளை ஐயவிபரீதம் நீங்க வினவுதலும், நூற்பயிற்சியுடையார் பிறர் அறிந்துவைத்தாதல், அறியாதுவைத்தாதல், ஐயுற்றுதல் வினவும் சொற்பொருள் வினாக்களுக்கு அவர் கொள்ளுமுறையான் விடைகூறுதலும், நூற்பொருளைக் கற்றோரவையில் அவர் அனுமதி கொண்டெடுத்துப் பிரசங்கித்தலு முடையராகி, உலகநடை அறிந்தொழுகுவோர் நூல் கற்றற்குரிய நன்மாணாக்கரென்று உணர்க.

"சொல்லிய பொருண்மை சொல்லியாங் குணர்தலுஞ்
சொல்லிய பொருளொடு சூழ்ந்துநன் குணர்தலுந்
தன்னோ ரன்னோர்க்குத் தான்பயப் படுதலுஞ்
செய்ந்நன்றி யறிதலுந் தீச்சார் பின்மையு
மடிதடு மாற்ற மானம்பொச் சாப்புக்
கடுநோய் சீற்றங் களவேகாம
மென்றிவை யின்மையுஞ் சென்றுவழி படுதலும்
அறத்துறை வழாமையுங் குறிப்பறிந் தொழுகலும்

கேட்டவை நினைத்தலும் பாடம் போற்றலு
மீட்டவை வினவலும் விடுத்தலு முரைத்தலு
முடைய ராகி நடையறிந் தியலுநர்
நன்மா ணாக்கர்"

என்பதனாலறிக. இவ்வியல்புடைய மாணாக்கரே நூல்கசடற நன்கு கற்று நற்புலமை எய்துப. இவ்வியல்பில்லோர் நூல்கற்கப் புகினும், தெளிவும், புலமை நிறைவும், திட்பமுமுறுமை மேலும் நல்லுறுதியுந் தலைக்கூட மாட்டார்.

## கற்கும் முறை

நூல் கற்றற்குரியராய நன்மாணாக்கர் தாம் கற்கும் நூலின்கண் சிலபொருள் கருகிற்றாயின் அப்பொழுது அவற்றின்கண் அழுந்தற்க. முன்கற்ற நூற்கணுதல், பின்பு கற்கும் நூற்கணுதல் இவை வெளிறிக் கிடக்கும்; அதுகண்டு தெளிதுமென்றுகொண்டு மனவூக்கங் குன்றாது நூலுரை கற்க. விதி விலக்குக்கள் நூலுரைகளுட் சிலசொற்பொருட்கு எடுத்து ஓத்தால் எய்துதலுற்றுஞ் சிலசொற் பொருட்கு அங்ஙனமெடுத்து ஓத்தால் எய்துதலுறாதும் வரக்காணப் படின், அவற்றிற்கு விதிவிலக்கு ஆசிரியர் ஓதாமைக்குக் காரணம் யாதென்று மனங்கலங்கற்க; ஆசிரியர் தாமெய்துவித்தன எய்தாதன வற்றிற்கும் எய்துமாறு உபலக்கணம்பற்றி நூலுரை செய்யும் நீரராகலின். உபலக்கணக் கூற்றுக்கள்,

"காணுங் கண்ணுக்குக் காட்டு முளம்போல்"

"கோளில் பொறியிற் குணமிலவே யெண்குணத்தான்
றாளை வணங்காத் தலை"

என்பன போல்வன. முன்னறிந்ததற்குப் பின்னறிவது மாறாயின், அவ்வளவில் முன்னதேவிதி பின்னது வழுவென்றானும், பின்னதே விதி முன்னது வழுவென்றானுங் கதுமெனக்கொண்டு நூலுரைப் பொருள் சிதைவுசெய்யாது, இஃது என்னூல்விதியோ மற்றெவ்வுரை விதியோ என்றெண்ணி நூலுரை கற்க. நூலுரைகளைச் சிலநாட்கற்ற மாத்திரையாற் புலமை எய்திற்றிலமென்று ஊக்கங் குன்றற்க. நூலுரைகளைப் பலநாட் கற்று அவற்றின்கண் பயிறலுஞ் செய்யின்,

புலமை தப்பாது பலிக்கும். நூலுரைகளை விரைவான் நோக்கற்க. அங்ஙனம் நோக்கின், யாதுந்தெரியாது. விரையாது நூலுரைகளை யுற்றுநோக்கின், தெரியாத பொருளில்லை. கற்கும் நூலுரைகளிற் கருத்தினை மட்டுப்படுத்திக் கற்ற நூலுரைகளிற் கருத்தினைச் சிந்தாமல் இறக்குக. நூலுரைப் பொருள்களை வரம்புசெய்யாது இருகால் முக்காற் கேட்டலிற் பயனின்று. ஆகலின், நூலுரைப் பொருள்களை வரம்புபடுத்துக் கற்க. அங்ஙனங் கற்பின், ஒரு காலிற்றானே அந்நூலுரைப் புலமை யுளதாம். ஆசிரியனுக்குப் பொருள்கொடுத்தலும் இன்சொற் சொல்லுதலும் பணிதலும் உற்றுழி யுதவுதலுஞ்செய்து கற்க. இடம், பொருள், ஏவல்களுடையராய்ச் சிறப்புச் செய்யினும், கல்வி விருப்பில்லாத மந்த மாந்தர்களோடு கூட்டுறவு செய்யற்க. நுண்மாண் நுழைபுல முடையார்ப்பெறின், சில கொடுத்தும் அவரோடு பழகுக. மனம் இடர் நோய் முதலிய ஏதுக்களாற் கலங்குஞ் செவ்வியின் நூலுரையாய்தலை ஒருஞான்றுஞ் செய்யற்க. புலமைப் பேற்றிற்குச் சிறந்தகருவி ஆசிரியன்பால் மெய்யன்பும் மெய்வழிபாடும் உடையராதலாம்.

மக்களறிவு தாம் கற்கும் நூலளவாக விரியுமாகலின், நல்ல நூல்களை முழுதும் முறையாற் கற்க. ஒருதுறைநூல் ஒருவகை அறிவினையே உதவுமாகலின், பலவகை அறிவுவேண்டிப் பலவகை அறிவு நூல்களைப் பலவாறு நாடிக்கற்க.

"தொட்டனைத் தூறு மணற்கேணி மாந்தர்க்குக்
கற்றனைத் தூறு மறிவு"

"அறிதோ றறியாமை கண்டற்றால்"

"நீரளவே யாகுமா நீராம்ப லதன்கற்ற
நூலளவே யாகுமா நுண்ணறிவு"

"நூல்பல கல்"

என்னும் முதுமொழிகளாலும் இவை துணிக. கண்ணொளி விளக்க மெய்திக் காண்டல்வியாபாரம் நிகழ்த்துதற்கு ஞாயிற்றினொளி முதலியன இன்றியமையாத உபகார காரணமாதல்போல மக்கள் ஆன்மஞானம் விளங்கிச் செய்தொழில் வன்மையுறுதற்கு, அங்கிங் கெனாதபடி எங்கும் நிறைந்துநிற்குங் கடவுளருட்சத்தி இன்றி

